# சங்க இலக்கியத்தில் பெண் அறம்

சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு
முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக
(பகுதி நேரம்)
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


ஆய்வாளர்

**ஏ.மேனகா**

மேற்பார்வையாளர்

**முனைவர் க.அ.ஜோதிராணி**

எம்.ஏ.,எம்ஃபில்.,பிஎச்.டி.,பி.எட்.,சி.ஆர்.டி.,பி.ஜி.டி.ஜே.,
உதவிப்பேராசிரியர்
தமிழ்த்துறை
காயிதே மில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 002.





**தமிழ்த்துறை**

**காயிதே மில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

சென்னை - 600 002.

ஏப்ரல் 2016

முனைவர் க.அ.ஜோதிராணி,
எம்.ஏ.,எம்.ஃபில்.,பி.எச்.டி.,பி.எட்.,சி.ஆர்.டி.,பி.ஜி.டி.ஜே.,
உதவிப் பேராசிரியர்
தமிழ்த்துறை
காயிதே மில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை – 600 002.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

**சங்க இலக்கியத்தில் பெண் அறம்** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு **செல்வி ஏ.மேனகா** என்பவர் முனைவர் (பி.எச்.டி.) பட்டப்பேற்றிற்காக (2012 முதல் 2016 வரை) காயிதே மில்லத் அரசு மகளிர் கல்லூரி, தமிழ்த்துறையில் ஆய்வு நிகழ்த்தி உருவாக்கியதாகும். இந்த ஆய்வேடு அவருடைய சொந்த முயற்சியால் உருவானது என்பதற்கும், இது வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் இதற்கு முன் அளிக்கப்பெறவில்லை என்பதற்கும் சான்று வழங்குகிறேன்.

க.அ.ஜோதிராணி

சென்னை – 600 002
நாள் : 25-04-16

(க.அ.ஜோதிராணி)
மேற்பார்வையாளர்

முனைவர். க. அ. ஜோதிராணி
எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., பி.எட்., பி.ஜி.டி.ஜே., சி.ஆர்.டி.,
உதவிப்பேராசிரியர் மற்றும் ஆய்வு நெறியாளர்
த மி ழ் த் து றை
காயிதே மில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை- 600 002.



ஏ.மேனகா
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை
காயிதே மில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை – 600 002.

# ஆய்வாளர் உறுதிமொழி

**சங்க இலக்கியத்தில் பெண் அறம்** என்னும் தலைப்பில் முனைவர் (பி.எச்.டி.) பட்டத்திற்காக காயிதே மில்லத் அரசு மகளிர் கல்லூரி தமிழ்த்துறையில் (2012 முதல் 2016 வரை) **முனைவர் க.அ.ஜோதிராணி** அவர்களின் மேற்பார்வையில் ஆய்வு நிகழ்த்தப்பட்டது. இந்த ஆய்வு எனது சொந்த முயற்சி என்றும் இதற்கு முன் இந்த ஆய்வேடு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதி கூறுகின்றேன்.

ஏ.மேனகா

சென்னை – 600 002

**(ஏ.மேனகா)**

நாள் : 25-04-16

## நன்றியுரை

காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரியில் பகுதி நேர முனைவர் பட்டம் மேற்கொள்ள எனக்கு அனுமதி வழங்கிய மதிப்பிற்குரிய அன்னை வேளாங்கண்ணி மகளிர் கல்லூரியின் நிறுவனர், பெண்கல்வி நோக்குடையோர் முனைவர் ச.தேவராஜ் அய்யா அவர்களுக்கு நன்றி.

காயிதே மில்லத் அரசு மகளிர் கல்லூரியில் பகுதி நேர முனைவர் பட்டம் மேற்கொள்ள எனக்கு வாய்ப்பளித்த மதிப்பிற்குரிய முதல்வர் முனைவர் இராம சீதாலட்சுமி அம்மா அவர்களுக்கு நன்றி.

ஆய்வுக்குரிய தலைப்பைத் தேர்ந்தெடுப்பதிலும், ஆய்வுப் பகுப்பு செய்வதிலும், ஆய்விற்குத் தேவையான மூல ஆதாரங்களைச் சேகரிப்பதிலும் வழிமுறைகளைக் கூறியவர். பெண்ணியச் சிந்தனையாளராக இருந்து என்னை வழி நடத்தியவர். ஆய்வு நோக்கில் எழுதும் முறை குறித்து கலந்துரையாடி உதவிய நெறியாளர். ஆய்வேட்டின் முகப்புப் பக்கம் தொடங்கி இறுதி வரை செம்மையான முறையில் அமைய வேண்டும் என்ற அக்கறையோடு அணுகியவர். முனைவர் பட்டத்திற்காகச் சேர்ந்த நாள் முதல் குறித்த நேரத்தில் ஆய்வேட்டைச் சமர்ப்பிக்க வேண்டும் என்ற சிந்தனையோடு என்னை ஆற்றுப்படுத்தியவர். ஆய்வேடு செம்மையுற வடிவம் பெறுவதற்கு ஆக்கம் தந்தவர். நெறியாளர் முனைவர் க.அ.ஜோதிராணி அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ள கடமைப்பட்டுள்ளேன்.

இவ்வாய்வினை மேற்கொள்வதற்கு வாய்ப்பளித்த காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரியின் முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் திருமதி ச.ஹேமலதா அவர்களுக்கு நன்றி. ஆய்வேடு சமர்ப்பிக்கும் பணியில் உதவிய தமிழ்த்துறை தலைவர் திருமதி வா.ஞானாம்பிகை அவர்களுக்கும் மற்றும் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் நன்றி.

ஆய்வுப் பணியைக் குறித்த நேரத்தில் முடிப்பதற்கு எமக்கு உதவியாக நின்ற அன்னை வேளாங்கண்ணி மகளிர் கல்லூரியின் முதல்வர் முனைவர் மு.திலகவதி அவர்களுக்கு நன்றி. ஆய்வேட்டின் பணிகளுக்குச் செல்லும் காலங்களில் எனக்கு இசைவு தந்து உதவிய தமிழ்த்துறை தலைவர் திருமதி ப.த.இராணி அவர்களுக்கும் மற்றும் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் நன்றி.

ஆய்வுப் பணியில் என்னை ஊக்கப்படுத்திய, உறுதுணையாக நின்ற தோழமையுள்ள சகோதரி சென்னை ஸ்ரீ கிருஷ்ணசாமி மகளிர் கல்லூரியின் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் செள.பா.சாலாவாணிஸ்ரீ அவர்களுக்கும் நன்றி.

பெண் கல்வி வளர்ச்சியில் அக்கறை கொண்டும், பெண்கள் உயர் கல்வி பெறவேண்டும் என்ற இலக்குடனும் என்னை ஆய்வுக் கல்விக்குத் தூண்டி, எனது ஆய்வின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணை நிற்கும் என் தந்தை திரு. ஆ.ஏகாம்பரம், தாய் திருமதி ஏ.பத்மா ஆகியோருக்கும் என் அகமகிழ்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வை மேற்கொள்ள எனக்கு ஊக்கம் அளித்து வந்த என் உடன்பிறந்த சகோதரி ஏ.கீதா, சகோதரன் ஏ.தியாகராஜன் இருவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பான நூல்களைப் பார்வையிடவும், சான்றாதாரங்களைத் தொகுக்கவும் அனுமதி அளித்து உதவிய மறைமலையடிகள் நூலகர் திரு. சுந்தரமூர்த்தி அவர்களுக்கும், கன்னிமாரா நூலகப் பொறுப்பாளர் அவர்களுக்கும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகப் பொறுப்பாளர் திரு. பெருமாள்சாமி அவர்களுக்கும் இந்நேரத்தில் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சொந்தப் பணியை ஒதுக்கி, ஆய்வுப்பணிக்கு முதன்மை அளிக்கும் நோக்குடையவர், நட்பை மதிக்கும் பண்பாளர், பிறர் கடமையைத் தன் பணியாக உணர்ந்து செயல்படுபவர், இவ்வாய்வேட்டை உருவாக்கும் முயற்சியில் அவரது பணி குறிப்பிடத்தகுந்தது, மிகக் குறுகிய காலத்தே ஆய்வேட்டை கணினி தட்டச்சு செய்தளித்த திரு. வ.மோகன் மற்றும் திருமதி மோ.ரேவதி ஆகியோருக்கும் என் நன்றியைக் கூறிக்கொள்கிறேன்.

ஆய்வேட்டின் வடிவமைப்பிற்கு உதவிய தீபம் நகலகத்தார் அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஏ.மேனகா

**ஏ.மேனகா**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| நற். | – | நற்றிணை |
| குறுந். | – | குறுந்தொகை |
| ஐங். | – | ஐங்குறுநூறு |
| பதிற். | – | பதிற்றுப்பத்து |
| பரி. | – | பரிபாடல் |
| கலி. | – | கலித்தொகை |
| அகம். | – | அகநானூறு |
| புறம். | – | புறநானூறு |
| திருமுரு. | – | திருமுருகாற்றுப்படை |
| பொருநர். | – | பொருநராற்றுப்படை |
| சிறுபாண். | – | சிறுபாணாற்றுப்படை |
| பெரும். | – | பெரும்பாணாற்றுப்படை |
| முல்லை. | – | முல்லைப்பாட்டு |
| மதுரை. | – | மதுரைக்காஞ்சி |
| நெடுநல். | – | நெடுநல்வாடை |
| குறிஞ்சி. | – | குறிஞ்சிப்பாட்டு |
| பட்டினப். | – | பட்டினப்பாலை |
| மலை. | – | மலைபடுகடாம் |
| தொல். பொருள் | – | தொல்காப்பியம்–பொருளதிகாரம் |
| தொல். பொருள். அகத் | – | தொல்காப்பியம்–பொருளதிகாரம் அகத்திணையியல் |

| | | |
|---|---|---|
| தொல். பொருள். புறத் | – | தொல்காப்பியம்–பொருளதிகாரம் புறத்திணையியல் |
| தொல். பொருள். களவு | – | தொல்காப்பியம்–பொருளதிகாரம் களவியல் |
| தொல். பொருள். கற்பு | – | தொல்காப்பியம்–பொருளதிகாரம் கற்பியல் |
| தொல். பொருள். பொரு | – | தொல்காப்பியம்–பொருளதிகாரம் பொருளியல் |
| பு.பொ.வெ.மா. | – | புறப்பொருள் வெண்பா மாலை |
| குறள் | – | திருக்குறள் |
| உரை.ஆ | – | உரையாசிரியர் |
| தொகு.ஆ | – | தொகுப்பாசிரியர் |
| பதி. | – | பதிப்பாசிரியர் |
| மேலது | – | மேற்படி |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| Pg | – | Page |
| Pp | – | Pages |

# உள்ளடக்கம்

# சங்க இலக்கியத்தில் பெண் அறம்

## ஆய்வு அறிமுகம்:

செவ்வியல் தகுதி பெற்ற முதல் இலக்கியம் சங்க இலக்கியம். தொன்மை, தனித்தன்மை, பொதுமைப் பண்பு, நடுநிலைமை, கிளைமொழிகளின் தாய், பட்டறிவு, பிறமொழித் தன்மை, சமயச் சார்பு, உயர்சிந்தனை, கலை, இலக்கிய வளமை, மொழிக்கோட்பாடுகள் என செவ்வியலுக்கான தகுதிகளைத் தன்னிகரில்லாத் தனித்தன்மைகளோடு பெற்றமைந்துள்ளது சங்க இலக்கியம் என்பதால் செவ்வியல் இலக்கியத் தகுதி பெற்று செம்மொழி என சிறப்புப் பெற்றுள்ளமை அறிவோம்.

சங்க இலக்கியத்தின் தனித்துவங்களை ஆராய்வதும், அதை சமூகத்திற்கு முன் வைப்பதும், பின்வரும் சமுதாயம் அவற்றை அறிந்து கொள்ள வழிவகை செய்வதுமான கடமையுணர்வோடே மேலாய்வுகள் தமிழிலக்கிய வளம் நோக்கி தொடர்கின்றன. தமிழுலகில் சங்க இலக்கியத்தில் சமூக வளர்ச்சி, தொழில் வளர்ச்சி, கலை, இலக்கிய வளமை, தமிழர்களின் அரச நியதி ஆகியன குறித்த ஆய்வினை வரலாற்று நோக்கில் அணுகும் சிந்தனையே எனது முனைவர் பட்ட ஆய்வுத் தலைப்பு சங்க இலக்கியம் குறித்ததாய் அமைய வழி வகுத்தது.

சங்க காலம் என்பது கி.மு. 2–ம் நூற்றாண்டு முதல் கி.பி. 2–ம் நூற்றாண்டு வரையிலுள்ள நான்கு நூற்றாண்டுகள் என வரையறை செய்வர். அக்காலத்தில் எழுந்த சங்க இலக்கியத்தின் சமூகப் பொருளாதார, ஆய்வுப் பொருண்மைகளின் நூற்றுக்கும் மேற்பட்ட ஆராய்ச்சிக் களங்கள் மேற்கொள்ளப் பட்டிருக்கின்றன. சங்க இலக்கியத்தில் நிலவியல், சங்க கால அரசர்கள், சங்க இலக்கியத்தில் அறக்கருத்துக்கள், சமூக நோக்கில் சங்க கால மகளிர், சங்க இலக்கிய ஆய்வுகள், சங்க இலக்கியத்தில் ஐம்பூதங்கள், சங்க இலக்கியத்தில் மான்கள் இன்னபிற தலைப்புகளில் ஆய்வுகள் அமைகின்றன. பல்கலைக்கழகங்கள் அதற்குப் பெருங்களன்களாய் அமைந்துள்ளமை எண்ணிப் பார்க்கத்தகும்.

சமூக ஆய்வு, உளவியல் ஆய்வு, பகுப்பாய்வு, அழகியல் தன்மை, உள்ளடக்கப் பொருண்மையின் தன்மை, இலக்கணத் தன்மை, அன்பு, வீரம், காதல், நட்பு, அரசு, புலமை, தொழில் நுட்பத்திறன் சார்ந்த கலைகள், கலைஞர்கள், பெண், இயற்கை, உயிரினங்கள், மீட்டுருவாக்கம், ஒப்பாய்வு, வரலாற்றாய்வு என்றவாறு நூற்றுக்கணக்கான ஆய்வுகளும் நடந்தேறியிருக் கின்றன. இது தமிழரின் வரலாற்றுப் பண்பாட்டை, சமூக அமைவை,

உலகளாவிய அளவில் பரவச்செய்யும் முயற்சி என நாம் எண்ணி பார்க்க முடிகிறது.

பழந்தமிழர் வாழ்க்கை, தாய்வழிச் சமூகத்தைப் படைத்தது. அது சமத்துவ காலம். பின்னர் முதன்மைத் தொழிலான வேட்டையாடுதலுக்கு மனித உற்பத்தி அவசியம் என உணரப்பட்டது. சமூக உற்பத்தியில் பெண் உயர்ந்தவளானாள். இனக்குழுக்களின் தாயானாள், மதிக்கப்பட்டாள்.

இனக்குழுவில் பெண் தாய்மைக்குரியவள் என்று பேணப்பட்டு பாதுகாக்கப்பட்டாள். உற்பத்திக் கருவிகளின் வருகை பெண்களைத் தலைமையினின்று பிரித்தது. இரண்டாம் நிலைக்குத் தள்ளியது. உற்பத்திக் கருவிகள், ஆண்களின் உடைமை என்று உரிமை கொள்ளப்பட்டது. பெண் உரிமை விளக்கப்பட்டது. பெண்களுக்கான உடைமை கேள்விக்குள்ளானது. சமத்துவ சமுதாயம் மறைந்து, ஆண்டான் – அடிமைச் சமூகம் தோன்றியது. மருதநில மன்னனே அரசை உருவாக்கினான். அவனது காலத்தில் அரசு உருவானது. இது கால வரலாறு தரும் செய்தி.

தொழிற்பிரிவினை வர்க்கமாக மாறியது. சாதியப் பொருளாதாரம் உருவாகி, மேல் / கீழ் என்ற முரண்பாடுகள் உருவானது. அம்முரண்களைக் களைய வேண்டும் என்றால் சமன்பாட்டியல் தன்மை வேண்டும். அதனை அடைய நினைத்தே இலக்கியச் சட்டங்கள் வழி அறம் பேசப்பட்டிருக்கின்றது. சங்க இலக்கியங்களே தமிழரின் முதன்மை இலக்கியத் தரவுகள் என்பதால் அதன்வழி நின்று ஆராய்வதும் அறச்சிந்தனை எவ்வாறு சமூகத்தில் பயன்பாட்டு வினையாற்றி இருக்கின்றது என்பதை பகுப்பாய்வு செய்தும் விளக்கமுறைத் திறனாய்வின் வழி ஆய்ந்தளிப்பதும் இவ்வாய்வேட்டின் பணி.

சமகாலத்தின் தேவைகருதி சங்க இலக்கியத்தில் ‘அறம்’ குறித்த ஆய்வு மேற்கொள்ள வேண்டும் என்ற முனைப்பு மேலிட ஆய்வுத் தலைப்பு பெண் அறம் பேணும் தேவையை நோக்கி அமையப் பெறவேண்டும் என்ற சிந்தனையில் ஆய்வுப் பொருள் வரையறுத்துக் கொள்ளப்பட்டது. ஆதலின் இந்த ஆய்வு **சங்க இலக்கியத்தில் பெண் அறம்** என்று தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளது.

## ஆய்வுத் தலைப்பு

ஒரு நாட்டின் ‘அரசு’ தான் ஒரு மனிதனின் மூளை என்பதாகக் கொண்டு அன்றைய காலம் அமைந்திருப்பதை அறிவோம். அச்சூழலில் தலைமை என்பது ‘அரண்’ என்பதாக அன்றைய சமூகம்

உணர்ந்திருப்பதையும் நாம் அறிவோம். வழிநடத்திச் சென்ற தலைவன் அரசன். அவன் 'அரண்' எனும் சொல்லை மக்களைப் பாதுகாத்தல் என்ற பொருண்மையோடு எவ்வாறு அணுகியிருக்கிறான், அறம் செய்திருக் கின்றான் என்பதை ஆய்ந்தறிவது ஆய்வின் இலக்கு. இந்த இலக்கு நோக்கிய ஆய்வில் 'அறன்' எனும் சொல் அரசனின் பகிர்வு என்ற நிலையில் ஆய்வு நோக்காக அணுகப்பட்டுள்ளது.

அரசனின் அரண் என்பது பொதுப்பயன்பாடு கருதி அறம் என்று முறைப்படுத்தப்பட்டு பாதுகாத்தல் என்ற பொருண்மையோடு தொழிற் பெயராக அமையப்பெற்று ஆய்வேட்டில் ஒப்புமைப்படுத்தி ஆய்வு செய்யப்பட்டுள்ளது. அறம் எனும் தொழில் அரசனின் ஆட்சியில் உயர்வுச் சொல்லாக பதிவு செய்யப்பட்டிருப்பதால், சமகாலத் தேவையுள் அறம் எனும் சமத்துவம் சங்க இலக்கியத்தில் எவ்வாறு வினையாற்றியுள்ளது என்பதை ஆராய்ந்து அளிப்பது ஆய்வேட்டின் இலக்காக அமைகிறது.

அறம், அரசனின் ஆளுமையில் சங்க இலக்கியப் பெண்களின் இறுத்தலில், எத்தகைய வினையை விதைத்திருக்கிறது என்பதை விளக்குவதே ஆய்வுப்பொருளின் நோக்கம். சமகாலத் தேவையில் பெண்களின் உரிமை மறுக்கப்பட்டிருப்பதால் இவ்வாய்வு சமூகக் கடமையை உணர்ந்து ஆய்வு செய்தளித்திட முனைந்துள்ளது.

அறு + அம் = அறம். அறுத்துச் சென்று ஒழுங்கப்படுத்துதல் ஆற்றின் இயல்பு. ஆறு எனும் வழி இயல்பாய் உருப்பெற்றதே. அவ்வாறே அறம் என்பது தள்ளுவன விலக்கி கொள்ளுவன ஆட்சி என்பதாக, பொதுமை, சமன், சமப்பகிர்வு என்ற பொருண்மை பொதிந்த வகையில் 'சமம்' என பலபொருள் ஒரு சொல்லாய் அமைந்துள்ளது. அறம் என்னும் சொல் அரசியல் சொல்லாடலாக, சமூகப் பண்பாட்டுச் சொல்லாடலாக, தமிழரை உலக அரங்கில் உயர்ந்த நிலையில் வைத்து பெருமிதம் கொள்ளச் செய்தது என்பதை விளக்குவதும், சங்க இலக்கியப் பெண்களிடம் வகிக்கும் பான்மையின் விளக்கமும் ஆய்ந்தளிக்கும் பணியை ஆய்வேடு முன்னிறுத்துகிறது.

முதன்மை வித்து சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டிருப்பதால் மூல வித்து பயன்பாட்டு விளைச்சலின்போது கொண்டிருந்த ஆக்கங்களைத் தமிழ்ச் சமூக அரங்கில் முன்வைப்பதே ஆய்வின் தேவையாக உணரப்பட்டு ஆய்வுத் தலைப்பு பெண் அறம் என்றே அமையப்பெற்றுள்ளது.

மாந்தர் என்ற பொதுமைச் சொல்லைப் போலவே அறம் என்பது பாலின வேறுபாடின்றி அமைகிறது. சங்க இலக்கியத்தை மறுவாசிப்பு செய்யும் போது, பாலின வேறுபாட்டோடு அணுகிய அரசியல் தன்மை உணரப்பட்டது. அப்பான்மையை ஆய்வுப் பொருளாகக் கொண்டு விளக்குவது சமூகக் கடமை என்பதால் ஆய்ந்துணரப்பட்டு அதற்கான தரவு விளக்கங்கள் சமூகப் பொருளாதாரப் பண்பாட்டு திறனாய்வின் வழி ஆராயப்பட்டுள்ளது. ஆய்வாளர் பெண் என்பதாலும், பெண்ணியம் சார்ந்த வாசிப்போடு சங்க இலக்கியம் வாசிக்கப்பட்டபோது பெண்ணிற்கான அறம் எவ்வாறு பேசப்பட்டிருக்கின்றது என்பதை தனித்து விளக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. சமகாலத்தில் இருந்து கொண்டு, யதார்த்தத்தைப் படிக்கும் சூழலில் சமூக முரண், பெண்ணிற்கான அறம் குறித்த பதிவுகளைத் தனித்து ஆராய்வது அவசியம் என்பது உணரப்பட்டதால் சங்க இலக்கியத்தில் பெண் அறம் என்றே களம் அமைத்துக் கொள்ளப்பட்டது.

அறிவுசார் கல்வியே ஒரு சமூகத்தைத் தீர்மானிக்கிறது. அரசியலை தீர்மானிப்பதும் அறிவுசார் கல்வியே. சமூகக் கட்டமைப்பும் அந்த அரசியல் சார்ந்தே உருவாக்கப்படுகிறது. உருப்பெறுகிறது. யதார்த்த சூழலில் அமைந்துள்ள பாலின அரசியல் என்பது தான் தோன்றி முகிழ்த்ததாக எண்ணிப்பார்க்க முடியாது. அவ்வாறெனின் அறிவுசார் தொடக்க நிலைக் கல்வி எங்கிருந்து முகிழ்த்தது? உருவாக்கப்பட்டது? என்பதை நாம் அறிந்து ஆய்வுலகிற்கு முன் வைப்பது கடமை. அத்தகு கடமையினை உணர்ந்த நிலையில் விளைந்த ஆய்வுச் சிந்தனையே இவ்வாய்வின் இலக்கு என்பது இங்கு முன்வைக்கப்படுகிறது.

ஆகவே தமிழரின் தொன்மை இலக்கியமான செவ்வியல் இலக்கியத்தை மீளாய்வு செய்யும் தேவை உணரப்பட்டிருப்பதால் மீளாய்வுக் களமாக **சங்க இலக்கியத்தில் பெண் அறம்** எனும் தலைப்பு தேர்வு செய்யப்பட்டிருக்கிறது.

**ஆய்வு நோக்கம்:**

நடுநிலைமை என்பது செம்மொழி தகுதி பெறுவதற்கான மையக்கூறு என்பதை உலகறியும். இச்சொல்லின் மாற்றுவடிவமாக (அ) மாற்றுச் சொல்லாக அறம் எனும் உள்ளீட்டுப் பொருள் அமைகிறது. ‘நடுநிலைமை’ எனும் பொருளை உலகிற்கு உறவுச்சொல்லாக்கி பொதுமையாக்கும் நோக்கமே இவ்வாய்வேட்டின் அறக்கோட்பாட்டு நிலை. சங்கப் பாடல்கள்

அறத்தையே ஆட்சியாக்கிப் பார்த்திருக்கின்றன. ஆட்சிக்குள் அறச் சிந்தனைகள் அங்கிங்கெனாதபடி தமிழரின் முதல் இலக்கியமான சங்க இலக்கியத்தின் பதினெட்டு நூல்களிலும் பாராளும் மன்னனின் நியதி, நீதி, மரபு, நெறிமுறை என்ற ஒரு பொருள் பல சொற்களாகப் பரவிக் கிடக்கின்றன.

'அறம் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்ற வள்ளுவப் பெருந்தகையின் முப்பாலுள் முதற்பாலாய், சமத்துவச் சிந்தனையை முனைந்து சொல்லத் துணிந்திருப்பது, சங்க காலத்திற்கு பின்னும் தொடர்ந்திருக்கிறது. சங்க காலத்தின் நியதிகளை சிரமேற்கொண்டு ஒழுகும், தொன்மை சார் வரலாற்றுப் பதிவின் அடியொற்றியே பிந்தைய இலக்கியங்கள் தொடர முனைந்திருப்பதும், 'அறநெறிக்காலம்' என்று சங்க மருவிய காலத்தை உருவகப்படுத்திக் கொண்டதும், உலகில் 'அறத்தை நடுநிலையாக்கிப் பார்க்கத் துணிந்ததையும்' நாம் உணரலாம். கடமை, பொறுப்பு, நீதி நெறிமுறை, மரபு என வாழ்நெறிகளை ஆய்ந்து அறநெறிக் காலத்தின் நூல்கள் தனிப்பெறும் மாண்புகளோடு தொடர்ந்து பயணித்து வந்திருக்கின்றன. தமிழ்ச் சமூகம் தொடர் சங்கிலியாய் அறம் என்ற உறவுச் சொல்லோடு பயணித்து வந்துள்ளது என்பது ஈண்டு எண்ணிப் பார்க்கத்தகும். அறம் எனின் சமம், நடுநிலைமை.

அறம் எனும் சொல் மொழிக்கூறாக மட்டுமே உச்சரிக்கப்படும் வகையுள் அரசனின் ஆண்மையுள் ஆளுமைக்குட்பட்டதாக அறியப்பட்டுள்ளது. இந்த அரசனின் ஆளுமை, அதிகாரம், அரசநெறியை சங்க இலக்கியத்தினின்றே விளக்கி உரைத்து பெண்களின் சமனற்ற, அறமற்ற நிலைப்பாடுகளை சமூகத்திற்கு முன்வைப்பதே ஆய்வின் முக்கியத்துவம்.

மனித உறவுகளுள் சமத்துவத்தை விதைக்கும் பொதுமைச் சொல் அறம். இது அரசு அதிகாரத்தின் முரணான நியதியாக இருந்து வருகிறது. இத்தகைய சூழலில் சங்க கால மனிதகுலம் அறத்தை எவ்வாறு உறவுச் சொல்லாக்கிச் சென்றிருக்கிறது என்பதை பெண் அறம் என்ற தனித்த ஆய்வினின்று வரலாற்று முறை திறனாய்வின் வழி விளக்க முனைகிறது இவ்வாய்வேடு.

இவ்வாய்வின் களம் சங்க இலக்கியங்கள். சங்க இலக்கியப் பாடல்களிலிருந்து ஆய்வுப் பணியைத் தொடங்கி வரலாற்றுப் பார்வையோடு சான்றாதாரங்கள், கல்வெட்டு, சுவடி, அகராதி, நிகண்டு, கலைக்களஞ்சியம் என முந்தைய வரலாற்றின் விவரணைகளை இரண்டாம் நிலை சான்றாதாரங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும் முறை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு எல்லை

தமிழர் வரலாற்றில் கடந்த கால அம்சங்கள் நிகழ்காலத்தின் கூறுகளாவும், நிகழ்காலக் கூறுகள் எதிர்காலத்தின் அம்சங்களாகவும் எண்ணிப் பார்க்கப்படும். அந்த வகையில், கடந்த கால வரலாறாக விளங்கும், தமிழரின் முதல் இலக்கியமான சங்க இலக்கியத்தில் பெண் சமூகத்தின் மீதான அறம் எவ்வாறு பார்க்கப்பட்டுள்ளது என்பதை ஆராயும் வகையில் 'சங்க இலக்கியத்தில் பெண் அறம்' என ஆய்வு எல்லை வரையறுக்கப்பட்டுள்ளது.

## ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வு சமூக வரலாற்றியல் ஆய்வு எனினும், ஒப்பீட்டு முறைத்திறனாய்வு, உளவியல் திறனாய்வு முறை ஆய்வு, வரலாற்றியல் திறனாய்வு, பகுப்பாய்வு முறை, விளக்கமுறைத் திறனாய்வு எனும் ஆய்வு முறைகளோடு அணுகப்பட்டு முறைப்படுத்திக் கொள்ளப்பட்டது.

காலச் சூழல் வரலாற்றைத் தீர்மானிக்கும் என்ற அடிப்படையில் சங்க காலத்திற்கு முன்னும் பின்னும் என்ற பரந்துபட்ட இடைவெளிக்குள் மனிதகுலம் குறிப்பிட்ட குழுக்களைச் சமூக வளர்ச்சிக்கென முறைப்படுத்தி வைத்திருக்கிறது. அவ்வாறே தொழில்வழிப் பிரிவுகளும் அமைந்திருக் கின்றன. ஆனால் தொழில் வழிப் பிரிவில் பெண் குழுக்களின் 'உழைப்பின் பங்கு' எத்தகைய தொழில் பிரிவாகவும் வகைப்படுத்தித் தரவில்லை.

அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற தொழில் பகுப்பு வர்க்கமுறை சொல்லாடல்களுக்கு முன்னரும், போர்வகைப் பிரிவு, தூதின் பிரிவு, கல்வியிற் பிரிவு, பொருள்வயின் பிரிவு என்ற சொல்லாடல்களுக்கு முன்னரும், பின்னரும் பெண்களை முன்னிறுத்திய மதிப்பீட்டு முறையில் அமையும் 'பிரிவு' என்ற ஒரு பகுப்பு அன்றைய காலத்தில் பெரிதும் சுட்டப்படவில்லை என்பதை பெண் அறச்சிந்தனையோடு அணுகும் முறை இவ்வாய்வில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

பெண் இனம் தலைமையேற்ற வரலாற்றை, நாட்டு வளம் குறித்த உற்பத்தியில் ஆற்றிய பங்கினை சங்கப் பாடல்களுள் தேடும் முயற்சி இந்த ஆய்வினைத் தொடங்க என்னுள் முனைந்தது. காரணம் புலியை முறத்தால் விரட்டிய பெண்ணின் உடல் வலிமை (பெரும் 136–140), மனவலிமை (புறம் 279), ஈன்று புறம் தந்த குழந்தைப் பேறு நிலை (புறம் 312), பால் முலை அறுத்து போர்முனை நின்ற பெண் (புறம் 278), புறமுதுகு காட்டிட மறுக்கும் நாட்டு

அரண் பேணும் கடமை மறம் (புறம் 276–279) என சங்க இலக்கியப் பாடல்களை வாசித்த என்னுள் பெண்ணிற்கான இடம் சமகாலத்தில் முரணாகவே இருப்பதற்கான வரலாற்று நிகழ்வு எங்கிருந்து தொடங்கியது என்பதை ஆராய்ந்திட முன்னின்ற எனது சிந்தனையுள் முதல் இலக்கியமான சங்க இலக்கியப் பாடல்களுள் தொடர் ஆய்வு நிகழ்த்தி பெண்ணின் உழைப்பு எவ்வாறு இருந்திருக்கிறது? பெண்ணின் வலிமை எவ்வாறு இருந்திருக்கிறது? பெண்ணின் கடமை எவ்வாறு இருந்திருக்கிறது? பெண்ணின் பிரிவு எவ்வாறு இருந்திருக்கிறது? பெண்ணின் வரைவு எவ்வாறு இருந்திருக்கிறது? பெண்ணின் வரலாறு எவ்வாறு இருந்திருக்கிறது? என்றவாறு கால வரலாற்றில் பெண் அறம் குறித்த ஆய்வில் வரலாற்றுமுறைத் திறனாய்வு மற்றும் பகுப்பாய்வு முறையிலும் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

சங்க கால வரலாற்றில் பெண்ணிற்கான இடம், சங்க இலக்கியத்தில் பெண் அறம் என்பது குறித்த பார்வையை ஆய்வுலகம் அறிந்திடும் வகையில் ஆய்வேடு முன்வைத்துள்ளது.

முந்தைய வரலாறு எத்தன்மைத்தாயினும் அவ்வரலாற்றுக் களத்தில் பெரும்பான்மையான கூறுகள் ஆணின் அதிகாரத்திற்குட்பட்டதாக இருந்திருக்கிறது என்பதான உண்மையை எண்ணிப் பார்த்துக் கொள்வதோடு முந்தைய வரலாறே பிந்தைய வரலாற்றின் தொடர்ச்சியாய் கால் கொண்டு வந்திருக்கிறது என்ற வரலாற்று ஆய்வினை ஆய்வுலகில் முன்வைப்பது கடமை என்பதை ஆய்வேடு உணர்ந்துரைக்கிறது.

### ஆய்வு மூலங்கள்

ஆய்விற்கான தரவுகள் இரு நிலைகளில் திரட்டப்பட்டுள்ளன. அவை,

1. முதன்மை நூல்கள்
2. துணைமை நூல்கள் என்பனவாகும்.

### முதன்மை நூல்கள்

ஒரு நாட்டின் வரலாற்று ஆவணம் என்பது அவ்வக்காலத்திய படைப்புகளையே குறிக்கும். ஆய்வுக்கான முதன்மை ஆவணமாக தமிழருக்குக் கிடைத்த படைப்பு நூல் சங்க இலக்கியம். சங்க இலக்கியமான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு எனும் பதினெட்டு நூல்கள் ஆய்வின் முதன்மைக் களம்.

சங்க காலத்தில் இலக்கியங்களே சட்டங்கள். நீதி சொல்லும் களங்களாகச் செயல்பட்டன. இலக்கியமே சமூகத்தினுடைய நியதியைக் கட்டமைக்கும் களம் என்பதால் சங்க இலக்கிய அரசு சார்ந்த அறநெறியைச் சொல்லும் பாடல்கள் இங்கே முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

### துணைமை நூல்கள்

இலக்கண நூலான தொல்காப்பியம், சங்க காலப் பெண் குறித்த ஆய்விற்கான விவரணைகளுக்கென கல்வெட்டு, சுவடி, அகராதிகள், நிகண்டுகள், கலைக்களஞ்சியங்கள் சான்றாதாரங்களாக எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. சங்க காலம் குறித்த ஆய்வு என்பதால் சங்க இலக்கிய ஆய்வு நூல்கள், கருத்தரங்கக் கட்டுரைகள், ஆய்வேடுகள், இரண்டாம் நிலைத் தரவுகளாகக் கொள்ளப்பட்டன.

### ஆய்வுப்பயன்

முந்தைய வரலாற்றின் அறமற்ற கூறுகளை விலக்கிச்சொல்லும் வரலாற்றுப் பார்வையைச் சமூகத்திற்குச் சுட்டிச் செல்ல முனைவதும், சமூக வளர்ச்சிக்கு நடுநிலைமை எனும் அறம் வழிநடத்தும் மாண்பினை விளக்கும் முறைகளை அறிவதும், மாண்பு காக்கும் நாம் மனதேற்றிக் கொள்ளும் மதிப்புறு நிலைகளை முறை மாறாது கடைப்பிடிக்கும் அறப்பாங்கு நிலையை உணர்ந்து கொள்வதும், சமூகம் சமத்துவம் பெறும் வகையில் புதிய ஆக்கப்பணிகளை ஆய்வுலகிற்கு ஆய்ந்தளிப்பதும் என தனி மனித ஆளுமை என்பது அரசு நிலையில் இன்னொரு தனி மனிதரை மாறுபட்டு அல்லது சமத்துவமற்று அணுகிடாத நிலையை உருவாக்கிக்கொள்ளும் ஆட்சி முறையை வலியுறுத்தும் மன வலிமையே சாலச் சிறந்தது என இனி விளையும் படைப்புக்களை உணரச் செய்வது ஆய்வின் பயன்பாடு.

கால ஓட்டத்தில் அடித்துச் செல்லும் சருகுகள் அல்ல சமூகம். விழுதுகள் என சமூகத்தைத் தாங்கி நிற்கும் மதிப்பிற்குரியோர் பெண்கள் என்பதை உலகறியச்செய்வதும் ஆய்வுலகில் கைகளை விரித்துக்காட்டி முதல் மூலதனத்தின் சுவடுகள் பெண்கள் என்பதை சங்க இலக்கியப் பாடல்கள் வழி விளக்க முனைகிறது இவ்வாய்வேடு.

சங்க காலத்திற்கு முன்னர் ஆதிப் பழந்தமிழர் சமூகத்தில் சமத்துவத்தை, சமப்பகிர்வை சீறூர் மன்னர்களின் வாழ்தலின்போது ‘பாதீடு’ என்ற சங்க இலக்கியச் சொல்லை அனுபவித்த தமிழர்கள், பின்னர் தனியுடைமைச் சமூக அமைப்பில் அரசனிடம் உரிமை இழந்து தவித்தனர். ஆண் – பெண் சமத்துவத்தை இழந்தனர் என்பதை உலகிற்கு விளக்குதல் ஆய்வின் பயன்பாடு.

புதிய சமூகத்தைக் கட்டமைக்க முனையும் தேவையும் முந்தைய வரலாற்றை ஆய்வு செய்து அளிப்பது ஆய்வாளரின் கடமை. ஆகவே எதிர்கால அரசியல் கட்டமைப்பை விளக்குதலும் சமத்துவப் பயன்பாட்டை உருவாக்குதலும் இலக்கு. பொதுவுடைமையில் மனித குலம் சமத்துவத்தைக் கண்டது. தனியுடைமையில் மனிதகுலம் அடிமைப்பட்டது. ஆண்டான் – அடிமை, ஆணாதிக்கம் – பெண்ணடிமை, மேல் – கீழ், உயர்வு – தாழ்வு எனச் சமூகத்தில் முரணை ஏற்படுத்தியது. சமூக வளர்ச்சியில் இடைவெளி ஏற்பட்டது. இந்நிலையில் அரசனின் நெறியாக, நீதிமன்றமாக, சட்டமாக அவனது சிந்தனையே வடிவம் பெற்று அமைந்ததாக இலக்கியம் படைக்கப்பட்டுள்ளது. 'அரசு' சிந்தனையின் வழி சங்க இலக்கியத்தின் பெண் அறத்தை சமூகத்திற்கு எடுத்துரைப்பது ஆய்வேட்டின் நோக்கம்.

**ஆய்வு இயல் பகுப்பு :**

இவ்வாய்வேடு முன்னுரை, தொகுப்புரை நீங்கலாக;

1. சங்க இலக்கியத்தில் அறம் – குறியீட்டுச் சொல்
2. சங்க இலக்கியத்தில் உற்பத்திக் கருவிகளும், பெண்களும்
3. நாட்டு வளத்தில் ஆண், பெண் தொழில்முறைப் பங்களிப்பு
4. சங்க இலக்கியத்தில் அரசும் – அறம் பெறும் இடமும்
5. கலைக் கூறுகளும் ஆண் பெண் கலைஞர்களின் பதிவுகளும்
6. சங்க இலக்கியப் பாடல்களில் ஆண்–பெண்பாற் பெயர்கள்
7. சங்க இலக்கியத்தில் சடங்குகளும்,
   தொன்மக் குறியீட்டுப் பதிவுகளும்
8. சங்க இலக்கியத்தில் 'பெண்' மதிப்பீடு

என இவ்வாய்வு எட்டு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

**ஆய்வும் அமைப்பும் :**

முன்னுரையில் ஆய்வு அறிமுகம், ஆய்வின் நோக்கம், ஆய்வுத் தலைப்பு, ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறை, ஆய்வு மூலங்கள், ஆய்வுப் பயன்பாடு என்பவற்றோடு இயல் பகுப்பு முறை என ஆய்வு அமைகிறது.

## இயல் – 1

**சங்க இலக்கியத்தில் அறம் – குறியீட்டுச் சொல் :**

அறம் எனின் ஒழுங்குப்படுத்தப்பட்ட, தேவையற்றதை விளக்கி முறையானதை வரையறை செய்தல். நியதி என பொருள்கொள்ளலாம்.

அறம் என்பது நடுநிலைமை என்னும் சொல்லின் மாற்றுவடிவமே. அறம் எனும் சொல் ஆய்வேட்டில் அத்தகைய பொருண்மையோடே ஆராயப் பட்டுள்ளது.

தவறொன்றும் இல்லாதது (நற் 42:1–2), வாக்கு தவறாமை (நற் 86:1), செங்கோல் (ஐங் 290 :1, அகம் 338 :2–3, புறம் 44 : 11–13), நடுநிலைமை (புறம் 12:1–3), நீதி (புறம் 39 : 8–10, பதிற் 22:4–10), காத்தல் (புறம் 175 : 10), அறநெறி (புறம் 9;1–6), (பரி 5: 71–81), ஆட்சி (அகம் 27 : 8–10), உதவுதல் (அகம் 155 ; 1–3, கலி 11:1–5), குடையின் நிழல் (கலி 94:8), துலாக்கோல் போல நடுவுநிலைமை உடைய அவையம் (மதுரை 492) கோல் ஓச்சுதல் (பொருநர் 230) என பொதுமைப்படுத்திக் கூறி இருக்க, சங்க இலக்கியம் பெண்ணின் இருத்தலைக் குறிப்பிடும் போது சமூகத்தில் அவர்களுக்கான இடத்தை ஒத்த கிழத்தியர், காமக் கிழத்தியர், வரையப்பட்டார் (தொல். பொருள் கற்பு. 149), காதற்பரத்தை, நயப்புப் பரத்தை, இற்பரத்தை, சேரிப்பரத்தை, பாசிழை மகளிர், கொண்டி மகளிர், வரைவின் மகளிர், பரத்தை போன்ற சொல்லாடல்களைப் பதிவு செய்திருக்கின்ற பான்மையும் குறித்து ஒப்பீட்டு முறையில் விளக்கிச் செல்கிறது இவ்வாய்வேடு.

அரசர்களின் நியதி, நீதி என்ற சொல்லாட்சி 'அறம்' எனும் சொல்லாக அமையப்பெற்றுள்ளமை இவ்வியலில் விளக்கம் பெறுகிறது. அறம் எனும் சொல்லாட்சி பெண்களின் இறுத்தலை எவ்வாறு ஆளுமை செய்திருக்கிறது என்பதை ஆராயும் இயலாகவே சங்க இலக்கியத்தில் பெண் அறம் எனும் தலைப்பு அமைகிறது.

சமூகம் எனும் பொதுமைச் சொல் எப்போது ஆண் ஆதிக்கச் சமூகம், உடைமையற்ற பெண் சமூகம் என மாறி அறம் பாட விதித்தது என்பதை ஆராய்வதும், பரத்தைப் பிரிவு, காமக்கிழத்தி, வரையப்பட்டார், இழிந்தோர் என பெண்களை நுகர்வுப்பொருளாக்கி பார்த்துள்ளது என்பதை அறவழியில் நின்று ஒப்பிட்டு நோக்கி விளக்கி உரைக்கும்.

சமூக ஒழுகலாறு பற்றிய முறைமைகளையும், முரண்களையும் அரசனின் விதிக்குள் பெண்களின் சமூக நிலைப்பாடுகளைப் பெண் அறம் என்ற தலைப்பில் ஆராய்ந்தளிக்கும் பகுதியாக இவ்வியல் அமைகிறது.

இவ்வியலுள் அறம் எனும் சொல்லிற்கான விளக்கங்களுக்கென அகராதி, நிகண்டு, சொற்பொருள், கலைக்களஞ்சியம், அறிஞர் தம் விளக்கங்கள் விவரணைகளாக தரப்பட்டுள்ளன. ஆயிரக்கணக்கான சங்க இலக்கியப் பாடல்களில் 'அறம்' குறித்த பாடல்களின் எண்ணிக்கை, அவை அளிக்கும் பெண் அறம் சார்ந்த கருத்துக்களின் பொருண்மைகளென இவ்வியல் விளக்கமுறைத் திறனாய்வின் அடிப்படையிலும், உளவியல், சமூக ஆய்வு முறையிலும் ஆராய்ந்து அளிக்கும்.

## இயல் – 2

### சங்க இலக்கியத்தில் உற்பத்திக் கருவிகளும் – பெண்களும்:

மனித குலம் தோன்றிய காலத்து அவனது தேடல் 'உணவு' குறித்தே அமைந்தது. தொடர்ந்து அவனது தேடலின் போது கல்லும் மரக்கிளையின் துண்டுகளும் கற்காலக் கருவிகளாயின. செம்புகாலம் உருவான போது அது வளையும் தன்மை கொண்டதால் தங்களுக்கான உற்பத்திக் கருவிகளை உருவாக்கிக் கொண்டனர். காலப்போக்கில் மனித குழு பெருகிட சிறு சிறு குழுக்கள் பல்வேறுபட்ட கருவிகளைத் தம் வாழ்தலுக்கென செய்து கொண்டனர். அதுவே மனித குலத்தின் தொழில் உருவான சூழல். பல்வேறு உற்பத்திக் கருவிகளின் பெருக்கம் குறிப்பிட்ட உபரியை உருவாக்கியது. உற்பத்திக் கருவிகளே உழைப்பில் முக்கியமானவையாக கொள்ளப்பட்டன. கால வளர்ச்சியில் உற்பத்திக் கருவிகளின் பெருக்கமே உபரியின் பெருக்கம். இடப்பெயர்வும் அதன் வளர் நிலையும் மருதம் எனும் பண்பாட்டு வடிவத்தையே உருவாக்கியது. சமூக வளர்ச்சிக்கு உற்பத்திக் கருவிகள் பெரும் பங்காற்றின எனும் கருத்தியல் விளக்கத்திற்குள் பெண்களின் பங்களிப்பு சமன் பாட்டு நிலையிலேயே இருந்ததற்கான ஆதாரங்கள் சங்க இலக்கியங்களின் வழி ஆராய்ந்து அளிக்கப்படும்.

## இயல் – 3

### நாட்டு வளத்தில் ஆண் பெண் தொழில்முறைப் பங்களிப்பு:

தமிழர்களின் முதற்பொருள் நிலம். முதல் தொழில் 'வேட்டையாடுதல்'. கூட்டு வாழ்க்கையைக் கொண்ட மக்களிடம் அடுத்து தோன்றியது மேய்ச்சல் தொழில், இத்தொழில் மக்களிடம் குடிபெயர்தலைக் கொண்டு வந்தது. மேய்ச்சல் தொழில் கண்டபோது ஓரிடத்தில் தங்கியிருந்ததும் அப்போது பயிரிடும் முறை உருவானதும், மேய்ச்சல் தொழில் நிலங்களை வளப்படுத்தியதும், கால்நடைகளின் சாணங்கள் விளைச்சலுக்கு உரங்களாக

உற்பத்திக்கு வளம் சேர்த்ததும், சாணங்களின் மூலம் உழவு செய்து பயிர்கள் செழித்ததும், அதனின்று ஓரிடத்தில் உழவு செய்து விளைச்சல் பெருக்கியதும் என தமிழரிடமே பயிரிடும் முறை முதன்மையாய்த் தொடங்கிய வரலாறு இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

'வாழ்தல்' எனும் தேவையில் தொழில் செய்தாக வேண்டும் என்ற அடிப்படையில் உடல் உழைப்பிற்கான திறனுடன் பொதுவான நிலங்களில், மலைகளில், காடுகளில், கடலில், பாலை நிலத்தில் என ஐவகை நிலங்களிலும் தொழில்வளத்தைப் பெருக்கினர். நாட்டு வளர்ச்சியில் முன்னின்றனர். அந்த வகையில் ஆண், பெண் மேற்கொண்ட தொழில்கள் சங்க இலக்கிய பாடல்களினின்று சான்றுகளோடு முறைப்படுத்திட முனைகிறது இவ்வியல்.

## இயல் – 4

### சங்க இலக்கியத்தில் அரசும் – அறம் பெறும் இடமும் :

ஆதிப் பொதுவுடைமை காலத்தில் 'பாதீடு' எனும் பொதுப் பகிர்வு / சமத்துவப் பகிர்வு நிலவியது. அரசு உருவானபோது உடைமைச் சமூகம் உருவாகியது. நான்கு நிலத்தையும் ஒருவனே ஆண்ட அரசு முறையில் அந்தந்த அரசனின் பார்வையில் அறம் குறித்த ஆளுமை சிந்தனை எவ்வாறு இருந்துள்ளது என்பதை இவ்வியல் விளக்கிச் செல்கிறது.

சமன்பாட்டு முறையை அடிப்படையாகக் கொண்டு அரசு அமைய வேண்டும். பல்வேறுபட்ட அரச விதிமுறைகள், அரச விதிகள், அரச கோட்பாடுகள் சங்க காலத்தில் சமன்பாடு அற்று அதிகார மையமாக வந்திருப்பதை **'அரசின் கொற்றம்'** எனும் தொடர் விளக்கும். அவ்வாறாக அறம் பெறும் இடங்கள் அவை கொள்ளும் பொருண்மைகளின் ஆளுமை, அதிகாரம் குறித்த பார்வை ஆய்வுப் பொருளின் குறிப்புரை நோக்கிய இயலாகவே ஆராயப்படுகிறது.

அரசு, அரசனின் கடன், வாரிசுரிமை, பெண் வீரம், அரச நெறியில் பெண், கற்பு, பரத்தமை போன்ற தலைப்புகளில் இவ்வியல் ஆராயப்பட்டுள்ளன.

## இயல் – 5

### கலைக்கூறுகளும் ஆண் பெண் கலைஞர்களின் பதிவுகளும்:

தொல்குடி மக்களின் மரபுவழிப் பிறந்த பாணன், பறையன், துடியன், கடம்பன், கூத்தன், புலையன், புலத்தி, விறலி, பாடினி, வயிரியர், கண்ணுளர், ஆடுநர், ஆடு மகள், கிணை மகள், பாடினி, பாண் மகள், பாடு மகள், முழவர்,

கோடியர், பொருநர், அகவன் மகள் எனச் சமூகத்தின் உயரிய குறியீட்டாளர்களின் வாழ்வியல், கலைத் திறன், சமூகத்தில் அவர்களுக்கான மதிப்பு, பழுமரம் தேடும் பறவை போல வாழ்ந்த அவர்களது வறுமை வாழ்வினை ஆராய்ந்துரைக்கும் இயலாக இவ்வியல் அமைகின்றது.

கலை – கலைஞன் குறித்த விளக்கப் பார்வையோடும், ஆற்றுப்படைக் கலைஞர்களை வழிபடுத்திய இலக்கியங்கள் வழி ஆற்றுப்படுத்தும் மரபு குறித்தும் விளக்குகிறது.

அரச நியதியுள் கலை, கலைஞர்களுக்கான நிலையினை ஆராயும் இயலாகவும் அமைகின்றன.

## இயல் – 6

### சங்க இலக்கியப் பாடல்களில் ஆண்–பெண்பாற் பெயர்கள்:

தொழில் வளத்தின் குறியீடாக தொழிற்முறை சார்ந்த தொழிற் பெயர்கள் இரண்டறக் கலந்திருக்கும் பான்மையும், உற்பத்தியில் ஆண் பெண் இருபாலரும் சமப் பங்கீட்டு முறையில் வாழ்ந்துள்ளமையை விளக்கும் வகையில் பெண்களின் பெயர்களை முறைப்படுத்தி தரும் பான்மையாக; கொடிச்சி, ஒண்தொடி மகளிர், மின் இழை மகளிர், தெரிதீம்கிளவி, ஆடு மகள், நொதுமலாட்டி, புலத்தி, உமட்டி என நெடும் பட்டியலாக அமையும் பெண்பாற் பெயர்களும், குயவர், புலையன், கம்மியன், தச்சன், கொல்லன், இழிசினன், காரோடன், கலம்செய்கோ, பறையன், இயவர், பொய்யாமாக்கள், ஓவியர், குறுந்தொழுவர், கைவல்கம்மியர், உமணர், தொடுத்தல் தொழில், நிறைத்தொழுவர், அன்னசாலை, நெசவர், கூளியர் என்பதான பட்டியலை பொருள் விளக்கமாக கைவினைத் தொழில் சார்ந்த ஆண்பாற் பெயர்களையும் ஆய்ந்துரைக்கும் இயலாக இவ்வியல் அமைகிறது.

## இயல் – 7

### சங்க இலக்கியத்தில் சடங்குகளும், தொன்மக் குறியீட்டுப் பதிவுகளும்:

சடங்குகளே பண்பாட்டு அடையாளங்களாக மரபுகளைக் காக்கும் குறியீடுகள். அவை தமிழரின் விழா, சடங்கு முறைகளின் எத்தகைய அடையாளங்களைக் கொண்டுள்ளன என்பதும், இடைச்செருகளாக அமையப்பெற்றுள்ள தொன்மக் குறியீட்டு வடிவங்களானப் புராண இதிகாசக் குறிப்புகள் இடம்பெற்றுள்ள முறைகள் குறித்தும், சங்க இலக்கியப் பாடல்கள் வழி நின்று ஆய்கிறது இவ்வியல். தொன்மம் என்ற சொல்லிற்கான குறியீட்டுப் பொருள் படிமங்களாக, உருவங்களாக, வண்ணங்களாக, குறிப்பிட்ட

சமயத்திற்கான பொருள்களாக, குறிப்பிட்ட சமயக் குறியீட்டுப் பொருண்மையை எவ்வாறு சுட்டுகின்றன என்பதன் ஆய்வாக இவ்வியல் அமையும். தமிழரின் சடங்கு முறைகள் எவை? தமிழரல்லாத வடமொழியாளர்களின் வருகையால் இணைந்த சடங்கு முறைகள் எவை? என்பதை விளக்கும் பகுதியாக இவ்வியல் அமையப் பெற்றுள்ளது.

இவ்வாய்வின் வழி, தமிழரின் மரபு, வேற்று மரபு குறித்த பார்வையை தமிழுலகத்திற்கு முன் வைப்பது கடமை என்பதான பகுப்புமுறைத் திறனாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது

## இயல் – 8

**சங்க இலக்கியத்தில் 'பெண்' மதிப்பீடு:**

'மனித குலம்' என்றே வரலாறு பொதுமைப் படுத்தியிருக்கிறது. உணவுத் தேடலிலும், பங்கீட்டு முறையிலும், உற்பத்திக் கருவிகளை உருவாக்கு வதிலும், மேய்ச்சல் தொழிலிலும், விளைச்சல் தொழிலிலும், உற்பத்திப் பொருட்களைச் சேமிப்பதிலும் உழைப்பின் வழி நாட்டு வளம் பெருக்கியவர்கள் சங்க இலக்கிய பெண்கள் என்பதும், ஐவகை நிலங்களிலும் பெரும்பான்மையாக பங்காற்றியுள்ள பெண்களின் ஆக்கத் திறன்களையும் – ஆளுமை திறம்பட, பெண் புலவர்களாக புலமைத் திறம் காட்டியுள்ள பான்மையினையும் இவ்வியல் விளக்கியுள்ளது.

தாய் வழிச் சமூகம் இருந்ததும், உடைமைச் சமூகம் உருவானதும், தமிழினத்துள் பிற மொழியாளரின் வருகையில் பெண் மதிப்பீடு ஒரு சார்பாக வரையறைக்குட்பட்டு இன்றைய பாலின வேறுபாட்டைப் போலவே அமைந்துவிட்டது என்ற வரலாற்றை விளக்கும் இயலாக இவ்வியல் அமைகின்றது.

## தொகுப்புரை

இயல்களின் தொகுப்புரையாக இவ்வியல் அமையப்பெறும். எட்டு இயல்களிலும் ஆய்வுச் செய்யப்பட்ட ஆய்வு முடிவுகள் தொகுத்தளிக்கப்படும். எதிர்கால சந்ததியினருக்கு ஆய்வு முடிவுகளை முன்னிறுத்தித் தருவதும், அவர்களுக்கான ஆய்வுக் களங்களை எவ்வாறு அமைத்துக் கொண்டு, சமூகப் பயன்பாட்டிற்கு துணை நிற்கவேண்டும் என்பதை விளக்கும் வகையிலும் தொகுப்புரை அமைகின்றது.

வகுக்கப்பட்ட இயல்களின் தன்மை மாறாமல் ஆய்ந்த முடிவுகளின் கருத்துகள் தொகுத்தளிக்கப்பட்டிருக்கின்றன.

அறிவு என்பது அறிதல் எனும் தொழிலைக் குறிக்கும் சொல். அது நுட்பமாக உணர்ந்து செயல்படுவது என்ற பொருளைத் தரும். அவ்வாறு அறிந்து செயல்படும் சூழலில் சங்ககால அரசு எவ்வாறு இயங்கியது என்பதை நடுநிலைமையோடு நின்று ஆய்வது தான் இந்த ஆய்வேட்டின் இலக்கு.

அறிவது என்பது இயற்கையைப் போன்று தன் நலனின்றி அமையவேண்டும். இயற்கை என்பது தன் இயல்பினின்று மாறாத்தன்மை உடையது. அவ்வாறே இயங்கும் இயற்கை விதிகளைப் போல மனிதனும் இயற்கையை அறிந்து இயங்கியல் போக்கினை உணர்ந்து அதன்வழி நின்று வாழ்தலே சிறப்பு. அதனை விளக்கும் வகையில் அகராதிகளும் கலைக் களஞ்சியங்களும் சுட்டிச் செல்லக் காணலாம்.

இயற்கையினின்று பிறந்த நாமும் அது எப்படி மாறாத் தன்மையோடு இருக்கிறதோ, இயற்கையினின்று நலம் / பயன் பெற்ற நாம் அதனை மீண்டும் இயல்பாக்கித் தருவது இயங்கியல் விதி. அதனால்தான் இயற்கையைப் போன்ற பொதுமையானது அறம் என்கிறோம். மாறாத் தன்மை கொண்ட நடுநிலைமையோடு அணுகும் நோக்கம் அரசனிடம் இருந்துள்ளதா என்பதை அறிதலே ஆய்வின் நோக்கம்.

தன்னியல்பில் திரிபினை ஏற்படுத்துவோரின் களத்தில் திரிபினின்று மாற்றம் பெற்று மீண்டும் இயல்பு, இயற்கை எனும் அறத்தை நிலை நிறுத்துவதற்கு ஆட்படுத்துதல் கடமை. அக்கடமையுணர்வோடு பயணிக்கும் போது திரிபினின்று மாற்றத்தை நோக்கி பயணிப்பது முரணற்ற தன்மையோடு இணைந்ததாகவே அமையவேண்டும்.

மாற்றம் என்ற சொல் பயன்பாட்டினை அடியொற்றியது. புதியது. புதுமைக்கு வித்திடுவது. பயனுக்குரியதான மாற்றம் என்ற சொல் இயல்பு எனும் அறத்தை நோக்கியே பயணிக்க வேண்டும். அப்பொழுதே நடுநிலைமையும் உருப்பெறும்.

பார்த்தல், அறிதல் எனும் சொற்கள் இயற்கை தந்த அறிந்துணர் சொற்கள். அவ்வாறே இலை ஓடவில்லை அசைகிறது. இலை ஓடாது அசையும், நீரைப் போன்று ஓடுவதில்லை என்று வேறுபடுத்தி உணரும் வகையில், அறம் என்பதும்,

அறு + அம் = அறம் என பொருள் பெறும். அறு என்று சொல்லக்கூடிய அறுத்தல் எனும் தொழில் வேறுபடுத்தி அணுகும் முறையை அறுத்தெறிதல் என்ற உலகியல் வழக்கினை உட்பொருளாய் கொண்டமைவது.

பொதுமையினின்று வேறுபடுத்தும் வகையில் என்னென்ன முரணான செயல்பாடுகள் அரசுகளிடம், அரசநெறிகளில் இருந்தது என்பதை விளக்குவது இந்த ஆய்வின் நோக்கம்.

சமூக இயல்பினின்று மாறி நிற்கக்கூடிய நிலையை அறிந்து கூறுவதும், இனிவரும் காலங்களில் ஆண் பெண் முரண்களை வேரறுத்து, அரசநெறிகளில் இருந்த மன்னர்கள் போலவும், புலவர்கள் போலவும் இல்லாமல் பெண் அறம் குறித்த பார்வையுள், பொருண்மை குறித்த அளவில் நடுநிலைமையோடு அறத்தை அணுகுவது என்பதை உலகிற்கு வலியுறுத்திக் கூறும் ஆய்வு இது.

மனித சமுதாயம் நீண்ட நெடிய வரலாற்றை உடையது. காட்டு மிராண்டி என்ற நிலையிலிருந்த மனிதன் தனக்கென ஒரு வாழ்தலை அமைத்துக் கொண்டு வாழும் போதும் ஒருவருக்கொருவர் ஒத்து உழைக்கத் தொடங்கிய காலக்கட்டத்திலும் தேவையானவற்றைத் தவிர்க்கவும் – 'அறு' எனும் தொழில் தேவை என்ற இயல்பை நோக்கியே தேவையானவற்றை பெறவும் 'அறம்' எனும் ஒற்றைக்கொள்கை பிறந்திருக்கவேண்டும். மனிதப் பயன் சமூக ஒழுங்கு முறை எனும் நோக்கில் தோன்றியிருக்க வேண்டும். ஆகையால் 'அறம்' என்பதை மனித சமுதாயத்தைப் போற்றி வளர்க்கும் ஒழுங்கு முறை, வழக்கமாய் பின்பு மரபாகி அறுத்தல் என்ற தொழில்பட அறம் என்று பண்டைத் தமிழர்கள் நெறிப்பட வாழ்ந்து வந்துள்ளனர். சமுதாயம் பகிர்ந்து வாழவும், சமமாக ஒருங்கிணைந்து தொழில் செய்து வளம் பெறவும் பகுத்துண்டு பாதீடு என்ற வகையில் விரும்பி வாழவும் பழந்தமிழர் நாகரீகம் நோக்கி பயணித்தபோதும் முந்தைய பாதீட்டு சமன்பாட்டை பின்பற்றிய நெறியே அறம் என்பர். அத்தகு அறத்திற்கு அகராதி, கலைக்களஞ்சியம், இலக்கிய ஆய்வாளர்கள் தரும் விளக்கங்கள் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

**அறம் – விளக்கம்:**

ETHICS என்ற ஆங்கிலச் சொல்லின் இணைப் பதிலிச் சொல்லாக 'அறம்' திகழ்கிறது. இச்சொல் 'அறு' என்னும் வினைச்சொல்லையும் 'அம்' என்னும் தொழிற்பெயர் தொகுதியையும் கொண்டு (அறு+அம்=அறம்) தோன்றியதாகும்.

'அறு' என்னும் அடிச்சொல்லிற்கு 'அறுத்துச் செல்' 'வழியை உண்டாக்கு' 'உருவாக்கு' 'துண்டி' 'வேறுபடுத்து' எனப்பல வகைப் பொருள்கள் வழங்கி வருகின்றன.

'அறம்' என்ற வேர்ச்சொல்லின் 'அறு' என்பதற்கு வழங்கப்படும் பொருள்கள் ஆழ்ந்த கருத்தியலைக் கொண்டு விளங்குகின்றன. அறுத்துச் செல் – தனக்கான கரையைத் தானே அறுத்துக் கொண்டு செல்லும் ஒரு முறையை உருவாக்கிக் கொள்ளும் ஆற்றைப் போலவே அறமும் சமூகத்திற்கான வரையறைக் கரைகளை உருவாக்கிக் கொண்டு செல்கிறது[1] என்ற கருத்தியலை பொருளாய்க் கொண்டமைகிறது.

மேற்கூறப்பட்ட விளக்கத்திலிருந்து 'அறம்' என்பது சமூகத்திற்கு ஏற்ப அறநெறிகளை / தமக்கான வழிவகைகளை, தேவையற்றதை விடுத்து, ஏற்பும், எதிர்ப்பும் கொண்ட பொருள் பொதிவு கொண்ட சொல் என்பதை விளங்கி கொள்ள முடிகிறது.

**அறம் – அகராதி தரும் விளக்கம் :**

அறம் – கையறம், தருமம், நீர்மை, நூற்பயன் நான்கினொன்று, பெரியோரின் இயல்பினொன்று என்று **தமிழ்மொழி அகராதி**[2] கூறுகிறது. அறம் – தருமம், புண்ணியம், அறச்சாலை, தருமதேவதை, யமன், தகுதியானது, சமயம், ஞானம், நோன்பு, இதம், இன்பம், தீப்பயன் உண்டாக்கும் சொல் என்று **தமிழ் தமிழ் அகரமுதலி**[3] கூறுகிறது. அறம் (as something more excellent) அறுத்து வேறாக்கி– மேன்மைப்படுத்தியது என்கிறது **ஒப்பியல் அகராதி**[4]. தருமம், புண்ணியம், தகுதியானது, சமயம், ஞானம், அறச்சாலை, நோன்பு, நலம்புரி நங்கை வைத்து நல் அறம் காக்கவென்றாள், தீப்பயன் உண்டாக்கும் சொல், தருமதேவதை, இயமன், சுகம், இதம் என 12 பொருட்களைத் தருகிறது **தமிழ்ப் பேரகராதி**[5].

அறம் – மக்கள் நல்வாழ்வு வாழச் சான்றோர்களால் வரையறுக்கப் பட்ட நன்னெறி தருமம், இல்லறம், துறவறம், கற்பு, இன்பம், ஏற்றது (இதம்). தகுதியானது, குற்றம் தீர்ந்த நன்மை என்கிறது **பெருஞ்சொல்லகராதி**[6]. தருமம், யமன், நீதி, புண்ணியம் எனத் தற்கால தமிழ்ச் சொல்லகராதியும்[7] அறநூல், அறக்கடவுள், துறவறம், புண்ணியம், இல்லறம், கற்பு, கடமை, தருமன், இயமன், நீதி, அறன் என **ஸ்ரீமகள் தமிழ் அகராதியும்**[8] விளக்கம் அளிக்கின்றன அறம் – கடமை, நோன்பு, தருமம், கற்பு, இல்லறம், துறவறம், நல்வினை, அறநூல், அறக்கடவுள், தருமதேவதை, தீப்பயனுண்டாக்குஞ் சொல் என்கிறது **கழகத் தமிழ் அகராதி**[9]. அறம் என்னும் சொல்லிற்கு, கடமை, தருமம், கற்பு, இல்லறம், துறவறம், புண்ணியம், அறநூல், அறக்கடவுள் என எட்டு வகையான பொருள் தருகின்றது **கழகத் தமிழ்க் கையகராதி**[10]. தருமம், புண்ணியம், இல்லறம், அறக்கடவுள் எனத் **திருமகள் தமிழகராதியும்**[11] அறச்சாலை, சமயம், ஞானம், தகுதியானது, தருமம், தரும

தேவதை, நோன்பு, யமன் எனக் **கார்த்திகேயினி புதுமுறை அகராதியும்**[12] விளக்கம் அளிக்கின்றது. அறம் – தருமம், புண்ணியம், நோன்பு, கூற்றுவன், தானம், கடமை, கற்பு, இல்லறம், துறவறம், நல்வினை, கையறம், அறநூல், தீப்பயன் உண்டாக்கும் சொல், நூற்பயன் நான்கில் ஒன்று, பெரியோர் இயல்பில் ஒன்று என்று கூறுகிறது **தமிழ் தமிழ் அகராதி**[13].

அறம் – Moral or religious duty, Virtue the performance of good works according to the shasters - including justice, hospitality, liberality etc., also what is prescribed as the duty to be practised by each particular caste compare தருமம்[14] என்கிறது **வின்சுலோவின் தமிழ்–ஆங்கில அகராதி**.

அறம் – Moral or religious, duty, virtue, charity, Merit[15] என்கிறது **தமிழ் – ஆங்கிலம் அகராதி.**

Virtue - ஒழுக்கம், Charity - benefaction தருமம், Merit - புண்ணியம், Letters or words in a vesse which Causerium as in - அறம் வைத்து பாடுதல், goddess of Virtue, Yama என்று அறத்திற்கு விளக்கம்[16] அளிக்கிறது A Dictionary Tamil & English.

அறம் – இல்லறம், துறவறம் என இருவகை. கொடுத்தலுமளித்தலும், கோடலும், இன்மையும், ஒழுக்கம், புணர்தல், புணர்ந்தோர்ப் பேணல், மற்றையும், துறவும், அடக்கமும், தூய்மையும், தவமும் அறவினையோம்பலும், மறவினை மறுத்தலும் பிறவுமாம் என்று இல்லறத்திற்கும், துறவறத்திற்கும் வீரசோழியம்[17] விளக்கம் தருகிறது.

நல்வினை, ஐயம் (பிச்சை), ஏழைகட்கு இலவசமாகக் கொடுப்பது, நோயாளிகட்கு இலவசமாக மருந்தீகை, நலமானது, இன்பம் (சுகம்), தகுதியானது, கற்பு, நோன்பு, அறப்பயன் (புண்ணியம்), சமயம், ஒதி (ஞானம்), அறச்சாலை, அறத்தெய்வம், நடுநிலையறம் பேணும் கூற்றுவன்[18] என்று **செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி** கூறுகிறது.

சமயம், ஞானம், புண்ணியம், நோன்பு, ஒழுக்கம், தவம், தருமம், நீதி, நீர்மை, இல்லறம், துறவறம், கற்பு, தானம் என அறத்திற்கு[19] விளக்கம் அளிக்கிறது **மணிமேகலைத் தமிழ் – தமிழ் அகராதி.**

குடும்ப வாழ்வும், பொது வாழ்வும் சீராக இயங்க ஒருவர் கடைப்பிடிக்கும் சமயச் சார்பான அல்லது ஒழுக்கக் கண்ணோட்டத்துடன் கூடிய நெறிமுறைகள் அல்லது கடமைகள் (Ethical on religious code of conduct) என்று[20] கூறுகிறது **க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி.**

மறப்புறம், தருமம், புண்ணியம், தகுதியானது என்கிறது[21] **தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி.** நல்வினை[22] என்கிறது அகராதி நிகண்டு.

அபிதான சிந்தாமணி அறம் என்பதற்கு பின்வரும் 32 பொருள்களைத் தருகிறது. ஆதுலர்க்குச் சாலை. ஓதுவார்க்குணவு, அறுசமயத்தோர்க்குண்டி, பசுவிற்கு வாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டம் நல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவு வளர்த்தல், மகப்பால் வார்த்தல், அறவைப் பிணஞ்சுடல், அறவைத் தூரியம், சுண்ணம், நோய்மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர் காத்தல், தண்ணீர்பந்தல், மடம், தடம், கா, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலை கொடுத்துயிர் காத்தல், கன்னிகாதானம் என்கிறது (ப.108) அபிதான சிந்தாமணி.

அறமே அறிவு, அறிவே அறம் என கிரேக்க நாட்டுத் தத்துவ ஞானிகளாகிய சாக்கிரடீசு, பிளாட்டோ போன்றவர்கள் அளித்த வரையறைகளுக்கேற்ப மனிதனுக்குச் செயற்பாட்டு அறிவைத் தந்து, அவனைச் செயலறம் பேணும் அறப் பேரறிஞனாக வாழத்துணை நிற்பது அறவியல் என விளக்கம் கூறுவது மரபு[23] என்று **வாழ்வியல் களஞ்சியம்** குறிப்பிடுகின்றது. அறம் என்பது நல்வினை மாந்தர் யாவரும் நல்வினை செய்ய விரும்புதல் வேண்டும்[24] என்பது ஔவையாரின் கட்டளை.

அறம் என்னும் தமிழ்ச் சொல்லுக்குப் எதிக்ஸ் (Ethics) என்னும் ஆங்கிலச் சொல் அமைகிறது. தனிமனிதன் பிறருடன் தொடர்பு கொள்ளத் துணை செய்யும் பொது இயல்பான ஒழுக்கம்[25] என்கிறது **ஆங்கில அகராதி.**

அறம் (அறன்) என்னும் சொல் உரையாசிரியர்களின் பொருள் நோக்கில் அறக்கடவுள், மனத்தூய்மை, மனம், சொல் தூய்மை, ஒழுகல், நன்மை, நற்செயல், அல்லது நல்வினை, அறநெறிவுடையவர், அறவோய், நிதி வழங்கும் முறை, அறப்பண்பு, அறநூல் (நீதிநூல்), அரசுமுறை அறம், அறத்தொடு நிற்றல், உடன்போக்கு, இல்லறம், துறவறம், பகுத்துண்டல், உலக வழக்கு, அறமுறை, அறக்கிழவன், வேதர்மம், அறப்பயன், காரணகாரியம், வாய்மை, புகழும் பயனும், கொல்லாமை, மறுமைக்கு உறுப்பு, பார்ப்பார்களித்தல், அறநுணுக்கம், அறஉபாதை, எனப்பல பொருள்களில் வருகிறது[26] என்பார் வே.அண்ணாமலை.

மனித சிந்தனையில் அறம் என்பதை முப்படைக் கண்ணாடியாகக் கொண்டால்அதன் மூன்று பக்கங்களாக எண்ணம், சொல், செயல்

விளங்குகின்றன. எண்ணம் அறத்தின் நிலையாற்றலாகும். சொல் இயக்க ஆற்றலாகும். செயல் இயங்கும் ஆற்றலாகும். அம்மூவகை ஆற்றலும் செயல்படும் போது அதுவே ஒழுக்கமாகிறது. அவ்வொழுக்கமே அறமாகின்றது[27] என்கிறார் க.த.திருநாவுக்கரசு.

உயிர்களின் பரிணாம வளர்ச்சி போன்றே கருத்துக்களும் படைப்புகளும். அவை வளர்ச்சியைக் கொண்டவை. அறம் என்னும் சொல்லுக்கும் அத்தகைய சிறப்புகள் உண்டு. அவ்வக்காலத்தில் ஆளுமை செய்வோர், சமயங்கள், சமூக நிறுவனங்கள் ஆகியவை வகுத்துக் கொடுத்தவையும் அறம்[28] எனப்பட்டன என்பார் சு.மாதவன்.

இவ்வாறு, பல்வேறு வகையான பொருள்கோடல்களுக்கும் சொற்குறிப்புகளுக்கும் இடந்தரும் நெகிழ்வுத் தன்மையுடையது அறம் எனும் சொல் என்பது மேற்கூறப்பட்ட விளக்கங்களின் வழி தெற்றென விளங்கிக் கொள்ளமுடிகிறது. ஆனால், இவ்வாய்வேடு 'அரசு' நெறியில் பெண் அறம் குறித்த சிந்தனையை சங்க இலக்கிய அரசர்களில் நியதியினின்று ஆய்வு செய்கிறது.

## அறக்கோட்பாடு

பலபொருள் கொண்ட ஒரு சொல்லாக அறம் எனும் சொல் திகழ்ந்தாலும், ஒழுக்கம், நீதி, நடுவுநிலைமை, தருமம், புண்ணியம் போன்ற சொற்கள் சமம் என்ற உட்பொருளைத் தருவதாக உணர்த்தி நிற்கின்றன.

'சமம் எனின் அறம்'. உரிமை என்பது மற்றொரு பெயர்ச் சொல். உரிமை எனின் சமஉரிமையே.

அறன் என்பது அரசு, நிர்வாகம் (அரசு + நிர்வாகம் = அரசாட்சி) என்று கூறுவர். இந்த அரசாட்சி என்று சொல்லக்கூடிய அறம் என்பது பாதுகாப்பு, மக்களைப் பாதுகாத்தல் என்பதைக் குறித்து நிற்கிறது. இதனையே, ''அறநெறி முதற்றே அரசின் கொற்றம்'' (புறம். 55:12) என்றே புறநானூறு விளக்கி நிற்கும்.

அறன் என்ற காப்பு, நாட்டு மக்களுக்கு ஆகி வந்துள்ளதென்றே பொருள்பட உரைப்பர். அது அரசனால் உருவாக்கப்பட்டுள்ளது. இந்த பாதுகாப்பு மக்களுக்கு உரியது என்றால் முரணான சமூகம் ஏன் உருவானது? அதற்கான காரணி எது ? அப்படி உருவான முரண்பட்ட சமுதாயத்தில் மனித உயிர்களுக்குள் தாழ்வு, உயர்வு என்பது நீண்ட இடைவெளியோடு நீட்சியை மட்டுமே கொண்டமைந்தது ஏன் ? எதிர்கால சமூகத்திலும், அது ஆளுமை செலுத்த, அதிகாரம் செலுத்த, ஆட்சி செலுத்தத் தலைப்படும் சூழலை கைநீட்டி வரவேற்று கொண்டிருப்பதேன் ? இது அதிகார வர்க்கத்தின்

தலையீடு என்பதாக சம காலத்தில் உணரப்பட்டுக் கொண்டு வருகிறது. எனின் அப்படி எண்ணப்பட்டுக் கொண்டிருக்கிற சூழலில் சமத்துவத்தை அறம் எனும் சம உரிமையை இந்தச் சமூகம் பார்த்திருக்கின்றதா? என்ற கேள்வியை எழுப்பி மனித வாழ்வில், அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை (குறள் 49) அறத்தான் வருவதே இன்பம் (குறள் 39, பழமொழி அகராதி ப.30) அறம் செய்ய விரும்பு (ஔவையார்) என்ற பொதுமறையினை அடியொற்றி அதன் அறம் அழுத்தமாக பேசப்பட்டதேன்? எதிர்கால சமுதாயத்திற்குத் தொடரவேண்டும் என்ற நற்பயனே அதன் காரணி என்று உணர முடிகிறது. ஆனால் அதன் முறை ஒழுங்கில் மனிதகுல வேறுபாடு ஆண் பெண் பாலுறவு வேறுபாடு காட்டப்பட்டதும், அடிமைப்படுத்தப்பட்டதுமான நிலை ஏன் உருவானது என்ற பொது சிந்தனை ஆய்வு நோக்கில் 'அரசு' பெண் அறத்தை வழங்கியுள்ள முறைமையை சமூகத் தளத்தில் முன்வைப்பதும், இனி சமத்துவத்தைப் படைப்பதும் ஆய்வின் இலக்கு.

சமுதாயத்தில் பாலின வேறுபாடு என்பது உடற்கூறு அடிப்படையில் பாலூட்டி, தாய், தாய்மை குணம் நிறைந்த பெண், தாய்மை பேறு உற இயலாத பெண் என சமூகத்தில் பெண், ஆண் என்பதாக உருவ, உடல் உறுப்புகளின் வேறுபாட்டில் அமைந்த பிறப்பாக மட்டுமே அமைந்திருக்கிறது. இங்கு முரண்பாடு ஏற்படுவதற்கு யாதொரு வழியும் இல்லை. ஆனால்,

மனித சமூகம் வேட்டைச் சமூகமாக இருந்தவரைக்கும் பொருளுடைமையின் பொருட்டான வேட்கை அவ்வளவாக இல்லை, தனியுடைமை – பொருளுடைமைச் சமூகமானதும், உடைமைகளின் மீதான ஆளுமை மேலும் மேலும் இறுகுவதற்குரிய விதிகள் சமூகமயமாக்கப்பட்டன, உடைமைச் சமூக அமைப்பின் உருவாக்கத்தோடு வேலைப்பிரிவினையில் நுகர்வுப்பொதுமைப் பார்வை மாறி மேல், கீழ் என்ற ஏற்றத்தாழ்வுகளை நிலையானதாக்குவதற்குரிய அறக்கோட்பாடுகள் திணிக்கப்பட்டன, அதிகாலை முதல் இரவு வரையிலான ஒவ்வொரு அசைவும் அவரவர் சார்ந்துள்ள சமூகநிலைக்கேற்ப வரையறுக்கப்பட்டு, நடைமுறைப்படுத்தப் பட்டு இயல்பாக்கப்படுவன. ஆனால் அந்த அறக்கோட்பாடு பெண்ணைப் பொறுத்தவரையில் அறமற்றதாகவே இருந்திருக்கின்றது என்ற சு.மாதவனின் கருத்து[29] ஆய்வின் வலுவாக்க கருத்தாகவே எண்ணமுடிகிறது.

**அறநூல் வரலாறு:**

மனித இனத்தின் நடத்தை, ஒழுக்கம், வாழ்க்கையின்நோக்கங்கள் முதலியவைகளைப் பரிசீலனைச் செய்யும் சரித்திரம் 'அறநூல்'. தேர்ந்த

அறிவுடன், சிந்தித்துச் சுயேச்சையாய்த் தீர்மானித்த விருப்பத்துடன், சங்கற்ப சக்தியால் இடையூறுகளையும் எதிர்ப்புகளையும் வென்று எடுத்த காரியத்தை முடிப்பதுதான் அறச்செயல்.

தான் புரியும் அறச் செயல்களாலே மேன்மையான சமூகத்தைத் தோற்றுவித்து, அதில் தான் பொலிவு பெற்று, எல்லோருடைய முன்னேற்றத்திலும் தான் தன் சொந்த முன்னேற்றம் பொருந்தியிருக்கிறது என்ற உறுதியான கொள்கை தோன்றல் என கலைக்களஞ்சியம்[30] அறநூல் வரலாற்றினைக் குறித்துச் சொல்கிறது.

அறவாழ்க்கையின் வரலாறும், மனித வாழ்க்கையின் வரலாறும் ஒன்றே. மனித வாழ்க்கையின் உண்மையை உள்ளபடி அறியவேண்டுமாயின் தொடக்கக் காலமுதல் அது எப்படியெப்படி மாறிற்று, எந்தெந்த நிலைகளை அடைந்து வளர்ந்தது தற்காலம் இருக்கும் நிலைக்கு எங்ஙனம் வந்தது என்று விளக்கிக் காட்டுவது மிகவும் அவசியம். அத்தகு அறத்தின் வளர்ச்சி நிலையில் மூன்று நிலைகளைக் கூறலாம்.

மருத நில வளர்ச்சி வந்த பிறகு 'அரசு' உருவானதும் பிறகு அறம் என்ற சொல் ஆக்கச் சொல்லாகி உருவானதையும் பார்க்கிறோம். அதற்கு முன்பாக 'தேவை' என்ற சொல்லே முதன்மையாகவும், கூட்டுறவு என்ற சொல்லின் பொருளாகவும் பார்க்கிறோம்.

**அறம் குறித்தான கருத்தாக்கம்:**

அறவியல் என்பது மானுடவாழ்வியல் ஒழுகலாறுகளை வரையறுத்துச் செயல்படுத்தும்[31] ஒரு கோட்பாடு ஆகும்.

அரசியல், நீதி, மெய்யியல், மதம், இலக்கியம், கலை ஆகிய எல்லா அம்சங்களின் வளர்ச்சியும் பொருளாதார வளர்ச்சியை அடித்தளமாகக் கொண்டிருக்கிறது. ஆனால் இந்த மேல் கட்டுமானத்து அம்சங்கள் எல்லாம் சேர்ந்து ஒன்றின்மேல் ஒன்று வினையையும், எதிர் வினையையும் விளைவித்துக் கொண்டிருப்பதோடு பொருளாதார அடித்தளத்தின் மீதும் வினைபடுகின்றன. (பாலசுப்பிரமணியன், கு.மா. **1987, 60)** என்ற கருத்துப்படி, பொருளாதார வளர்ச்சியால் சமூகத்தில் ஏற்படும் மாற்றங்களை நெறிப்படுத்துவதே அறம் என்பதன் தலையாய நோக்கமாக அமைகிறது[32] என்பார் சு.மாதவன்.

பசுக்களின் நிறம்பல. ஆனால் அவற்றின் பாலின் நிறம் ஒன்றுதான். அறநெறிகள் பல, ஆனாலும் அறம் ஒன்று தான் (நாலடி **118)** என்ற

நாலடியாரின் கருத்திற்கு ஏற்ப அறம் பல்வேறு வகையான பொருள் கோடலுக்கும், சொற்குறிப்புக்கும் இடம் தரும் நெகிழ்வுத் தன்மை உடையதாக[33] இருக்கின்றது. இவ்வாறு மனித சமூகத்தில் உருவாக்கப் பட்டுள்ள அனைத்துத் துறைகளின் இயக்கத்தையும், அவற்றின் அலகுகள், நுண்ணலகுகள் ஆகியவற்றின் இயக்கத்தையும் அம்மனித சமூகத்தில் வரையறுத்து கட்டமைத்து இயக்குவிக்கும் செல் நெறிகளின் ஒழுங்கமைவு விதிகளை மெய்யியலின் ஒரு பிரிவான அறவியல்[34] வடிவமைக்கின்றது.

மனிதன் கண்ட அறிவுத்துறைகளுக்கெல்லாம் அடிப்படை வாயில்களாக அமைந்தவை ஐம்புலன்களாகும். புலன் நுகர்வின் வழியே மானுடவாழ்வின் இருத்தல் தீர்மானிக்கப்படுகிறது. புலன் நுகர்வின் பயன்பாட்டு அனுபவ நோக்கில் மானுட வாழ்வின் அகப்புறத் தேவைகள் நிறைவேற்றப்பட்டன. தேவையற்றவை, விலக்கப்பட்டன. இவ்வாறு நிறைவேற்றப்பட வேண்டியவை, விலக்க வேண்டியவை எவையெவை என்ற பகுப்பாய்வின் விளைச்சலே அறிவியலாகும்.

பொருளின் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டுப் பொருளைத் தமது கட்டுப்பாட்டிற்குள் மனிதர்கள் கொண்டு வந்ததற்கான பொருளிகந்த ஆற்றலை வழங்கியவை அறங்களே. கண், காது, நாக்கு, மூக்கு, பல் (பாலியல் மையங்கள்) உணர்வுகளைக் கட்டுப்படுத்தியதால் உருவானவை அறங்கள். கால்நடை மற்றும் வேளாண்மை நாகரீக காலகட்டங்களில் நாக்கின்மீது, அது சுவைக்கும் உணவு, குடிமீது அதனால் உச்சரிக்கப்படுகின்ற பேச்சு, சொல், மொழிமீது பல்வேறு நன்மை – தீமை சார்ந்த கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. நாக்கின் மீது மட்டுமல்ல, கண், செவி, தலை, கை முதலான உடல் உறுப்புகள் பலவற்றின் மீதும் ஏராளமான கட்டுப்பாடுகள் ஏற்றப்பட்டன. இவை ஒழுக்க விதிகளாகவும் (Moral Goods) அறமாகவும் (ethics) அமைந்தன என்று ராஜ்கௌதமன்[35] அவர்கள் குறிப்பிடுகிறார்.

ஒருவகையில் சுரண்டல் சமூகத்தை நிலையானதாக்க முயலும் அறநெறிகள், வேறொருவகையில் சமூகத்தின் ஒருபடித்தான இயக்கத்தை உறுதிப்படுத்துவதாகவும் வினைபுரிகின்றன[36] என்பார்.

மனித சமூகம் வேட்டைச் சமூகமாக இருந்தவரைக்கும் பொருளுடைமையின் பொருட்டான வேட்கை அவ்வளவாக இல்லை. தனியுடைமை பொருளுடைமைச் சமூகமானதும், உடைமைகளின் மீதான அதிகாரப்பிடிமானம் மேலும் மேலும் இறுகுவதற்குரிய விதிகள் சமூக மயமாக்கப்பட்டன, உடைமைச் சமூக அமைப்பின் உருவாக்கத்தோடு

வேலைப்பிரிவினையில் நுகர்வுப் பொதுமைப் பார்வை மாறி மேல், கீழ் என்ற ஏற்றத்தாழ்வுகளை நிலையானதாக்குவதற்குரிய அறக்கோட்பாடுகள் திணிக்கப்பட்டன. அதிகாலை எழுந்தது முதல் இரவின் மடியில் துயில் கொள்ளச் செல்லும் வரையிலான ஒவ்வொரு அசைவும் ஒவ்வொருவர் சார்ந்துள்ள சமூக நிலைக்கேற்ப வரையறுக்கப்பட்டு, நடைமுறைப் படுத்தப்பட்டு இயல்பாக்கப்பட்டன. இத்தகைய போக்குகள் நிறைந்த அறவிதிகளின் ஒட்டுமொத்தத் தொகுப்புக்கே அறவியல் என்று பெயர்.

**பௌத்த அறம்**

பௌத்த அறம் 'தம்மா' என்ற பாலிமொழிச் சொல்லால் குறிப்பிடப்படுகிறது. இச்சொல் பௌத்த அறத்தைக் கூறுவதாக இருப்பினும், பொது நிலையில் **பௌத்த மெய்யியல்** முழுமையையும் வெளிப்படுத்துவதாக அமைந்திருக்கிறது.

புத்தரின் அறக்கோட்பாட்டை அர்த்த ஜாலம், தருமஜாலம், பிரம்மஜாலம், திருஷ்டி ஜாலம், சங்கிராம அனுத்தா விஜயம் என்ற சொற்களால் சுட்டுகிறது தீக நிகாயம்.

பொருள் பொதிந்த, உயிரோட்டமான, காட்சித்தன்மையுடைய இயல்புகளையும் பௌத்த தம்மம் தன்னுள்ளே கொண்டுள்ளதை இச்சொற்கள் விளக்கி நிற்கின்றன.

"தம்மா (பாலி) தர்மா (சமஸ்கிருதம்) – பௌத்தம், பௌத்தில் அடிக்கடி வருவதாகவும் பௌத்த மெய்யியலின் பல்வேறு இடங்களில் தொடர்புடையதாகவும் இச்சொல் விளங்குகிறது. இச்சொல்லுக்குப் பொதுப்படையான ஒரு பொருள் இல்லை. ஆங்கிலத்தில் இதற்குச் சமயம், உண்மை, கொள்கை, நேர்மை, நற்குணம், அணு தன்மை, இயற்கை, சட்டம், முறைமை, சொத்து, பிரத்தியட்சப் பொருள் எனப் பல பொருள்கள் உண்டு. இவற்றில் சில பொருள்கள் பொதுவாக இந்தியச் சமயங்கள் சார்ந்தனவாகும். மற்றவற்றைப் பௌத்தத்தில் (எ.டு) காணலாம். சமஸ்கிருத வேர்ச்சொல்லான 'த்ர்' என்பதற்கு சுமந்திருத்தல், ஓர் அடித்தளம் அமைத்தல், உயர்த்திப் படித்தல், ஆதரவு தரல் போன்ற பல பொருள்கள் உண்டு. புத்தகோஷர் தம் பொழிப்புரையில் தம்மாவிற்கு 4 வகையான பொருள்களைக் கூறுகிறார்.

1. நன்னடத்தையுடன் தொடர்புடையது
2. அறநெறி சார்ந்த கருத்துரை
3. புனித நூல்களில் உள்ள புத்தர் சொன்ன கொள்கை
4. பிரபஞ்சச் சட்டம்

தம்மசங்கணி பொழிப்புரையில் வேறுவித நான்கு பொருள்களை அவர் தருகிறார்.

1. கொள்கை
2. நிலை
3. அறத்தன்மை
4. அதிசய நிகழ்வு

இதனடிப்படையில் நோக்கும் போது பௌத்தத்தில் தம்மம் என்பது புத்தரால் அறிவிக்கப்பட்ட உலகளாவிய பேருண்மையைக் குறிக்கும். தம்மம் என்பது புத்தருக்கும் முந்தையதாகும். தம்மாவின் வரலாற்று உருவகம் மற்றும் வெளிப்பாடே புத்தர் அல்லது திரிகாயக் கொள்கை எனலாம்.

தம்மம் எனப்படும் அறம் (தருமம்) என்ற சொல் வெறும் சட்டவடிவத்தைச் சுட்டவில்லை. மாறாக வேறு எம்மொழியிலும் மொழிபெயர்க்க முடியாத உண்மை, நேர்மை, ஆகிய உயர் அறங்களைச் சுட்டி நிற்பதாகும். சுருங்கக் கூறின் தம்மம் என்பது புத்தரின் கோட்பாட்டை முழுமையாக உணர்த்தி[37] நிற்கின்றது.

தம்மம் என்பது சமூக சம்மந்தப்படுவது அடிப்படையாகவும், சாராம்சத்திலும் தம்மம் சமூகவயப்பட்டது என பி.ஆர். அம்பேத்கர் கூறுகிறார்.

தம்மம் நம்பிக்கை, இலட்சியம் என்ற இரண்டு பொருண்மைகளைத் தனது வேர்களாகக் கொண்டுள்ளது. நம்பிக்கை என்பது மனிதகுலத்தின் அனைத்துத் துன்பங்களுக்கும், பிரச்சினைகளுக்கும் நோய்களுக்கும் முடிவுகட்டுவதற்கான வழிமுறைகளைத் தம்மம் செயல்பாட்டளவில் போதிக்கிறது என்பதில் உறுதியாய் இருப்பது. இலட்சியம் என்பது துன்பங்களின் தோற்றுவாயாய் உள்ள அவற்றின் மூலவேர்களை அறியாமல் இருக்கும் அறியாமையை நீக்குவது. "என் தம்மம் தன்னில் நம்பிக்கை, இலட்சியம், இரண்டையுமே கொண்டதாயுள்ளது".

அதன் இலட்சியம் அவிஜ்ஜாவை நீக்குவதாகும். அவிஜ்ஜா என்பதற்குத் துன்பத்தின் இருப்பை அறியாமை என்று நான் பொருள் கொள்ளுகிறேன். அதில் நம்பிக்கை இருக்கிறது – ஏனெனில் அது மனிதகுலத் துன்பத்திற்கு முடிவு கட்டுவதற்கான வழியையும் காட்டுகிறது என்று பி.ஆர்.அம்பேத்கர்[38] விளக்கம் தருகிறார்.

"துன்பத்தின் இருப்பை உணர்வதும், துன்பத்தைக் களைவதற்கான வழியைக் காட்டுவதுமே பௌத்த தம்மத்தின் அடித்தளமும்,

அடிப்படையுமாகும்'' என்ற புத்த தம்மத்தின் கொள்கையினை இவ்வாய்வேடு துணைநிலை சான்றாதரமாக கொண்டமைகிறது.

**சமண அறம்**

சமண சமய துறவிகளும், இல்லற வாழ்வோரும் பின்பற்றவேண்டிய ஒழுகலாற்று நெறிகளை வரையறுத்துக் கூறுவதே சமண அறமாகும்.

> **"அறம் எனில் பொருளின் இயல்பாகும்**
> **இங்கே உயிர் இயல்பு அறமெனப்படுகிறது"** (அருங்கலச்செப்பு 1997 :21)

உயிரை ஒரு பொருளாக கருதி, உயிர் உள்ளன (சேதன), உயிர் அல்லன (அசேதன) என்ற பகுப்புகளை உருவாக்கியது. சமணச் செய்யுளில் இவை அனைத்துக்கும் பொருளாக உள்ள எந்த ஒன்றுக்கும் – அவற்றுக்கே உரித்தான இயல்புகள் உண்டு. அந்த இயல்புகளினின்று மாறுபட்டு நிற்கும் பொருள்களின் இயக்க நிலையை அதனதன் இயல்பு நிலைக்கே மீண்டும் கொண்டுவருதலே அறம் எனப்படுகிறது. எனவே மானுடமாகிய உயிர்ப் பொருளின் இயக்க நிலையின் இயல்பு போக்கு அகிம்சையே என்கிறது சமணம்.

**புத்தரும், மகாவீரரும் வாழ்ந்த காலத்தில் சமூக மாற்றம்:**

"வருண அடிப்படையில் அமைந்திருந்த சமுதாயம் பதற்ற நிலைமைகளைத் தோற்றுவித்தது முற்றிலும் இயல்பே. இந்த வருண அடிப்படையிலான ஏற்றத் தாழ்வுகள் வைசியர்களிடமும் சூத்திரர்களிடமும் எத்தகைய தாக்கத்தை உண்டு பண்ணின என்பதை நம்மால் அறிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் ஆள்வோர்களாக செயல்பட்டு வந்த சத்திரியர்கள் சமய வினை முறைகளை முன்னின்று நடத்துபவர்கள் என்ற முறையில் பிராமணர்கள் செலுத்திவந்த ஆதிக்கத்தை கடுமையாக எதிர்த்தனர். வருண அமைப்பு முறையில் பிறப்புக்கு முக்கியத்துவம் அளிப்பதை எதிர்த்து அவர்கள் ஒருவகையான கண்டன இயக்கத்தை நடத்தியதாகத் தோன்றுகிறது. பல்வேறு சலுகைகளையும் தனி உரிமைகளையும் கோரிய புரோகிதர்களான பிராமணர்களுக்கு சத்திரியர்கள் காட்டிய எதிர்ப்பு புதிய சமயங்கள் தோன்றுவதற்கான காரணங்களில் ஒன்றாக இருந்தது. ஜைன சமயத்தைத் தோற்றுவித்த வர்த்தமான மகாவீரரும், பௌத்த சமயத்தைத் தோற்றுவித்த கௌதம புத்தரும், சத்திரிய குலத்தைச் சேர்ந்தவர்களே ஆவர். இவ்விருவருமே பிராமணர்களின் ஆதிக்கத்தை எதிர்த்தனர் என கூறுவதை மேற்கோள்காட்டுவார்[39] சு.மாதவன் அவர்கள்.

அரசு, சமூகம் ஆகிய சமூக நிறுவனங்களைத் தங்கள் கருத்தியல் கட்டமைப்பு ஆதிக்கத்தினால் தங்களின் நலன் சார்ந்த செயற்பாட்டிற் குரியதாக்கி வந்த பிராமணர்களின் பிராமணீயம் சமண, பௌத்த வேதமறுப்புச் சிந்தனைகளால் வீழ்த்தப்பட்டது. அன்றைய காலத்தில் வீழ்த்தப்பட வேண்டிய பொது எதிர்மரபாய் விளங்கிய வேதமரபை வீழ்த்த சமண, பௌத்தம் இரண்டுமே சில பொதுவியல்புகளைக் கொண்டிருந்தன.

முதலாவதாக ஜைனமும் பௌத்தமும் ஆரம்ப கட்டத்தில் அப்போதிருந்த வருண அமைப்பு முறைக்கு எத்தகைய முக்கியத்துவமும் அளிக்கவில்லை. இரண்டாவதாக அவர்கள் அகிம்சைக் கோட்பாட்டைப் போதித்தனர். பல்வேறு இராச்சியங்களுக்கு இடையேயான மோதல்களுக்கு முடிவுகட்டி இதனால் தொழிலும், வணிகமும் செழித்து வளர இது உதவும் என்று கூறினார். மூன்றாவதாக தர்ம சூத்திரங்கள் என்னும் பிராமண சட்ட நூல்கள் வட்டிக்குப் பணம் கொடுப்பதைக் கண்டித்தன. வட்டியைக் கொண்டு வாழ்க்கை நடத்துபவனை அவை வன்மையாக சாடின. தொழிலும், வர்த்தகமும் வளர்ந்து வந்தன. காரணமாக வட்டிக்குக் கடன் கொடுத்து வந்த வைசியர்கள் சமுதாயத்தில் உயர்வாக மதிக்கப்படவில்லை. எனவே, அவர்கள் தங்கள் சமூக அந்தஸ்தை உயர்த்திக் கொள்வதில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தனர். புதிய சொத்துடமை வடிவங்கள் சமூக ஏற்றத் தாழ்வுகளைத் தோற்றுவித்தன. பரந்த மக்கட் பகுதியினருக்கு சொல்லொண்ணாத் துன்ப துயரங்களையும், இன்னல் இடுக்கண்களையும் விளைவித்தன. எனவே சாமானிய மக்கள் பழம்பாணி வாழ்க்கைக்குத் திரும்பச் செல்லத் துடித்தனர்.

புதிய சொத்துடமை வடிவங்களையும் புதிய வாழ்க்கைப் பாணியையும் நிராகரிக்கும் ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கை லட்சியத்தை அவர்கள் திரும்பவும் நாடினர். ஜைன மதமும், புத்த மதமும் எளிய, தூய துறவு வாழ்க்கையையே விரும்பின. வாழ்க்கையின் சுகபோகங்களைத் துறக்கும்படி பௌத்த, ஜைனத் துறவிகளுக்கும் கூறப்பட்டது. பொன்னையும், வெள்ளையையும் தொடுவதற்கு அவர்கள் அனுமதிக்கப்படவில்லை. உடலில் உயிர் இருப்பதற்குப் போதுமானவற்றை மட்டுமே மக்களிடமிருந்து அவர்கள் பெறவேண்டுமென்று வலியுறுத்தப்பட்டது. எனவே கங்கைச் சமவெளியில் உருவான புதிய வாழ்க்கை தோற்றுவித்த பொருளாதாயங்களுக்கும் டாம்பீகங்களுக்கும் எதிராக இவ்விரு மதங்களும் கிளர்ந்தெழுந்தன என்பார் ஆர்.எஸ். சர்மா (2001:156-157) ஆகவே பொருளாதாயம் என்ற பொருள் உடைமை என்பது தனி மனிதனான ஆண்களுடையதாக மட்டுமே

இருப்பதும், அச்செயல் அத்தகைய மரபு விதி தவறானது. பெண்களைச் சமமாக பார்க்கப்படாத பொருளுடைமை சமூகம் இருந்ததற்கான அடையாளத்தை இந்த ஆய்வேடு பெண் அறம் என்ற நோக்கில் ஆய்ந்திட முனைந்துள்ளது.

**சங்க இலக்கியப் பாடல்களில் அறம்பெறும் இடம்**

தொகையும் பாட்டுமான செவ்வியல் இலக்கியத்தில் அறம் எனும் சொல் 145 இடங்களில் பயின்றுவந்துள்ளது. அறம் என்ற சொல், தவறொன்றும் இல்லாதது (நற்.42:1-2) வாக்கு தவறாமை (நற்.86:1) அறவழியில் நிலைபெற்றோர் அடைந்த பயன் ( நற் 166:6). அன்பு (நற் 227:1), பிரிவு (நற் 243:10–11). சொல் தவறாமை (நற் 275:8–9) நீதி ( நற் 400:8–9), நற் (277:4), (அகம் 5:16–17) பசியால் வாடுபவர்களுக்கு உணவு அளித்தல் (குறுந் 209:1), ஒழுக்கம் (குறுந் 244:6) (ஐங் 387:1–2) திறமையுடையோர் செய்யும் காரியம் (குறுந் 247:2) கண்ணோட்டமில்லாதது (குறுந் 267:8) கற்பறம் (ஐங் 7:2) தலைவி – இல்லறம், தலைவன் – வீரம் (ஐங் 44:4) பிறர் துன்பம் துடைத்தல் (ஐங் 118:2–3) தன்னை நாடியவரைக் கைவிடுதல் இல்லை (ஐங். 152:5) எல்லோருக்கும் பயன்பட ஒழுகும் ஒழுக்கம் (ஐங் 212 : 3) செந்தண்மைக்குரிய சொல்லும் செயலும் ( ஐங் 229 :2) செங்கோல் (ஐங் 290 :1) (அகம் 338:2–3) நல்லபண்பு (ஐங் 332:2) உடன்போக்கு (ஐங் 376 :5) அறநூல் (ஐங் 393:2) (கலி 62:15–16) (96:33–34) ஆட்சி (அகம் 27:8–10), நல்ல அவை (அகம் 93:4–5) அறப்பண்பு (அகம் 109:14–15), உதவுதல் (அகம் 155 :1–3), (கலி 11:1–5). இல்லறம் (அகம் 173:1) அகம் 207:12–13) (அகம் 219:10) (அகம் 280:6–7), அகம் 294:12–13) (அகம் 302:15) (கலி 9:22–24) (16:22) (27:1–2) (92:6–7) அறநெறி (அகம் 188:4–5) உண்மை (அகம் 256:16–18), அகம் 286 :10–11), அறத்தொடு நிற்றல் (கலி 39:20) அறச்செயல் (கலி 99:2) குடையின் நிழல் (கலி 99 :8) இருமைப் பயன் (கலி 120 :1), நீதிநூல் (கலி 129 :4) பிறர் துன்பம் தன் துன்பம் போல் நினைத்தல் (கலி 139:2–3), அறக்கடவுள் (கலி 144:48) (கலி 145 :62), (புறம் 159:13) (பதிற் 90:11–13), இல்லறம் (கலி 150:8), (புறம் 145:7), நடுநிலைமை (புறம் 12:1–3), அறநெறி (புறம் 9:1–6), (பரி 5:71–81), அறம் தங்கும் செங்கோல் (புறம் 20:16–17), உதவுதல் (புறம் 28:5–17), அறநூல் (புறம் 34:1–7), (புறம் 362:10), அறக்கடவுள் (புறம் 35:14–16), நீதி (புறம் 39:8–10) அவைக்களத்தில் அறம் நிலைபெறும் (பதிற் 22:4–10), செங்கோல் (புறம் 44:11–13), செங்கோல் வளையாமை (புறம் 55:10–16), போர் அறம் (புறம் 62:7) (புறம் 93:7–9), அவையம் (புறம் 71:7–4), இரவலர்க்கு இல்லை எனாத அறம் (புறம் 108:4–6), அறநூல் (புறம் 166:14) (பதிற் 24:7–8) (பதிற் 64:3–4), காத்தல் (புறம்

175:10), கூற்றம் (புறம் 210:8) (புறம் 237:9) (புறம் 255:4), அறச்செயல் (புறம் 357:6–7) (பரி 3:64–65), நல்வினை (பரி 13:14) (பரி 19:20) (பரி. திரட்டு 1:19–22), வேட்டல் (அந்தணர் தொழில் ஒன்று) (பரி 14:27–28), ஒழுக்கம் (அந்தணர் ஆறுதொழில்) (பரி.திரட்டு 1:19–22), கற்பறம் (பரி.திரட்டு 2:48), அந்தணர் (திரு.180) அறம் சொல்லும் கோட்பாட்டை (நாவை) உடையவர், கோல் ஒச்சுதல் (பொருநர் 230), அரசியல் அறம், குடிமக்கள் அறம் – செங்கோல் (பெரும் 36), அறநூல் கூறும் செங்கோன்மை (மதுரை 191), துலாக்கோல் போல நடுவுநிலைமை உடைய அவையம் (மதுரை 492), அறநூல் (மதுரை 493 – 500) உறுதிப்பொருட்களுள் ஒன்று (குறிஞ். வெண்பா 2:1), இம்மை புகழ், மறுமை ஆக்கம் (பட்டினப் 43) இவ்வாறாக;

நூற்றிநாற்பத்தைந்திற்கும் (145) மேற்பட்ட பாடல்களில் 'அறம்' எனும் சொல் இடம்பெற்று நடுநிலைமையோடு அணுகவேண்டும் என விளக்கம் தருவதைக் காணலாம். ஆனால் துலாக்கோல், கண்ணோட்டம் இல்லாதது, நீதி, அறப்பண்பு, பிறர் துன்பம் தன் துன்பம்போல் நினைத்தல், உதவுதல், நடுநிலைமை என்ற பொருள் விளக்கங்களை மதிப்புறு நிலையில் பார்க்கும் வகையில் பெண்களின் வாழ்வியலுள் காணப்பெறவில்லை.

சங்க இலக்கியப் பாடல்வழி பெண்கள் வேட்டையாடி தன் குலத்தைக் காத்தலும், விவசாயத்தைக் கண்டுபிடித்தலும், சேமித்தலும், போர்அறம், தொழில்வழி நாட்டு வளம், பேணியிருக்கின்றனர். கல்விப் பணியோடு தூது செல்லும் பணியும், கலைகளில் மேம்பட்டிருந்தனர். காவல் மங்கையராகவும், தலைக்கோல்பட்டம் பெற்ற கூத்தியராகவும் போன்ற பல்வேறு சமூகப் பணியில் தம்மை இணைத்துக்கொண்டு வாழ்ந்த பெண்களை பரத்தை, இற்கிழத்தி, சேரிப்பரத்தை, கொண்டி மகளிர் என சமூக இழிவுச்சொல்லை அவர்கள் மீது திணித்து அறமற்ற செயலோடு வாழ்ந்த சூழலை வாசிப்பினூடே காணமுடிகிறது. இது பெண் அறம் பேணப்படாததன் குறிப்புகளாகவே முன் வைக்கமுடிகிறது.

## முடிவுரை

அறம் எனும் சொல் தன் இயல்பினின்று மாற்றம் பெற்று சமஸ்கிருதமயமாதல் என்ற நிலையில் கடவுளை வழிபடுவது, தருமம், புண்ணியம், துறவு, நோன்பு, தானம், கூற்றுவன், கற்பு, கடமை, இல்லறம், துறவறம் என்று பொதுப் பொருண்மையோடு விளக்கங்களைச் சங்க மருவிய காலத்திலிருந்து பக்திகாலம் தொடர்ந்து, சமகாலம் வரை மேனிலையாக்கத்தோடு சமஸ்கிருதமயமாக்கலின் பதிவாகவே கூறிச் செல்கிறது.

தெய்வத்தை முன்னிறுத்திய பொருண்மையோடு இணைந்த சிலை, கடவுள் வடிவமாகவும் பக்தியோடிணைந்த ஆக்கம் பெற்று வருகிறது. ஆதலால் சமம், சமத்துவம், சமபகிர்வு, பொதுமை, இயல்பு, இயற்கை என்ற மரபுத் தொடராக அமைய வேண்டிய நடுநிலைமைச் சொல்லின் அறமே விலக்கப்பட்டுப்போன தன்மை உணரப்பட்டுள்ளது என்ற நிலை உருவாகிவிட்டதால் அவற்றையும் அறம் குறித்த பார்வையோடு ஒப்புநோக்கி பார்க்கவேண்டியுள்ளது. இந்நிலையில் அதனை வலியுறுத்தும் கொள்கையினின்று நடுநிலைமை எனும் மையமான பொருளுடன் அறம் எனும் சொல் முதன்மைப் பொருளாகி ஆய்வுத் தலைப்பில் முன்நிற்கிறது.

இயற்கையில் ஆண், பெண் பொதுமைக்குரியரே. ஆனால் காலம், இலக்கியம் தன்போக்கில் ஆணாதிக்கம் உடையதாய் முறை மாற்றிக்கொண்டது. முதல் மூலதனம் கைகள். அதாவது குழந்தை, மனிதன், அதனினின்று விழைந்த உழைப்பு. அந்த உழைப்பின் மூலதனத்தை உருவாக்குவதிலும், பாதுகாத்து அளிப்பதிலும் பெரும்பங்கு பெண்ணுக்குரியது என்பது வரலாறு. ஆனால் பொதுவுடைமைக் காலத்தில் ஆண், பெண்ணிற்கு இருந்த இயல்பு தகர்ந்து தனியுடைமையை நோக்கிச் சென்றபோது வேறுபட்டு அணுகும் முறை அறியப்பட்டது. அத்தகு அறிதலில் தங்களை அதிகாரம் படைத்தவர்களாக உருவகித்துக் கொள்ளவும், தானே ஆக்கம் எனும் உழைப்பின் முக்கிய வடிவம் என்பதை பறைசாற்றிக் கொள்ளவும், அதற்கு ஒலிப்பு, எழுத்துரு, போலச்செய்தல் எனும் கூத்து, ஓவியம் என இலக்கியத்தை ஆயுதமாக்கிக் கொண்டதும், நாம் அறிந்ததே. ஆகவே பொதுமை எனும் பொருண்மை. தன் இயல்புச் சொல்லினின்று வேறுபட்டு, முரணான வேர் எனும் பொருண்மையை விடுத்து வேறுபட்டு அதன் வேர்ச்சொல்லையும் துண்டித்துக்கொண்டு, கடவுள், புண்ணியம், தருமம் இப்படி நடுநிலைமை எனும் சொல்லில் இருந்து முறைமாறிச் சென்றுகொண்டிருப்பதால் சமகாலத்தில் பொதுமை இழந்து நிற்கக் கூடிய சூழல் ஏற்பட்டுவிடுமோ என்ற சமூக அக்கறையோடு, சமூகக் குற்றம் நிகழ்ந்துவிடக் கூடாது என்ற பொதுமை உணர்வோடு, நடுநிலைமை எனும் பொருள் கொண்ட பொதுமையை இனிவரும் இலக்கியங்களும் பயனுறு சொல்லாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே "நடுநிலைமை" எனும் சொல் "அறம்" எனும் மாற்றுப் பெயர்ச் சொல் என்பதை வலியுறுத்திச் சொல்கிறது இந்த ஆய்வேடு. குறிப்பாக பெண் குறித்த ஆய்வினை மையப் பொருளாக்கிக் கொண்டிருப்பதால் 'பெண் அறம்' என ஆய்வுத்தலைப்பு முறைப்படுத்தப்பட்டுள்ளது. ஆய்வுக் களம் சங்க இலக்கியம் என்பதால், 'சங்க இலக்கியத்தில் பெண் அறம்' என ஆய்வுக்களம் உருவாக்கப்பட்டுள்ளது.

# சான்றெண் விளக்கம்

## இயல் – 1

1. சு.மாதவன், தமிழ் அற இலக்கியங்களும் பௌத்த சமண அறங்களும், ப.49.
2. ந.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.151, இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி, ப.684.
3. தமிழ் தமிழ் அகர முதலி, ப.60.
4. சொற்பிறப்பு – ஒப்பியல் தமிழ் அகராதி, ப.175.
5. தமிழ்ப் பேரகராதி, ப.251.
6. பெருஞ்சொல் அகராதி, ப.491.
7. தற்கால தமிழ்ச்சொல் அகராதி, ப.35.
8. ஸ்ரீமகள் தமிழ் அகராதி, ப.37.
9. கழகத் தமிழகராதி, ப.49.
10. கழகத் தமிழ்க் கையகராதி, ப.28.
11. திருமகள் தமிழ் அகராதி, ப.59.
12. கார்த்திகேயினி புதுமுறை அகராதி, 21.
13. தமிழ் தமிழ் அகராதி, ப.86.
14. வின்சுலோவின் தமிழ் ஆங்கில அகராதி, ப.51.
15. தமிழ் – ஆங்கிலம் அகராதி, ப.33.
16. A Dictionary Tamil & English, Pg. 42.
17. அபிதான சிந்தாமணி, ப.108.
18. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி, ப.523.
19. மணிமேகலைத் தமிழ் – தமிழகராதி, ப.48.
20. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.56.
21. தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி, ப.35.
22. அகராதி நிகண்டு, ப.12.
23. வாழ்வியல் கலஞ்சியம், பக்.45–46.
24. மாங்காடு வ.பாலசுப்பிரமணிய முதலியார், கருத்தும் எழுத்தும், ப.31.
25. Universal Dictinary, Page 5-7.

26. வே.அண்ணாமலை, சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சிம், தொகுதி 1, ப.65.

27. க.த.திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப.27.

28. தமிழ் அற இலக்கியங்களும், பௌத்த சமண அறங்களும், ப.49.

29. சு.மாதவன், மேலது பக்.57–58.

30. கலைக்களஞ்சியம், தொகுதி 1, பக்.255–256.

31. சு.மாதவன், முன்னுரை, தமிழ் அற இலக்கியங்களும், பௌத்த சமண அறங்களும்.

32. மேலது, ப.42.

33. மேலது, ப.57.

34. மேலது, பக்.55–56.

35. மேலது, ப.57.

36. மேலது, ப.58.

37. மேற்கோள், நெடுஞ்செழியன்.க; சு.மாதவன், மேலது, ப.61.

38. மேலது, ப.62.

39. மேலது, ப.286, ஆர்.எஸ்.சர்மா.

ஒரு சமூகத்தின் வளர்ச்சியில் உற்பத்தியின் பங்கு என்பது அக்கருவிகளின் வளர்ச்சியையே குறிக்கும் என்பதறிவோம். அவ்வேளையில் பெண்களின் உழைப்பும் உள்ளீடாய் சமப்பங்காக இணைந்திருக்கிறது என்பதை அறிவதும் வரலாற்றில் முக்கியமானது. உற்பத்திப் பெருக்கம் என்பது வளர்ந்த சமூகத்தை உருவாக்கிட முன்னிற்பது என்றே நாம் கொள்வோம். சங்க இலக்கிய காலம் வளர்ந்த சமுதாயத்தின் முழுமை என்றே கூற முடியும். அதாவது நூற்றுக்கணக்கான உற்பத்திக் கருவிகளின் பெருக்கம் அதனை உறுதிப்படுத்தும். தொழில் வளர்ச்சி பெற்ற சங்க காலமானது தனக்கென முதன்மை உற்பத்திக் கருவிகளாக நான்கு வகை நிலங்களிலும் முன்னிற்கின்றன. அவற்றின் தேவையும், அதனுள் பெண்களின் உழைப்பும் குறித்த ஆய்வாக இவ்வியல் அமைகின்றது.

**மனித சமூகம்:**

கூட்டுவாழ்வை மேற்கொண்ட தனி மனிதர்களின் தொகுதியே சமூகம். இதனை ஆதிப் பொதுவுடமைச் சமூகம், இனக்குழு சமூகம் என வரையறுப்பர் மானுடவியலார். மனிதன் தோன்றியது முதல் பல்வேறு நிலைகளில் வளர்ச்சியடைந்துள்ள சங்க கால நிலை மனித குலத்தின் வளர்ச்சிப் படிநிலைகளை, அ) காட்டுமிராண்டி நிலை ஆ) அநாகரீகநிலை இ) நாகரீக நிலை எனும் மூன்று நிலைகளில்[1] எங்கெல்ஸ் பகுத்துக் கூறுகின்றார்.

ஆதி மனிதர்கள் காட்டுமிராண்டி நிலையில் பழங்களையும், கொட்டைகளையும், தின்று பின்பு மீன் மற்றும் நீர்வாழ் உயிரினங்களை உணவாகக் கொண்டு வாழ்ந்தனர். கற்கருவிகளைக் கொண்டு வேட்டையாடினர். பின்னர் நெருப்பின் உபயோகத்தைக் கண்டுபிடித்து பயன்படுத்தினர். வில்லும் அம்பும் கண்டுபிடிக்கப்பட்டதிலிருந்து வேட்டையே முதன்மைத் தொழிலானது.

மலைகளிலும், காடுகளிலும் வாழ்ந்த மனிதன் விலங்குகளிடமிருந்து தன்னைக் காப்பதற்கு எதிர்த்துப் போராடினான். இயற்கையோடு போராடி வாழ்ந்தான். அதுவே உணவுப் பழக்கமாக மாற உணவுத் தேடலுக்காக வேட்டை அவன் தொழிலாக மாறியது. கற்களைக் கொண்டு வேட்டைக்கு உதவும் பல்வேறு கற்கருவிகளைச் செய்வதற்கு விழைந்தான். உற்பத்திக் கருவிகளின் வளர்ச்சிக் காலத்தை சுட்டும் வகையில்தான் மனிதர்களின் அக்காலத்தைக் 'கற்காலம்' என்றழைத்தனர்.

**வேட்டைச் சமூகம்:**

மனித சமூக வரலாற்றில் மிகத் தொன்மையான சமுதாயம் வேட்டைச் சமூகம். வேட்டையாடுதல் வாழ்க்கையின் தவிர்க்க முடியாத தேவை என்று தொடங்கி தொழிலாக மாறியது. கூட்டு உழைப்பும், திட்டமிடுதலும், சிந்திக்கும் ஆற்றலும் உருவாயின.

**வேட்டைக் கருவிகள்:**

கல் அம்பு, மரத்துண்டு, எலும்பு போன்றன வேட்டைக்கான முதன்மைக் கருவிகள். கனத்த தோலால் செய்யப்பட்ட கவசம், கைகளில் கல், மரம், தோல் இவைகளால் செய்யப்பட்ட வில், அம்பு, ஈட்டி முதலியன தம் வாழ்வாதாரத் திற்கு பயன்பட்ட கருவிகளாகும்.

இவர்கள் மண்ணைக் கொண்டு பாத்திரங்கள் செய்ய அறிந்திருந்தனர். மண்டை ஓடுகளையும் பாத்திரங்களாக உபயோகப்படுத்தினர். புற்களைக் கொண்டு குடிசைகளைக் கட்டி வாழ்ந்தனர். நிலையாக ஓரிடத்தில் வாழ்ந்தவர்கள் அல்ல.

வயிற்றுக்குத் தேவையானது போக எஞ்சியதை ஒருவர் தம் உடைமையாகக் கொள்ள வழியில்லை. அடுத்த வேளைக்கு இறைச்சியை உப்பிட்டுப் பதப்படுத்தும் முறையை அவர்கள் அறிந்திருக்கவில்லை. அதனால் அடுத்த வேளைக்குச் சேமித்து வைத்து உண்ணும் ஆசை அவர்களிடம் இல்லை. வேட்டையில் பெற்ற இறைச்சியை உழைத்த அனைவரும் சமமாகப் பங்கிட்டு உண்டனர். அவரவர்க்கு அந்த நேரம் எவ்வளவு தேவையோ அவ்வளவை மட்டும் எடுத்துக்கொண்டனர். அது பொதுவுடமைச் சமுதாயமாக இருந்தது.

**தாய்வழிச் சமூகம்**

சமூகத்தின் முதல் மூலதனமான குழந்தையை ஈன்றவள் பெண். அவள் ஆணினும் திறன் பெற்றவளாக மதிக்கப்பட்டு போற்றப்பட்டாள். அது வேட்டைச் சமூகத்தில் வேட்டையாடும் திறனோடும், வேட்டையாடுதற்குரிய குழந்தைப்பேறடைவதற்கும் என திறம்பட்ட தன்மை. மூலதன உற்பத்திக்கே 'கைகள்' எனும் முதற்கருவியை சமூகத்திற்கு பிரசவித்த அவளின்றே சமூகம் கிளைத்தது. வளர்ந்தது. பெருகியது. சமூக உற்பத்தி பெருகியது என்பதாலேயே தாய்வழியாக கிடைத்த உற்பத்திப் பெருக்கத்தின் வளர்ச்சியை அடையாளப்படுத்துவதன் வகையில் தாய்வழிச் சமூகம் என பகுத்துக் கொள்ளப்பட்டது என்பதை அறிவோம்.

குழந்தைப் பேருற்ற மூலதன உற்பத்திப் பெருக்கத்தின் அடையாளமாக விளங்கிய பெண் தனது அனுபவ அறிவை உழைப்பில் பயன்படுத்தி அதன் மூலம் ஈட்டிய வேட்டைப்பொருட்களை கூடி உண்ணும் இடமாக தாயின் இருப்பிடமே முதன்மையாய் அமைந்ததும், அத்தகைய கூடி அமர்ந்துண்ணும் வேளையில் தாயே பலருக்கும் பகிர்ந்தளித்தால். ஆதலால் அவளே சமப்பகிர்வுக்குரிய தலைமைத்துவம் பெற்றவளாகக் கருதப்பட்டாள்.

ஆதி மனித சமூகத்தில் 'பெண்கள்' முதன்மை பெற்ற தாய்வழிச் சமூகம் இருந்தது. ஒரு தாயிலிருந்து கிளைத்த ஆண்களும் பெண்களும் ஒரு கூட்டமாகச் சேர்ந்து வாழ்ந்தனர். அக்கூட்டத்திற்குத் தாய்தான் தலைமை வகித்தாள். இவ்வாறே பல கூட்டத்தினர் ஆங்காங்கே பல சமூகமாக வாழ்ந்தனர். அது தாய்வழிச் சமூகம்[2] எனப்பட்டது.

மனித வாழ்க்கையின் ஆரம்ப காலம் ஒரே குடும்பமாயிருந்தது. அக்குடும்பத்திற்குத் தலைமை தாங்கி வழிநடத்தி சென்றவள் தாய் (பெண்). ஆயுதம் ஏந்திய கைகளையுடையவளாய் தாய் தலைமை தாங்கி அனைவருக்கும் முன்பாக நடந்து அவர்களின் தேவைகளைத் தேடிக் கொடுத்தவர்களாக அடையாளம் காணப்பட்ட தாயின் எதார்த்தம், அநியாயமோ, உயர்வு தாழ்வோ இல்லாத காலமாக இருந்தது.

வால்கா நதிப்பிரதேசத்தில் தொடங்கிய தாயின் வாழ்தல் வேட்டையாடுதல், நடனம் ஆடுதல், காதல் செய்தல், குடிசை கட்டுதல், தோலினால் பாத்திரங்கள் கருவிகள் செய்தல் என எல்லாத் தொழில்களிலும் தாய்க்கே முதல் இடம்.

இச்சமூகத்தில் ஒவ்வொருவரும் அவர்கள் ஆணாயினும், பெண்ணாயினும் தங்களுக்குத் தேவையானவற்றைச் சேர்ந்தே தான் தேட வேண்டும். சேர்ந்தே தான் அனுபவிக்க வேண்டும். ஒன்றும் கிடைக்க வில்லையானாலும் சேர்ந்தே தான் பட்டினி கிடக்க வேண்டும். எல்லா வேலைகளிலும் பெண்/ஆண் சேர்ந்தே செயல்பட்டனர். அவற்றை திருத்தமாகவும், அழகாகவும் செய்தனர். யுத்த களத்திலும் இவர்கள் ஆயுதங்களை ஏந்தி சண்டை செய்திருக்கின்றனர். போர்க்களத்திலும் சமூகத்தாயே தலைமை தாங்கி முன்னே நடப்பவளாக, பெண் இருந்திருக்கிறாள் என்பதை ராகுல சாங்கிருத்தியாயன் தனது நூலில்[3] பதிவு செய்திருக்கிறார். இயற்கை சீற்றங்களிலிருந்தும், கொடிய விலங்குகளிட மிருந்தும் தம் சமூகத்தைக்காக்க வேண்டியது தலைவியின் கடமையாக இருந்துள்ளது என்பதையும் அறியமுடிகிறது.

“தொடக்கக் காலப் பெண் உண்மையில் விடியற்காலையிலிருந்து அந்தி மறையும் வரையிலும் தீவிரமாக வேலையில் ஈடுபட்டிருந்தனர். அவளுடைய வாழ்க்கை, குறுகிய காலம் கொண்டதாகவே இருந்தது. புதை படிவங்களை விஞ்ஞான ரீதியாகப் பகுப்பாய்வு செய்து பார்த்தபோது அவர்கள் 20 வயது ஆவதற்குள்ளாகவே இறந்து போனார்கள். ஒரு சிலர் மட்டுமே 30 வயது வரை வாழ்ந்தனர். 40 வயது வரை உயிர்வாழ்ந்தது மிகவும் அசாதாரணமாகவே இருந்தது என்று மரியன் லோவ் மற்றும் ரூத் ஹப்பார்டு அவர்கள் கூறுவதாக உலக வரலாற்றில் பெண்கள் என்ற நூல்[4] பதிவு செய்கிறது”.

பல்வேறு தொழில்களையும், தேர்ச்சித் திறன்களையும் உருவாக்கிக் கொண்டார்கள். தொல் பொருள் ஆய்வுச் சான்றுகளிலிருந்தும் தற்பொழுது இருந்து வருகிற கற்காலக் கலாச்சாரங்களிலிருந்தும் பெண்கள் பின்வரும் பணிகளில் தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டிருந்தனர். அவற்றில் தேர்ந்தவர்களாகவும் இருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

- வேட்டையாடி அதிலிருந்து கிடைக்கப்பெற்ற உணவுகளைச் சேகரித்தல்
- குழந்தைப் பராமரிப்பு
- தோல்களைப் பதப்படுத்தி உபயோகப்படுத்துவது
- பிராணிகளின் தோல்களிலிருந்து ஆடைகள், கவண்கள் மற்றும் கொள்கலன்கள் தயாரிப்பது
- சமையல் வேலை
- மண்பாண்டம் புனைதல்
- புற்கள், கோரைப்பல், நாணல், மரப்பட்டைகள் ஆகியவற்றைக் கொண்டு கூடைகள் வேய்தல்
- பற்கள் அல்லது எலும்புகளைக் கொண்டு மணிகளையும் அணிவதற்கான மாலைகளையும் ஆபரணங்களையும் செய்தல்
- தற்காலிகமான அல்லது நிரந்தரமான உறைவிடங்களை நிர்மாணித்தல்
- விவசாயத்திற்கு மட்டுமின்றி பல்வகைப்பட்ட உபயோகங் களுக்கான கருவிகளைச் செய்தல், தோல்களைக் கீறி பதப்படுத்துவதற்கான கற்கருவிகள், ஆடைகள் தயாரிப்பதற்காகப் பிராணிகளின் தசை நார்களை வெட்டியெடுப்பதற்குக் கற்களாலான கூர்மையான கத்திகளைத் தயாரித்தல்

- காயத்தை ஆற்றுவதிலிருந்து கருக்கலைப்பது வரையிலான எல்லாவற்றிற்கும் தாவரங்கள் மற்றும் மூலிகைகளை மருத்துவ ரீதியில் பயன்படுத்தல்.

என தங்களது வாழ்வியலின் போது புதியதை உருவாக்குவதற்கும், கண்டுபிடிப்பதற்கும், பாதுகாப்பதற்கும், தன் அறிவை கூர்மையான சிந்தனைக்கு ஆட்படுத்திக் கொண்டே சென்றிருக்கிறாள் என்பது வரலாறு. இப்பணிகளில் வேட்டை உணவு சேகரிப்பது முதன்மை இடத்தை வகித்து நிற்கிறது.

உணவு சேகரிப்பவர் சமுதாயத்திலும் அந்தக் குலம் உயிர் வாழ்வதற்கு தேவையான பணியில் ஐந்தில் ஒரு பாகத்தை மட்டுமே ஆண் உறுப்பினர்கள் செய்தனர். அதே பொழுதில் ஐந்தில் நான்கு பாகத்தை முற்றிலும் பெண்களே செய்தனர்.

பெண்கள் உணவு சேகரித்தது தம் ‘குலம்’ உயிர் வாழ்வதற்கு உதவியதோடு மட்டுமல்லாமல் நாகரீகத்தை நோக்கி அது தள்ளாடிச் சென்ற பாதையில் மனித இனத்தை முன்னேற்ற பாதையில் செலுத்துவதற்கு உதவியது என்பர்.

உணவு சேகரிப்பதற்குப் பாகுபடுத்திப் பார்ப்பதும், மதிப்பீடு செய்வதும், நினைவாற்றலும் தேவைப்பட்டது. இந்தத் திறமைகள் வளர்ச்சியடையவும் செய்தன.

எலும்புகள், கற்கள் அல்லது மரக்கட்டைகள் உணவு சேகரிப்பதற்கு, வேர்களையும், கிழங்குகளையும் பூமியைக் கீறுவதற்கு மெல்வதற்கு இலகுவாக இருப்பதற்காக மரக்கறிகளைப் பொடியாக்குவதற்கும் பயன்படுத்தப்பட்டன. இவையெல்லாம் பெண்களின் கருவிகளாக இருந்தன.

பிரதான உணவு வழங்குபவர்கள் என்ற முறையில் உயிர் வாழ்வதற்கான வேட்டைத் தொழிலை கொண்டிருந்த பெண்கள் சுதந்திரத்தையும், அதிகாரத்தையும், தகுதி மதிப்பையும் பெற்றிருந்தனர்.

ஆண்கள் வேட்டையாடுபவர்களாகவும், உணவு சேகரிப்பவர்களாகவும் இருந்த சமுதாயங்களில் ஆண்கள் பெண்களது உழைப்பின் மீது ஆதிக்கம் செலுத்தவில்லை. அதை அவர்கள் சுரண்டவும் இல்லை. தம்மால் சேகரிக்கப் பட்ட உணவை அவர்களே அபகரித்துக் கொள்ளவோ அல்லது அதன் மீது கட்டுப்பாடு செலுத்தவோ இல்லை. அது தங்கு தடையின்றி எடுத்துச் செல்லப்படுவதையும் அவர்கள் தடுக்கவில்லை. பெண்களின் உடம்புகளின்

மீதோ (அ) தமது குழந்தைகளின் உடம்புகளின் மீதோ அவர்கள் அரிதாகவே கட்டுப்பாட்டைக் கொண்டிருந்தனர். அல்லது எவ்விதக் கட்டுப்பாட்டையும் கொண்டிருக்கவில்லை. பெண்களின் கன்னித்தன்மை (அ) கற்பு குறித்து மூட பக்தி கொண்டிருக்கவில்லை. குழுவின் பொது அறிவு ஆண்களுக்கு மட்டும் உரித்தானதாகத் தனிப்படுத்தி வைக்கப்படவில்லை. அது போன்றே, பெண்களின் படைப்புத்திறன் ஒடுக்கப்படவோ அல்லது மறுக்கப்படவோ இல்லை. இந்த ஆதிகாலத்து பெண்களின், இன்றைய நாகரீகமான பெண்களின் இந்த அடிப்படையான உரிமைகள் சுதந்திரமற்று காணமுடிகிறது.

பெண்கள் அறிவுரை கூறுபவர்கள், விவேகம் மிகுந்தவர்கள், தலைவர்கள், கதை சொல்லுபவர்கள், மருத்துவர்கள், நீதி வழங்குவோர் முதலான பாத்திரங்களையும் மேற்கொள்ளமுடியும் என்பது கற்காலக் கலாச்சாரங்களின் சான்றுகள்[5] வழி அறியமுடிகிறது.''

ஆதிகாலப் பெண், அவளுடைய தாய், பாட்டி, சகோதரிகள், அத்தைமார்கள் ஆகியவர்களோடு கூட தனது வேட்டையாடும் ஆணின் சிறிய உதவியோடு கூட, ஆதிகால மனிதன் தன்னைப் பிற்காலத்தில் மனிதனாக நினைப்பதற்கு உதவிய அனைத்தையும் பெண் அளித்திருப்பவள்.

ஆக உயர்வு, தாழ்வு இல்லாமல், கிடைத்ததை பங்கிட்டு உண்டு பொதுவுடைமையாக இருந்த தாய்வழிச் சமூக முறை, மாற்றம் பெற்றது என்பதை சங்க இலக்கியத்திலும் காணமுடிகிறது. வரலாறு திரிபுநிலைக்குச் சென்று, இறுத்தல் நிலைக்குத் தள்ளப்பட்டுவிடக்கூடாது என்பதற்காகவே மனித குலத்தில் பெண்ணின் இருப்பு இருத்தல் என்னும் இடம் உழைப்பு, பகிர்வு, சேமிப்பு, பாதுகாப்பு, உருவாக்கமுறை, போர்முறை ஆணைவிட ஐந்தில் நான்கு என திறனாளர்களாக இருந்திருக்கின்றனர் என்பதற்கான சான்றுகளும் உலக வரலாற்று நூல்கள், ஆய்வு நூல்கள் வழி இங்கு ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

மருத நிலம் தந்தை வழிச் சமூகத்தை தோற்றுவித்தது. முடிவாக அரசு, அரசியல், அறம், அறநெறி என்பதான பதிவுகளில் 'ஆண்' உடைமையாளன் என்பது அறியப்பட்டிருக்கிறது.

பழந்தமிழர் வாழ்க்கை தாய்வழிச் சமூகத்தைப் படைத்தது. இது சமத்துவ காலம். பின்னர் வேட்டைக்கு இரு, சில, பல, கைகள் போதாது என எண்ணப்பட்ட காலத்தில் முதன்மைத் தொழிலான வேட்டையாடுதலுக்கு மனித உற்பத்தி அவசியம் என உணரப்பட்டது. புதிய உயிரைப் படைக்கும் சக்தியையும் கொண்டுள்ள பெண்தான் குலத்தின் மிகவும் புனித

மானவளாகவும், மிகவும் சக்தி வாய்ந்தவளாகவும் கருதப்பட்டாள். சமூக உற்பத்தியில் பெண் உயர்ந்தவளானாள், இனக்குழுக்களின் தாயானாள், மதிக்கப்பட்டாள். இனக்குழுவில் பெண் தாய்மைக்குரியவள் என்று பேணப்பட்டு பாதுகாக்கப்பட்டாள். உற்பத்திக் கருவிகளின் வருகை பெண்களை இரண்டாம் நிலைக்குத் தள்ளியது.

உற்பத்திக் கருவிகளின் உடைமையை ஆண் பற்றிக் கொண்டதன் விளைவே ஆண் உடைமைச் சமூகம் என்ற தொடர் பிறந்தது. காலப்போக்கில் உடைமைச் சமூகம் என்றால் 'ஆண்' உடைமைச் சமூகம் என்றே பொதுமையாக்கப்பட்டது.

உற்பத்திக் கருவிகள் ஆண்களின் உடைமை என்று உரிமை கொள்ளப்பட்டன. இவ்வாறு சமத்துவ சமுதாயம் மறைந்து ஆண்டான் – அடிமைச் சமூகம் தோன்றியது.

மருதநில மன்னனே அரசை உருவாக்கினான். அவனது காலத்தில் படைக்கப்பட்டதே சங்க இலக்கியம்.

அரசு, பண்பாடு, கலை, தொழில் என நாட்டு வளர்ச்சியே மேலிட்டு சொல்லும் தன்மையை ஆய்வில் புரிந்துணர முடியும். அரசு எனும் உடைமை அதிகாரத்தில் படிப்படியாக போரிட்டு வென்று உடைமையைப் பெருக்கிய சமூக வரலாற்றைச் சங்க இலக்கியம் நம் கண்முன் நிறுத்தியுள்ளது என்பதை யாவரும் அறிவோம். இச்சூழலில் தான் வீரமும் காதலும் என இலக்கணம் வகுக்கப்பட்டது. ஆளுமையிலுள்ள, ஆட்சி செலுத்தும் பாங்கினைத் தமிழர்கள் பெருமிதத்தோடும், பெருமையோடும் முன்நின்று செய்துள்ளனர் என்பதைச் சொல்லுதற்கும், கூட்டுச் சமூகமாக அன்பும், காதலும், இணைந்து மதிப்புறும் குழுக்களாக வாழ்ந்திருந்த முறையை விளக்கிச் செல்வதற்காகவே சங்க இலக்கியம் வீரமும், காதலும் என்ற பலபொருள் தன்மைகளைக் கொண்ட சொல்லாடல்களும் நமக்கு சங்க இலக்கியம் முழுமைக்கும் முற்றாய்ப்பான தொடராக காதலும் வீரமும் போற்றுதல் தமிழ்ப்பண்பாடு என்று நமக்கு உணர்த்தப்பட்டிருக்கிறது என்பதை இவ்வாய்வு முன்வைக்கிறது.

ஆனால் இனக்குழு வாழ்க்கை அழிந்து நிலவுடைமையாக மாறிய காலம் சங்ககாலம். எனினும் இனக்குழு இருந்ததற்கான சான்றுகளை வரலாற்று தொடர்ச்சியாக பாடல்கள் வழி ஆங்காங்கே புலவர்கள் பதிவு செய்து வந்திருக்கின்றனர். இனக்குழு வாழ்வுமுறை அழிந்து நிலவுடைமையாக மாறுகின்ற சூழலில் பழைய சமுதாயத்தின் எச்சங்களும் நிலவுவது இயல்பே. இனக்குழு அழிவு முழுமையாக இராமல் அரைகுறையாக இருந்ததால்

இனக்குழு மக்களின் சிந்தனைகள், நம்பிக்கைகள், பண்பாட்டு எச்சங்கள் அதற்கடுத்து உருவாகும் சமுதாயத்தில் எஞ்சி நிற்கும் எனத் **தேவி பிரசாத் சட்டோபாத்யாயா** குறிப்பிடும் நிலை சங்கப் பாடல்கள் வழி அறியமுடிகிறது. இனக்குழுச் சமுதாயத்தின் எச்சங்களைத் தாங்கிய சங்கச் சமுதாயமாகச் சீறூர் மன்னரின் சமுதாயம்[6] உள்ளன.

இனக்குழுச் சமுதாயத்தின் எச்சமான கூட்டுண்ணுதல், விருந்தோம்பல், கொடை பண்பு ஆகியவை சீறூர் சமுதாயத்தில் காணப்படுகின்ற பான்மையினைப் புறநானூறு வழி அறிய முடிகிறது.

தாய்வழிச் சமூகத்தில் சமூகத்தோடு வாழ்ந்த பெண் தலைமையேற்றால் என்பதை சுட்டும் வகையில்,

**"களிறு பொரக் கலங்கு கழல்முள் வேலி**
**அரிது உண் கூவல் அங்குடிச் சீறூர்**
**ஒளிமென் கூந்தல் ஒண்ணுதல் அரிவை**
**நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது**
**விருந்து எதிர் பெறுகதில் யானே என்ஐயும்**
**ஓ..... வேந்தனொடு**
**நாடுதரு விழுப்பகை எய்துக....................."**[7]

சீறூரின் தலைவியானவள் நடுகல் ஒன்றை வழிபடுகிறாள். தான் விருந்தினரைப் பெற வேண்டும் என்பதற்காகவும், தன் தலைவன் வேந்துவிடு தொழில் மேல் செல்ல வேண்டும் என்பதற்காகவும், நடுகல்லை பரவி நிற்கிறாள்.

**"கொய்யடகு வாடத் தருவிற்கு உணங்க**
**மயில் அம் சாயல் மாஅ யோளொடு**
**பசித்தன்று அம்ம பெருந்தகை ஊரே"**[8]

எனச் சீறூர் தலைவி ஊரோடு பசித்திருந்தமையைப் புலப்படுத்தி நிற்கிறது புறநானூறு. சீறூர் தலைவனும், தலைவியும் விருந்துபேணும் இயல்பினை உடையவர்களாக இருந்தமையையும் (புறம் **316, 318**) விளக்கி நிற்கிறது.

**"...............................**
**வரகும் தினையும் உள்ளவை எல்லாம்**
**இரவல் மாக்கள் உணர்கொளத் தீர்ந்தெனக்"**[9]

வரகு, தினை முதலான உணவுப் பொருட்களை எல்லாம் விருந்தினருக்கு அளித்ததால், விதைக்கென வைத்திருந்த தினையை உரலிலிட்டு இடித்துச் சமைக்கும் இயல்புடையவளாக சீறூர்தலைவி காட்டப்படுகிறாள். இவள் தமிழரின் விருந்தளிக்கும் பான்மையோடு இருந்ததை புறம் காட்டி நிற்கக் காணலாம். விதைக்கென வைத்திருந்த தினையை தன்முனைப்போடு யார் ஆலோசனையும் இன்றி தனித்து முடிவெடுக்கும் அறிவு நுட்பத்தையும் இதன் வழி காண முடிகின்றது.

தலைவன், தலைவி இணைந்திருந்த போதிலும் விருந்து படைத்தல் எனும் நிலையில் உணவு இல்லையாயினும், விருந்தினருக்கு விவசாய உற்பத்திக்கு என்று வைத்திருந்த விதைநெல்லை உரலில் இட்டு குத்தி உணவு சமைத்திருக்கிறாள் எனின் அவளால் வேளாண் உற்பத்திக்குரிய விதையை எவ்வாறேனும் பெற்றுவிடமுடியும் என்ற துணிவு அவளிடம் இருந்துள்ளதையும் அறிய முடிகிறது. அவளது அனுபவத்திற்குள் விளைச்சலின் தேவையும், உயிர்வாழ்தலுக்கான அடிப்படை உணவு விதை என்பதும் அறியப்பட்டிருக்கிறது. ஆயினும் அவளால் அவ்விதையைப் பண்டமாற்று முறையால் எளிதாக பெற்றுவிட முடியும் என்ற பகிர்வுப் பான்மையும் பகிர்ந்தளித்த விதையைத் தன் உழைப்பாற்றலால் பெற்றிட முடியும் என்ற தொழில் முனைப்பும், துணிவும், ஆளுமையும் கொண்டவளாக, சிறந்த குடும்பத்தலைவியாக துணிந்து முடிவெடுக்கும் திறனாளராக இருந்த சமூகத்தை நாம் அறிந்துணர முடியும்.

தலைமைத்துவம் கொண்டவளாக இருந்திருக்கிறாள் என்பதும் பண்பாட்டு அடிப்படையிலும் அவள் தலைமைக்குரியவளாக இருந்துள்ளால் என்பதையும் அறியலாம்.

விளைச்சல் நிலத்தில் கால்நடைகள் பாதுகாக்கப்பட்டதும் கால்நடைகளின் எச்சங்கள், சாணங்கள், உரமாய் அமைந்து விதைத்த விதைக்கும் தானியங்கள் வளமாக விளைச்சலை பெருக்கினர். அந்த விளைச்சலின் போது கால்நடைகளிலிருந்து கிடைத்த உபரியை விட அது பன்மடங்கு குவிந்தன. குவிந்த தானியங்கள் பாதுகாக்கப்பட வேண்டியன என்பதால் அரண் அமைக்க தலைப்பட்டான். பருவகால இயற்கை சீற்றங்களிலிருந்து பாதுகாக்க அரண் செய்ய துணிந்தான். மழை, வெள்ளபெருக்கு, பனிக்காலம், பெருங்காற்று இவற்றில் இருந்து பெரிதும் பாதுகாத்துக் கொள்ளும் சூழலுக்காகவே அரண் அமைத்தான். பாதுகாப்புக்கென அரணுக்குரிய தலைவனை நியமித்தனர்.

பாதுகாப்புக்குரிய ஒருவன் வலிமை உள்ளவனாக இருக்கவேண்டும் என்பதால் சிறந்த வீரர்கள் தலைமைக்குரியவர்களாக ஆக்கப்பட்டனர். தலைமை ஆளுமை இவை ஒன்றின் ஒன்று பிரித்தறிய முடியாததால் வலிமை என்பது பாதுகாக்கப்பட்ட அரணின் தானியங்களாக பிற வகை உற்பத்திப் பொருட்களாக அமைந்தன. உற்பத்திப் பெருக்கம் அவசியம் என அறிந்து தலைவன் உற்பத்திக் கருவிகளின் இணைவோடு குழுக்கள் குலங்களைப் பகுத்துக்கொண்டான். இம்முறையே அரசு முறையாக தலைவனால் உறுதிப்படுத்தப்பட்டது. அரசனின் உறுதி மக்களுக்குரியது என்று உணரப்பட்டது. காலப்போக்கில் பல குழுக்கள் பிரிவுகள், தொழில்கள், வர்க்கங்கள் தோன்றின. அப்போதே விவசாயம் சார்ந்த பிற தொழில்கள், கருவிகள் சார்ந்த பிற தொழில்கள், வாணிபம் சார்ந்த பிற தொழில்கள் என பலநூறு தொழில்கள் உருப்பெற்றன. சிறுசிறு குழுக்கள் தங்களுக்கு இடப்பட்ட தொழில்முறைப் பகுப்பின் வழி பொருள் உற்பத்தியைப் பெருக்கின. அவற்றுள் உடல் உழைப்பு சார்ந்த தொழில், கருவி சார்ந்த தொழில், கடல் வாணிபம் சார்ந்த தொழில், போர்முறை தொழில் என தொழில்கள் பலவாறு பகுக்கப்பட்டன. விலைமதிப்பு மிக்க பொருட்களைத் தேடுவோர் வணிகர்கள் எனவும், கடல் வாணிபம் எனவும் பல பிரிவுகளோடு நாட்டின் பொருளாதார வளத்தை மேம்படச் செய்தனர். தனது எல்லைக்குட்பட்ட இத்தகைய தொழில் பிரிவு முறைகளை தன் எல்லைக்கு அப்பாலும் பெருக்கிக் கொள்ள முயன்றபோது, அப்பால் உள்ள எல்லைகளின்று போர் செய்து பெருக்கி கொள்வது என்பதாக சிந்திக்கும் அவனிடம் எல்லைப்போர் தொடங்கியது. அப்போரில் முதன்மையாக விவசாயத்தின் அடிப்படையான உணவுத் தேவையை நிறைவு செய்யும், விவசாய பெருக்கத்திற்குரிய உழவுக்குரிய ஆநிரைகள் கவர்ந்து வரப்பட்டன. விவசாயத்தைக் கண்டுபிடித்த தமிழன் எதிரிகளிடம் விளைச்சல் பெருகுவதைத் தடுத்து தனது ஆளுமைக்கான எல்லையைப் பெருக்கிக் கொள்ளும் வகையில் பகை மன்னர்களின் விவசாயத்தை அழிக்க எண்ணி ஆநிரைகளைக் கவர்ந்து கொண்டான். இது தமிழ்ப் பண்பாட்டு பொருளாதார வரலாற்று சிறப்பு என்றே கொள்ளலாம். அதனால் தான் உலகப் பொதுமறையை வகுத்தளித்த திருவள்ளுவரும்

> **"கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவருக்கு**
> **மாடல்ல மற்றை யவை."** [10]

ஆநிரைகளைச் செல்வங்கள் என அழியா குறளில் விளக்கிச் சென்றுள்ளார் என அறியலாம்.

முந்தைய காலத்திலே வேட்டையாடியதும், வேட்டையின் போது மாமிசம் உணவாகவும், அவற்றின் தோல்கள் உடைகளாகவும், இசைக் கருவிகளாகவும் பயன்பாட்டிற்குரிய பொருளாகவும், பால், தயிர், மோர், வெண்ணெய் முதலான பொருள்களும் அவற்றின் எலும்புகள் உலக்கைகளாகவும் பயன் படுத்தப்பட்டன என்பது கால வரலாற்றில் நாம் அறிந்தவையே. ஆகவே தான் காட்டு விலங்குகள் வீட்டு விலங்குகளாக வளர்ப்பு பிராணிகளாக காட்சிக் கூடங்களில் இன்றும் நாம் காணமுடிகிறது.

"உணவு சேகரித்தலும், வேட்டையாடுதலும் முதலில் உலகெங்கும் நிலவிற்று. ஆனால் அதைத் தொடர்ந்த மாறுதல்கள் அந்தந்தச் சூழ்நிலையைப் பொறுத்ததாயிற்று. சில இடங்களில் கால்நடைப் பொருளாதாரத்திற்கும், விவசாயப் பொருளாதாரத்திற்கும் மாறினர். இவற்றின் முன்னேற்றம் இனக்குழு முறை அழிய வழி செய்தன[11] என்பார் கா.சுப்பிரமணியன்."

"உணவுத் தேவைக்கு வேட்டையாடிய மாமிச உணவுகளையும், கனிகளையுமே நம்பியிருந்த ஆதிகால மனிதன் மிகுதியாக வேட்டையாடிய நாள்களில் உண்டது போக எஞ்சியவற்றைக் காய வைத்து பதப்படுத்திக் கொண்டான். உபரி ஆநிரைகளைப் பாதுகாக்கும் முறையும், உபரியை பாதுகாத்தலின் வழிவந்தவையே. அந்தச் **சேமிப்பை செய்தவர்கள் தலைமைப் பண்புக்குரிய பெண்களாவே இருந்தனர்.** அவ்வாறே தாய்வழிச் சமூகம் உருவானது. அவ்வாறு பாதுகாத்த ஆநிரைகளை மேய்த்து வளர்க்கும் தேவை ஏற்பட்டது. பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் என பல்வேறு உணவு வகைகள் பசுக்களாலும் கிடைத்தன. இனப்பெருக்கத்திற்கு காளைகள்[12] வளர்க்கப்பட்டன. மேய்ச்சல் தொழில் உருவானது. இங்கே தானிய வகைகளைச் சாகுபடி செய்வதும் அமைந்தது. பிறகு அது மனித உணவு, வளத்திற்கு முக்கியமானதாயிற்று[13] என்று கூறுகிறார் எங்கெல்ஸ்.

ஆக பெண்களை இரண்டாம் நிலைக்குத் தள்ளிய உடைமைச் சமூகம், நிலவுடைமை சமூகமாக (அரசு) தோற்றம் பெற்றது.

"உணவு தேடும் வாழ்க்கை முறை மாறி உணவு உற்பத்தி முறைகளில் உற்பத்தியைப் பெருக்கிய காலம் சங்ககாலம். அதனை நிலைத்த குடியிருப்புகளை, வாழ்வியல் நெறிகளைச் சங்கத் திணைச் சமுதாய வாழ்வு முறைகள் காட்டுகின்றன. நால்வேறு திணைச் சமுதாயங்களிலும் நால்வேறு

வகையான உற்பத்தி முறைகளும், உற்பத்தி உறவுமுறைகளும் நிலவின. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நால்வகைத் திணைகளில் மருதத்தை மையமாகக் கொண்டு உருவான வேளாண் சமுதாய வாழ்க்கை நெறிகள் சங்ககாலம் நில உடைமைச் சமுதாயமாக மாறியதையும் அரசின் உருவாக்கத்தில் மருத நிலம் முக்கியத்துவமாய்[14] அமைந்திருந்தமையும் அறிவோம்."

தொழில் உற்பத்திக் கருவிகள் உருவாக்கப்பட்ட காலமும் சங்க காலமே. உலக வரலாற்றில் குறிப்பாக முதன்மை இலக்கியமான சங்க இலக்கியத்தில் மேம்பட்ட நிலையில் பதிவுறவில்லை என்பது இங்கு எண்ணிப் பார்க்கத்தக்கது. ஆயினும் உலகின் மனிதகுல வரலாற்றில் வேட்டை, உற்பத்திக்கருவி, வேளாண் உற்பத்தி மற்றும் பிற தொழில்கள் குறித்த கால வரலாற்றுப் பார்வை ஆய்வுலகில் பெரிதும் முன்னிறுத்தபடவில்லை.

ஒரு சமூகம் எங்கிருந்து தோன்றியது. எவ்வாறு உருப்பெற்றது – வளர்ந்தது – வளர்ச்சிக்கான மூல ஆதாரங்கள் எவை எனும் பதிவுகளில் தான் ஒரு மனிதகுலம் எவ்வாறு இருந்தது என்ற உண்மை வரலாறும் அறியப்பெறும். ஆகவே உண்மையான மனிதகுல வரலாறு குறித்த அறிஞர்களின் ஆய்வுகள் விளக்கங்கள் இந்த ஆய்வேட்டில் முக்கியத்துவம் பெற்று நிற்கின்றன. காரணம் மனிதகுல வரலாற்றில் ஆண் / பெண் எத்தகைய பேதமும் இன்றி சமத்துவ வாழ்தலைக் கொண்டிருந்ததும் அறிய கிடைக்கும் நிலையில்; இந்த உலக எதார்த்த சமத்துவ நிலையின் அடிப்படையில் நோக்கின் சீறூர் இனத்து தலைவியின் ஆளுமை விவரித்திடாமல் – இழந்து நிற்கிறோம் என்பதை இந்த ஆய்வில் சுட்டிச்செல்வது ஆய்வின் இலக்காக அமையக் காணலாம்.

கொடுப்பதும் பெறுவதும் என்ற சொற்கள் இனிமையை தந்து சென்றால் அது கேள்விக்குள்ளாக்கப்படுவதில்லை. ஆனால் கொடுப்பதும், பெறுவதும் இன்னன்னவருக்கு இன்னது தான் என தீர்மானிப்பதும், அம்முடிவு பெற்றுக்கொள்வோரிடம் சமன்பாட்டை நோக்காமல் (உணராமல்) ஏக்கத்தைச் சுமந்து கொண்டு வன்மங்களோடு அணுகுவதாய் உணரப்பட்டு பாலியல் முரணையும் வாழ்வியல் முரணையும், வாழ்வியலுள் பொருளாதார வெறுமையோடு நீண்ட இடைவெளி சுமந்தபடி நிற்கும் பான்மையையும் தோற்றுவித்தால் சமத்துவம் என்ற சொல்லைக் காணமுடியாமல் போய்விடுகிறது அல்லது அழித்துவிடவோ செய்யும். அத்தகு நிலை சமூகத்தில் நிகழ்ந்துவிடக்கூடாது. நிகழ்ந்தால் காலப்போக்கில் பெரும்

முரண் விளையும், போர்க்குணம் பெருகும். அதனால் சமூக அழிவை நோக்கும் நிலை உருவாகிவிடும். ஆதலால் உடைமையற்ற நிலையை உருவாக்கிய சமூகத்தை உருவாக்கிவிட கூடாது என்பதை கருத்தில் கொண்டே சங்க இலக்கியம் உருவாக்கப்பட்டிருக்கிறது. எனினும் அது தமிழனின் பண்பாட்டைக் காக்கும் பெரும் முயற்சி, சிறப்பு. ஆனால் ஒரு இலக்கியத்தின் முந்தைய தொடர்ச்சியானது கால வரலாற்றில் இணைந்து கொள்கிறது. அத்தொடர் நிலையில் உருவாக்கப்பட்ட பதிவுகளான பாடல்கள் சங்க இலக்கியமாய் நமக்கு தமிழரின் பண்பாட்டு வரலாற்றை விதந்து உரைப்பதாய் நிற்கிறது. எனினும் முந்தைய தொடர் நிகழ்வுகளிலிருந்து கொண்டு, வாழ்ந்து கொண்டு எழுதப்பெற்ற இலக்கியமாக சங்க இலக்கியம் அமைந்துள்ளது. ஆதலால் அப்பாடல்களுள் முந்தைய முரண்களை களையவும் எதிர்கால அமைவினை விளக்குவதுமான ஒரு படைப்பாக அமைந்துள்ள சங்க இலக்கியத்துள் யதார்த்த உண்மைகளும் சடங்கியலாக தொன்மக் கதைகளாக அன்பாக நட்பாக, காதலாக, வீரமாக, கொடையாக, திருமண முறையாக, கற்பு நெறியாக, சொல்லப்பட்டு வந்திருக்கின்றன. அத்தகைய சொல்லாடல்களுள் பல்வேறு மன்னர்களின் ஆட்சி முறைகளுள் அரசியல் கருத்தமைவுகளும் அறநெறிக் கூறுகளும், நியதிக்கான விளக்கங்களும், பதிவு செய்யப்பட்டுள்ளன. மேற்கூறப்பட்ட வாழ்வியல் சார்ந்த அரச வாழ்க்கையில் அரசுரிமையும் பெண்ணிற்குரியதாக இல்லை என்பது தெளிவு. ஆனால் காதலும், வீரமும், போற்றுதல் தமிழ்ப் பண்பாடு என்ற வாசக முறையுள் தமிழன் பண்பாட்டுமுறையுள் பெண்ணிற்கான அறம், சமத்துவம், அறநெறி, நியதி எவ்வாறு பதிவு செய்யப்பட்டுள்ளன என்பதை ஆராய்ந்து முன்வைப்பது இந்த ஆய்வின் மையப்பொருள். நோக்கம்.

**நிலவுடைமை சமூகம்:**

நிலவுடைமையாக மாறிய சமுதாயச் சூழலில், நிலவுடைமை பாதுகாப்பிற்கான 'அரசுகள்' உருவாகத் தலைப்பட்ட சூழலில் சிறுசிறு தலைவர்களை எல்லாம் வென்று நிலப்பரப்பைக் கவர்வது இயல்பான ஒன்றாக மாறியது.

> **"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்**
> **புதுவது அன்றுஇவ் உலகத்து இயற்கை"** [15]

என போர் – உலகத்து இயற்கை என்ற நிலையில் நிலவுடைமைச் சமுதாயம் வளரத்தலைப்பட்ட காலமாக சங்க காலம் இருந்தமை நன்கு புலனாகிறது.

**"குன்றுமலை காடுநாடு**
**ஒன்றுபட்டு வழிமொழியக்**
**கொடிதுகடிந்து கோல் திருத்திப்**
**படுவது உண்டு பகல்ஆற்றி**
**இனிது உருண்ட சுடர்நேமி**
**முழுது ஆண்டோர் வழிகாவல்!"** [16]

என்ற புறநானூற்று பாடல்வழி நால்வகை நிலங்களையும் தனித்தனியே ஆண்ட நிலைமைகள் மாறி நானிலத்தையும் ஒருவரே ஆளும் நிலை உருவானதை அறிய முடிகிறது.

குன்று – மணற்குன்றுடைய நெய்தல், மலை – குறிஞ்சி, காடு –முல்லை நாடு – மருதம் என நானிலத்தவரும் வழிபடக்கூடியவன் என சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையைப் பாடுகிறார் குறுங்கோழியூர் கிழார். இவன் நானில தலைமை உடைய வீரனைவிட வலிமை உடையவன் என்பதை செருமிகு வேந்தன் என்ற வழி விளக்கி நிற்கிறார்.

மேலும், பொய்கையார், சேரமான் கோக் கோதை மார்பன் நான்கு நிலங்களுக்கும் உரியன். ஆதலால்

**"நாடன் என்கோ ஊரன் என்கோ**
**பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்பன் என்கோ"** [17]

என்று அழைக்கிறார். குறிஞ்சி, முல்லை நிலங்களை உடையவனை நாடன் என்றும், மருத நிலத்தை உடையவனை ஊரன் என்றும், நெய்தல் நிலத்தை உடையவனைச் சேர்ப்பன் என்றும் கூறுவர். இதன்வழி பெண்ணைத் தலைமையுடைவள் என்றோ சேர்ப்பனை போன்ற பெண்பாலுக்குரிய பெயரோ, அதற்கு நிகரான வலிமை உள்ள பெயரோ அழைக்கப்படாத நிலை இங்கு 'பெண் அறம்' குறித்த பார்வையோடு ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

இந்நானிலங்களைக் கவர்வதில் மருதநிலக் கவர்தல் மிக முக்கியமாதலால் மருதநில உரிமையாளர்களாய் இருந்த முதுகுடி மன்னரின் மேல் வேந்தர்களின் படையெடுப்பு நிகழ்கிறது. மகட்கொடை வேண்டி முதுகுடி மன்னர்கள் மேல் போர்தொடுத்தனர். மகட்கொடை வேண்டிய வேந்தர்களின் நோக்கம் பொருளாதாரத்தை மையமாக கொண்டிருந்தது.

திருமணம் செய்வதற்கான 'மகட்கொடை' எனும் சடங்கு, பெண்ணை திருமணம் செய்யக்கூடிய அவளுக்கு கொடையாக தரக்கூடிய நிலத்தை அபகரிக்கும் சூழலே தவிர வேறொன்றுமில்லை. ஆனால் மகட்கொடை என பெருமிதச் சொல் இணைக்கப்பட்டிருக்கிறது.

பெண் மீதான அன்பு மிகுதியால் மன்னர்களின் மகளைத் திருமணம் செய்யவேண்டும் என்ற பதிவு இல்லை. ஆனால் முதுகுடி மன்னனின் நிலத்தை ஆட்கொள்ள வேண்டும் என்ற அதிகார குணமே (நிலவுடைமை) முன்னிற்க காணலாம். நிலமே முதன்மைப் பொருளாக இருந்துள்ளது. முதுகுடியில் தன் இனத்துள் மட்டுமே திருமணம் செய்து கொள்வர். அதிலும் தம் உடைமைப் பொருளான நிலம் பிறவேந்தர்களுக்குச் சென்று விடக்கூடாது என்பதாக நோக்கமாக அமைகிறது. அதனால் மகட்கொடை மறுத்தல் முதுகுடி மன்னரின் இயல்பாக கொள்ளப்பட்டிருப்பதும், மகட்கொடை வேண்டி நிற்பது மருத நிலத்தைக் கைப்பற்றுவதான நோக்கமாகவே பார்க்க முடியும். அதனை வரலாற்றுப் பார்வையோடு அணுகின் அழகமைந்த கோட்டையில், அவளை பெற்றெடுத்த தாயும், மகளும் போருக்குக் காரணமாக காட்டப்பட்டிருப்பது அன்பின் மிகுதியாலன்றி அதிகாரத்தை அபகரிக்கும் ஆளுமை சூழ்ச்சியாகவே அமையக் காணலாம்.

**"குவளை உண்கண் இவளை தாயே**
**ஈனாானாயினள் ஆயின், ஆனாது**
**நிழல்தொறும் நெடுந்தேர் நிற்ப, வயின்தொறும்**
**செந்நுதல் யானை பிணிப்ப**
**வருந்தலமன்"** [18]

**"முறம்செவி யானை வேந்தர்**
**மறம்கெழு நெஞ்சம் கொண்டு ஒளித்தோளே"** [19]

இவைபோன்ற புறநானூற்றுப் பாடல்கள் **(336, 346, 349)** இச்செய்தியினை வலியுறுத்தி நிற்கின்றன.

பொருள் கொடுத்தும் வேந்தர்கள் மணம் வேண்டியுள்ளனர். (புறம் **343, 344, 345, 352)** பிறரிடம் மகட்கொடை வேண்டாத இவர்கள், இவர்களிடம் வேண்டி நிற்பதற்கு மருதநிலமே காரணம் என்பதை உணரமுடிகிறது. இவ்வாறு மலைகளை தலைவனாக கொண்டிருக்க கூடியவர்களிடமும் வேந்தர்கள் மகட்கொடை வேண்டி நின்றதையும் புறம் **(109)** விளக்கி நிற்கிறது.

பெரிய முரசையுடைய மூவேந்தரும் பாரியின் பறம்பு மலையை கைப்பற்ற கருதினர். அம்மலை இயற்கையில் விளையத்தக்க விளைபொருள்கள் நான்கை உடையது. சிறிய இலையுடைய மூங்கிலினது நெல், பலாப்பழம், வள்ளிக்கிழங்கு, தேன் அத்தகைய சிறப்புடைய மலையை கைப்பற்ற கருதியமைக்கு காரணம் வளம்நிறை மலை. பாரியிடம் மகட்கொடை வேண்டிய வேந்தர்கள் (புறம் **109**) பாரி இறந்த பிறகு அவனது மகளை திருமணம் செய்துகொள்ளவில்லை. கபிலர் அவ்விரு பெண்களையும் அழைத்துக் கொண்டு இருங்கோவள், விச்சிக்கோ என்ற மன்னர்களிடம் அடைக்கலப்படுத்த முயன்றார். ஆனால் அவர்கள் மறத்துவிட்டனர். இச்செயல் மகளை திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற காதற் பாங்கு இல்லை என்பதை அறிய முடிகிறது. அவர்கள் வேண்டி நிற்பது மலை, அதாவது நிலவுடைமையே என்பது புலனாகிறது.

பொருளற்ற நிலையில், தலைமைத்துவம் இல்லாத செறிந்த மன்னனை தம் வலிமையால் வெல்ல முடியாத வாய்ப்பைக் கொண்டு போர் அறத்தின் நின்றே பொருள் ஈட்டவேண்டும். தன் வலிமையை பரிசோதிக்கும் அரசனின் போர் வீரம் எனும் அறத்துள், போர் அறம் காத்த இவர்கள் மன்னனின் இறப்பிற்கு பிறகு அம்மன்னனின் மகள் இருவரையும் காத்தல் என்ற அரச நெறியினின்று விலகி இருந்த நிலையைக் காண முடிகிறது. கடுகு உள்ளம், தன்வீடு, தன் பெண்டு, தன் அரசு, தன் வலிமை, தன் போர் அறம் என்பதாகவே சிந்தித்து தங்களுக்கான அரசு அறத்தைக் காத்து கொண்ட தன்மையை இப்பாடல்வழி அறியமுடிகிறது.

மகட்கொடையை முதுகுடிமன்னர்கள் மறுத்த நிலையில், பொருளாதார ஆதாரம் கிடைக்காத சூழலில் நிலங்களை அழித்திருக்கின்றனர் என்பதை (புறம் **6, 7, 15, 16, 25**, பதிற் **15, 25, 71**) அறிந்து கொள்ள முடிகிறது.

உடைமையாளராக இருந்த முதுகுடி மன்னர் சமுதாயத்தில் மகட்கொடை வழங்கும் உரிமை ஆண்களிடம் மட்டுமே இருந்துள்ளது என்பது தெளிவாகிறது. 'மகட்கொடை' எனும் இச்சொல்லே திருமணம் செய்து கொள்பவனைத் தெரிந்தெடுக்கும் உரிமை மகளுக்கும், தாயுக்கும் இல்லை என்பதைக் காட்டுகிறது. ஆகவே இங்கு 'பெண் அறம்' மதிக்கப்படவில்லை என்பதாகவே ஆய்ந்துணர முடிகிறது.

பொதுவுடைமை சமூகத்தில் பெண் தனக்கான துணைவனை தானே தெரிந்தெடுக்கும் உரிமை பெற்றிருந்தாள் (வால்காவிலிருந்து கங்கை வரை). ஆனால் உடைமைச் சமூகத்தில் அவ்வுரிமை மறுக்கப்பட்டு, அவளே

போருக்கும், நாட்டின் அழிவுக்கும் காரணம் என்று பொய்யாக கற்பித்திருக்கின்ற சூழலை சங்க இலக்கியம் வழி காணலாம். இது பெண்ணின் இருத்தலை கேள்விக்குள்ளாக்குகிறது என்றே கூறலாம்.

**உற்பத்திக் கருவிகள் :**

"வேட்டைத் தொழிலில் ஈட்டி / வேல் முதலான கருவிகளின் கண்டுபிடிப்பு, 'வேட்டை' ஆணின் தொழிலாக மாறியது. பெண்கள் உணவு சேகரித்தனர். சேமிப்பு பெண்ணின் தொழிலானது, வேட்டையாடுவது பிராணி வளர்ப்பு, உணவு சேகரிப்பு என பெண்களை விவசாயத்திற்குக் கொண்டு சென்ற வரலாற்றை அறிவோம். ஆக, பெண்களே விவசாயத்தைக் கண்டுபிடித்தனர். கலப்பையைக் கண்டுபிடித்தவுடன் விவசாயம் (தேவி பிரசாத் சட்டோ பாத்தியாய) ஆண் தொழிலானது[20]. உற்பத்திக் கருவிகளே பெண்களை இரண்டாம் நிலைக்கு தள்ளியது மட்டுமின்றி, அவர்களது உடல் உழைப்பு வாழ்தலின் முதன்மை வாழ்வாதாரமாக இருந்தாலும் அதனை இச்சமூகம் ஏற்றுக்கொள்ளவில்லை "பரிணாம வளர்ச்சியின் வரலாற்றில் இந்தத் தாய்மைப்பணியின் தலையாய முக்கியத்துவம் இன்னும் ஒப்புக்கொள்ளப் படவில்லை" [21] எனும் கூற்றின் வழி அறிந்துகொள்ள முடிகிறது.

**வேளாண் கருவிகளின் பயன்பாடு:**

**கலப்பை :**

**"தேளர் பரந்தபுலம் ஏளர் பரவா**
**களிறு ஆடிய புலம் நாஞ்சில் ஆடா"** [22]

கலப்பையை 'நாஞ்சில்' என்பர். இக்கருவியின் மூலம் மென்புலமாகிய நன்செய்யையும், வன்புலமாகிய புன்செய்யையும் உழுவர். இக்கருவியின் அமைப்பை சங்க இலக்கியம் பின்வருமாறு கூறுகிறது.

**"கொல்லை உழுகொழு ஏய்ப்ப"** [23]

என கலப்பையின் முதன்மையான உறுப்பு கொழு என்பதும்,

**"புன்புலம் வித்தும் வன்கை வினைஞர்**
**சீருடைப் பல்பகடு ஒலிப்பப்பூட்டி**
**நாஞ்சி லாடிய கொழு வழி மருங்கின்"** [24]

அது நிலத்தைப் பிளந்து உழும் தன்மை உடையது என்பதும் அறியப்படுகிறது. மேலும் இக்கலப்பையின் அமைப்பானது

**"தொடுப்பு எறிந்து உழுத துளர்படு துடவை"** [25]

போன்று அமையும்.

**"வறனுழு நாஞ்சில்"** [26] என வறள் நிலத்தையும் உழுதிருந்த செய்தியும் அறியலாம்.

பயிர்த்தொழிலுக்குப் பயன்பட்ட கருவிகளை வைப்பதற்கு தனிக் கொட்டில்கள் இருந்தமையைக் (பெரும் 188–189) காணலாம்.

வயல்களை உழுத பின்னர் அவற்றை சமன் செய்வதற்கு 'தளம்பு' (சேற்றுக் கட்டியை உடைக்கும் கருவி) என்ற கருவியைப் பயன்படுத்தி உள்ளனர் என புறம் வழி அறியமுடிகிறது.

**"மலங்கு மிளிர்செருவில் தளம்பு தடிந்திட்ட"** [27]

வயலுக்கு நீர் பாய்ச்சுவதற்கு என்று இறைப்புக் கருவிகளைப் பயன்படுத்தினர்.

**'ஏற்றமொடு வழங்கும் அகல் ஆம்பி'** [28]

நீர்நிலைகளின் நீரை ஏற்றம் வைத்து இறைத்து வயலுக்கு பாய்ச்சினர். அவ்வேற்றத்தில் 'ஆம்பி' என்ற கருவி பொருத்தப்பட்டிருக்கும் என்பதை இவ்வரி புலப்படுத்துகிறது. வாய் அகன்ற ஆம்பி கொண்டு நீரை முகந்து, ஏற்றத்தின் வழியாக மேலே கொணர்ந்து வாய்க்காலில் செலுத்திப் பாய்ச்சுவர்.

குளத்திலிருந்து நீரை இறைத்துப் பாசனம் செய்யப் பயன்படுத்தும் மற்றொரு கருவி 'கிழார்'.

**"மென்தொடை வன்கிழார்"** [29]

ஆழமாகத் தோண்டப்பட்ட கிணறுகளில் நீண்ட கயிற்றைக் கட்டிக் கையால் நீர் இறைப்பர். கயிற்றின் நுனியில் கட்டப்படும் குடம்போன்ற கருவி 'முகவை' எனப்படும். **"கயிறுகுறு முகவை"** இக்கருவியின் கழுத்துப்பாகம் குறுகியிருக்கும். குடத்திலும் சற்று சிறியதாகிய இம்முகவையில் நீரை இறைத்துக் கால்நடைகளுக்கு ஊற்றுவர். இதனை பத்தல் (அகம் 15:5–6) என்று அழைப்பர்.

**துளர்:**

நெல் வயலில் வளர்ந்த களைகளைக் கையால் பிடுங்கி எறிவர். புன்செய் நிலத்தில் வளர்ந்த களைகளை வெட்டுவதற்கு கருவியைப் பயன்படுத்தினர். அக்கருவி 'துளர்' என்பர்.

**“துளர்எறி வினைஞர்”** [30]

**“துளர்படு துடவை”** [31]

இன்று இதனை ‘களைக்கொட்டு’ என்று அழைப்பர்.

### குளிர், தட்டை, தழல்:

விளைந்த பயிர்களில் உள்ள நெல் மணிகளை உண்ண வரும் பறவைகளை விரட்டுவதற்கு குளிர் (குறுந். 291:1–3), தட்டை (அகம். 388–2, நற். 134:2–3, ஐங். 285:2–3, புறம் 49:4–6, குறுந். 193:2–3), தழல் (அகம். 188–2, குறிஞ். 43–44), கவண் (நற். 108:4, 206:5), ஞெகிழி (குறுந். 357–6, கலி. 51:12–13), அடார் (பெரிய கல் நற். 119:2–3), தண்ணுமை (நற். 350) போன்ற கருவிகளைப் பயன்படுத்தினர். நெற்கதிர்களை அறுக்க வளைந்து காணும் அரிவாளையும் (பெரும். 242, புறம். 379:3–5) பயன்படுத்தினர்.

### நெய்தல் நிலம்:

மீனை பிடிப்பதற்கு என்று வலைகளைப் பயன்படுத்தினர். நெடுங்கயிறு வலந்த குறுங்கணவ்வலை (அகம் 30) என்று அதனை அழைப்பர். குளத்து மீனை பிடிப்பதற்கு தூண்டிலைப் பயன்படுத்தினர்.

**“நாண்கொள்நுண் கோலின் மீன்கொள் பாண்மகள்**
**தான்புன லடைகரைப் படுத்த வராஅல்”** [32]

**“நெடுங்கழைத் தூண்டில் நடுங்க நாண்கொளீஇத்**
**கொடுவாய் இரும்பின் மடிதலை புலம்பப்**
**பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை”** [33]

சுறா மீனை பிடிப்பதற்கு,

**“கடுஞ்சுறா எறிந்த கொடுந்திமில் பரதவர்**
**வாங்குவிசைத் தூண்டில் ஊங்கூங் காசி”** [34]

விசைத்தூண்டிலை பயன்படுத்தினர். எறிஉளி என்ற மற்றொரு கருவியையும் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

**“கயிறுகடை யாத்த கடுநடை எறிஉளித்**
**திண்திமில் பரதவர் ஒண்சுடர்க் கொளீஇ**
**நடுநாள் வேட்டம் போகி”** [35]

நற்றிணை வழி அறியமுடிகிறது.

இதன்வழி நால்வகை நிலங்களிலும் தொடக்கால கருவிகளாக இருந்தமையை எண்ணிப்பார்கக முடிகிறது.

பெண்ணே இன உற்பத்திக்கான முதன்மை ஆதாரம். ஒரு இனத்தின் விருத்தி அவள் மூலமாகவே நடைபெறுகின்றது. பெண் வளமையின் குறியீடாகவே இருக்கிறாள். பெண்ணுக்கும் பயிர்த்தொழிலோடு நெருங்கிய தொடர்பு இருப்பதை[36] அறியலாம்.

"குறைவளம் பொருந்திய நிலத்தில் பெண்களே சாகுபடியில் ஈடுபட்டு, ஆண்களுடைய கடினமான விவசாய வேலைகளுக்குத் தோள் கொடுக்கின்றனர். மிகவும் பூர்வ காலத்திற்குரிய பழங்குடிகளின் மத்தியில் ஆண்களுக்கு வேட்டைத் தொழில் எவ்வாறோ அது போலவே கம்புக் கொத்தி, கை கலப்பை ஆகியவற்றின் உபயோகம், அதாவது எல்லா விவசாய வேலைகளும் பெண்களுடைய ஏகபோகமாகத் திகழ்ந்தது[37]" என்கிறார் டி.டி.கோசாம்பி.

இருப்பினும் உற்பத்திக் கருவிகளின் வருகை உடைமைச் சமூகம், நிலவுடைமைச் சமூகத்தின் ஆதிக்கம், பெண்ணின் உழைப்பை, ஆற்றலை எண்ணிப் பார்க்கப்படவில்லை என்பது தெளிவு.

**முடிவுரை:**

இயற்கை உணவு மனிதனின் வாழ்வாதாரமாக அமைந்துள்ளதை அறிவோம். மீனும், தேனும், கிழங்கும் என்ற வரலாற்றில் மரத்துண்டுகளும், கூரிய கற்களும் இரண்டறக் கலந்து நின்று உழைப்பு, உற்பத்திக் கருவிகள் இரண்டும் ஒன்றிணைந்து இருப்பதைக் காண முடியும். இயற்கை சீற்றத்தின் விளைவில் வாழ்ந்த பாறைகள் நெருப்புக் கோளங்களால் உருகிட அது மனிதனின் கட்புலனுக்கு உற்பத்திக் கருவிகளை வேறுவேறு வடிவங்களாக தன் வேட்டைக்குரிய ஆயுதங்களாக உருவேற்றிக் கொண்டதும், அவையே தான் கண்டு பிடித்த உற்பத்திக் கருவிகளாக உருவாக்கப்பட்டன.

இயற்கை, மனிதன், உழைப்பு, உற்பத்திக்கருவி, தொழில், சமூகம், வளர்ச்சி என்ற நெடிய வரலாற்றை வாசிப்போருக்கு உலோகங்கள் உற்பத்திக் கருவிகளாக மாறிய வரலாறு தெற்றென விளங்கும்.

வரலாற்றுத் தொடர்ச்சியில், கால வளர்ச்சியில் விவசாயப் பெருக்கம் ஓரிடத்தில் நிலைத்து வாழும் வாழ்வாதாரமாக விவசாயம் அமைந்தது. அரசு உருவானது எனின் செல்வம் பெருகியது எனின் ஓரிடத்தில் இருந்து கோலோச்சும் மாண்பு பெருகியதும் அதற்கென நூற்றுக்கணக்கான

வன்புலம், மென்புலம் என உழுபடைக்கருவிகளும் பெரும்பங்காற்றியுள்ளன என்பதை சங்க இலக்கியங்களில் பார்க்க முடியும்.

நால்வகை நிலம் என அமைந்து தமிழகத்தை வளம் என்ற சொல்லிற்குள், நான்கு வகை நிலத்திற்கான உற்பத்திக்கருவிகளும் பயன்விளைத்து நின்றன.

விவசாயத்தை கண்டறிந்தவள் பெண், கலப்பையைக் கண்டறிந்தவளும் அவளே. மாமிச துண்டுகளை உலரவைத்து சேமித்தபோது தானிருந்த, வசித்த மலைபகுதிகளில் உதிர்ந்த கனிகளின் விதைகள் மீண்டும் துளிர்த்து மரங்களாகி பல நூறு கனிகளைத் தந்து பயனளித்த தாவரங்களைக் கண்ணுற்று அவற்றைப் போலச் செய்தல் என்ற நிலையில் மலை நெல்லையும் விளைவிக்கத் தலைப்பட்டவள் பெண் என்பது அறிவோம். விவசாய உற்பத்திப் பெருக்கத்தில் பெண்ணின் இடம் முதன்மையானது.

பெண்ணின் அறிந்துணரும் நுட்பத் திறனும், உற்பத்திக் கருவிகளில் ஆற்றிய பயனும் கால வரலாற்றில் மறுக்க முடியாத இடத்தைக் கொண்டிருக்கிறது என்பதை 'விவசாயம்' குறித்த வரலாற்றில் நாம் மீண்டும் பதிவு செய்ய வேண்டி இருக்கிறது.

குறிஞ்சி நிலத்தில் மலைநெல், சாமை, தினை என அவற்றின் விளச்சலை விலங்குகளிடமிருந்தும், பறவைகளிடமிருந்தும் காப்பாற்றிட கவண் ஓட்டுவதும், கிளி கடிவதும், கிளி ஓட்டுவதும் என குறிஞ்சி நில தொழில் உற்பத்திக்குத் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டிருந்தாள் என்பதையும் அவளது கைதிறம் தினைபுனம் காக்கும் பணியில் இருந்ததும், ஆண்களைவிட பெண்கள் அதிகமாக தினைப்புனக் காவலில் ஈடுபட்டுள்ளமையை அறிய முடிகிறது. "புன்செய் வேளாண்மையில் காவல் மிகுதியும் வேண்டப்படுகிறது. இந்தக் காவலும் பகற் காவல், இரவுக் காவல் என்ற இரு நிலைகளில் அமைகின்றது. பகற் காவல் பெரும்பாலும் பெண்டிரால் செய்யப்பட்டதை சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. சங்க இலக்கியத்தில் தினை வரும் எண்பது இடங்களில், ஆண் தினைக்காவல் புரிந்தமை ஆறு இடங்களிலும், **29** இடங்களில் பெண்கள் தினைப்புனம் காத்தமை பேசப்பட்டுள்ளது. ஏனல் வரும் **43** இடங்களில், ஆண் கவால் எட்டு இடங்களிலும், பெண் காவல் **26** இடங்களிலும் பேசப்பட்டுள்ளன. ஆக **55** இடங்களில் பெண்கள் தினைப்புனக் காவலில் ஈடுபட்டமை பாடப்பட்டுள்ளது. (பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப. **98**)" என்பதாக மாதையன் கூறுகிறார். ஆனால் பெண்ணினது திறன் போலச் செய்தல் என்ற

விவசாய உற்பத்தியில் சிந்தித்தல் குறித்த தன்மையோடு மட்டுமின்றி திறன் வாய்ந்த தொழில் முறையில் குறிப்பாக தினைபுனம் காக்கும் கவண் எறிதலிலும் வியந்து போற்றும் வகையில் (நற். 206:5) அமையபெற்றுள்ளதைப் பெண் அறம் குறித்த பதிவுகளில் பெரிதும் பார்க்க முடியவில்லை.

விவசாய உற்பத்திப்பெருக்கத்தில் பெண்ணின் உழைப்புத் திறன், சேமிப்பு என இவளது திறன் பெரிதும் மதிப்பிட்டு முறையில் பாடல்களாக பதிவு செய்யப்படவில்லை. ஆதலால் பெண்ணின் உழைப்புத் திறன் குறித்த வரலாறு சம காலத்தில் அறியப்படாமல் போனது. பெண்களின் உற்பத்திக் கருவிகளில் பெண் அறம் பெரிதும் பேசப்படவில்லை என அறியலாம்.

# சான்றெண் விளக்கம்

## இயல் – 2

1. எங்கெல்ஸ் குடும்பம், தனிச்சொத்து, அரசு, ப.35.
2. வெ.மு.ஷாஜகான்கனி, திணை வரலாறு, பக்.100–109.
3. ராகுல சாங்கிருத்தியாயன், வால்காவிலிருந்து கங்கை வரை, பக்.17–85.
4. பெண்ணின் இயல்பு, அசமத்துவம் சீராக்கப்படுகிறது, நியூயார்க் மற்றும் ஆக்ஸ்போர்டு, 1983, ப.131.
5. வி.ராதாகிருஷ்ணன் (தமிழ் ஆக்கம்), உலக வரலாற்றில் பெண்கள், பக்.6–32.
6. பெ.மாதையன், சங்ககால இனக்குழு சமுதாயமும், அரசு உருவாக்கமும், ப.39.
7. புறம். 306
8. புறம். 318:1–3
9. புறம். 333:9–13
10. குறள் 400
11. பெ.மாதையன், சங்ககால இனக்குழு சமுதாயமும், அரசு உருவாக்கமும், ப.39.
12. ராகுல சாங்கிருத்தியாயன், வால்காவிலிருந்து கங்கை வரை, ப.85.
13. வெ.மு.ஷாஜகான்கனி, திணை வரலாறு, பக்.111–112.
14. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப.11.
15. புறம். 76:1–2
16. புறம். 17:3–8
17. புறம். 49:1–2
18. புறம். 348
19. புறம். 339
20. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப.97.
21. வி.ராதாகிருஷ்ணன் (தமிழ் ஆக்கம்), உலக வரலாற்றில் பெண்கள், ப.12.
22. பதிற். 26:1–2
23. பொருநர். 117
24. பதிற். 58:15–17
25. பெரும். 199–201

26. கலி. 8:4

27. புறம். 61:3

28. மதுரை. 90

29. மதுரை. 92

30. அகம். 184:13

31. பெரும். 201

32. அகம். 216:1–2

33. பெரும். 285–287

34. நற். 199:6–7

35. நற். 388:3–5

36. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப.102

37. மேலது, ப.102.

தொடக்கத்தில் மக்கள் நாடோடிக் கூட்டமாகத் திரிந்தனர். திருமணம், குடும்ப முறை என்ற அமைப்பும் இல்லை. ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையே பாலினத் தொடர்பும், பெண் குழந்தைப் பேறு அடைவதும், பிறக்கும் குழந்தை தாயிடம் பாலுணவுக்காக நெடுங்காலம் ஒட்டியிருந்ததும், தந்தை யார் என்று அறிந்துகொள்ளவேண்டிய கட்டாயம் இன்றியும் வாழ்ந்த நிலையில் தாய்வழிக் குடும்பங்கள் இருந்தன. கைவினைக் கருவிகள், பொருள் உடைமைகளின் இருத்தலில் ஒவ்வொருவரும் தனித்து நின்று உழைக்கவும் முனைந்தனர். திருமணம், குடும்பம் என்ற அமைப்பு உருவாக்கப்பட்டு ஒழுங்குமுறை வரையறுக்கப்பட்டபோது பொருள் உற்பத்தி உடைமைகளின் ஊடாகவே தந்தைவழிக் குடும்பங்கள் ஏற்பட்டன. சங்க காலத்தில் தந்தைவழிக் குடும்ப அமைப்பு நிலவி இருந்ததை அறிவோம். (பதிற் **74:20/ 21, 70:21–22)** இங்கு தாய்வழிச் சமூகம் இருந்த தடயங்கள் பெரிதும் வெளிப்படையாகவோ, மேம்பட்ட மதிப்பீடுகளுடன் ஆண்களைப்போல் பொருளுடைமைக்குரியராக பெண்கள் வாழ்ந்திருந்தனர் என்ற பாடற் பதிவுகளோ இல்லை என்பதை ஆய்வின் வழி அறியமுடிகிறது.

டெய்லர் என்னும் சமூக, மானுடவியல் அறிஞர், சமூகம் , காட்டுமிராண்டி நிலை, நாகரீகம் முதிரா நிலை, நாகரீக நிலை ஆகிய மூன்றையும் தாண்டி வளர்ந்து வந்துள்ளது என்கிறார். காட்டுமிராண்டி நிலை என குறிப்பிடும் வகையில், மக்கள் காய் கனிகள் சேகரிப்பதையும், வேட்டை ஆடுவதையுமே தம் தொழிலாகக் கொண்டிருந்தனர். கோடைப் பருவங்களில் பறவைகள் வேடந்தாங்களைத் தேடிவருவதைப்போல காய், கனியும், விலங்குகளும் போதிய அளவு கிடைத்த இடங்களில் மட்டுமே தங்கி இருந்தனர். உணவுப் பொருள்கள் தீர்ந்த நிலையில் இடம் விட்டு வேறு இடம் நகர்ந்தனர். நாடோடி வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர். கல் முதல் ஆயுதமானது. பின்னர் இச்சமுதாயம் வேளாண்மையை நோக்கிய வளர்ச்சிக்கு முன்னின்றபோது, வேளாண்மைச் சமுதாயத்திலேயே தங்களுக்கென்று ஆண் தலைமையையே[1] அமைத்துக் கொண்டனர்.

ஆகஸ்ட் கோம்தே சமூகத்தை அறிவு அடிப்படையில் மூன்று வகையாகக் கூறியுள்ளார். அவை **1.** இறையியல் நிலை, **2.** நுண்பொருட் கோட்பாடு நிலை, **3.**புறமெய்ம்மைநிலை. முதல் நிலையில், அரசனைச் சார்ந்த சமூக நிலையமைப்பும், இரண்டாம் நிலையில் சட்டத்தை அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்பும், மூன்றாவது நிலையில் தொழிலை அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்பும்[2] தோன்றின.

சமுதாயத் தோற்றத்திற்கான காரணத்தை ஆராயும் காரல் மார்க்சு ஏனையவரிடமிருந்து வேறுபட்டு புதிய கருத்தைக் கூறியுள்ளார். பொருளாதார அமைப்பு மாற்றங்களைச் சந்திக்கும்போது சமுதாயம் அதற்குத் தக, மாற்றம் அடைந்துள்ளது என்று கூறும் அவர்; பொதுவுடைமை நிலை, ஆசிய நிலை, தொன்மை நிலை, நிலமானிய நிலை, முதலாளித்துவ நிலை என பகுப்பு இருந்தமையை சுட்டிச் செல்கிறார். ஆறறிவு உயிரின் சிறப்பம்சம் சிந்திக்கும் திறன். முதல் மூலதனம் என்று சொல்லக்கூடிய விரல்கள் இணைந்த கை, கையில் பிறந்த அந்த உழைப்பானது, பிறருக்காவும், உறவுப் பாலத்தை ஏற்படுத்துவதால் இங்கு மனித உறவு **'இணைவு'** என்ற அடிப்படையில் சமூகம் என்பது கூட்டிணைவின் தோற்றம் என்பதற்கு அடிப்படை என்று அறியலாம்.

**தொழில்கள் – விளக்கம்:**

தொழில் என்பது உயிர் வாழ்வதற்கான அடிப்படைத் தேடல். முயல்தல், தன்முனைப்பு, எதிர்கொள்ளல், முயன்று போராடுதல், உழைத்தல் என தேவையை முன்வைத்து எழுந்த பயன்பாட்டுத் தொழிற் பெயர். பயன்பாடு எனின் தேவை என்றும், முயன்று எதிர்கொள்ளல் விரும்பிப் போராடிய உழைப்பு என்றும் விளக்கம் பெறலாம். பொருள் பெறுவதற்காகச் செய்யும் செயலைக் குறிக்கின்றது. தொழில்கள் தாம் சமூகமாற்றத்தின் எல்லாத் தேவைகளுக்கும் அடிப்படைக் காரணமாய் அமைகின்றன.

எனினும் அகராதி வாழ்வியற்களஞ்சியம் என அறிஞர் தம் விளக்கங்களை அறிவோம் ஆயின் "உழைப்பு என்பது மூளையையோ, உடலையோ, முழுவதுமாகவோ பகுதியாகவோ வருத்தி ஏதோ ஒன்றைப் படைப்பதற்காகச் செய்கின்ற செயலைக் குறிக்கும். ஆனால் அந்தச் செயலிலிருந்து கிடைக்கும் மகிழ்ச்சியை உழைப்பு உள்ளடக்காது. இவ்விலக்கணத்தின்படி உழைப்பு எல்லா வகையான தொழில் திறமைகளையும் உள்ளடக்கும். கல்வி அறிந்திடாத தொழிலாளர்களின் உற்பத்தி முயற்சிகளும், கைத்தொழில் கலைஞர்கள், கல்வியாளர்கள், ஆசிரியர்கள், வழக்கறிஞர்கள், நீதிபதிகள், எழுத்தாளர்கள், வேளாண்மைத் தொழிலாளர்கள், வணிகர்கள், நுண்கலைஞர்கள், இலக்கிய அறிஞர்கள், மருத்துவர்கள், அறிவியல் வல்லுநர்கள், நிர்வாகிகள், ஆகியோரின் பணிமுயற்சிகளும் உழைப்பிற்கு விளக்கம் அளித்த மார்சலின் வரையறைக்குள் அடங்குகின்றன என்றும்"[3] விளக்கம் அமைவதைக் காணலாம்.

உழைப்பு, உழைத்தல் தொழில் என்பன பொதுப்பெயராக ஆண்/ பெண் எனும் இருபாலருக்குரியதாக இருக்க 'வினையே ஆடவருக்கு உயிர்' என்றும் பெண்கள் 'மனையுறை மகளிராய்' அவர்கள் மேற்கொண்ட தொழில் பெரிதும் பேசப்படாமல் இருந்த தன்மையும் சங்க இலக்கியப் பாடல்களின் வழி ஆய்ந்துணரலாம்.

**வேட்டைத் தொழில்:**

ஆதிமனிதன் தனக்கு தேவையான உணவுகளைத் தான் வாழும் இடத்தில் இருந்தே பெற்று தம் வாழ்க்கையை நடத்தியவர்கள் என்பார் கே.கே.பிள்ளை.

"காடுகளில் காய்களும், கனிகளும், கொட்டைகளும், கிழங்குகளும் கிடைத்தன. ஆதிமனிதன் ஆங்காங்கு கிடைத்த உணவுப் பண்டங்களைப் பொறுக்கித் தின்று வயிறு பிழைத்தான். பிறகு தான் அவன் வேட்டையாடக் கற்றுக் கொண்டான்"[4] பிறகு "உணவுப் பொருள் கிடைப்பதில் ஏற்பட்ட தட்டுப்பாட்டு நிலை அவன் உணவு வகையில் விலங்குகளின் இறைச்சியையும் சேர்த்துக் கொள்ள தூண்டிற்று. விலங்கும் பகைவரிடமிருந்து தன்னைக் காத்துக் கொள்வதற்கு மேலாக இவ்வுணவுத் தேவையே அவனை வேட்டையில் தேர்ந்தவனாக ஆக்கிற்று. ஆகவே மனிதனின் முதல் தொழில் வேட்டையாடுதலாய் அமைந்தது"[5] என்பார்.

எனவே இயற்கையாக கிடைக்கக் கூடிய பொருட்களை உணவாக கொண்டு, வாழ்ந்த மனிதன் உணவுப் பொருள் பற்றாக்குறை ஏற்பட்டதன் மூலம் வேட்டையாடி தம் உணவினைப் பெற்றுக் கொண்டான். ஆக வேட்டையாடுதலே மனிதனின் முதல் தொழிலாக இருந்தமையை அறியமுடிகிறது.

வேட்டையாடுவதற்கு என்று முதன்முதலில் அவன் கற்களைப் பயன்படுத்தினான். பிறகு அக்கற்களை செதுக்கிக் கூர்மையாக்கி வெவ்வேறு வடிவங்கள் கொண்ட கருவிகளாக மாற்றி, தம் தொழிலுக்குப் பயன்படுத்தினான்.

"இயற்கை நீருற்றுகள் அவனுக்கு நீர் வழங்கத் தவறிவிடும்போது, மலைநாட்டில் கணக்கின்றிக் காணப்படும் பள்ளங்களில் நீர்த்தேக்கங்களை கண்டு பயன்கொண்டான். காலின் கீழிருந்து எளிதில் எடுத்துக் கொண்ட கூழாங்கல் அவனுக்குத் தொடக்கநிலைத் தொழிற்கருவியாகப் பயன்பட்டது. பல்வேறு வடிவங்களில் ஏராளமாகக் கிடைத்த கல் வகைகள் புதியன. அவன்

அறிவிற்கு ஊக்கம் ஊட்டின. அவனும் அவனுக்குத் தேவைப்பட்ட கோடாரி, குத்தீட்டி, வெட்டுவாள், மண்வெட்டி முதலானவற்றை வடித்துக் கொள்ளத் தெரிந்துக் கொண்டான்.[6]" என ஆதி மனிதன் தொடக்க கால கருவியாக கற்களைப் பயன்படுத்தியமையும், பின்பு பல கருவிகளைச் செய்ய கற்றுக் கொண்டமையையும் ஞா.தேவநேயப் பாவணர் விளக்கி உரைக்கக் காணலாம்.

பன்னிரண்டு வகைக் கோடாரித் தலைகளும், சம்மட்டிகளும், இருவகையான கொத்துக் கருவிகளும் அறுவகை உளிகளும், கருமாரப் பட்டைக் கற்களும், உரல்களும், உலக்கைகளும், தட்டுகளும், தண்டுகளும், இருவகை எந்திரக் கற்களும், அம்மி குழவிகளும், தீட்டு கற்களும், எடைக்கற்களும், கற்சட்டிகளும், அம்புத் தலைகளும் என பல கருவிகளை உருவாக்கி தம் வாழ்க்கையை நடத்தினார்கள் என கே.கே.பிள்ளை, தமிழக வரலாறும் பண்பாடும் என்ற நூலில் (ப.37) குறிப்பிடுவார்.

"நாடோடிகளாக வாழ்ந்த வந்த மக்கள் மிருகங்களை வேட்டையாடி தங்களது வாழ்க்கையை நடத்தி வந்தனர். அக்காலக் கட்டத்தில் கற்களினாலான கருவிகள் செய்து வேட்டையாடி வந்தனர். முதன்முதலில் நாடோடிகளாக வாழ்ந்த அவர்கள் தங்களது அறிவு வளர வளர பயிர்த் தொழில் போன்றவற்றையும் செய்ய முற்பட்டனர். பயிர்த்தொழில் செய்ய முற்பட்ட அவர்கள் தங்களது நாடோடி வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைத்து ஓரிடத்தில் குடியேறத் தொடங்கினர். அவ்வாறு குடியேறிய மக்கள் தங்களது தொழிலுக்குக் கற்களினால் செய்யப்பட்ட கருவிகளையும் பயன்படுத்துவது அதிக பயனைத் தராது என்பதை அறிந்தனர். அதன் விளைவாக இரும்பின் பயனைக் கண்டு அதிலிருந்து பல்வேறு இரும்புப் பொருள்களைச் செய்து வந்தனர்."[7] இவ்வாறு படிப்படியாக இரும்பின் வளர்ச்சி ஏற்பட்டது. வேட்டையாடுவதற்கும், பிற தொழிலுக்கும் இரும்பாலான பல கருவிகளைப் பயன்படுத்திக் கொண்டனர். அம்பு, ஈட்டி, வேல், வாள், இரும்புமுள், கேடயம், கவசம், சூலப்படை, வச்சிரப்படை, அரம், கத்தி, மண்வெட்டி, கொழு, உளி, சம்மட்டி, மழு, முதலான இரும்பு கருவிகளைக் கொண்டு வேட்டையாடுவதற்கும், பகைவரிடம் இருந்து தம்மை காப்பதற்கும் போர்க்காலங்களில் பயன்படுத்தும் போர்க் கருவியாகவும் இருந்தன.

இரும்புக்கருவிகள் மட்டுமின்றி செம்பினால் செய்யப்பட்ட கருவிகளையும் பயன்படுத்தினர்.

ஆதிகாலமனிதன் இயற்கையோடும், இயற்கை விலங்குகளோடும் போராடியே தமது உணவுத்தேவையை நிறைவு செய்து கொள்ள வேண்டிய தேவை ஏற்பட்டது. அதன் விளைவாக முயல், பன்றி முதலான விலங்குகளை வேட்டையாடினான். வேட்டையும் வாழ்தலுக்கு போதுமானதாக இல்லை. அடிப்படை தேவையான உணவுத் தேடல் அவனைக் கடின சூழலுக்கு தள்ளியது. குகைகளில் தங்கி வாழ்ந்தவன் குகைகளில் பதுங்கிக்கிடக்கும் கொடிய விலங்குகளையும் வேட்டையாடினான்.

குழுவோடு (ஆண் / பெண்) இணைந்து, குழு வேட்டையில் கொடிய விலங்குகள் வேட்டையாடப்பட்டன. வேட்டையாடப்பட்ட உணவு சமப்பகிர்வாகவே பங்கிட்டு உண்ணப்பட்டது. சில நேரங்களில் மட்டுமே உணவுத் தேவை நிறைவேற்றப்பட்டது. பல நேரங்களில் இயலாமற் போனது.

"அவர்களுடைய வயிறு முதுகெலும்போடு ஒட்டிக் கிடந்தது. தாய் முதலில் ஓநாயினுடைய ஈரலை வெட்டி வெட்டிக் குழந்தைகளுக்கு கொடுத்தாள், அவைகள் அவசர அவசரமாக அவற்றை மென்று விழுங்கிக் கொண்டிருக்கின்றன. மாமிசத்தை அறுத்து அறுத்து நெருப்பில் வாட்டினாள். பசியோடு காத்திருந்த கூட்டம் சுட்டும் சுடாமலும் எடுத்துக் கவ்வுகின்றன. சிலர் கழுத்துப் பாகத்தின் மெல்லிய மாமிசத்தை அறுத்துக் கொடுக்கும்படி தாயைக் கெஞ்சிக் கேட்கின்றனர். அப்பொழுது தாய் இன்று வயிறு நிறையச் சாப்பிட்டுக் கொள்ளுங்கள், நாளையிலிருந்து இவ்வளவு கிடையாது"[8] என்று கூறுவதிலிருந்து பழந்தமிழரின் வேட்டைச் சமூக வாழ்வினை அறிந்து கொள்ள முடிகிறது.

வேட்டைக் காலங்களில் நாய் மனிதனின் நாலு கால் நண்பனாக ஒரு லட்சம் ஆண்டுகளாக இருந்து வந்திருக்கிறது.

**"கோடு துவையா, கோள் வாய் நாயொடு**
**காடு தேர்ந்து......................"**[9]

கொம்பை ஊதி ஒலியெழுப்பி, பற்றிக் கொள்ளும் வாயையுடைய நாயோடு காட்டை ஆராய்ந்த தன்மையை இவ்வரியின் மூலம் அறியலாம்.

மிருகங்களை சிரமப்பட்டு வேட்டையாடி அதை தனது எஜமானனின் காலடியில் போட்டுவிட்டு அவன் தரும் எலும்புகளுக்காக அது காத்திருக்கும் – அதிகமாய் எலும்புகள் கிடைத்துவிட்டால் அவற்றை நாய் மண்ணிலே புதைத்து வைக்கும். இரை ஒன்றும் கிடைக்காத போது நாய்க்கு அந்த எலும்புகள் உணவாகப் பயன்படும்.

அணில் பலவிதமான கொட்டைகளைத் தனது கூட்டில் சேமிக்கிறது. தேனீக்கள் தேனைச் சேகரித்து வைக்கின்றன. இவைபோன்ற பல விலங்குகளும், பறவைகளும் மனிதனுக்குச் சேமிக்கும் பழக்கத்தை கற்றுத் தந்தன.

**மேய்ச்சல் தொழில்:**

தாம் வாழ்ந்த நிலப்பகுதிகளில் விலங்குகள் சாதுவாக இருப்பதைக் கண்டு தன் இருப்பிடத்தில் வைத்து, வீட்டு விலங்குகளாக மாற்றினான். அவற்றை தம் கட்டுப்பாட்டில் வளர்த்தான். அவற்றை கொடிய விலங்குகளிடமிருந்து அவற்றை பாதுகாத்தான். அவ்விலங்குகளினால் அவன் மிகுதியான உபரியைக் கண்டான். இன உற்பத்தி செய்யும் மூலதனங்களாகவும் கொண்டனர். நாய், மாடு, ஆடு இவற்றை வளர்ப்புப்பிராணிகளாகப் பராமரித்தான். கருவிகள் இருந்த இடத்தில் நாய்கள், பன்றிகள் உற்பத்தி மூலதனங்களாகவும் பயன்படுத்தப்பட்டன.

பரிணாம வளர்ச்சியால் தன்னிடமுள்ள ஆடு – மாடு கால்நடைகளை மேய்த்து அவற்றிலிருந்து வரும் மூலப்பொருட்களைப் பால், தயிர், மோர், வெண்ணெய் என அவற்றை தம் உணவாக்கினான். கால்நடைகள் மூலதனம் என்பதை புரிந்து கொண்ட அவன் அவைகளை உடைமைப் பொருளாகக் கொண்டான்.

உடைமைப் பொருளுக்கு இரையாக புல், தாவரங்களைத் தேடிச் சென்றான். மேய்ச்சல் தொழில் உருவானது. அதன்மூலம் கால்நடை பராமரிப்பு, கால்நடை உற்பத்தி, உபரி எனத் தம் மேய்ச்சல் தொழிலை நகர்த்திச் சென்றான். அது இருத்தல் என்ற பயன்பாட்டைத் தந்ததால் கால்நடை களுக்கும் தனக்கும் இருத்தலுக்குமுரிய இடமாக காட்டுப்பகுதியைத் தேர்ந்தெடுத்து வாழத் தொடங்கினான்.

**விவசாயத் தொழில்:**

கால்நடைகளின் எச்சமான சாணங்களின் உதவியால் மலைநெல் போன்ற தானியங்களைப் பயிரிட்டு பயன் பெற்றான். அதற்கென மலைச்சரிவிலுள்ள நிலங்களில் அடர்மரங்களை வெட்டி பயிர் விளைக்கும் நிலங்களை உருவாக்கினான். தனது பயிரிடும் முறையோடு கால்நடை வளர்ப்பும் தொடர்ந்தது.

மலைகளில் பயிரிடுவதைப்போல் மேய்ச்சல் தொழிலின் வழி காடுகளில் பயிரிடும் முறைக்கும் தங்களை இணைத்துக் கொண்டனர். அதற்கென

அடர்ந்த காடுகளை அழித்து மரங்களை வெட்டிப் பயிரிடத் தொடங்கினான். மலைநெல்லைப் போன்று, முல்லை நிலத்திலும் பயிர்களின் விளைச்சலைக் கண்டான். மலைநிலம் போல் அல்லாது முல்லைக் காட்டு நிலங்களில் பயிர்களின் விளைச்சல் அதிகரித்தன. கால்நடைகளின் மேய்ச்சல் தொழிலும், விளைச்சலும் வாழ்விடமும் தங்கி வாழும் இடமுமாக முல்லை நிலம் அமைந்தது. கால்நடைகளின் பயன் மூலதனமாகப் பார்க்கப்பட்டது. அதனால் ஆடு மாடுகளைக் கவர்ந்துகொள்ளும் எண்ணம் தோன்ற ஆரம்பித்தது. அத்தகைய சிந்தனையே கால்நடைகளை உடைமையாக்கும் முயற்சித்தான். ஆநிரைகளைக் கவர்ந்தான். கவர்ந்த ஆநிரைகளை மீட்டுக்கொள்ள வேண்டும் என்பதற்காக போர் முறை தொடங்கியது. உடைமைப்படுத்தும் ஆதிக்க சிந்தனையும் தோன்றியது.

காட்டு வாழ்க்கையில் பழக்கப்பட்டு, பயிரிடப்பட்டு வந்த மக்கள், குழுவாக, கூட்டமாக, கூட்டிணைவாகப் பயிரிடும் நிலங்களைப் பெருக்கிக் கொள்ள நினைத்தனர். மேய்ச்சல் தொழிலின் நீட்சியில் பல்வேறு சமவெளிப் பகுதிகளைக் கண்ட மனிதன். ஆங்கே நீர்நிலைகள் தேங்கிக் கிடப்பதும், அச்சூழல் வாழ்வதற்கும், பயிரிடுவதற்கும் ஏற்றதாக அமையும் என்றும் அறிந்தான். அதனால் பயிரிடும் நிலங்களை உருவாக்கிட எண்ணினான். அடர்ந்த காடுகளை அழித்து மரங்களை வெட்டி சமப்படுத்தி திருத்திப் பண்படுத்தினான். விளை நிலங்கள் உருவானது. விளைநிலங்கள் 'மருதம்' எனப்பட்டது. பகுத்துண்ணும் பண்புடைய மக்கள் தங்களுக்கென பகுத்துத் தரும் தானியங்களைப் பங்கிட்டுத் தருவதற்குத் தலைவனை உருவாக்கிக் கொண்டனர்.

மருதநிலத்தில் தலைவன் பாதுகாத்தல் என்ற கொள்கையும், பெருக்குதல் என்ற கொள்கையும், பங்கிட்டு அளிக்கும் ஆட்சிப் பொறுப்பும் இணைந்து 'நிர்வாகம்' எனும் அரசு என்ற நிறுவனத்தை உருவாக்கியது.

'அரசு' என்பது மக்களுக்கு நாட்டைக் காக்கும் வகையில் கட்டுப்பாட்டை விதித்தது. அரசின் கட்டுப்பாட்டிற்குள் தொழில்கள் பகுக்கப்பட்டன.

இவ்வாறு குறிஞ்சி நிலத்தில் மலைநெல் பயிரிடும் முறை தொடங்கியது. மேய்ச்சலுக்கென சென்றபோது ஆங்கே பயிரிடும் முறைக்கு காடுகளை அழித்து நிலங்களை உருவாக்கும் முயற்சியும் அதன்வழி பயிரிடும் வழக்கமும் தொடர்ந்து; சமவெளிப் பகுதிகளிலும், ஆற்றுப்பாசன பகுதிகளிலும், பள்ளத்தாக்குகளிலும் தங்கி வாழ விரும்பிய மக்கள் ஒருங்கே முயன்று பயிரிடுதல் எனும் பயன் தேவையை, கோடலை அறிந்து கொண்டனர்.

காடுகளிலும் சமவெளிப்பகுதிகளிலும் உள்ள மரங்களைப் புதர்களை வெட்டி அழித்து விளை நிலங்களாக மாற்றி, விளைச்சல் தொழிலைப் பெருக்கி, விவசாயத் தொழிலை வளப்படுத்தினர். இவ்வாறு வாழ்வாதாரத்திற்கான உணவு, உடை, குடியிருப்பு, நிரந்தர வாழ்க்கை முறையமைத்தல் எனும் சொற்களோடு வாழ்ந்து வரும் மக்கள் தங்களின் வாழ்தலுக்கான தொழில்களை முறைப்படுத்திக்கொண்டனர்.

பண்டைத் தமிழகம் நிலவியல் அடிப்படையில் நானிலமாகப் பாகுபடுத்தப் பட்டிருந்தது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனும் நானிலத்திலும் நான்கு வகைப்பட்ட தொழில்முறை சார்ந்த சமுதாய அமைப்புகள் தோன்றி பலவாறாக வளர்ந்திருந்தன. அவற்றிற்கேற்ப அவர்களுடைய வாழ்க்கை முறைகளும் வேறுபட்டன. அவை வெவ்வேறு சமூகங்கள் கிளைத்தெழ காரணமாயின. நானிலத்தில் வாழ்ந்த மக்கள் தாங்கள் வாழ்ந்த நிலத்தின் உற்பத்தியாலும், செய்த தொழில்களாலும் பல சமூகங்களாக வேற்றுமைக்குள்ளாயின. வாழ்நிலப் பரப்புவழிச் சமூகங்களை நிலைக் களனாகக் கொண்டு தொடக்கக் காலத்தில் தமிழ்ச்சமுதாயம் தோன்றியது.

தமிழ்ச்சமூகம் வேட்டை முறையிலிருந்து ஆநிரை காத்தல், வளர்த்தல், வேளாண்மை செய்தல், பண்டமாற்று வாணிபம், கடல் வாணிபம், கடல் சார்ந்த தொழில்கள், அந்நிலத்தில் வாழும் நெய்தல் நில மக்கள் மீன், சங்கு என பலதரப்பட்ட பொருட்கள் பெருக்குவதற்கான வாணிபம் என வணிகமுறை உருவாதல் என்ற பரிணாமத்தை அடைந்துள்ளது என்பதை சமூகவியல் விவரிக்கும். உணவு சேகரித்தல் உள்ளிட்ட வேட்டை வாழ்க்கை முறை மலையும் மலைசார்ந்த இடங்களிலும், (குறிஞ்சி), வழக்குப் பெற்றிருந்தது. இந்த வேட்டை வாழ்க்கை முறை குறிஞ்சிப்பாடல்களின் முதற்பொருளாகவும், கருப்பொருளாகவும் இருந்தன. வேட்டை வாழ்க்கை முறையிலிருந்து மனிதன் கால்நடை வளர்ப்பு வாழ்க்கை முறைக்கு மாறினான், கால்நடை வளர்ப்பு ஆநிரை உடைமைச் சமூகமாகக் காடு சார்ந்த மேய்ச்சல் நிலங்களில் பரிணமித்தது. இந்த வாழ்க்கை முறையே முல்லைப் பாடல்களின் முதற்பொருளாகவும், கருப்பொருளாகவும் இருந்தன. ஆநிரை வளர்ப்பு வேளாண்மைக்கு வித்திட்டது. வேளாண் வாழ்க்கைமுறை மருதநிலத்தில் பரிணமித்ததும் அந்த வாழ்க்கை முறையே மருதப்பாடல்களின் முதற் பொருளாகவும், கருப்பொருளாகவும் இருந்தன, மருத நில வளர்ச்சி வருவாய், வணிக வாழ்க்கை அமையக் காரணமாயிற்று. கடல்வழி வணிகமும், நிலவழி வணிகமும் நெய்தல், பாலைப் பாடல்களின்[10] பின்புலமாயின.

இவ்வாறாக மனிதனின் இடப்பெயர்வும், அவனது தொடர் சிந்திக்கும் ஆற்றலும், உற்பத்திப் பெருக்கிக்கொள்ளும் சமூக வளர்ச்சியின் நோக்கமும், மலை, காடு, வயல், கடல் என நூற்றுக்கணக்கான தொழில்கள் வளர்ந்து நின்றன. அத்தொழில் முறையினை தமிழரின் அரிய கண்டு பிடிப்புக்களாக எதிர்கால சந்ததியினருக்கு விளக்கிச் செல்லும் வகையில் நான்கு வகை நிலத்தொழில்களும் அவற்றுள் ஆண் / பெண் தொழில்களும் குறித்து ஆய்வது இயலின் நோக்கம்.

**ஐவகை நிலத்து சிறப்புத் தொழில்கள்:**

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற திணைச் சமுதாயங்கள் இயற்கைச் சூழல்களை மையமாகக் கொண்டு அமைந்திருந்தவை.

மலையும் மலைசார்ந்த குறிஞ்சி நிலம் மலைவளத்தையும், புன்செய் வேளாண்மையையும், வேட்டைத் தொழிலையும் அடிப்படையாகக் கொண்டிருப்பவை. முல்லை நிலம் கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டது. புன்செய் நில வேளாண்மை என்றும் கூறலாம். மருதநிலம் உணவு உற்பத்தி வளர்ச்சிக்கான அடிப்படை ஆதாரமாகத் திகழ்ந்தது. விவசாயம் முழுமுதற் தொழிலாகவே இருந்தது. நெய்தல் நிலம் உப்பு, மீன் பிடி தொழில் அடிப்படையாக கடல் வாணிபத்திற்கு ஆதாரமாகத் திகழ்ந்தது. பாலைத் திணைக்குரிய தொழில் ஆறலைத்தல்.

பழந்தமிழ் மக்கள் தொழிலினை மேற்கொள்ளும் போது, அது நிலம் சார்ந்த தொழிலாக இருந்தாலும், பிற தொழிலாக இருந்தாலும், ஆண், பெண் எனும் இருபாலரின் சமப் பங்களிப்பு இருந்துள்ளமையைச் சங்க இலக்கியம் வழி அறிய முடிகிறது. பாலை நிலம் ஒன்று தனித்தில்லாமையின் அந்நிலம் சார்ந்த தொழில்குறித்து விளக்கும்முறை தவிர்க்கப்பட்டுள்ளது.

ஆனால் இப்பங்களிப்பில் ஆண் மேற்கொண்ட தொழில் மேம்பட்டதாக காணப்பெறுகிறது. பெண் கைக்கொண்ட உழைப்பு ஒரு பொருளாக 'அரசுஉருவாக்கத்திற்கு' மேம்பட்டதென பெரிதும் பேசப்படவில்லை.

குறிஞ்சி நில மக்கள் மலைச்சரிவுப் பகுதிகளையும் மலைமீது சமநிலமாயுள்ள பகுதியையும் விளைநிலமாக்குதல், மலை நெல், தினை எனும் பயிர் வகைகளை விதைத்தல், தினைப் புனங்களைக் காத்தல், தேனெடுத்தல், கிழங்கு வகைகளைப் பயிராக்குதல் விலங்குகளை வேட்டையாடுதல் முதலான தொழில்களில் ஈடுபட்டிருந்தனர்.

முல்லை நில மக்கள், சாமை விதைத்தல், வரகு விதைத்தல், கால்நடைகளை மேய்த்தல், பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் போன்றவற்றை விற்றல் முதலான தொழில்களில் ஈடுபட்டிருந்தனர்.

மருதநில மக்கள் வயல்களை உழுதல், நெல் விதைத்தல், நாற்று நடுதல், களை எடுத்தல், வயல்களுக்கு நீர் பாய்ச்சுதல், அறுவடை செய்தல், கடாவிடுதல் முதலிய பயிர்த் தொழில் தொடர்பான தொழில்களில் ஈடுபட்டிருந்தனர்.

நெய்தல் நில மக்கள் ஓடம், மிதவை படகு முதலியவற்றை அமைத்தல், மீன் பிடித்தல், உப்பை விதைத்தல், மீன்விற்றல், மீன்களை உப்பிட்டுப் பதப்படுத்துதல் அவற்றை விற்றல் முதலிய தொழில்களைச் செய்தனர்.

பாலைநில மக்கள், பிறநிலங்களிலுள்ள ஆநிரைகளைக் கவர்தல், வழிப்பறி செய்தல் முதலிய தொழில்களைச் செய்தனர்[11] என விளக்குவார் மா.இராசமாணிக்கனார்.

ஐவகை நிலத்து மக்களும் அவரவர் நிலம் சார்ந்து தொழில்களைப் பெருக்கினர். தொழில் இல்லையேல் வளம் இல்லை என்பதை விளங்கி கொண்ட இவர்கள் குறிஞ்சியில் தொடங்கி பாலை என எயிற்றியர் வாழும் வாழ்க்கை வரையில் உடலுழைப்பால் தொழில்நுட்பம் கண்டறிந்து அரிய கருவிகளைச் செய்தவர்கள் பழந்தமிழர்கள். இவர்கள் தமக்கான வாழ்தலை அந்தந்த நிலத்திற்கு ஏற்ப தகவமைத்துக் கொண்டவர்கள்.

நூற்றுக்கணக்கான தொழில்களும், நூற்றுக்கணக்கான தொழிற் கருவிகளும், நூற்றுக்கணக்கான தொழிலாளர்களும், ஆண், பெண் எனப் பாலின வேறுபாடு இன்றி தமது உழைப்பை தமிழ்ச் சமூகத்திற்கு அளித்திருக்கின்றனர்.

**பெண்களும் ஐவகை நிலத் தொழில்களும்:**

குறிஞ்சித் திணையில் தினை வேளாண்மை முக்கியமான இடத்தை வகித்தது. விதைத்தல், காத்தல், அறுவடை செய்தல் எனும் மூன்று நிலைகளில் காத்தல் தொழிலில் பெண்கள் ஈடுபட்டிருந்தனர்.

புன்செய் வேளாண்மையில் காவல் மிகுதியாக வேண்டப்படுவது. இக்காவல் பகற்காவல். இரவுக்காவல் என்ற இரு நிலைகளிலும் அமையும் பகற்காவல் பெரும்பாலும் பெண்களால் செய்யப்பட்டதைச் சங்க இலக்கியம் வழி அறிய முடிகிறது.

சங்க இலக்கியத்தில் தினைவரும் இடங்கள் என்பது என அறியப்பட்டாலும் ஆண், திணைக்காவல் புரிந்தமை 6 இடங்களில் மட்டுமே இடம் பெற்றுள்ளது. பெண்கள் தினைப்புனம் காத்தமை 29 இடங்களில் இடம்பெற்றுள்ளன. ஏனல் வரும் 43 இடங்களில் ஆண் காவல் 8 இடங்களிலும் பெண் காவல் 26 இடங்களிலும் பேசப்பட்டுள்ளன. ஆக 55 இடங்களில் பெண்கள் தினைப்புனம் காவலில் (நற் 389 –3,6,7) (நற் 147 : 2-5) (குறுந் 141:1-2) (நற் 206:4,7)[12] ஈடுபட்டமை பாடப்பட்டுள்ளது.

தங்கள் வாழ்க்கைக்கு அடிப்படைத் தேவையான உணவு உற்பத்தியில் தினையை விதைப்பதும், அதைக் காப்பதும் அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்தனர் குறிஞ்சி மக்கள். இவ்வடிப்படையான உணவுப் பொருள் தேடலில் பெண்ணின் பங்களிப்பு சிறப்பானதாக அமைகிறது.

விதைத்த நெல்லினை பறவைகளிடம் இருந்தும், விலங்குகளிட மிருந்தும் காத்து அரணில் சேர்த்து பெரும் பங்காற்றியுள்ளனர் (குறிஞ்சிப் 35–39) பெண்கள். தினைகாத்த பெண்கள் கதிரவன் மறையும் வேளையில் மீண்டு வந்ததாக குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகிறது.

நாள் முழுவதும் தினைப்புனத்தைப் பெண்கள் காவல் செய்திருந் தமையை அறியமுடிகிறது. அவ்வாறு காவல் செய்த தினையினைக் குற்றி அவற்றை பதர்களில் இருந்து பிரித்தெடுக்கும் தொழிலினையும் (குறிஞ்சிக் கலி 4) அவர்கள் மேற்கொண்டிருந்தனர்.

நல்ல பெண்கள் நாணத்தால் தலைகவிழ்வது, போலத் தினைப் பயிரிலே கதிர்கள் முற்றிதலை சாய்ந்துள்ளன. அவற்றை உருவிச் சந்தனமர உரலிலே இட்டு, யானைத் தந்தத்தாலான உலக்கையைக் கொண்டு குற்றினர். மாறிமாறி உலக்கையை உயர்த்தி நமக்கு நோய் செய்தவனுடைய மலையைப் பாடற்பொருளாகக் கொண்டு போற்றி, தலைவி இசைகிறாள் இருவரும் பாடிப்பாடித் தினையைக் குற்றுகின்றனர் என்று கபிலர் கூறுகிறார்.

யானைக் கொம்பினை உலக்கையாகவும், சேம்பின் இலையை முறமாகவும் கொண்டு மூங்கில் நெல்லைப் பாறை உரலிலே பெய்து பாடிக்கொண்டே சங்ககாலப் பெண்கள் நெல்லைக் குற்றினார்கள் என்று குறிப்பிடுகிறார் (குறிஞ்சி. கலி. 5:1–4) குறிஞ்சிப் பெண் பல்வேறு தொழில்களில் தங்களை இணைத்துக்கொண்டிருந்தமையைக் காண முடிகிறது.

**தினைகாத்தல்:**

தினை விளையும் மலைப்பக்கத்தில் முதிர்ந்த தினைகளைத் திண்ண வரும் கிளிகளை குறமகளிர் ஓட்டுவர். இதனை,

> **"தினை விளை சாரற் கிளி கடி பூசல்**
> **பிணிப் பூ அவரைக் குரூஉத் தளிர் மேயும்**
> **ஆமா கடியும் கானவர்".** [13]

எனும் வரிமூலம் அறியலாம். இதைத் தவிர அவரையினைத் தின்னும் ஆமாவையும் கானவர் ஓட்டுவர் என்று இருபாலரும் செய்யும் வேலை சுட்டக் காணலாம்.

**புள்ளினம் ஓட்டுதல்:**

> **"மருதம் சான்ற மலர்தலை விளைவயல்**
> **செய்யுள் நாரை ஒய்யும் மகளிர்"** [14]

வயல்களில் உலவும் நாரைகளை ஓட்டும் பெண்கள் தம் நெல் வயல்களைக் காத்திருக்கின்ற தொழிலினையும் அறியமுடிகிறது.

மகளிர் தினைப்புனம் காப்பதைத் தம் தொழிலாகக் கொண்டனர். அவர்கள் கிளி (மலைபடு. 329, குறிஞ்சி. 43–44, அகம். 28:9–12, ஐங். 22:3, 260:3, 283:3, 285:3, (குறுந் 141:1–2, 142–2, 217:1, 291:2, 360–8, 333:3, 346:4)) களிறு (கலி. 48:6) முதலியனவற்றை விரட்டி தம் பணியைச் செய்தனர் என்பதை,

> **ஏனல், இனக்கிளியாம் கடிந்து ஒம்பும் புனத்து அயல்** [15]
>
> **"பாடிப்பாயும் பசுங்குரல் ஏனல்"** [16]

எனும் வரிகள் விளக்கிச்செல்லக் காணலாம்.

கதிரவன் மறைகின்ற வரையும் தினைப்புலத்தில் தங்கி புள்ளினங் களிடமிருந்து தினைக்கதிர்களைப் பாதுகாத்தமை புலனாகின்றது, மேலும், தானியத்தைக் கதிரிலிருந்து பிரித்துப் பதப்படுத்தும் பணியினையும் செய்துள்ளனர் (நற். 344:9–11) என்பதைக் காணலாம்.

> **"ஏனல்அம் சிறு தினை காக்கும் சேணோன்"** [17]

குறவனும் பரண் அமைத்து தினைபுனம் காத்த செய்தியினைக் காணலாம். ஆண் பெண் இருவரும் ஒரே தொழிலை பாகுபாடின்றிச் செய்து வந்தனர்

என்பதை அறியலாம். ஆயினும், பெண்களின் தொழில் திறம் மேம்பட்டுப் பேசிடாத நிலையானது பிந்தைய பதிவுகளிலும் பெண்கள் தொழில் பகுப்பில் ஆண்களைப்போல் சமன்பாட்டு நிலையில் இல்லாததுபோல் காட்சிப் படுத்தப்பட்டிருக்கிறது.

**முல்லை:**

முல்லை நிலம் கால்நடைப் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதை அறிவோம். அப்பொருளாதாரத்தில் பெண்களின் பங்கு முக்கியமானதாகும். கால்நடைகளில் இருந்து பெறக்கூடிய பால், மோர், தயிர் என மூலதன பொருட்களை உருவாக்குபவளாகவும், அவற்றை விற்று, வாழ்வாதாரத்திற்கான கால்நடைகளை விலையாக பெற்றனர் என்பதன் வழி (பெரும். **155–162**) இவர்கள் தம் தொழில் திறனை அறியமுடிகிறது. விடியற்காலத்தில் பறவைகள் எழும்போதே எழுந்து தன் கடமைமேற் சென்று புலிபோல் ஆரவாரம் உடைய மத்து ஆரவாரிக்குமாறு கயிற்றை இழுத்து வலித்து தயிரைக் கடைந்து வெண்ணெய்யை எடுத்து, மோர்ப்பானையைச் சுமட்டில் வைத்து ஊர்களில் அன்றாடம் விற்று வருபவள், அவ்வாறு விற்றதால் வந்த நெல் முதலியவற்றால் தம் சுற்றத்தார் எல்லாரையும் உண்ணும்படி செய்தவள் ஆய்மகள்.

**"அளைவிலை உணவின் கிளை உடன் அருத்தி"** [18]

இதன்வழி தாம் மேற்கொண்ட தொழிலின் வழி சுற்றத்தவரையும் தம் இல்லினையும் பேணிக்காப்பவளாக ஆய்மகள் இருந்தமை புலப்படுகிறது.

மேலும்,

**"நெய் விலைக் கட்டிப் பசும் பொன் கொள்ளாள்**
**எருமை, நல் ஆன், கரு நாகு பெறூஉம்"** [19]

ஆய்மகள் விற்கும் நெய்க்கு ஈடாகப் பொன் பெறாமல் எருமைகளையும், பசுக்களையும், கன்றுகளையும் பெற்றாள். இதன்வழி நெய்க்கு ஈடாகப் பொன்னைப் பெறாமல் கால்நடைகளைப் பெறுதல் என்பது மேலும் தம் உற்பத்தியைப் பெருக்கும் செல்வங்களைப் பெறுவதன் வழி அவள்தம் வாணிப நோக்கினை அறியமுடிகிறது.

**மருதம்:**

அரசிற்கு அரசனின் பாதுகாப்பிற்கு வாணிபத்தை போலவே விவசாயம் மூலமாகவும் பொருள்வளம் சேர்த்துள்ளனர்.

வயலும் வயல் சார்ந்த மருதநிலத்தில்,

**"சாலி நெல்லின், சிறைகொள் வேலி,**
**ஆயிரம் விளையுட்டு ஆக"**[20]

உழத்தியர் தம் உடல் வளைத்து அரிவாளால், விளைந்து முதிர்ந்த நெற்கதிர்களை அறுத்துக் கதிர்க் குதியலை மையாக அடுக்கி வைப்பர். குவியல்களைப் பின்னர் கதிரடித்து நெல்லாக்கி அதனையும் மலைபோல் குவித்து வைப்பர். வீட்டில் நெல்லைச் சேமித்து வைக்கும் குதிர் போன்றவற்றில் இடமில்லாமையால் நெல் மூட்டைகள் எங்கும் குவிக்கப்பட்டுக் கிடந்தன. ஒரு வேலி நிலம் ஆயிரம் கலம் நெல்லை விளைவிக்கும் வளத்தை உடையது மருதநிலம்.

இதன்வழி, மருதநிலத்திலும் விளைந்த நெற்கதிர்களை நெல்லாக்கி மூட்டைகளாக்கிக் குவித்தனர் உழத்தியர் என்பது புலப்படுகிறது.

**அறுவடைத் தொழில்:**

அகன்ற இடப்பரப்பை உடைய வயல் வெளிகளில் முற்றிய நெற்கதிரை உழவர் மகளிர்கள் அறுவடை செய்கின்றனர். இதனை,

**"அறாஅ யாணர் அகன்கண் செறுவில்**
**அருவி ஆம்பல் நெய்தலொ பரிந்து**
**செறுவினை மகளிர்....."** [21]

எனும் வரிமூலம் அறியலாம்.

**உழவுத்தொழில்–நெல்குற்றல்: (பெண்)**

**"உரன்கெழு தோன் பகட்டு உழவர் தங்கை**
**பிடிக் கை அன்ன பின்னு வீழ் சிறு புறத்துத்**
**தொடிக் கை மகடூஉ மக முறை தடுப்ப**
**இருங் காழ் உலக்கை இரும்பு முகம் தேய்த்த**
**அவைப்புமான் அரிசி அமலைவெண் சோறு"** [22]

எனும் வரிகளால் பல ஆண்டுகளாக உழவுக்குப் பயன்படுத்தப்பட்ட காளைகளையுடைய உழவர்களின் சகோதரி போன்று காணப்படும் பெண் யானைகளின் கையை ஒத்த கரங்களை உடையவளும், நடந்தால் புரளும் சிறிய முதுகினையும், வளையல் அணிந்த கையினையும் உடைய பெண்கள் முறையாகக் குத்திய நெல் அரிசி என்று இயந்திரம் அல்லாத காலங்களில்

குடும்பத்தாருக்கும் நெல்குற்றும் தொழிலினை சிறுபாணற்றுப்படை விளக்கிச் செல்கிறது.

பயிர்த்தொழில் தொடங்கும் முன் நிலத்தை நன்றாக உழுது உரமிட்டு, நாற்றுகளை நன்கு அழுத்தி நட்டனர். நாற்று முடிகளை நடுவதற்கு உழத்தியரை அழைத்துச் சென்றதனை நற்றிணை **(60)** புலப்படுத்துகின்றது. அறுவடை செய்யத் தொடங்கும் முன் வயல்களில் கூடமைத்து வாழும் பறவைகளை விரட்டுவதற்காக தண்ணும்மை எனும் இசைக் கருவியைப் (நற் **850:1–2)** பயன்படுத்தினர்.

**நெய்தல்:**

கடலும் கடல்சார்ந்த நெய்தல் நிலத்தின் முதன்மையான தொழில் மீன்பிடித்தலும், உப்பு விளைவித்தலும் ஆகும்.

பரதவர் பிடித்து வரும் மீன்களைப் பரதவகுலப் பெண்டிர் ஊருக்குள் எடுத்துச் சென்று விற்று, அதற்கு ஈடாகத் தமக்கு தேவையான பிறபொருள்களைப் பெற்று (அகம் **320**:**1–4)** வந்தனர்.

நள்ளிரவில் சென்று விடியலில் கொண்டு வந்த வாளை மீன்களை பாண்மகள் நெடிய கொடிகள் பறக்கும் கள் மிக்க தெருவில் பழைய செந்நெல்லை வாங்க மறுத்துக் கழங்கு போன்ற பெரிய முத்துக்களையும், அணிகலன்களையும் பெற்றதை அகநானூறு (126:7-12) விளக்கி நிற்கிறது.

மேலும் பாண்மகள் வரால் மீன் கொண்டு இல்லக்கிழத்தி பழைய நெல்லைக் கொடுத்தமையையும், கெளுத்தி மீன் பெய்த வட்டி நிறைய அரிகாலில் விதைத்துப் பெறும் பயறுதானியங்களைக் கொடுத்தமையும், சங்கப்பாக்கள் (ஐங் **48**:1-3, 47:1-3) வழி அறியமுடிகிறது.

**மீன்விற்றல்:**

பரதவர் பிடித்துவந்த மீன்களை விழாக்கோலம் பூண்ட வீதிகளில் பரதவ மகளிர் விலை (அகம் **320:1–4)** கூறி விற்றனர்.

தெருக்கள் தோறும் சென்று விற்று எஞ்சிய மீன்களை உப்பிட்டு அவற்றை வெண் மணற் பரப்பில் இட்டு வெயிலில் உலர்த்தியுள்ளனர். அங்ஙனம் வெயிலில் உலந்து கொண்டிருந்த மீன்களைக் கவர வரும் புள்ளினங்களையும் புன்னை மர நிழலிலிருந்து காவல் செய்த தன்மையினை சங்கப் பாக்கள் (அகம் **201:1–3, 80:4–6, 300:1–2,** குறுந். **320:1–4,** நற். **63:1–2, 45:6–7)** சுட்டிச்செல்வதைக் காணலாம்.

பரதவர் மட்டுமின்றி பாண்மகளும் மீன்பிடித் தொழிலில் ஈடுபட்டிருந் தமையை,

**“நாண்கொள்நுண் கோலின் மீன்கொள் பாண்மகள்**
**தான்புனல் அடைகரைப் படுத்த வராஅல்”** [23]

கயிற்றினைக் கொண்ட நுண்ணிய தூண்டிற் கோலால் மீன்பிடிக்கும் பாணரது மகள் புனலை அடுத்த கரையில் வரால் மீனைப் பிடிப்பாள் என்பதன் வழி அறியமுடிகிறது.

நெய்தல் நில மகளிரின் மற்றொரு தொழில் உப்பு விற்றல். உப்பு வணிகர் உமணர், உமணப் பெண்டிர் என்ற சொற்களால் குறிப்பிடப்படுகின்றனர்.

உமணர்கள் உப்பு விற்கச் செல்கையில் தம் குடும்பத்தோடு செல்வர். (நற். **138, 183, 354**) அவ்வாறு செல்லும்போது உமண மகளிர் உப்பு வண்டிகளை ஓட்டிச் சென்றமையினைப் பெரும்பாணாற்றுப்படை **(58–66)** விளக்கி நிற்கின்றது.

பூட்டிய எருதுகளை முதுகிலேயே அடித்து அதனை குழந்தையுடன் அமர்ந்திருக்கும் உமணர் மகள் வண்டியியை ஓட்டினாள் வலிமையான உடலுடன் தழைகள் வைத்துக் கட்டப்பட்ட படலை மாலைகளை அணிந்திருந்த திண்மையான தோள்களையும், வலிமையான உடலையும் கொண்ட உமணர் சிறிய துளைகளை உடைய நுகத்தில் பெரிய கயிற்றால் எருதுகளைப் பிணித்திருக்கும் உப்பு வண்டிகளின் அச்சு முறியாமல் பக்கத்தில் காத்த வண்ணம் செல்வர். உப்பின் விலையைக் கூறி பல எருதுகளை உடைய உப்பு வணிகர் ஊர்கள்தோறும் செல்வர். உமணப் பெண்டிர் உப்பு வண்டியினை ஓட்டிச்சென்றமையினையும், உமணர் பாதுகாவலாக சென்றமையினையும் அறியமுடிகிறது.

உமணப் பெண்டிர் தாம் மட்டும் ஊருக்குள் சென்று உப்பினைக் கூவி விற்றதை,

**“சில்கோல் எல்வளை தெளிப்ப வீசி**
**நெல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்**
**சேரி விலைமாறு கூறலின்”** [24]

அகநானூறு **(390:8–9)** பகருகின்றது. உப்பிற்கு விலையாக, அதற்கு ஈடாக நெல்லினை கொடுங்கள் என உப்பினை விற்பதைக் காட்சிப் படுத்துகிறது அகநானூறு.

**உமட்டியர்:**

உமணர்கள் உழாது விளைவித்து குன்றுபோல் குவிந்து கிடக்கும் வெண்கல் உப்பினை வண்டிகளில் ஏற்றிக்கொண்டு உமணரோடு வண்டிகளில் ஏற்றிக்கொண்டு உமட்டியரும், குழந்தைகளும் ஊர் ஊராகச் சென்று,

> **"நெல்லும் உப்பும் நேரே ஊரீர்**
> **கொள்ளீரோ"** [25]

உப்பினை விற்ற நிலையினையும், உப்பினை விற்று பெற்ற நெல்லினைக் குற்றிச் சோறாக்கித் தந்தைக்குக் கொடுத்த செய்தியினையும் (அகம் 60:3–6), இவைத் தவிர எறும்பு சேர்ந்த அரிசியைக் கொண்டு வந்து தங்கள் உணவினை அமைக்கும் இயல்புடையவர் என்பதையும், (அகம் 377:2–3) அகநானூறு சுட்டிச் செல்லக் காணலாம்.

**பெண் எயிற்றியர்**

**புல்லரிசியை எடுத்தல்**

எயிற்றி ஒருத்தி மான் தோல் படுக்கையில் பிள்ளையுடன் முடங்கியுள்ளாள். அவளைத் தவிர மற்ற எயினப் பெண்டிர், பூண் கட்டிய திரண்ட சீரிய கோலையுடைய உளி போன்ற வாயையுடைய பாரைகளால் கீழ் மேலாக ஆடும்படி குற்றினர். (பாரையை எடுத்துச் சென்று மண்ணைக் குத்திக் கீழ் மேலாகும்படி செய்து அங்குக் கிடைக்கும் தினை அரிசியை எடுத்துச் சென்றனர்) கரிய நிலமான சுரம்பை நிலத்தில் உண்டாகும் புழுதியைப் புரட்டி அதில் உள்ள புல் அரிசியை வாரி எடுத்தனர். (புல்லரிசியை எறும்பு எடுத்துச் சென்று தன் புற்றுக்குள் வைக்கும் இயல்புடையது. அத்தகைய புல்லரிசியை எயிற்றியர் மண்ணைக் குத்திக் கொண்டனர்.) வெண்மையான பற்களையுடைய எயினப் பெண்டிர். அதைப் பாவைமான் கட்டிய தேய்ந்த (மானைக் காட்டி மானைப் பிடித்தற்காகப் பழக்கி வளார்க்கப்பட்ட மான்) அடிப்பகுதியை உடைய விளாமரத்தின் நிழல் முற்றத்தில் தோண்டப்பட்டுள்ள நிலவுரலில் (நிலத்தில் தோண்டப்பட்ட உரல். இதில் குற்றுவதற்கு குற்றுலக்கையே தகுதி) அந்தப் புல்லரிசியை இட்டனர். உலக்கையால் குற்றினர். (பெரும் 89–97) எயிற்றியர் கொண்டு வந்த புல்லரிசியை சமைத்து பாணர் சாதியினருக்கு உணவு படைத்த செய்தி (பெரும் 97–105) அறியமுடிகிறது.

**உணவுத் தொழில்:**

முல்லைக் காட்டில் வாழும் எயினர் குல மங்கையர் தாம் சமைத்த இனிய புளிங்கறி இட்ட சோற்றை ஆமானின் இறைச்சியுடன் தம்மை நாடி வரும் இரவலருக்கு அளிப்பர். இதனை சிறுபாணாற்றுப்படை **(175–177, 237–247)** மூலம் அறியமுடிகிறது.

**நெசவுத் தொழில்–பெண்:**

கணவனை இழந்த மகளிர் பஞ்சினை நூலாக்கும் பொறுமை மிகுந்த பணியினைப் புரிந்துள்ளனர். இதனை,

> **"ஆளில் பெண்டிர் தாளின் செய்த**
> **நுணங்கு நுண்பனுவல் போலக் கணக்கொள**
> **ஆகுமழை தவழும் கோடு உயர் நொடுவரை"** [26]

என்ற பாடல் மூலம் உணரலாம்.

**ஏவற்பெண்டிர்:**

> **"இழை அணி வனப்பின் இன்நகை மகளிர்**
> **போக்கு இல் பொலங் கலம் நிறையப், பல் கால்**
> **வாக்குபு தரத்தர வருத்தம் வீட"** [27]

மன்னனிடம் வரும் இரவலர்களின் வழிநடையால் உண்டான வருத்தம் போகும்படி கள்ளை ஒட்டற்ற பொன்னால் செய்த வட்டில் நிறையும்படி பல முறையும் தருபவராக ஏவல் பெண்டிர் இருந்துள்ளமைக் காணலாம்.

**புலைத்தி:**

ஆடைகளில் உள்ள அழுக்கைப் போக்கும் தொழிலைச் செய்பவள். இவர்கள் களர் நிலத்தில் ஊற்றுக் கிணறுகளைத் தோண்டி அவர்கள் துணிகளைத் வெளுத்தனர் என்பதனை,

> **"களர்ப்படு கூவல் தோண்டி நாளும்**
> **புலைத்தி கழீஇய தூவெள் அறுவை"** [28]

ஔவையார் பாடுகிறார். ஆடை வெளுக்கும் பெண்டிர் (புலைத்தி) தமக்குத் துணையாக தம் புதல்வரையும் ஈடுபடுத்தியதாக;

> **"பூக் கண் பறைந்த புன்தலைச் சிறாஅரொடு**
> **அவ்வரி கொன்ற கறை சேர் வள் உகிர்ப்**

**பசை வீரல் புலைத்தி நெடிது பிசைந்து ஊட்டிய**
**பூந் துகில் இமைக்கும்...”** [29]

**“பசை கொல் மெல் விரல், பெருந் தோள் புலைத்தி**
**துறை விட்டன்ன தூ மயிர் எகினம்”** [30]

அகநானூறு உரைக்கக் காணலாம்.

**....ஊரவர்**
**ஆடை கொண்டு ஒலிக்கும் நின் புலைத்தி** [31]

ஊரவர்களின் ஆடையை சேர்த்து வெளுக்கும் தொழிலை செய்கின்றனர்.

பூ வேலைப்பாடுகளுடன் விளங்கிய ஆடைகளை உவர் மண்ணில் ஊறவைத்து, சலவை செய்து சோற்றுக் கஞ்சியில் (குறுந் **330:1–2**) தோய்த்து இரவுப்பொழுதில் உலர்த்தியும் பெண்கள் தம் தொழில்களை செய்துவந்தனர் என்பதை நற்றிணை **(90:3–4)** சுட்டக் காணலாம்.

**கிடைச்சு மூங்கில் முதலியவற்றால் பணி செய்யும் தொழிலாளர்**

கோரை, கிடைச்சு மூங்கில், பனம்போழ், நார், முதலியவற்றைக் கொண்டு கூடை, முறம், கட்டில் அமைத்த தொழிலாளர்கள் இருந்தனர்.

இதனை,

**“மாதர்ப் புலைத்தி விலையாகச் செய்தது ஓர்**
**போழின் புனைந்த வரிப் புட்டில்”** [32]

புலைத்தி விற்பது ஒரு கூடையாகும். அது பனங்குருத்தின் வகிரால் மூடிய தொழிலையுடைய புட்டில் எனவருவன மேலதற்குச் சான்றாகும்.

**பூவிற்கும் மகளிர் (பழையர் மகளிர்):**

நீண்ட நிலையான அடிப்பகுதியைக் கொண்ட சிவந்த தளிர்களையுடைய இலுப்பை மரங்கள், அவற்றில் யானைக் கொம்பினைக் கடைந்தாற் போன்ற வெண்மையான பூக்களைக் கரடிக் கூட்டம் பறித்துத்தின்னும். அவை உண்டதுபோக எஞ்சியவற்றை எயினர் மகளிர் மூங்கிற் குழாய்களில் அடைத்துக் குன்றின்கண் உள்ள சிற்றூர்களில் உள்ள தெருக்களில் சுற்றி சுழன்று விற்றுத் திரிந்தனர் என்பதை, அகம் **(331:1–8)** பதிவு செய்துள்ளது.

உழத்தியர்கள் வயல் வேலைகளைச் செய்வதோடு, வீதிகள்தோறும் சென்று பல்வகை மலர்களை விற்றும் பொருள் தேடியும் (நற் 118:8–11, 97:6–8) வாழ்ந்தனர்.

**பண்டங்கள் விற்பவர்கள் பெண்:**

**"பல்வேறு பண்ணியம் தழிஇத் திரி விலைஞர்"** [33]

வீதி வீதியாகக் சென்று பண்டங்கள் விற்பவர்களும் இருந்துள்ளனர். இவர்களைத் திரிவிலைஞர் என்கிறது காஞ்சி. தொல் முது பெண்டிர் வீடு வீடாகச் சென்று பல பொருள்களை விற்றுள்ளனர். இதனை,

**"......... தொல் முது பெண்டிர்**
**காமர் உருவின் தாம் வேண்டு பண்ணியம்**
**கமழ் நறும் பூவொடு மனைமனை மறுக"** [34]

முதுப்பெண்டிர் காதலர் காதலியர் விரும்பும் பொருள்களைக் கலங்களில் ஏந்தி நறுமணப் பூவுடன் வீடுதோறும் போய் விற்றனர்.

**பாசறை–மன்னனின் தனியிருக்கை – காவல் புரியும் மங்கையர்:**

பாசறையில் மன்னனின் தனியிருக்கையில் இருந்தனர்.

**"...............ஒள் வாள்**
**விரவு வரிக் கச்சின் பூண்ட மங்கையர்"** [35]

குறிய வளையலை அணிந்த முன் கையையும், கூந்தல் அசைகின்ற அழகையும், சிறிய முதுகினையும் உடைய, இரவைப் பகலாக்கும் ஒளியையுடைய வாளை கச்சுடன் சேர்த்துக் கட்டிய மங்கையர் நெய் காலும் திரிக் குழாயை உடையவராய் நீண்ட திரிவை இட்டுப் பாவை விளக்குகள் அவியுந்தோறும் கொளுத்தியபடி இருந்தனர்.

அரசனுக்கு என்று சமைக்கப்பட்ட இல்லத்தில் (பாசறை தனியிருக்கை) விளக்குகள் (பாவை விளக்கு) இருந்தன. அவை அவியுந்தோறும் அவற்றை ஏற்றினர். அவர்கள் காவலையும் மேற்கொண்டவராய் இருந்தனர். அதனால் வாளை கச்சுடன் சேர்த்துக் கட்டி இருந்தனர். இவ்வாறாக பெண்களின் தொழில்கள் சங்க இலக்கியத்தில் ஆங்காங்கே சுட்டப்படும் முறையினைக் காணலாம். ஆனால் ஆண்கள் நாட்டு வளத்திகு ஆற்றிய தொழிற் பங்களிப்பினைப் போன்று பெண்களும் இணைந்து தம் தொழில்களை போர்க்களத்தில் பணிப் பெண்களாவும், முறம்கொண்டு புலியெறிந்து தம்திறம் காட்டிய தன்மையும், அரசுக்கொள்கையில் போர் அறமாக பேசப்படாமலேயே போனது.

**கள் தயாரித்தல்–விற்றல்:**

ஒட்டகம் உறங்கிக் கிடந்ததைப் போன்ற கடலால் கொணர்ந்து ஒதுக்கப்பட்ட அகில் மரக்கட்டையைத் தீயினால் எரித்துப் பெரிய தோளையும், களங்கம் இல்லாத முகம், வேல் போன்ற பார்வை என்றும் இவற்றை உடைய நுளைச்சியரால் அரிக்கப்பட (உண்டாக்கிய) களிப்பு மிக்க கள்ளைப் பரதவர் இரவலர்களுக்கு அளிப்பர். அவர்களும் தம் விறலியரோடு உலர்ந்த குழல் மீன் ஆட்டிறைச்சியை உண்டு மகிழ்ந்ததை (சிறுபாண் 55–56) அறியலாம். மகளிர் கள் உண்டாக்கிய செய்தியினை முன் வைக்கின்றது இப்பாடல்.

உழைப்பின் களைப்பினைப் போக்குவதற்காக தொழில்கள் பல புரிந்தோர் அருந்திய கள்ளினைப் பெண்கள் வடித்துள்ளனர். அப்பெண்டிரை அரியற் பெண்டிர் (அகம் 157:1) எனவும், அரியலாட்டியர் (அகம் 245:9) எனவும் அழைக்கப்பட்டுள்ளதை அகநானூற்றில் அறியலாம்.

அரியற் பெண்டிர் இடையில் சுமந்து வந்த பானையிலிருந்த கள்ளினை வாங்கிக் குடித்த வீரர் போர் செய்ய ஆரவாரிப்பர் எனப் போர்க் களத்தில் குறிப்பிட்ட தூரத்திலிருந்து போர்வீராக்கு கள் கொடுத்த செய்தியினை,

**“அரியற் பெண்டிர் அல்குல் கொண்ட**
**பகுவாய்ப் பாளைக் குவிமுனை சுரந்த**
**அரிநிறக் கலுழி ஆர மாந்தி**
**செருவேட்டு சிலைக்கும் செங்கண் ஆடவர்”** [36]

அகப்பாக்கள் வழி அறியமுடிகிறது.

குறமகள் சமைத்த கள்ளினைக் குறைவில்லாமல் குடித்த செய்தியினை மலைபடுகடாம் பின்வருமாறு கூறுகிறது.

**“வேய்ப் பெயல் விளையுள் தேக் கட் தேறல்**
**குறைவு இன்று கருகி நறவு மகிழ்ந்து வைகறை”** [37]

மூங்கில் குழாய்க்குள் பெய்தலையுடன் முந்திய தேனால் செய்த கள்ளின் தெளிவைக் குறையாமல் அருந்தினர். பின்பு நெல்லால் சமைக்கப்பெற்ற கள்ளை விடியற்காலையில் மகழ்ந்து உண்டனர். இதிலிருந்து மூங்கில் குழாய்க்குள் தேனை வார்த்து முதிரும்படி செய்து உண்ணும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது. இத்தகு பெண்களை பழையர் (மலைபடு 459) என்கிறது மலைபடுகடாம்.

பண்டைத் தமிழரால் வகுக்கப்பெற்ற தொழில்வகைப் பிரிவில் வணிகத் தொழிலும் ஒன்று. உழவுத்தொழிலை அடுத்துச் சிறப்பு மிக்கதும், இன்றியமையாததுமாகும் வணிகத்தொழில்.

இவ்விருவகை தொழில்களை;

**"..................... விழுச் செல்வத்து**
**இருவகையான் இசை சான்ற**
**சிறுகுடிப் பெருந்தொழுவர்"** [38]

என மதுரைக்காஞ்சி கூறுகிறது.

நாட்டின் முன்னேற்றத்திற்கும் பொருளாதார வளர்ச்சிக்கும் இன்றியமையாது வேண்டப்படும் தொழில்கள் உழவு, வாணிகம் எனும் இரண்டுமாகும். உழவினாலும், வணிகத்தாலும் உயர்ந்த நாடு, நாகரிகத்தாலும், பொருளாதாரத்தாலும் முன்னேற்றமடைந்த நாடாகும் என்பர்.

அத்தகு சிறப்பு வாய்ந்த உழவு மற்றும் வாணிகத் தொழிலில் 'பெண்' தனக்கான பங்களிப்பைச் செய்திருந்தமையைச் சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது.

தினைபுனம் காத்தல், மோர், வெண்ணெய் விற்றல், அறுவடை செய்தல், நெல் குற்றல், மீன் பிடித்தல் விற்றல், உப்பு விற்றல், புல்லரிசி எடுத்தல் என தம் திணை சார்ந்த தொழில்களிலும், பிற தொழில்களிலும் ஆணுக்கு நிகராக சமூகப் பொருளாதார முன்னேற்றத்திற்கு தம் உழைப்பினை வழங்கியவர்கள் பெண்கள்.

**ஆணின் தொழில்முறைப் பங்களிப்பு:**

**தேன் எடுத்தல்:**

குறவர்கள் மலையிலும், உச்சி பாறைகளிலும் உள்ள இனிய தேனை எடுக்கும் தொழிலினை (அகம். **322:12, 78:7**) மேற்கொண்டிருந்தனர். ஏறுவதற்கு அரிய மலையில் ஏறி இனிய தேனை அழிக்கும் நாடன் எனத் தலைவி கூறுவதன் மூலம் இத்தொழிலினைப் (ஐங் **272:2–2**) பற்றி அறிய முடிகிறது.

கானவர்கள் தேனீக்கள் திரட்டி வைத்த தேனை அழித்து உண்பர் இதற்கு கண் ஏணியினைப் பயன்படுத்தினர் (மலைபடு **316–318**) கண் ஏணியாவது கணுக்களில் அடியிட்டு ஏறுமாறு நீண்ட மூங்கிலில் செய்யப்படும் ஒருவகை ஏணி. இதனை வினைஞர்கள் செய்துள்ளனர். குறவர்கள் தம் உணவுகளுள் ஒன்றான கிழங்கினையும் (ஐங் **208:1–2, 270:1**) அகழ்ந்தெடுக்கின்றனர்.

கோவலர்கள் மழை பெய்தமையால் தம் எருமை, பசு, ஆடு ஆகிய மூவினங்களை வேற்று மேட்டு நிலத்தில் மேயவிட்டனர். இதனை,

**"…. கொடுங் கோர் கோவலர்**
**ஏறுடை இன நிரை வேறு புலம் பரப்பி"** [39]

எனும் வரி மூலம் அறியலாம்.

**உழவுத் தொழில்:**

நாட்டின் உயிர்நாடியாக விளங்கிய உழவுத் தொழிலை விரும்பிச் செய்து உலகத்தவர்க்குத் தண்நிழலாய்த் திகழ்பவர்கள் உழவர்கள். காவிரிபூம் பட்டினத்து எல்லையில் இவர்கள் வாழ்ந்தனர். அவர்கள் வாழ்ந்த வாழ்க்கையினைப் (பட்டினப். 199–205) பின்வருமாறு கூறுகிறது,

கொலை செய்வாரை அத்தொழில் செய்யாமலும், களவு செய்பவரை அத்தொழில் செய்யாமல் விலக்கியும், தெய்வம் போற்றியும், அவியுணவைத் தேவர்க்கு அளித்தும் நல்ல பசு எருதுகளைக் காத்தும் நான்கு மறையில் வல்லாரின் புகழைப் பரவுமாறு செய்து, இவ்வாறு பிறருக்குக் குளிர்ந்த நிழலாக அமையும் வாழ்க்கையை உடையவர் உழவுத் தொழிலை விரும்பும் வேளாண் மக்கள்.

உணவிற்கு அடிப்படையான உழவுத்தொழிலினை மேற்கொண்ட உழவர்களின் இல்லத்தினைச் சொல்லப் புகும் ஆசிரியர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

**"ஏணி எய்தா நீள் நெடு மார்பின்**
**முகடு துமித்து அடுக்கிய பழம்பல் உணவின்**
**குமரி மூத்த கூலி ஓங்கு நல்இல்"** [40]

பழைய நெல் நிறைந்து அழியாத தன்மை உடைய முதிர்த்த கூடுகள் உயர்ந்து நின்ற நல்ல இல்லங்கள் இருந்தமையும், அவற்றைப் பாதுகாக்கும் பணியைச் செய்தவர் பெண்கள் என்பதையும் ஈண்டு காணலாம்.

**"அறைக் கரும்பின் அரி நெல்லின்**
**இசைக் களமர் இசை பெருக"** [41]

நாரைகள், மருத நிலத்தில் கரும்பை அறுப்பவரும் நெல் அரிபவரும் ஆகிய உழவரின் பாட்டொலிக்கு அஞ்சி அவ்விடத்தினின்று அகன்று விடும். மேலும் உழவர்கள் அறுத்த நெற்கதிர்கள் மலையாய் குவிந்து கிடக்கின்றன. அவ்வாறு குவிந்த நெற்கதிர்களை 'மேரு மலை' என்று கூறுவர். அவ்வாறு

சேர்த்த நெற்கதிர்களை நன்கு தைத்த மூட்டைகளில் குதிர் முதலியவற்றில் இடம் இல்லாமையால் எங்கும் கிடக்கின்றது (பொருநர். 242–245) என்பதனை அறியமுடிகிறது.

**"தேஎர் பரந்த புலமோர் பரவா**
**களிறாடிய புல நாஞ்சி லாடா"** [42]

எனும் வரிகள் பயிர் நிலங்களில் தேர்கள் சென்றதால் அவை உழப்படாமலே விளைவைத் தருகின்றன. பன்றிகள் கோரைக்கிழங்கைத் தோண்டி எடுத்த கொல்லைகள் கலப்பையால் உழப்படுதலை வேண்டாத தன்மையைப் பெற்றன. இவ்விரண்டும் உழவர்களுக்கு தம் தொழிலில் உறுதுணையாக இருந்த தன்மையினை இவ்வரிகள் புலப்படுத்துகின்றன. தினைக் கொல்லையை உழுது பயிர் செய்யும் உழவர்களான **குன்றவரை ஏனல் உழவர்** (பதிற் 30:22) என சிறப்பு சேர்த்து நிற்பதைக் காணலாம்.

உழவர்கள் மேற்கொண்ட உழவுத்தொழிலினை வேல மரங்கள் மிகுதியாய்த் தோன்றுகின்ற புன்செய் நிலங்களை உழுது, பயிர் செய்யும் வலிய கையை உடைய உழவர், சிறந்த பல கடாக்களை அவற்றின் கழுத்தில் கட்டப்பட்ட மணிகள் ஒலிக்கும்படி பூட்டி உழுவர் (பதிற் 58:12–19) என அழகாக குறிப்பிடுகின்றது. இவர்களைப் புன்புலம் வித்தும் வன்கைவினைஞர் (பதிற். 58:15) என்கிறது பதிற்றுப்பத்து.

**"மேவிப் பரந்து விரைந்து வினை நந்தத்**
**தாயிற்றே தண் அம் புனல்"** [43]

எங்கும் வளத்தை பெருக்கிய வையை உழவு முதலிய தொழில்கள் பெருகும்படியும் தாவிச் சென்றுள்ளதை இவ்வரிகள் கூறுகின்றன. இதனால் உழவுத் தொழில் சிறப்பாக நடைபெற்றிருப்பதை அறியமுடிகிறது. இவர்கள் தம் உறவினரொடு தம் தொழில் செய்ய வாளை மீன்களைப் போல் நீரில் பரந்து சென்றதாக உவமிக்கப்பட்டுள்ளமைக் காணலாம்.

நாட்டின் முன்னேற்றத்திற்கு, வாழ்விற்கும் அடிப்படை உழவுத்தொழில், உழவுத்தொழிலுக்குரிய சிறப்புகளை மருதத்திணைப் பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

**"வாழியாதன், வாழி அவினி**
**நெல் பல பொலிக; பொன் பெரியது சிறக்க!"** [44]

**"ஈரம் பட்ட செவ்விப் பைம் புனத்து**
**ஓர் உழவன் போலப்"** [45]

உழவனின் தொழில் திறமைக்கு உவமை தலைவனின் நெஞ்சத்தினை உவமையாக கூறுகிறார். நேரத்தை வீண்படாமல் உழுதற்கு விரைந்து செயல்படுபவன் உழவன் என்கிறார். மேலும், மழை பெய்தால் ஈரம்பட்ட நிலத்தில் விதையை விதைக்க உழவன் முற்படுவது, அவன் பருவமறிந்து பயிர் செய்யும் தொழில் நுட்பமும் கொண்டிருந்தான் என்பதை பாடல்வழி அறியலாம். நெல்லை அரிபவர்கள் பறை அறைவர்இதனை **“வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ”** (மலைபடு 471) என்கிறது.

சான்றோரால் புகழப்படும் சிறந்த செல்வமாகிய உழவு, வாணிகம் என்ற இரு தொழிலினை. **“சிறுகுடிப் பெருந் தொழுவர்”** (மதுரை 122) என்கிறது மதுரைக்காஞ்சி.

**மலைநெல் விதைத்தல்:**

குறிஞ்சி நில மக்கள் மலையின் சரிவுகளில் பயிர்தொழில் (கலி 40:3–5, 43) செய்தனர். காந்தளையே இயற்கை வேலியாக உடைய சிற்றூரில் வாழும் குறவர்கள் பரந்த நிலத்தில் மலைநெல்லை விதைத்து (குறுந். 100:1–2) இடையிலே களையாக முளைத்த இலை, கொடியைக் களைந்தெறிவர்.

**தினைப் பயிரிடல்:**

சிறிய தினை அறுத்த பிறகும் மறுகாலிற் கிளைக்கும் அவரைக் கொடி விதைத்தனர் (குறுந். 82:4–5). மேலும் தினையுடன் பருத்தி விதைத்த செய்தியை (14:4–5 குறுந்) யும் அறியமுடிகிறது.

**அவரை விளைத்தல்:**

**“கொண்டல் அவரைப்பூவின் அன்னை”** [46]

**“அவரை அருந்த மந்தி பகர்வர்”** [47]

குறவர்கள் அவரையினையும் விதைத்த செய்தியினை இவ்வரிகள் புலப்படுத்துகின்றன.

**விதை விதைத்தல்:**

நறுமணம் மிக்க அகில், சந்தனம் முதலிய மரங்களை அழித்துத் திருத்திய மேட்டு நிலத்தில் விதைத்த சிறிய கதிர்களைக் கொண்ட தோரை நெல், வெண் சிறு கடுகு, ஐவன நெல்லுடன் வேறுவேறாகப் பிரித்து அறிய முடியாத வகையில் வளரப்பட்ட இஞ்சியும், மஞ்சளும் பசிய மிளகுக் கொடியும் பிறவும் என பல பொருள்களை விளைவித்தமையினை மதுரைக்காஞ்சி (மதுரை. 286–290) அறிவிக்கிறது.

**கரும்பு பயிரிடுதல்:**

கரும்பு பயிரிடப்பட்டுள்ளதை,

**"... கரும்பின்**
**காலெறி கடிகை கண்ணயின்றனன்**
**வாலெயி லூஊறிய வசையில்றீ றிர்"** [48]

இவ்வரிகள் விளக்கி நிற்கின்றன.

**"...... அறைநர்**
**தீம்பிழி எந்திரம் பத்தல் வருந்த"** [49]

கரும்பை வெட்டுபவர்கள் அதனை துண்டாக்கி சாறு பிழியும் பொறியில் இடுவர். இதனால் கரும்புச் சாறு விழும் கூன் வாய் வளையும், இவற்றில் கூனை என்பது எந்திரத்திலிருந்து சாலுக்குக் கருப்பஞ்சாற்றை எடுத்துச் செல்லும் தூம்பு உடைய தோற்கருவி என்பர். பலமுறை சாறு ஓடுதலால் பத்தல் நனைந்து விடுகின்றது. இவற்றிலிருந்து கரும்பின் சிறப்பை மட்டுமின்றி, அத்தொழில் குறித்தும் அறியமுடிகிறது.

**கதிர் அறுத்தல்:**

**"...... விளைந்த கழனி**
**வன் கை வினைஞர் அரிபறை இன் குரல்"** [50]

நெல் முற்றிய கழனிகளில் நெல்லை அறுப்பவர்கள் பறை ஓசையை முழக்குவர் என்கிறது காஞ்சி.

**பயிர் அறுத்தல்:**

**"சிறுதினை விளைந்த வியன்கண் இருபுனத்து**
**இரவு அரிவாரின் தொண்டகச் சிறுபறை"** [51]

சிறிய தினை விளைந்து கிடக்கின்றது. அகன்ற இடத்தை உடைய பெரிய கொல்லையில் உள்ள தினைக் கதிர்களை அரிபவர்கள் தொண்டக பறையை முழக்கும் செய்தியினை இவ்வரிகள் புலப்படுத்துகின்றன.

**உமணர்:**

உப்பு வணிகர் உமணர் எனப்பட்டனர். இவர்கள் உப்பினை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு ஊர் ஊராகச் சென்று வணிகம் புரிந்த இனத்தவர்.

**"நெல்லின் நேரே வெண்கல் உப்பு என"** [52]

பரதவர் சேர்த்த உப்பை உமணர் மகள் ஒருத்தி நெல்லுக்கு ஒத்த அளவினதே வெண்மையான உப்பு, எனக் கூறி விற்றுள்ள செய்தியினை கூறுகின்றது.

**"உமணர் சேர்ந்து கழிந்த மருங்கின்..."** [53]

உப்பு வணிகர் பலர் கூட்டமாக கூடித் தங்கி தம் தொழிலினை (புறம். 102:1–4, 313:5–7) மேற்கொள்வர் என்பதை அறியலாம்.

உப்பு வணிகர்கள் உப்பு மூட்டைகளை வண்டிகளில் ஏற்றிச் சென்று விற்பனை செய்வர். அவ்வாறு அவர்கள் போகும்போது மனைவி மக்களுடன் செல்வர். அவருடன் அவர்களுடைய பிள்ளைகள் போல் வளர்க்கப்பட்ட குரங்குகளும் வருவது வழக்கம் என்கிறார் (சிறுபாண். 55–56) ஆசிரியர்.

**".... உமணர்**
**உப்பு ஒய் ஒழுகை எண்ணும் மாதோ"** [54]

போர் வண்டிகளை எண்ணிய பாரி மகளிர் இப்போது உப்பு வண்டியை எண்ணும் நிலை கண்டு வருந்தும் நிலையினர் ஆயினர்.

கடற்கரையில் விளைத்த உப்பை (ஐங். 108) வலிமையுடைய எருதுகள் பூட்டிய வண்டியில் ஏற்றிக் குறிஞ்சி நிலத்திற்கும் கொண்டு சென்றனர் என்பதை புறநானூறு (60:1–4) கூறுகின்றது.

**மீன் பிடித்தல்**

நெய்தல் நிலத்து மக்களின் முக்கியத் தொழில் மீன் பிடித்தலும் அவற்றை உலர்த்துதலும், உப்பு எடுத்தலும் ஆகும்.

கடலுக்குள் செல்வதையே தம் தொழிலாக கொண்டுள்ளதால் கடல் மேம் பரதவர் (4:2) என்கிறது நற்றிணை.

**"எல் இமிழ் பனிக்கடல் மல்குசுடர்க் கொளீஇ**
**எமரும் வேட்டம் புக்கனர்"** [55]

பரதவர்கள் மீன் வேட்டலுக்கு இரவு நேரத்திலும் கடலுக்குள் சென்றதைப் புலப்படுத்துகிறது. அவ்வாறு செல்லும்போது வெளிச்சத்திற்காக விளக்குகளைப் படகில் வைத்திருப்பர் (நற். 199) பரதவர்கள் மீன் வேட்டல் தொழிலினைச் செய்து வந்தமையினை பல பாடல்கள் (நற். 31, 45, 63, 67, 184, 111, 175, 119, 219, 295, 303, 331, 363, 388, 30, 38; மதுரை. 116:117) சான்று

காட்டி நிற்கின்றன. பலவகையான மீன்களை வேட்டையாடச் சென்ற படகுகள் வரும் நேரமானதை, **“பல் மீன் வேட்டத்து என்னையர் திமிலே”** (குறுந் **123:1**) என்று கூறுகிறது. பிடித்து வந்த மீன்களை உயர்ந்த வற்றலாக மாற்றிய தன்மையினை, **“பெருங் கடற் பரதவர் கொள் மீன் உணங்கலின்”** (குறுந் **320:15**) எனும் வரி புலப்படுத்துகின்றது.

என் தந்தை மீன் வேட்டைக்காக கடலினிடத்துப் புகுந்தான். என் தாயும் உப்பை விற்று அதன் விலையாக வெண்ணெல்லை வாங்கி வருவதற்காக உப்பு விளையும் களத்திற்குச் சென்றார் என்று தலைவி கூறுவதிலிருந்து, பண்டமாற்றுமுறை பற்றியும், மீன் பிடித்தல் தொழில் பற்றியும் (குறுந். **269:4–7**) அறிய முடிகிறது. பரதவர்கள் சுறா மீன் வேட்டைக்குச் சென்றதை, **“கொடுந்திமில் பரதவர் கோட்டு மீன் எறிய”** (குறுந். **304:4**) என்ற பாடல் மூலம் உணரலாம்.

**மீன் விற்றல்:**

> **“வள்ளை நீக்கி வய மீன் முகந்து**
> **கொள்ளை சாற்றிய கொடு முடி வலைஞர்**
> **கள் ஆர் களமர் பெயர்க்கும் ஆர்ப்பே”** [56]

வலைவீசி மீன் பிடிப்பவர் களமர் என்பவர். இவர்கள் வாளை முதலிய மீன்களை பிடித்து விலைகூறி விற்ற செய்தியினை இவ்வரிகள் புலப்படுத்துகின்றன.

பரதவ மக்கள் நெருங்கி உப்பு வணிகரின் வண்டிகளைப் போல் ஒன்றுகூடி கரையில், கடலில் இட்ட வலையை வலித்து மீன்களைத் தொகுத்து வறியவர்க்குத் தந்து எஞ்சியவற்றை விலை கூறி விற்பனை (அகம் 30) செய்தனர்.

**கள்வர் (ஆறலைக் கள்வர்):**

> **“ஆறு அலை கள்வர் படை விட அருளின்**
> **மாறு தலை பெயர்க்கும் மருவு இன் பாலை”** [57]

பாலை நிலத்தில் வாழ்பவர்கள் ஆறலைக் கள்வர். இவர்கள் பாலை வழியில் வரும் மாந்தர்களிடம் இருக்கும் பொருட்களைக் களவாடுவர். வழியில் வருத்தும் கள்வர் தம் கையில் படைக்கலங்களைக் கைவிடும்படி செய்து அருளுக்கு மாறான மறப்பண்பை அவரிடத்தினின்று அகற்றும் மருவுதல் இனியது பாலை நிலம் எனப் பொருநன் பெருமிதப்படுகிறான்.

குறிஞ்சியும் முல்லையும் தம் இயல்பினில் திரிந்த பாலை எனும் நிலத்தில் வாழ்பவர்கள் ஆறலைக் கள்வர். இவர்கள் வழியில் செல்வாரை வருத்தி அவரது பொருளைக் கவர்பவர்கள். வில்லாகிய ஏரால் உழுதலைச் செய்பவர்கள் (அகம். 193:1–2) இவர்கள்.

ஆறலைக் கள்வர்களிடம் அன்பு இல்லாததால் வழிப்போவாரை துன்புறுத்தி பொருளைப் பெறுவர் (கலி. 4:1–5, 6; ஐங் 329:1–3)) என்கிறது கலித்தொகை.

பாலை நிலத்தில் கூட்டமாக வசிக்கின்ற அழகிய சிறகுகளையும் நீண்ட கால்களையுடைய கணந்துள் பறவைகள், ஆறலைக் கள்வரின் வருகையை வழி நடைப்போவோருக்கு அறிவித்து, அக்கள்வர்களின் கொள்கைக்கு ஆளாகாமல் அவர்களைத் தடுக்கும் என்பதனை,

**“நெடுங்காற் கணந்துள் ஆள் அறிவுறீஇ**
**ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்”** [58]

இவ்வரிகள் புலப்படுத்துகின்றன.

**குயவர்: (மட்பாண்டத் தொழில்)**

மண்ணைக் கொண்டு கலங்களைச் செய்து சூளையில் சுட்டு மண்பாண்டங்களாக செய்வோர் குயவர் எனப்பட்டனர். திகிரி எனும் ஒரு வகை கருவியைக் கொண்டு தண்டினால் சுழற்றி, தங்கள் கை வண்ணத்தினால் பலவகையான மண்பாண்டங்களைச் செய்வர். சமைத்தலுக்கு மட்டுமின்றி உடல்களைப் புதைப்பதற்கும் இவர்களால் செய்யப்பட்ட தாழிகள் தேவைப்பட்டன. பெரிய சூளைகளில் பானைகளும், பிற கலன்களும் சுடப்பட்டன என்பதை,

**“இருள் திணிந்தன்ன குரூஉத்திரள் பரூஉப்புகை**
**அகலிரு விசும்பின் ஊன்றும் சூளை”** [59]

இதனால் அறியலாம்.

இறந்தவரின் பெருமைக்கு ஏற்ப தாழிகள் பெரிதாகவோ அல்லது சிறிதாகவோ அமைந்திக்கும். அதை உணர்த்தும் வகையில் ஐயூர் முடவனார் ஒரு அரசனின் புகழ் மிகவும் பரந்து பட்டதாகவும் அதற்கேற்ற வகையில் தாழி செய்ய அந்த குயவர் மிகவும் சிரமப்படுவர் என்பதனை,

**“கலம் செய் கோவே! கலம் செய் கோவே**
**நீயே யாங்கு ஆகுவை கொல்”** [60]

விளக்குகிறது.

**“கலம் செய் கோவே! கலம் செய் கோவே”** [61]

**“சுரம் பல வந்த எமக்கும் அருளி**
**வியன் மலர் அகன் பொழில் ஈமத்தாழி**
**அகலிதாக வனைமா”** [62]

எனப் போரில் வீர மரணம் எய்திய தம் தலைவன் உடலோடு தம் உடலையும் சேர்த்து இழுதற்கு ஏற்ற வகையில் ஈமத்தாழியைப் பெரியதாகச் செய்யும்படி கலம் வளையும் குயவனை வினவுவதாக இப்பாடல் அமைந்திருக் கின்றது. இக்குயவர்கள் நொச்சி மாலை அணிந்து தெருக்களில் சென்று ஊரில் நிகழும் விழா நிகழ்ச்சிகளை அறிவிக்கும் பணியும் செய்வர்.

**“முரவுவாய்க் குழிசி முரி அடுப்பு எரி”** [63]

உணவு சமைப்பதற்குப் பானைகளும் அடுப்பும் தேவை அவற்றை மண்ணால் செய்து பயன்படுத்தினர் என்பதை இவ்வரி காட்டுகின்றது.

உலோக பாத்திரங்கள் மிகக் குறைந்த அளவிலே பழக்கத்தில் இருந்த காலம் சங்க காலம். அப்பொழுது எல்லா வகையானப் பாத்திரங்களும் மண்ணால் தான் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்பதனை அகழ்வாராய்ச்சிகள் உறுதிப்படுத்துகின்றன. ஆகவே மட்கலம் வனையும், தொழிலும், அக்காலத் தொழில்களில் சிறந்த இடத்தை பெற்றிருந்தது.

**“கலம் சுடு புகையின் தோன்றும் நாட!”** [64]

**“வனை கலத் திகிரியின் குமிழ சுழலும்”** [65]

குயவன் மட்கலம் செய்யும் உருளையின் சுழற்சி விரைந்தோடும் நீால் எழும் சுழலுக்கு உவமையாக கூறப்பட்டுள்ளது.

**“சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற”** [66]

சுடுமண்ணினால் செய்யப்படட தாழியைப் பயன்படுத்தினர் என்பதை தெரிவிக்கின்றது. இக்குயவர்கள் நொச்சி மாலை அணிந்து தெருக்களில் சென்று ஊரில் நிகழும் விழா நிகழ்ச்சிகளை அறிவிக்கும் பணியையும் செய்தனர். இதனை,

**“யாறு கிடந்தன்ன அகல் நெடுந்தெருவில்**
**‘சாறு’ என நுவலும் முதுவாய்க் குயவ”** [67]

என்ற வரிகளால் அறியலாம். விழாவிற்காக மன்றத்தில் கள் முதலிய பலிகளை அளித்தலும் இவர்களுக்கு உரிமைத் தொழிலாகும். இதனை,

**“பலி கள்ஆர் கைப்பார் முது குயவன்**
**இடுபலி நுவலும் அகன்தலை மன்றத்து”** [68]

எனும் வரிகளால் அறியமுடிகிறது.

**செம்பு செய் கம்மியர்:**

கைத்தொழிலில் வல்ல உருக்குத்துகின்றவனால் செய்யப்பட்ட அழகிய சிவந்த நிறம் கொண்ட உறையில் இடப்பட்ட ஆலவட்டம் (விசிறி). இவ்வாலவட்டம் சிலந்தி நூல் சூழப்பட்டவையாய் பயனின்றித் தூங்கியது (நெடுநல் 57–59). விசிறி செய்கின்ற கைத் தொழில் வல்லவனைப் பற்றிக் கூறுகிறது நெடுநல்வாடை. வெள்ளிப் போன்ற உலோகங்களைக் கொண்டு பாத்திரங்கள் (அகம் 317:8–9) செய்யப்பட்டிருப்பதை தெரிவிக்கிறது சங்க இலக்கியம்.

**நெசவுத் தொழில்:**

விருந்தினர்களுக்கு இழை சென்ற இடம் கண்ணால் அறிய இயலாத நுட்பமான நூலால் நெய்யப்பட்ட ஆடைகளை அளித்தனர் (மலைபடு. 561–562 மலைபடு). இதனால் இத்தொழில் வல்லவர்கள் இருந்தமைப் புலப்படுகிறது.

முதிர்ந்து வெடித்த பருத்திக் காயிலிருந்து கிடைக்கும் பஞ்சைப் பிரித்து எடுக்க வில்லினைப் பயன்படுத்தினர். இதனை,

**“வில்எறி பஞ்சி போல, மல்குதிரை”** [69]

எனும் வரிகளால் அறியலாம். மரப்பட்டையில் உள்ள நாரினை எடுத்துப் பின்னி மலைவாழ் குறவர் ஆடையாகப் பயன்படுத்தினர்.

**“மரம் நார் உடுக்கை மலை உறைகுறவர்”** [70]

**ஆடை நெய்வோர்:**

ஆடைக்கு உண்டான பருத்தியை வேலி போல வீடுகளில் பயிரிட்டனர். பொன்முடியார் ஓர் அரசனைப் பாடும் பாடலில்,

**“பருத்தி வேலிச் சீறூர் மன்னன்”** [71]

எனக் கூறுகிறார். பருத்தியின் நிறைவே நூலாக நூற்று ஆடை தயாரிப்பர். எனவே பருத்தியைப் பயிரிட்டதனை அறிதல் மூலம் ஆடை செய்யும் தொழில் இருந்தமையையும் அறிய முடிகிறது. மேலும் பருத்தி செடியை வீட்டு வேலியாக வேயும் செய்தியும் (புறம் 324:7–8) அறியப்படுகிறது.

**தச்சர்:**

சங்க காலத்தில் நுண்ணிய வேலைப்பாடு அமைந்த தச்சுத் தொழில் வழக்கில் இருந்தது (நெடுநல். 76–85–86, 115, 123). சிற்ப நூல் அறிந்த தச்சர் கூறியதாக நூலை நேரே பிடித்துத் திசைகளைக் குறித்துக்கொண்டு, தெய்வங்களையும், குறைவின்றிப் பார்த்து மன்னர் வாழ்வதற்கு ஏற்ப மனைகளையும், வாயில்களையும், மண்டபங்களையும் பிறவற்றையும் தொழில்நுட்பம் வெளிப்படும் வகையில் அமைத்திருக்கின்றனர் என்பதனைக் கூறுகின்றது.

சிறுகுழந்தைகள் நடைபயில நடைவண்டிகள் செய்து கொடுத்ததை,

**"பொற்காற் புதல்வர் புரவி இன்று உருட்டும்**
**முக் காற் சிறு தேர்முன் வழி விலக்கும்"** [72]

இவ்வடிகள் உணர்த்துகின்றன.

"சங்க காலத்தில் பொருளாதார நலனைப் பெருக்கும் வகையில் வாணிபம் சிறந்த நிலையில் விளங்கியது. இவ்வாணிபத்திற்குத் தேவையான படகுகள், கப்பல்கள் கட்டும் தொழிலில் தச்சர்கள் சிறந்து விளங்கினர்" (பண்டைத் தமிழர் தொழில்கள், ப.86) இச்செய்தியினை,

**"வெளில் இளக்கும் களிறு போல**
**தீம் புகார்த் திரை முன்துறை**
**தூங்கு நாவாய் துவன்று இருக்கை"** [73]

யானை போல நின்று அசைவதுமான மரக்கலம் இருந்ததை தெரிவிக்கிறது.

தச்சர் தேர் செய்யும் தொழில் திறத்தினர் அத்தகையவருடைய பிள்ளைகளும் விரும்புமாறு அழகியதாக உண்டாக்கிய நல்ல சிறுதேரை உருட்டிக் கொண்டு திரிந்தனர். இதனை,

**"தச்சச் சிறாஅர் நச்சப் புனைத்த**
**ஊரா நல் தேர் உருட்டிய புதல்வர்"** [74]

எனும் வரி மூலம் உணரலாம்.

**"உள்ளரக்கு எறிந்த உருக்குறு போர்வைக்**
**கருந் தொழில் வினைஞர் கைவினை முற்றி**
**ஊர்ந்து பெயர் பெற்ற எழில் நடைப் பகரொடு**
**................. அவன் பரிசில்"** [75]

தச்சு தொழில் முடிந்த தேரை, ஓட்டம் நன்று என்று ஆய்ந்த பின்னர் தேரும் பாகனுடன் யானை, குதிரை, அணிகலன் முதலியவற்றை இரவலர்க்குப் பரிசாக வழங்கப்பட்டது. மேலும் உமணர்கள் தாங்கள் வளர்த்து குரங்குக் குட்டிக்கு உளியால் குடைந்து செய்த மரத்தாலான மணி மாலையை அணிவித்தனர் (சிறுபாண் 5–56) என்ற செய்தியினையும் அறிய முடிகிறது.

மக்களுக்குத் தேவையானப் பொருட்களையும், சிறார்களுக்கு வேண்டிய விளையாட்டுச் சாமான்களையும் செய்வது மட்டுமின்றி அரசர்களுக்குரிய தேர் செய்வதும் தச்சர்களின் கடமையாக இருந்தது. இதனை,

**"......எண் தேர் செய்யும் தச்சன்**
**திங்கள் வலித்த கால் அன்னோனே"** [76]

என அதியமானின் பெருமையைத் தச்சனின் திறமைக்கு ஒப்பாக்குகிறார் ஔவையார். ஒரு தச்சன் ஒருநாளில் 8 தேர்களைச் செய்யும் அளவிற்கு தொழிற்திறமை வாய்ந்தவன். ஒரு மாதம் கூடி ஒரு தேர்க்காலை மட்டும் செய்தால் எவ்வளவு உறுதி வாய்ந்ததாக இருக்கும் தன்மையை அரசனோடு ஒப்பீடு செய்கிறார். இத்தகைய தொழிற்திறமை வாய்ந்தவனை 'மரங்கொல் தச்சன்' என்கிறார் (புறம். 206:11–12) ஔவையார்.

**"தச்சும் செய்த சிறு மா வையம்**
**ஊர்ந்து இன்புறாஅர் ஆயினும்"** [77]

இவ்வரிகள் குதிரைபூட்டிய கைவண்டியைச் செய்பவன் தச்சன் என்று விளக்குகிறது.

மருதநில மக்கள் பசிய அவலை இடிப்பதற்குக் கரிய வயிரம் போன்ற அவல் இடித்தல் உலக்கையைப் பயன்படுத்துவதை,

**"பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை"** [78]

என்ற பாடலும்,

**"உழுந்தின் நெற்றுக்களை அடிப்பதற்குக் கழுந்து"** [79]

என்ற தடியைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை குறுந்தொகை பாடலும் உணர்த்துகின்றன.

**"சுடர்விரி வினைவாய்ந்த தூதையும், பாவையும்"** [80]

ஒளிவிரிந்த வேலைப்பாடமைந்த மரத்தால் செய்யப்பட்ட சிறுபானையும் பொம்மையும் கொண்டு விளையாடுவோர் என்பதால் மரத்தொழில் (தச்சு) மேற்கொண்டமை புலனாகும்.

**கொல்லர் தொழில்:**

**"மிதி உலைக் கொல்லன் முறி கொடிற்றன்ன"** [81]

மெத்தென்ற துருத்தியை அமுக்கி ஊதும் கொல்லத் தொழில் செய்பவனின் முடிந்த கொடிற்றைப் போன்ற பிளவுடைய காலை உடையது நண்டு. இங்கு கொல்லனின் கொடிறு நண்டினுடைய காலுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**"கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி"** [82]

எனும் வரியில் கருந்தொழில் வினைஞர் என்பது கொல்லரைக் குறிப்பதாக அமைந்துள்ளது. கொல்லனின் உலைக் களத்தில் இருக்கும் பட்டடைக் கல்லைக்குறித்து **"உலை கல் அன்ன பாறை ஏறி"** (குறுந். 12:12) குறிப்பிடுகிறது.

தமிழர் உலோகத் தொழிலில் மிகவும் மேம்பட்டிருந்தனர். இரும்புசெய் கொல்லரும், பொன்செய் கொல்லரும் இருந்தமை (கலித் 51:7, 54:6, 55:2, 59:2) அறியலாம். இதன்வழி பொன், முத்துக்களால் ஆன அணிகலன்களைச் செய்யும் செய்யும் தொழில் இருந்தமையைக் காணலாம்.

அரசனுக்கு சிறப்பு வீரம். அவ்வீரத்தினை நிலைநாட்ட உதவுவது போர். அதற்கு உண்டான கருவிகளைச் செய்யும் கொல்லர் மிகச் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தனர். அரசன் எப்போதும் போர் புரிந்து பகைவரை வீழ்த்தும் இயல்பினன் என்றும் அவனின் போர்க் கருவிகள் அவை பழுது பார்க்க எப்போதும் கொல்லனுடைய களத்தில் இருக்கும் என்றும் காணப்படுகிறது.

**"பகைவர்க் குத்திரகோடு, சதி சிதைந்து**
**கொல் துறைக் குற்றிலமாதோ"** [83]

இப்பாடல் அடிகள் மூலம் கொல்லன் தொழிற்களம் எப்போதும் இயங்கியமையும் காணலாம்.

**"வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே"** [84]

இவ்வடிகளில் தாய், தந்தையின் கடமைக்கு அடுத்தபடியாக கொல்லனின் கடமையும் கூறப்படுகிறது. இவற்றிலிருந்து கொல்லனின் தேவையையும், முக்கியத்துவத்தினையும், தொழில் திறமையினையும் முன்நிறுத்துவதைக் (புறம் 36:6–9, 170:14–17, 180:12–13, 270:11–12) காணலாம்.

கோடாரியினையும், வேலினையும் செய்து அந்நாட்டு மன்னனுக்கு பெரிதும் உதவிபுரிந்தனர். இவை தவிர கொல்லனின் உலைக்களத்தில் உள்ள அடைகல் போன்ற வன்மையான ஆண்மையுடையவன் என உவமை கூறப்பட்டுள்ளது.

இத்தன்மையான கொல்லனின் தொழில் தேவை பண்டை கால மக்களின் வாழ்வில் இன்றியமையாததாக இருப்பதைக் காணலாம்.

**பொற்கொல்லர்:**

பொன்னாலும், மணியாலும் தம்மை அலங்கரித்துக் கொண்டமையால் பொற்கொல்லர் தொழில் மிகச் சிறப்பாக நடைபெற்றது என்பதும், படைக்கலக் கருவிகளின் கலனாகவும் இருந்தமையை பின்வரும் வரிகள் எடுத்தியம்பு கின்றன.

**"புனை இருந் கதுப்பகம் பொலியப் பொன்னின்**
**தொடை அமை மாலை விறலியர், மலைய"** [85]

**"புனல் ஆடு மகளிர் இட்ட பொலங்குழை**
**இரைதேர் மணித் சிரல் இரை செத்து எறிந்தெனப்**
**புள் ஆர் பெண்ணைப் புலம்பு மடற் செல்லாது"** [86]

போன்ற பாடல் வரிகள் பெண்கள் பலவிதமான அணிகலன்களை அணிந்திருந்ததைத் தெரியப்படுத்துகின்றது.

**"முத்தினும் மணியினும் பொன்னினும் அத் துணை**
**நேர்வரும் குரைய கலம் கெடின் புணரும்"** [87]

முத்துமணி, பொன் என்பனவற்றைக் கொண்டு செய்யப்படும் அணி கெடுமாயின் அத்தொழில் வல்லவர் திருத்தி அமைப்பர் என அவர்தம் தொழிலைக் கூறுகின்றது.

பொற்கொல்லர் பொன்னை நெருப்பில் உருக்கி கண்கவரும் வகையில் ஆபரணங்களைச் செய்து தருவார்கள். வேங்கையின் புதுப்பூ இவர் செய்யும் பொன்மலர்க் கண்ணி போல மிகவும் அழகு பெற அமைந்துள்ள திறத்தை,

**"கருங்கால் வேங்கை நான் உறு புதுப் பூ**
**பொன்செய் கம்மியன் கைவினை கடுப்ப"** [88]

எனும் வரிகளால் அறியலாம். பொன், வெள்ளி முதலியவற்றை உருக்கி வார்க்கும் அச்சுப்பொறிகள் ஆகியவற்றையும் இவர்கள் வைத்திருந்தனர்.

**"வெள்ளி உருக்குறு கொள்கலம் கடுப்பு"** [89]

முத்தையும், மணியையும் மூடியிருக்கும் மாசினைப் போக்கி ஒளிபெறச் செய்து அவற்றைக் கொண்டும் அணிகலன்கள் செய்தனர் என்பதை,

**"கைவல் கம்மியன் கவின் பெறக் கழாஅ**
**மண்ணாப் பசுமுத்து ஏய்ப்ப"** [90]

என வரும் பாடல் வரிகளால் அறியலாம்.

**சங்கு அறுப்போர்:**

சங்க இலக்கியம் சங்குகளை அறுத்து குடைந்து அணிகலன்கள் செய்து வாழ்ந்துள்ளதைப் பதிவு செய்துள்ளது. இத்தொழில் வேளாளப் பார்ப்பார்க்கு

**"வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த**
**வளை களைத்து ஒழிந்த கொழுந்தின் அன்ன"** [91]

உரியது என அகப்பாடல் சான்று பகருகின்றது. வேள்வி இயற்றாத பார்ப்பனர் சங்கறுத்து வளையல் செய்வது அக்காலத்தில் வழக்கமாக இருந்துள்ளதை அறிய முடிகிறது.

**சங்கு வளையல்:**

**"கோடு ஈர் இலங்கு வளை நெகிழ..."** [92]

சங்கினை அறுத்துச் செய்யப்பட்ட வளையல் தொழிலினை முன் நிறுத்துகிறது இவ்வரி.

**"... என் கைக்**
**கோடு ஈர் இலங்கு வளை நெகிழ்ந்த"** [93]

சங்கை அறுத்துச் செய்த வளையல்களை தலைவி அணிந்திருந்தால் என்பதால் இத்தொழில் இருந்திக்கக் கூடும் என அறியமுடிகிறது.

**"நீர்த் தெவ்வும் நிரைத் தொழுவர்**
**பாடு சிலம்பும் இசை"** [94]

நீரைச் சாலால் முகந்து இறைக்கும் தொழில் செய்வோரைப் பற்றியும், காவல் தொழில் மட்டுமின்றி பாவை விளக்குகளையும் செய்தனர் என்ற செய்தியும்,

**"யவனர் இயற்றிய வினைமான் பாவை**
**கை ஏந்து ஐ அகல"** [95]

**"கடியுடை வியல் நகர்ச் சிறு குறுந் தொழுவர்"** [96]

காவல் பொருந்திய அகன்ற வரிகளில் குற்றேவல் செய்யும் வினைஞர்கள் இருந்ததான குறிப்புகளும் அமைகின்றன. மேலும் முத்து மாலைகளை வரிசையாய் தொங்க விடப்பட்டிருந்த கட்டில் முத்தால் ஆன பலகணி போல் விளங்கியது (நெடுநல். 123–131) மேலும் நூல் இழையில் கோத்த முத்து மாலைகள் அந்தத் தகட்டின் நான்கு பக்கமும் சாளரம் போல் இடைவெளி தோன்றத் தொங்கவிடப்பட்டிருந்ததான தொழில் குற்றம் ஏதும் இல்லாது அவை அமைந்திருந்த நுட்பமான கட்டிடக் கலைத்திறமும் சங்க இலக்கியத்தில் இடம்பெறக் காணலாம்.

**அடிமைத் தொழில்:**

அடியோர் உரிமையின்றித் தம் தலைமைக்குக் கட்டுப்பாட்டுடன் வாழ்ந்தனர் என்பதை,

**"கொடிய எமக்கு நீயாரை? பெரியர்க்கு அடியரோ ஆற்றாதவர்"** [97]

என்று கூறுவதிலிருந்து அத்தொழிலினை அறியமுடிகிறது.

**கட்டில் பின்னுவோன்:**

**"கட்டில் நிணக்கும் இழிச்சினன் கையது**
**போழ் தூண்டு ஊசியின் விரைந்தன்று மாதோ"** [98]

கட்டில் பின்னவோன் கையில் உள்ள ஊசியானது விரைந்து இயங்கும் அதனினும் விரைந்ததாய் இருந்ததாம் பெருநற்கிள்ளியின் போர் புரியும் திறமை. இவ்வாறாக முடையும் தொழிலாளர்களின் கைத்திறமை போற்றத் தக்கதாய் காணமுடிகிறது.

**தொய்யில் எழுதுவோர்:**

தொய்யில் என்பது ஆடவர், மகளிர் மார்பிலும், தோளிலும் சந்தனக் குழம்பால் எழுதும் வரிக்கோலம். இதனை தலைவியின் தோளில் வரைந்திருப்பதைப் (கலி. 18) பாலைக் கலியும், மருதக் கலியும் (76) முல்லைக்கலி (117) குறிப்பிடுகிறது.

**முத்து, மணிகளில் பணி செய்வார்:**

பந்தர் (பதிற். 67:2–4, 74:6) கொடுமணம் (பதிற் 67:1–7, 75:5) எனும் இடங்களில் முத்து மணிகளில் பணிசெய்வோர் இருந்து தம் தொழிலினை மேம்படைய செய்திருப்பர். ஒளிமுதிர்ந்த சீரிய முத்தையும், விளங்கும்

சங்கையும் உடைய சங்கு குளிப்பாரின் இருப்பிடமும் கொற்கை (மதுரை. 135–136) என்ற ஊரில் உள்ளது என்பதிலிருந்து இதன் வளத்தினை அறியமுடிகிறது.

**காரோடன்:**

> **"சிறு காரோடன் பயினொடு சேர்த்திய**
> **கல் போல் பிரியலாம்..."** [99]

படைக்கலங்களுக்குத் தோலால் உறைகளைத் தைப்பவனை சக்கிலியன் என்றும், உறைக்காரன் என்றும் அழைக்கப்படுவர் என்பதனை அகம் சுட்டுகின்றன.

**அப்ப வணிகர்:**

இனிய பாகொடு சேர்த்துக் கரைத்த மாவைக் கொண்டு அப்ப வாணிகர் பலசிற்றுண்டிகளைத் தயாரித்து விற்பனைச் செய்தனர். அப்ப வாணிகர் பாகுடன் வேண்டுவன கூட்டி நூல்போல் அமைந்த வட்டம் செய்தனர் (ஒரு வகை சிற்றுண்டி) என்பதை பெரும்பாணாற்றுப்படை (377–378) காட்டுகிறது.

**கூவலர்:**

பரவிய மண்ணையுடைய வன்நிலத்தில் தம் வலிய வாயையுடைய குந்தாலியால் ஆடு, மாடுகள் நீர் அருந்த கிணற்றினைத் தோண்டும் தொழிலுடையவர் (அகம் 21:22, 321:6–8) கோவலர்கள்.

**போர்ப்பறைக் கொட்டுதல் (புலையன்):**

போர்ப்பறைக் கொட்டும் தொழிலைச் செய்பவர்களை 'புலையன்' என்று அழைத்தனர். இவர்கள் போரின் போது துடி முழக்கியும், வீரர்களுக்கு ஆயுதம் வழங்கியும் உதவினர். போருக்கு பூக் கொள்ளுமாறு வீரர்களை அழைத்து பறையறையும் தொழிலையும் மேற்கொண்டனர். இதனை,

> **"மலையன் மா ஊர்ந்து போகி, புலையன்**
> **பெருந்துடி கறங்கப் பிறபுலம் புக்கு"** [100]

எனும் வரிகள் புலப்படுத்தி நிற்கின்றன.

**வண்ணார் : காழியர்**

ஆடைகளை வெளுக்கும் வண்ணார் பற்றிய குறிப்புகளும் காணப் படுகின்றன. வண்ணாருக்கு, **"ஊழுறு விளைநெற்று உதிர, காழியர்"**

(அகம் 89:7) "காழியர்" எனும் பெயர் வழங்கப்பட்டுள்ளதை அகம் வழி அறிய முடிகிறது.

**வளையல் விற்பவர்:**

வளையல்கள் விற்பவர்கள், "இருந்ததை **விலைஞர் கைவளையே**" (குறுந் 117:6) எனும் வரி புலப்படுத்துகிறது.

**மருத்துவர்:**

மக்கட்கு நேரும் பிணியறிந்து கொடுக்கும் தொழிலில் ஈடுபட்டவர் மருத்துவர். இவரை உயிர் போத்தரும் மருத்துவர் (கலி. 137:25) என்கிறது கலித்தொகை. உற்ற நோய்க்கு ஏற்ற மருந்தைத் தேர்ந்து அளித்தனர். (கலி 63:10–13, 81:18, 107:27) மருந்து துன்பத்தைத் தீர்த்து உயிரை (கலி 32:15, 44:21). நிலைபெறச் செய்யும்.

**"திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய**
**மருந்து போல், மருந்து ஆகி"** [101]

மருந்தினால் யாக்கை தேறிவருதலை தெரிவிக்கிறது.

**தூது மேற்கொள்ளுதல்:**

**"வேந்து விடு விழுத்தொழில் எய்தி ஏந்துகோட்டு**
**அண்ணல் யானை அரசு விடுத்து..."** [102]

தலைவன் பெரு வேந்தர் பொருட்டுச் செல்வதாகிய சிறந்த தூதை மேற்கொண்டு முடித்து விரைவில் வருவர் என்று கூறுவதிலிருந்து 'தூது' சென்றுள்ள தன்மையினை அறிய முடிகிறது.

**ஒற்றர்:**

களவு செய்வதற்கு இடம் பார்த்துத் திரியும் கள்வர் பதுங்கி இருப்பதை அவர்கள் அறியாமல் ஆராய்ந்து திரிந்தனர் ஒற்றர்கள். இதனை,

**"மென் நூல் ஏணிப் பல் மாண் சுற்றினர்**
**நிலன் அகழ் உளியர் கலன் நசைஇக் கொட்டும்**
**கண் மாறு ஆடவர் ஒடுக்கம் ஒற்றி"** [103]

இவ்வரிகள் விளக்கி நிற்கின்றன. இதன் மூலம் கள்வனின் தோற்றத்தினையும் அறியமுடிகிறது.

**'பொறி' (விலங்கு பிடித்தல்):**

விளைந்து முற்றிய தினைப்புனத்தை அழித்து விடுகின்ற பன்றிகளைப் பிடிப்பதற்காக கானவர் கல்லால் ஆன பெரிய பொறிகளை அமைத்திருப்பர். இதனை,

> **"விளை புனம் நிழத்தலின் கேழல் அஞ்சி**
> **புழைதொறும் மாட்டிய இருங்கல் அடாஅர்**
> **அரும் பொறி அடைய ஆறே"** [104]

இவ்வரிகள் புலப்படுத்துகின்றன. கரிய கல்லால் ஆன செய்வதற்கு ஆரிய நுணுக்கங்களையுடைய பொறி. இப்பொறியில் அகப்பட்ட பன்றி தப்புதற்கு அறியதாகும் அப்பன்றியினைப் பிடிப்பதற்காக மற்ற வழிகள் யாவற்றையும் அடைத்துப் பன்றி வருங்கால அவ்வழியில் வருமாறு சிறிய தொளைப் போன்று வழியமைத்து அதில் பொறி அமைத்திருப்பர். ஆக பொறிகளை அமைத்து விலங்குகளை அழித்த செய்தியினை மலைபடுகடாம் புலப்படுத்துகிறது. இதிலிருந்து பொறி அமைக்கும் தொழில் இருந்தமை புலப்படுகிறது.

**யானையை ஓட்டுதல்:**

> **"இலங்கு ஒளி மருப்பின் கைம்மா உளம்பு நர்"** [105]

யானையை நிலத்திலிருந்து ஓட்டக் கவணைப் பயன்படுத்தினர்.

**பாகன் தொழில்:**

> **"மாசு அறக் கழீஇய யானை போலப்"** [106]

மாசு நீங்கும்படி பாகனால் கழுவப்பட்ட யானையைப் போல தூய்மை பெற்ற கரிய பசுமையான ஓரிடத்தில் தங்குகின்ற குறவன், தங்குகின்ற இடத்திற்குப் பாகனால் கழுவப்பட்ட யானையை உவமையாக கூறுகிறார் ஆசிரியர். ஆக யானைகளைப் பழகுவிப்பதற்கு என பாகன் இருந்த செய்தியினை அறியமுடிகிறது.

யானையைப் பயிற்றுவிக்கும் தொழிலினையும், அதன் மீது அமர்ந்து தாம் பணிக்கும் பணியை செய்விக்கும் தொழிலினையும் மேற்கொண்டவர்கள் பாகர்கள். இவர்கள் பேசுவது வடமொழி. அவர்களைக் குறித்து பின்வருமாறு கூறுகிறது மலைபடுகடாம்.

**"..... கடுங்கண் வேழத்து**
**உரவுச் சினம் தணித்து பெரு வெளிற் பிணிமார்**
**விரவு மொழி பயிற்றும் பாகர்....."** [107]

**வண்டி ஓட்டுபவர்:**

வண்டி சேற்றில் ஆழ்ந்தால் எருதுகள் மயங்க, அவற்றின் மயக்கத்தைப் போக்க எழுச்சியை ஊட்ட வண்டியை ஒட்டுபவர். துள்ளிக் குதித்துப் பேரிரைச்சல் இட்டு அவ்வெருதுகளைத் தூண்டி வண்டியை இழுக்க செய்யும் தன்மையினை,

**"வால்வாய் உருளி கதுமென மண்ட**
**சாகாட்டாளர்....."** [108]

இவ்வரிகள் புலப்படுத்துகின்றன. வண்டி ஓட்டுநரை சாகாட்டாளர் என்கிறது பதிற்றுப்பத்து.

**கூற்றுவன் தொழில்:**

**"ஆள்வினை மருங்கில் பிரியார் நாளும்**
**உறல் முறை மரபின் கூற்றத்து**
**அறன் இல் கோள் நற்கு அறிந்திசினோரே"** [109]

உயிர்கள்பால் பலமுறை சொல்லும் மரபை உடைய கூற்றுவனது கொலைத் தொழிலைப் புலப்படுத்துகிறது இவ்வரிகள்.

**கள் தொழில்:**

பல்வேறு சிறப்புகளை அறிவிப்பதற்குப் பலகொடிகளை நாட்டுவர். அக்கொடியே அவற்றை நமக்கு புலப்படுத்தும். ஆனால் கள்விற்கும் கடைக்கு அறிகுறியாக கொடி நடப்பட்டதை மதுரைக்காஞ்சி குறிப்பிகிறது.

**"கள்ளின் களி நவில் கொடியொடு"** [110]

கள்விற்பதற்கு அறிகுறியாகக் கட்டிய கொடி தன்னைக்கண்ட களிமக்களுக்குக் கள்ளின் களிப்பை நினைப்பூட்டித் தன்னிடம் ஈர்ப்பதால் இவ்வாறு கூறுகிறது காஞ்சி.

அங்காடி தெருக்களில் பல கொடிகள் நாட்டப் பெற்றிருந்தது. அவற்றில் கள் விற்கும் இடத்தில் கொடி நாட்டப்பட்டு அவற்றை அனைவருக்கும் தெரியப்படுத்தும் விதமாக (பட்டினப் 178–180, (நெடுநல் 32–33)) அமைந்திருந்தமையைக் காணலாம்.

**ஓவியர்:**

எவ்வகைப்பட்ட செய்திகளையும், காட்சிகளையும் ஒப்புக் காட்டி வரைபவர். இவர்களின் தொழில் திறமையினை,

> **"செம்பு இயன்றன்ன செய்வு உறு நெடுஞ் சுவர்**
> **உருவப் பல் பூ ஒரு கொடி வளைஇ**
> **கருவொடு பெயரிய காண்பு இன் நல் இல"** [111]

இவ்வரிகள் புலப்படுத்துகின்றன. பல பூக்களையுடைய ஒப்பற்ற பூங்கொடியை ஓவியமாய் வரைந்து காட்சிக்கினிய நல்ல இல்லத்தினை மேலும் அழகு செய்தனர்.

சோழ நாட்டில் கலை வளமும் சிறந்து விளங்கியது. பண்டைய தமிழர் தாம் கண்ட காட்சிகளை ஓவியமாக தீட்டி மகிழ்ந்தனர். பூம்புகாரில் அமைந்திருந்த அரசனின் அரண்மனையில் வேலைபாடமைந்த ஓவியங்கள் தீட்டப்பட்டு இருந்தன. இதனை,

> **"வேறுபட்ட வினைஓவத்து**
> **வெண்கோவில் மாசு ஊட்டும்"** [112]

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன.

சித்திரங்கள் எழுதிய மண்டபங்கள் தெய்வக் கோயில்களில் அமைந்திருந்தன. இதனை எழுத்து நிலை மண்டபம் (பரி. 19:53) என்கிறது பரிபாடல். திருப்பங்குன்றத்தில் அமைந்திருந்த எழுத்து நிலை மண்டபத்திலுள்ள காட்சிகளை மக்கள் கண்டு களித்து அவற்றைச் சுற்றி அச்சித்திரங்களின் கருத்தினைக் குறித்து, ஒருவருக்கொருவர் உரையாடினர் என்றும் (19:46–53 பரி) கூறுகிறது பரிபாடல்.

> **"ஓவத்தன்ன வினைபுனை நல் இல்"** [113]

ஓவியத்தில் எழுதியதைப் போன்ற வேலைப்பாடு அமைந்த மனை எனக் கூறுவதிலிருந்து இத்தொழில் வல்லாரின் சிறப்பு இங்கு உவமையாக கூறப்பட்டுள்ளது.

> **"ஓவத்தன்ன வினை புனை நல்இல்**
> **பாவை அன்ன பலர் ஆய் மாண் கவின்"** [114]

அழகிய காட்சிகளுக்குச் சித்திரங்களை ஒப்புக்காட்டுதலை **"ஓவத்தன்ன"** என வரும் அகச்சான்றால் அறியலாம்.

**"... உயிர் பெய்த பாவை போல"** [115]

ஓவியம் வரைபவன் உயிர் கொடுத்த பாவை தான் அழியும் வரை அக்குறிப்பு நிற்கும் என ஓவியரின் கைத்திறமையினை இவ்வரிகள் விளக்குகின்றன.

**வாணிகம்:**

பல்வகைத் தொழில்களுள் ஒன்றாக அமையும் வணிகம் விற்பனைக்குரிய பல்வேறு பண்டங்களையும் ஓரிடத்தில் தொகுத்து விற்பனை செய்யும் நிலையான விற்பனைக் கூடங்களாக இருந்துள்ளன. வணிகத்திற்குரிய பொருட்களைப் பொதுநிலையில் பண்டம், பண்ணியம் எனக் குறிப்பிட்டதை,

**"பல் ஆயமொடு பண்டம் பகர்ந்து விசும்"** [116]

எனும் பாடல் மூலம் அறியலாம். மேலும் பிறநாட்டினர் தமிழகத்தில் தங்கி வாணிபத்தில் ஈடுபட்டனர்.

**"புலம் பெயர் மாக்கள் கலந்து இனிது உறையும்**
**முட்டாச் சிறப்பின் பட்டினம்"** [117]

என்று கூறகிறது.

இதன் மூலம் பல்வேறு மொழி அறிவும் பெற்றவர்களாக திகழ்ந்தனர் அம்மக்கள். மேலும் பண்டமாற்றம் நிகழ்ந்துள்ளதை,

**"வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி**
**நெல்லொடு வந்த வல் வாய்ப் பஃறி"** [118]

எனும் வரிகள் தெரிவிக்கின்றன.

பன்னாட்டு வாணிபம் சிறக்க நடைபெற்ற காவிரிப்பூம்பட்டினத்தில், மதிப்பிட்டுக் கூற முடியாத பலவகைப் பண்டங்களும் குவிந்து கிடக்க, அவற்றிற்குப் புலிச்சின்னம் பொறிக்கப்பட்டு, மதிப்பிட்டு, சுங்கம் வசூலித்து பண்டசாலைக்கு வெளியே அனுப்பினர். இவ்வாறு அனுப்பப்பட்ட பல்வேறு பொருட்களும் குவியலாக இருந்தன. இதன் மூலம் பண்டைத் தமிழரிடத்தில் முறையாக ஏற்றுமதி இறக்குமதி நடைபெற்றது என்பதனை,

**"அளந்து அறியாப் பல் பண்டம்**
**வரம்பு அறியாமை வந்து ஈண்டி"** [119]

எனவும்,

**"புலிப் பொறித்து புறம் போக்கி**
**மதி நிறைந்த மலி பண்டம்**
**பொதி மூடைப் போர் ஏறி"** [120]

எனவும் வலியுறுத்துகிறது.

சங்க கால வணிகர்கள் அறநெறியைக் கடைப்பிடித்தே வாணிகம் செய்தனர். தம் குடிக்குப் பழி உண்டாகும் என அஞ்சி எப்போதும் உண்மையையே பேசுவர். தம் பொருளையும், பிறர் பொருளையும் சமமாக எண்ணுவர். தாம் பொருளை வாங்கும் காலத்தில் கொடுக்கும் பொருட்டு மிகையாகக் கொள்ளாமலும், தரம்கொடுக்கும் போது கொள்ளும் பொருளுக்குக் குறையக் கொடுக்காமலும், பொருட்களின் விலையை வெளிப்படையாகக் கூறி விற்பர் (பட்டினப் **207–211**). இந்நெறியினின்று தொன்று தொட்டு வாழ்ந்து வந்தனர்.

**நாளங்காடி:**

பகற்காலத்தில் நடைபெறும் அங்காடி நாளங்காடி ஆகும். இவ்வங்காடியில் பண்டங்களைக் கொள்பவர் பல சாதியினராக இருந்தனர். யவனம் முதலிய நாடுகளிலிருந்து வந்த வணிகர் கூட்டம் பலமொழி பேசுபவராக கடைத் தெருவில் இருந்தனர். இவ்வங்காடியின் சிறப்பினை,

**"மழை கொளக் குறையாது புனல் புக மிகாது**
**கரை பொருது இரங்கும் முந்நீர் போல**
**கொளக் கொளக் குறையாது தரத் தர மிகாது**
**.................**
**நாள்அங்காடி..."** [121]

இவ்வரிகள் விளக்கி நிற்கின்றன. மதுரை நகர மக்கள் நாளங்காடியில் பொருளை வாங்க வாங்கக் குறைபடாத பொருள்களை உடையதாய் விளங்கியது. வாணிகர் மேலும் மேலும் கொண்டுவர மிகாமலும் விளங்கியது. இத்தன்மைக்கு நீர் மொள்ள மொள்ளக் குறையாமலும் ஆறு புகப்புக மிகாமலும் விளங்கும் கடலுக்கு உவமையாக்கப்பட்டது.

**அல்லங்காடி:**

இரவு பொழுதில் நடைபெறும் அங்காடி அல்லங்காடி ஆகும். இவ்வணிகர்கள் மரக்கலங்களில் கொணரப்பட்ட பலவாய் வேறுபட்ட பொருள்களை இறக்குவர். பிறநாட்டு வாணிகர் இங்கு செய்யப்பட்ட பேரணி கலன்களை விலைக்குப் பெற்று உலவுவர். இந்நிகழ்ச்சியினை,

**“நனந்தலை வினைஞர் கலம் கொண்டு மறுக**
**அல் அங்காடி......”** [122]

எனும் வரிகள் விளக்குகின்றன.

**வாணிபம்:**

நன்னனின் மூதூர் பெரிய அங்காடித் தெருக்களை உடையதாக (மலைபடு 480) இருந்தது.

**“கூலம்பகர்நர் குடிபுறந்தராஅ**
**குடிபுறந்தருநர் பாரம் ஓம்பி”** [123]

நிலத்தில் விளையும் எட்டுவகைக் கூலங்களையும் விற்கும் வணிகர் குடிகளையும் உழுவிப்போரான உழவரையும் பேணிக் காப்பது மன்னனின் கடமை. இக்கடமையினை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் சிறப்பாக ஆற்றியவன் என விளிக்கிறார் குமட்டூர்க் கண்ணனார். இவற்றிலிருந்து இத்தொழில் புரிவோரின் சிறப்புத் தன்மையினை அறியமுடிகிறது.

சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர் அன்றாடத் தேவையான அரிசி, பருப்பு, உப்பு, பால், தயிர், மீன், இறைச்சி போன்ற பொருள்களைப் பண்டமாற்று செய்து கொண்டனர். பண்டமாற்று என்பது ஒரு பொருளைக் கொடுத்து அதற்கு ஈடாய் இன்னொரு பொருளைக் கொள்வது என்பார்[124] மயிலை சீனி.வேங்கடசாமி.

பொருநர் ஆற்றுப்படையில் குறிஞ்சி நில மக்கள் தேனையும், கிழங்கையும் கொண்டு வந்து கொடுத்து மீன் நெய்யையும் நறவையும் பெற்றனர். மருத நிலத்தவர் கரும்பு, அவல் (நெய்தல்) ஆகியவற்றை கொண்டுவந்து கொடுத்து மான்தசையையும் (குறிஞ்சி) கள்ளையும் பண்டமாற்றாகப் பெற்றனர்.

**“தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்**
**மீன் நெய்யொடு நறவு மறுகவும்”** [125]

என்ற வரியினுள் பண்டமாற்று முறை (புறம். 343:1–10, 33:1–7; குறுந். 221:2–4; மதுரை. 500–506; மலைபடு. 413) மேற்கொள்ளப்பட்டமை அறியலாம்.

**நாழிகைக் கணக்கர்:**

பண்டைக் காலத்தில் நாழிகை வட்டில் இருந்தது என்றும், அது கொண்டு நாழிகையை அளந்தனர் என்றும் அங்ஙனம் அறிந்து கூறுபவர் நாழிகைக் கணக்கர் என்பவர். இவரைக் குறித்து பின்வருமாறு கூறுகிறது முல்லைப் பாட்டு.

**"பொழுது அளந்து அறியும் பொய்யாமாக்கள்**
**தொழுது காண்கையர் தோன்ற வாழ்த்தி"** [126]

நாழிகை வட்டிலைக் கொண்டு இத்துணை நாழிகை என்று நாழிகையைக் கணக்கிட்டச் செய்தியினை இவ்வரிகள் புலப்படுத்துகின்றன.

**தோல் தொழில்:**

மென்மையான தலை மயிரையுடைய சேணம் இட்ட படுக்கையைப் போன்ற ஆடுகளின் தோலை உரித்து ஒன்றாகத் தைத்த வார்மிதித்த தோற்படுக்கையினைப் பயன்படுத்திய செய்தி (மலைபடு. 418–419) புலனாகிறது. பண்டைக் காலத்தில் தோலால் படுக்கை அமைத்தல் வழக்கம். ஆக இத்தொழில் புரிவோர் இருந்த செய்தி அறியப்படுகிறது. காலணியை 'தொடுதோல்' என்று அழைக்கின்றது பெரும்பாணாற்றுப்படை, **"தொடுதோல் மரீஇய வடு ஆழ் நோன் அடி"** கால் முழுவதையும் மறைக்கின்ற காலணியையும் (பெரும். 68:69) அணிந்திருந்தனர்.

**காவலர்கள்:**

பாண்டிய மன்னனின் பாசறையில் இரவுப் பொழுதை பகல் பொழுதாக மாற்றும் திண்மையான பிடியை உடைய வாளைக் கச்சுடன் கட்டிய மகளிர்கள் நெய்யை உமிழ்கின்ற திரிக்குழவை உடையவராய் நீண்ட திரியை இட்டுப்பாவை விளக்குகளை அவியுந்தோறும் ஏற்றி வைத்தனர்

**"இரவு பகல் செய்யும் திண் பிடி ஒள் வாள்**
**விரவு வரிக் கச்சின் பூண்ட மங்கையர்**
**நெய் உமிழ் சுரையர் நெடுந் கொளீஇ"** [127]

அரசனுக்கு என்று அமைக்கப்பட்ட இல்லத்தில் விளக்குகள் இருந்தன. அவை அவிந்தபோது மங்கையர் ஏற்றினர். அவர் காவலையும் மேற்கொண்டனர். அதனால் காவல் தொழிலுக்கு ஏற்ப வாளை உடையவராக விளங்கியதை இப்பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன. மேலும் மெய் காப்பாளர்கள் காவலாகத் திரிவர். இவர்களை,

**".... ஓங்கு நடைப் பெரு மூதாளர் ஏமம்"** [128]

என்று அழைப்பர். இவர்கள் பகைவரின் வஞ்சனைக்கு உட்படாமல் தம் மன்னர் மாட்டு உண்மையான நன்னடத்தையுடன் நடப்பர் என்று மொழிகிறது. இவர்கள் மட்டுமின்றி யவனரால் அமைக்கப்பட்ட பள்ளியுள் காவல் பூண்டவராய் (முல்லை 61–66) இருந்தனர்.

நகரத்தையும் நாட்டையும் காக்கும் காவற் பணிகளில் ஈடுபட்ட மக்கள் பலராவார்கள் (அகம் 122:6, 2:14; முல்லை 162:7). அவர்களுள் அரிய காத்தல் தொழிலுடைய நகர காவலர்களைக் குறித்தும்,

**“பெருங்குளம் காவலன் போல”** [129]

சிறிய கரையை உடைய குளத்தைக் காவல் செய்யும் நீர்நிலை காவலர்களைக் குறித்தும் பதிவு செய்துள்ளன.

வையை ஆற்றில் பெருகிய வெள்ளம் கரைகளை உடைத்தன. அதனை அடைக்கும் பொருட்டுப் பறை கொட்ட வேண்டும் என்று கரைக் காவலர் கூறுவதிலிருந்து இவர்தம் தொழிலினை (பரி 6:22–24, 10:7–8) அறியமுடிகிறது.

**உணவு சமைப்பவர்:**

அறச்சாலைகளில் மிகுதியான அளவில் உணவாக்கி படைக்கும் மடைத்தொழிலாளர்கள் இருந்துள்ளனர். அவ்வாறு அவர்கள் உணவு சமைக்கும் பகுதியினை, **“உதியன் அட்டில் போல ஒலி எழுந்தது”** (அகம் 168:7) **‘அட்டில்’** என்று கூறுகிறது நெடுந்தொகை.

**சுங்கம் வாங்குவோர்:**

பூம்பட்டினத்தில் வரி வசூல் செய்பவர்கள் கதிரவன் போன்று ஒய்தலில்லாது தம் பணியினை ஆற்றி வந்தனர். இவர்கள் தம் மன்னனின் பொருளைப் பிறர் கொள்ளாமல் காவல் (பட்டினப். 120–125) செய்தனர்.

**பல்வகைத் தொழில்கள் – கைத்தொழில்:**

- சங்குகளை அறுத்து வளையல் முதலியன கடைபவர்கள்
- மணிகளில் துளை இடுபவர்கள்
- சுடும் நன்றாகிய பொன்னை அணிகலனாகச் செய்யும் தட்டார்
- பொன்னை உரைத்த உரையை அறுதியிடும் பொன்வாணிகர்
- புடவைகள் விற்பவர்
- செம்பு நிறைக்கட்டதனை வாங்கிக் கொள்பவர்
- கச்சுகளைத் தம் தொழில் முற்றுப்பட முடிபவர்
- பூக்களையும், சாந்தையும் நன்கு ஆராய்ந்து விற்பவர்

- பலவகைப்பட்ட தொழில்களையும் ஒப்புக்காட்டிக் கூர்மையாய் உணர்ந்த கூரிய அறிவை உடைய ஓவியர்
- நெய்தல் தொழில் செய்பவர்

எனப் பல்வேறு தொழில் புரிந்தவர்களைப் பட்டியலிடுகிறது **(511–522)** மதுரைக்காஞ்சி.

**பாணர், பறையர், துடியர் கடம்பர்:**

பாணர், பறையர், துடியர், கடம்பர் என்பார் ஒருசேரப் புலையரென்று அழைக்கப்பட்டனர். பாணன், பறையன், துடியன், கடம்பன் இந்நான்கல்லது குடியும் இல்லை ? (புறம் 355) என்று இவர்களைப் பற்றி பேசுகின்றது புறப்பாடல். பறையை முழக்கியவனை பறையன் என்றும், துடி கொட்டுபவன் துடியன் என்றும் அறியப்பட்டனர். பாணர் என்பார் யாழ் மீட்டி இசை பாடும் இயல்பினர்.

இவர்களை இழிசினர், இழி பிறப்பாளர் புலையர் என்று குறித்துள்ளமை சமூகத்தில் இவர்களின் நிலையைக் காட்டுகின்றது.

**“கோட்டியோ வாழி பாண, பாசறைப்**
**பூக்கோள் இன்றென் நறையும்**
**மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே”** [130]

**“இழிபிறப் பாளன் கருங்கை சிவப்**
**வலிதுறந்து சிலைக்கும் வுன் கண் கடுந்துடி”** [131]

**“துடியெறியும் புலைய**
**எறிகோல் கொள்ளும் இழிசின”** [132]

இடுகாட்டில் செய்யும் கிரியைகளைப் புலையர்கள் செய்தனர் என்பதனை,

**“கள்ளி போசிய களரி மருங்கின்**
**வெள்ளில் நிறுத்த பின்றைக் கள்ளோடு**
**புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி**
**புலைய னேவப் புல்மேல் அமர்ந்துண்டு”** [133]

எனும் பகுதி புலப்படுத்துகிறது. பிணம் சுடும் கடமையை இவர்கள் மேற்கொண்டிருந்தனர்.

**அந்தணர் தொழில்:**

> **"ஓதல் வேட்டல் அவை பிறர்ச் செய்தல்**
> **ஈதல் ஏற்றலென்று ஆறு புரிந்தொழுகும்**
> **அறம்புரி அந்தணர்"** [134]

என அந்தணர்களின் தொழில்களைப் பட்டியலிடுகிறது பதிற்றுப்பத்து.

அந்தணர் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் முதலிய ஆறு தொழிலை தவறாமல் செய்பவர் (திருமுரு. 177–180) அறம் கூறும் நாவை உடைய அந்தணர்கள்.

**தெய்வ வழிபாட்டுக்கு வழிகாட்டியவர்:**

தெய்வ வழிபாடு செய்யும் முறைமையை உணர்த்தும் மாந்தரும் இருந்தனர். இவர் கோவில் பூசாரிகளாவர். வேள்வி முறை காட்டி, விழவு முதலியவற்றை முன்னின்று நடத்தி உதவியவர் (பரி 11:77–78) அந்தணராவர்.

**ஆட்டு வாணிகர்–பாசவர்:**

> **"வருநர் வரையார் வாரவேண்டி**
> **விழுந்துகண் மாறாது உணீஇய பாசவர்**
> **ஊனத் தழித்த வானிணக் கொழுங்குறை"** [135]

தம்மிடம் வருபவர்கள் எல்லாம் அளவில்லாது உண்பதற்காக ஆட்டு வாணிகர் விருந்து ஓம்புதற்குரிய அன்பு மாறாதவராய் ஊனை வெட்டும் மனை மேல் வைத்துக் கொத்தித் துண்டித்தனர்.

ஆட்டு வணிகரிடம் வாணிகம் செய்ய வருபவர்க்கு அந்த ஆட்டு வாணிகர் அன்பு குன்றாமல் அவர்கள் நிறைய உண்ணும்படி செய்வர்.

குறவராக, இடையராக, உழவராக, பரதவராக ஆண்கள் காட்சிப் படுத்தப்படுகின்றனர். ஆனால் குறத்தியாக, இடைச்சியாக, உழத்தியாக, பரத மகளிராக அவர்களும் அவர்கள்தம் தொழிலும் மேம்பட்டுக் கருதும்படி பெருமிதத்தோடு காட்சிப்படுத்தப்படவில்லை.

குறத்தியாக, ஆய்ச்சியராக, உழத்தியராக, நுளைச்சியராக, எயிற்றியராக (புல்லரிசி எடுத்தல்), அரியலராக, புலைத்தியாக, பருத்திப் பெண்டிராக, அகவன் மகளிராக, கட்டுவிச்சியாக, முதுபெண்டிராக, பூவிலை மடந்தையாக (அளியள்), அடுமகளிராக, ஒள்வாள் பூண்ட மங்கையராக, ஏவல் மகளிராக,

கலை மகளிராக வினையினை மேற்கொண்டிருந்தாலும், பொருளின் உடைமையாளராக பெண்கள் இல்லை. பெண்ணின் இருப்பு ஆணைச் சார்ந்ததாக இருந்தமையைக் குறுந்தொகைப் பாடல் விளக்கி நிற்கின்றது.

**“வினையே ஆடவர்க்கு உயிரே வாணுதல்**
**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்”**[136]

இதன்வழி பொருள்தேடல் என்பது ஆணுக்குரியது என்றும் இருத்தல் (ஆற்றியிருத்தல்) என்பது பெண்ணுக்குரியதாக மாறியது. இதனால் அன்றோ பொருள்வயின் பிரிவு என பிரிவினைப் பற்றி கூறப்பட்டுள்ளது.

**“அறன்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்**
**பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்**
**பொருளின் ஆகும்....”**[137]

அறனோடு வாழ்வதற்கும், பிறர் வாயில் நில்லாமல் வாழ்வதற்கும் ‘பொருளே’ முதன்மை என கற்பிக்கிறது சங்க இலக்கியம். அறனை (இல்லறம் பாதுகாப்பது) கடைப் பிடித்து வாழக்கூடியதும், பொருள் ஈட்டும் தன்மையும் இவை இரண்டும் சமமாக பார்க்கப்படவேண்டியது என்பது பாடலின் மைய பொருள். ஆனால் உரையாசிரியர்கள், அரசனுக்கு, பிறருக்கு உதவி செய்தல், அறனோடு வாழ்தலும், பொருள் தன்மையும் என்ற நிலையில் அமைகிறது என்பர். சிறப்பு பொருளாக நோக்கும் பொழுது அறம் – உள்ளீட்டுப் பொருளாக இல்லறத்தை, வாழ்வியலில் பெரும் பங்காற்றிப் பாதுகாப்பதில் பெரும் பங்கு **பெண்** என்ற நிலையில் அமைகிறது.

இது அகநானூற்றில், தலைவனுக்கும், தலைவிக்கும் சொல்லப்பட்ட கருத்து. அக்கருத்தில் உதவுதல் அறனோடு வாழ்தல் என்ற நிலையில் அமைந்து பொருள் ஈட்டுதல் ஆடவருக்குரியது என்று வரையறுத்திருக்கிறது. இதனால் அன்றோ பெண்ணின் உழைப்பு, தொழில் உயிருக்கு நிகரானது என்று கூறப்படவில்லை. ஆனால், ஆண் பெண்ணின் கூட்டுழைப்பால்தான் சமூகம் இயங்குகிறது என்பது உண்மை. வினையே ஆடவர்க்கு உயிர் என்று சொல்லும் அளவிற்கு பெண்ணின் உழைப்பு, தொழில் உயர்வாக பேசப்படவில்லை. இவ்விடத்தில் பெண்ணிற்கான அறம் தொழிற்முறையில் முதன்மையானதாக பதிவுகொள்ளாத தன்மையை உய்த்துணர முடிகிறது. இலக்கியப் பதிவுகளால் வழிவழியாக சமூகம் கடைப்பிடித்து வரும் சூழலில் பெண்ணின் அறம் மறுதலிக்கப்பட்டிருக்கிறது என்பதை ஈண்டு உரைக்க முடியும்.

**முடிவுரை:**

பொருள் தேடுதல் (குறுந். 174:5–7) ஆணின் அறமாக சொல்லப்பட்டுள்ளது. பெண்ணின் பொருள் தேடும் பணி இங்கு பெரிதாக மதப்பீடு செய்தளிக்கப்படாத நிலை. ஆனால் ஆதிக்குடிகளின் வரலாறுகளில் இருந்து சங்க காலம் இறுதி வரையில் பெண் தொழில்கள் வேட்டையாடுதல், கால்நடை வளர்ப்பு, விவசாயம் என அனைத்து தேவையிலும் அவளது பணி பொறுப்புடன் மேம்பட்டதாகவே அமைந்திருப்பதை பாடல் சிலவே குறித்து செல்கின்றமை காணலாம். ஆனாலும், அறத்தின்பாற்பட்டு சமன்பாட்டு நிலையில் பெண் அறம் அணுகப்படாத நிலையை உணரலாம் என்பதை உலகமறியும்.

> **"இம்மை மாறி மறுமை ஆகினும்**
> **நீயாகியர் என் கணவனை"** (குறுந். 49:3–4)

என பெண்களைக் கூறச்செய்து இல் இருத்தல் அவளுக்குரியது என விதி செய்திருக்கிறது சங்க இலக்கியம். இங்கு பெண் அறம் பேணப்படவில்லை. பரத்தையரை நாடிச்சென்ற தலைவன் பெண் அறம் குறித்து எண்ணிப் பார்க்காததால் இல் / அறம் குறுத்து எண்ணிப் பார்க்காததால் பரத்தையை நாடிச் செல்வதும், நிலையற்ற வாழ்தலில் பரத்தையோடு வாழ்ந்திடமுடியாத சூழலில் மீண்டு இல்லத் துணையை / தலைவியை அடைகிறான். அப்பொழுது அவளின் உரையாடல் இவ்வாறாக அமைகிறது. இது பொதுவாகவே தாம் வாழும் காலத்தில் துய்த்தலுக்காவே நுகர்பொருளாக பெண்ணைப் பார்த்த நிலை. ஆனால் தலைவி பரத்தையை நாடிச் சென்று திரும்பிய தலைவனை மறுதலிப்பது என்பது இல் அறத்தின் பாங்கு இல்லை என்பதாக சமூக வழக்கம் கற்பித்திருந்த நிலையில் தலைவனை ஏற்பதும் தலைவியின் சிறப்பை தலைவனும் பேசுவதுமாய் சங்க காலம் அமைந்திருக்கிறது. இது பெண்ணின் அறம் பேசப்படாத நடுநிலைமையோடு இச்சமூகம் அமைந்துள்ள பான்மையை விளக்கும்.

சமூகத்திற்காக ஈட்டிய பொருள், உறவினர்களுக்காக ஈட்டிய பொருள், இன்னொரு உயிருக்காக ஈட்டிய பொருள் என பொருளின் சிறப்பை எண்ணி மதிப்புறும் உழைத்தல் மாண்புடையது. அதனுள் தன் கணவனின் பணியும் முக்கியமாக எண்ணி பார்க்கப்பட்டதால் பொருளீட்ட சென்ற தலைவனை நீயே என் இனிமைக்குரியவன் என்று கூறுகிறாள். பொருளீட்டும் பெரும் பணியை கடல் கடந்தும், மலை கடந்தும், மருத நிலம் கடந்தும் நாட்கள் பலவாகியும், திங்கள் பலவாயினும் ஆண் எனும் தனது பொருளீட்டும் பணியை உயர்வாக மதித்து நாட்டின் வளத்துள் தம் அரும்பங்கையும் ஆற்றுபவனாக எண்ணிய தலைவி, தலைவனே தன் நெஞ்சு நேர்பவனாக

இருக்கிறான் என்று பாடும் பாடலுக்குள் உழைத்தல் எனும் அரும்பணியின் சிறப்பை தானும் ஏற்று நடத்தியவள் பெண் என்பதை ஈண்டு இலக்கியம் வாயிலாக முன்னிறுத்தி பார்க்க முடிகிறது.

சமூகத்தை வளப்படுத்துவது பொருள் என்பதை அறிந்துணர்ந்தவள் பெண். பெரும் பொருளீட்டும் பணியில் போர் செய்வது கடமை என்பதை உணர்ந்தவள் பெண். அதனால்தான் அவள் தன் ஒரு மகனையும் போர்க்களத்துள் நிறுத்துகிறாள். இது போர் அறத்துள் பெண்ணின் திறம் என்பதாக நாம் எண்ணிப் பார்க்கிறோம். ஆனால், அவளது அறம், அறப் பணி, ஆட்சி அரசனின் ஆளுமையில் அவளைப் போன்று பெண்ணைப் போன்று பொதுமையாக சிந்தித்துப் பார்க்கப்படாமல் புறந்தள்ளப்பட்டு இருக்கின்றது என்பதை இவ்வாய்வேடு உரைக்க முனைந்துள்ளது.

**"இளமை பாரர் வளம் நசைஇச் சென்றோர்"** (குறுந் 126:1)

என இளமையில் பொருள் தேடவேண்டியது ஆணின் கடமையாக சொல்லப்பட்டுள்ளது. இச்சூழலில் பெண் மூலதனத்தை உருவாக்கக் கூடிய கூட்டுழைப்பில் வந்த இந்த சமூகத்தில் ஆண் பொருளீட்டுபவனாக காட்டி பெண்ணின் இறுத்தலை, வாழ்வியலை தொடர் உழைப்பில் இருந்த அவளது உழைப்பு வெற்றிடமாக்கியுள்ளது. உழைக்கும் வர்க்கம் இருந்த காலம், உழைப்பின் மூலம் நாட்டு வளத்தை உருவாக்கிய காலம் பெண்ணின் உழைப்பு.

பொருளைத் தேடுபவர்கள் ஆண்கள். இவர்கள் வினைஞர்களாக வினை வழி வந்த பொருட்செல்வத்தின் உடைமையாளர்களாக இருந்தமை புலப்படுகிறது. அந்தந்த நிலங்களில் பெண்களின் தொழில் என்பது குறிப்பிட்ட வளத்தைப் பெருக்கும் முயற்சியைக் காட்டும். எனினும் அவள் தனித்து இயங்காமல் குடும்பத்துள் ஆண் எனும் கணவனைச் சார்ந்தே வாழும் நிலையை சங்க காலம் அமைத்து தந்திருக்கிறது என்பதை பெண் அறம் எனும் ஆய்வின் ஊடாக கண்டுணர முடிகிறது.

ஆடவரை உடைமையாளராக்கி (குறுந் 135) பெண்களை உடைமை அற்றவர்களாக்கி உள்ளது. எத்தகைய உடைமைகளும் அற்ற பெண்களின் கடமையாக சங்க காலத்தில்,

**"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே"** (புறம் 312:1)

என பிள்ளைப்பேறு சமூக கடமையாக இருந்தமை புலப்படுகிறது. அவளது உழைப்பின் முழுமையும், அறிவும், அறமும் சமூகத்திற்கு உரியதாக பார்க்கப்பட்டிருக்கின்றமை சங்க இலக்கியப் பதிவுகளில் பதிவுறாத அறம் என்றே உரைக்கலாம்.

# சான்றெண் விளக்கம்

## இயல் – 3

1. க.ப. அறவாணன், தமிழ்ச் சமுதாய வரலாறு, ப.203.
2. மேலது. ப.202
3. வாழ்வியற் களஞ்சியம் V, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1987, ப.342.
4. தமிழக வரலாறும், பண்பாடும். ப.27.
5. ஞ.தேவநேயப் பாவாணர், தமிழ் வரலாறு, பக்.16–17.
6. மேலது, பக்.16–17.
7. வே.சா.அருள்ராசு, பழந்தமிழகத்தில் இரும்புத் தொழில்.
8. ராகுல சாங்கிருத்தியாயன், வால்காவிலிருந்து கங்கை வரை, ப.33.
9. நற். 276:1–2
10. சிலம்பு நா.செல்வராசு, சங்க இலக்கியமும், சமூகவியலும், ப.28.
11. மா.இராசமாணிக்கனார், சங்க இலக்கிய வரலாறு, ப.583.
12. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், பக்.97–98.
13. மதுரை. 291–293
14. பதிற். 73:8–9
15. கலி. 37:13
16. கலி. 50:9
17. குறுந். 357:5
18. பெரும். 163
19. பெரும். 164–165
20. பொருநர். 242–247
21. பதிற். 71:3
22. சிறுபாண். 190–194
23. அகம். 216:1–2
24. அகம். 140:5–8

25. அகம். 390:8–9
26. நற். 353:1–3
27. பொருநர். 85–87
28. புறம். 311:1–2
29. அகம். 387:4–7
30. அகம். 34:11–12
31. கலி. 72:13–14
32. கலி. 17:7–8
33. மதுரை. 405
34. மதுரை. 409–423
35. முல்லை. 45–49
36. அகம். 157:1–4
37. மலைபடு. 170–172
38. மதுரை. 120–122
39. நெடுநல். 3–4
40. பெரும்பாண். 246–247
41. பொருநர். 193–194
42. பதிற். 26:1–2
43. பரி. 6:9–10
44. ஐங். 1–2
45. குறுந். 131:4–5
46. ஐங். 209:3
47. ஐங். 271:1
48. குறுந். 267:2–4
49. பதிற். 19:22–23
50. மதுரை. 261–262
51. குறுந். 375:3–4
52. அகம். 140:7
53. குறுந். 124:1
54. புறம். 116:7–8
55. நற். 67:8–9

56. மதுரை. 255–260
57. பொருநர். 21–22
58. குறுந். 350:5–6
59. புறம். 228:2–3
60. புறம். 228:1
61. புறம். 256:1
62. புறம். 256:4–6
63. பெரும். 99
64. புறம். 256:1
65. மலைபடு. 476
66. நற். 84:4
67. நற். 200:3–4
68. நற். 293:2–3
69. நற். 299:1
70. நற். 64:4
71. புறம். 299:1
72. பட்டினப். 24–25
73. பட்டினப். 172–174
74. பெரும். 248–249
75. சிறுபாண். 256–261
76. புறம். 287:3–4
77. குறுந். 61:1–2
78. குறுந். 238:1
79. குறுந். 384:6
80. கலி. 59:5
81. பெரும். 207
82. சிறுபாண். 257
83. புறம். 95:4–5
84. புறம். 312:3
85. பெரும். 485–486
86. பெரும். 312–314

87. குறிஞ். 13–14
88. நற். 313:1–2
89. நற். 124:6–7
90. நற். 94:4–5
91. அகம். 24:1–2
92. குறுந். 11:1
93. குறுந். 31:4–5
94. மதுரை. 89–90
95. நெடுநல். 101–102
96. நெடுநல். 49
97. கலி. 88:3–4
98. புறம். 82:3–4
99. அகம். 1:5–6
100. நற். 77:1–2
101. கலி. 17:18–20
102. ஐங். 466:1–2
103. மதுரை. 640–642
104. மலைபடு. 193–195
105. கலி. 23:1
106. குறுந். 13:1
107. மலைபடு. 325–327
108. பதிற். 27:11–14
109. குறுந். 267:6–8
110. மதுரை. 372
111. நெடுநல். 112–114
112. பட்டினப். 49–50
113. பதிற். 61:3
114. அகம். 98:11–12
115. கலி. 22:5
116. பட்டினப். 211
117. பட்டினப். 213–218

118. பட்டினப். 29–30

119. பட்டினப். 131–131

120. பட்டினப். 135–137

121. மதுரை. 424–430

122. மதுரை. 539–544

123. பதிற். 13:23–24

124. பழங்காலத் தமிழர் வாணிகம், ப.13

125. பொருநர். 214–217

126. முல்லை. 55–56

127. முல்லை. 46–48

128. முல்லை. 53–54

129. அகம். 252:15

130. புறம். 289

131. புறம். 170

132. புறம். 287

133. புறம். 360:16–18

134. பதிற். 24:6–8

135. பதிற். 21:9–11

136. குறுந். 135:1–2

137. அகம். 155:1–3

மனிதனின் ஆதிப் பொதுவுடைமைச் சமூகம் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் நீடித்தது. இயற்கையையும், மிருகங்களையும் எதிர்த்து வாழ்வில் பாதுகாப்பிற்காகவும், தனது மேலாதிக்கத்தை நிலைநாட்டுவதற்காகவும் மனிதன் வேட்டையாடினான். வேட்டைச் சமூகத்தைத் தொடர்ந்து 'குழுவாழ்க்கை' தோற்றம் பெற்றது. தன் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள முடியாத மனித இனம் தங்களைக் காத்துக்கொள்ள வேண்டி மேற்கொண்ட கூட்டு (குழு) வாழ்வே **இனக்குழு சமூக அமைப்பு.** இக்குழு வாழ்க்கை அவர்களுக்குப் பாதுகாப்பை அளித்ததோடு ஓய்வு நேரத்தையும் அளித்தது. பொதுவுடைமைச் சமூகத்திலும் இனக்குழுவிலும் இணைந்த வாழ்க்கை முறையில் அனைவரும் சமமாகவே கருதப்பட்டனர். இச்சமூகத்தில் வேட்டை முதன்மைத் தொழிலானது. இயற்கையில் கிடைத்த காய்கள், கனிகள், கிழங்குகள் முதலிய பொருட்களையும், வேட்டையினால் பெறப்பட்ட விலங்குகளையும் பாகுபாடின்றி பகுத்துண்டு வாழ்ந்தனர்.

மருத நிலம் தனியுடைமை அமைப்பை பாதுகாப்பதற்கான அரசு தோன்றி வளரத் தலைப்பட்டதென்பதை அறிவோம். 1. சீறூர் மன்னர், 2. முதுகுடி மன்னர், 3. குறுநில மன்னர், 4. வேந்தர் என நான்கு வகையும் தமிழகத்தில் தலைமை வகித்தமை அறியலாம்.

இனக்குழு வாழ்க்கை அழிந்து நில உடைமையாக மாற்றம் பெற்ற காலமாக சங்க காலம் இருந்துள்ளது. இனக் குழுக்களாக இருந்த தமிழ்ச் சமூகம் பேரரசு என விரிவடைந்த காலம் சங்க காலம். அவ்வரலாற்று மாற்றத்தில் சீறூர் மன்னர் தொடங்கி வேந்தர் வரையான ஆட்சியாளர்களின் அரசு வரையறுத்த அறம் குறித்து இவ்வியல் ஆராய்கிறது.

**"தந்துநிறை, பாதீடு, உண்டாட்டு, கொடை"** [1]

எனும் தொல்காப்பிய நூற்பா குறிப்பிடும் 'பாதீடு' எனும் சொல் பொதுவுடைமைச் சமூகத்தின் எச்சத்தை விளக்குகிறது. சமத்துவ சமுதாயம் இருந்தது என்பதை உறுதிப்படுத்தும் குறியீட்டுச் சொல்லாகவே பார்க்கலாம்.

"உற்பத்தி சக்திகளின் மீது மனிதன் ஆதிக்கம் செலுத்தினான். இயற்கையின் வரலாற்றுக் கட்டங்கள் இவற்றில் அமைந்துள்ள வேறுபாடுகள் பல்வேறு மக்களின் வளர்ச்சியிலும் பல்வேறு வர்க்கங்கள் சமூக நிறுவனங்கள், பண்பாட்டுத் துறைகள் ஆகியவற்றில் வளர்ச்சி வேகத்திலும், வேறுபாடுகள் ஏற்படுத்தி நின்றன. இதனால் வரலாறு முன்னேறுகிறபோது சமுதாயத்தின் ஓர் பகுதி அல்லது மற்றொரு பகுதியில் வேகமாகவோ மெதுவாகவோ வளர்ச்சி காணப்படும்" என மார்க்ஸ் எங்கெல்ஸ்[2]

குறிப்பிடுவது சமுதாயங்கள்தோறும் ஏற்பட்ட வேறுபட்ட வாழ்வியல் நிலைகளுக்கான காரணங்கள் என்பதாகவே கொள்ளலாம்.

பொதுவுடைமையாகத் தங்களுக்கென்று தாமே உழைத்துக் கொண்ட இனக்குழு அமைப்பு மாற்றம் பெறத் தொடங்கியபோது தொழில் பகுப்பு முறையில் உயர்ந்தோர், இரப்போர் என வேறுபாடுடைய சமுதாயமாக மாற்றம் அடைந்தது.

பெரும்பாணாற்றுப் படையில் எயிற்றியர் குடியிருப்பு (குடிசை) அவர்கள் புல்லரிசி எடுத்தல், விருந்தினர்க்கு அளிக்கும் உணவு, பாலைநிலக் கானவர் வாழ்வு, எயினரது அரணில் பெறும் பொருட்கள் (பெரும்பாண் 82–100, 106–117, 130–133) குறிஞ்சி நிலத்தவர் இயல்பும் தொழிலும் (மேலது 134–146) முல்லை நில வாழ்வு, முல்லை நிலத்தில் கிடைக்கும் உணவு (வரகுச் சோறு, அவரைப்புழுக்கு) (பெரும் 148–184, 190–196) மருத நிலத்தின் வளமான வாழ்வு, மருத நிலத்தில் பெறும் உணவு (வெண்ணெல் உணவு கருப்பஞ்சாறு) (பெரும். 207–242, 255–262) வலைஞர் குடியிருப்பு அக்குடியிருப்பில் பெறும் உணவு (அரிசியிலிருந்து வடித்த கள், சுட்ட மீன்) (பெரும். 263–282) என ஐந்திணை மக்களின் வேறுபட்ட வாழ்க்கை நெறிகள் முரண்பட்ட சமூகத்தைக் காட்டி நின்றன. இவ்வாறு மதுரைக்காஞ்சி குறிஞ்சி (மதுரை 286–301) முல்லை (மதுரை 271–285) மருதம் (மதுரை 238–270) நெய்தல் (மதுரை 315–326) பாலை (மதுரை 302–314) என திணை மக்களின் வேறுபட்ட வாழ்வியல்பு களைக் காட்டி நிற்கின்றது.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனும் நால்வகை நிலங்களும் தலைமை வேறுபாட்டோடு தொடர்புடையனவாய் அதற்கான காரணங்களாய் இருந்துள்ளன.

**“நாடா கொன்றோ காடா கொன்றோ**<br>**அவலா கொன்றோ மிசையா கொன்றோ**<br>**எவ்வழி நல்லவர் ஆடவர்**<br>**அவ்வழி நல்லை வாழிய நிலனே”** [3]

எனும் ஔவையாரின் பாடல் நிலவியல்புக்கு ஏற்ப அமைந்த தலைமை வேறுபாட்டைக் காட்டுவதாய் அமைந்துள்ளது. இங்கு ஆடவர் என்பது ‘ஆள்பவர்’ (பெ.மாதையன், எவ்வழி நல்லவர் ஆடவர், புலமை, தொகுதி 14, பகுதி–2, பக்.13–35) எனும் பொருளுடையது. மதுரைக் காஞ்சியில் ஆடவர் எனும் சொல் ஆள்பவர் எனும் பொருளிலேயே ஆளப்பட்டுள்ளது.

**“நிவந்த யானைக் கணநிரை கவர்ந்த**
**புலர்ந்த சாந்தின் விரவுப் பூந்தெரியல்**
**பெருஞ் செய் ஆடவர்த் தம்மின் பிறரும்**
**யாவரும் வருக ஏனோரும் தம் என**
**வரையா வாயில் செறாஅது இருந்து**
**பாணர் வருக பாட்டியர் வருக”** [4]

எனும் பகுதியில் வரும் பெருஞ்செய் ஆடவர் என்பதற்குப் பழைய உரையாசிரியர் பெரிய செய்கைகளையும் உடைய மண்டலங்கள் ஆள்கின்றவர் எனப் பொருள் எழுதியுள்ளனர். இந்த அடிப்படையில் நோக்கும்பொழுது ஔவையின் பாடலில் நானிலமும், நானிலத் தலைமையும் உரைக்கப் பட்டுள்ளது.

மருத நிலம் – நாடு, முல்லை நிலம் – காடு, நெய்தல் நிலம் – அவல் (பள்ளம்), குறிஞ்சி நிலம் – மிசை (மேடு) என்று குறிப்பிடுகின்றார்.

ஆள்பவரின் நல்லியல்பே அந்தந்த நிலப்பகுதியின் நன்மைக்கு அடிப்படையாகும் இயல்பு. மருதநிலத்தின் வளம், அரசனை உருவாக்கியது. அரசன் என்பவனே நாட்டின் தலைவன். அத்தகைய அரசன் எவ்வழியோ அவ்வழியில் இச்சமூகம் முறையாக இயங்கவேண்டும் என்பது பாடலின் பொதுவான கருத்தாக சொல்லப்படுகிறது. ஆனால், ஆடவர் எனும் ஆணைப் பின்தொடர்ந்தே அவனது கருத்தினை ஏற்றே சமூகம் செல்லவேண்டும் என்று குறிப்பாக பொருள் விளக்கம் அமைகிறது[5] என்பார் க.அ.ஜோதிராணி.

ஆண் சமூகமே தலைமை வகிக்க உரித்தானது என்று சங்க காலம் தீர்மானித்திருப்பதும், ஆடவர் சமூகத்தில் நன்மை விளைப்பது மட்டுமின்றி முறைத் திரிந்தும், தவறிழைத்தும் பரத்தமை ஒழுக்கத்துடன் வாழ்ந்ததுமான பண்பாட்டு மாற்றத்திற்கு வித்துக்களாக இருந்துள்ளன என்பதை அறிந்து கொள்ள முடிகிறது. இதன் வழி **“மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்”** (புறம். 186:2) என்பது தெளிவாகிறது.

**சீறூர் மன்னர்:**

சீறூர் மன்னர்கள், அரசர்களைப் போலல்லாது இனக்குழுக்களின் எச்சங்களாக இனக்குழுப் பண்பாட்டோடு வாழ்ந்து வந்துள்ளனர். புறநானூற்றுப் பாடல்களுள் **285** முதல் **335** வரையிலான பாடல்கள் இம்மன்னர்களைப் பற்றியன. இப்பாடல்களின் அடிப்படையில் நோக்கின் இனக்குழுச் சமுதாயக் கலைஞர்களைப் போன்றதல்லாது இனக்குழுச்

சமுதாயத்தின் எச்சங்களாகப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றனர். இவர்களை வன்புலச் சமுதாய தலைவர்கள் என்பர்.

இனக்குழுச் சமுதாய எச்சங்களைத் தாங்கிய அரசு எனும் அமைப்பு உருவாகாத வன்புலச் சமுதாயத் (மலை) தலைவர்களான சீறூர் மன்னர்களின் இயல்பும், (புறம். 314:4–9, 324, 313:4, 327:7, 316:5–7, 331), சீறூர்த் தலைவியரின் சமுதாயத் தொடர்பும் (புறம். 306, 326:7–12, 333), இச்சமுதாய வழிபாட்டு முறைகளும், (அகம். 67:6–15, 131:6–13) (புறம். 306:2–7, 335:9–11, 265:4–9, 335), உணவு முறைகளும், (புறம். 21, 322, 327, 328, 333, 320, 325, 326, 318, 319), போர் நோக்கங்களும் (புறம். 301:15–16, 304:9–10, 322:9–10, 285:7, 306:6–7, 318:7–9, 319:12–15, 320:16–18, 326:12–15) சமுதாய நலம் பேணுதல் என்பதை மட்டுமே மையமாகக் கொண்டிருந்தன.

புலவர்களால் வரவேற்கத் தக்க பண்புடையவராய்ச் சீறூர் மன்னர் இருந்துள்ளனர். இவர்கள் இயற்பெயரால் எங்கும் குறிப்பிடப்பெறவில்லை. வீரம் சார்ந்த பெயர்களாலும் மன்னர் எனும் பெயராலும் மட்டுமே[6] குறிப்பிடப் பெற்றுள்ளனர்.

**"புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்**
**குடியு மன்னுந் தானே கொடியெடுத்து**
**நிறையழிந் தெழுதரு தானைக்குச்**
**சிறையுந் தானேதன் னிறைவிழு முறினே"** [7]

இத்தலைவன் குடிகளோடு கூடிய குடியாக வாழ்ந்தமையைப் புறநானூறு காட்டுகின்றது.

**"குமிழ் உண் வெள்ளை பகுவாய் பெயர்த்த**
**வெண்காழ் தாய வண்காற் பந்தர்**
**இடையன் பொத்திய சிறுதீ விளக்கத்து**
**பாணரொடு இருந்த நாணுடை நெடுந்தொகை"** [8]

வெள்ளாட்டின் பிழுக்கைகள் பரந்து கிடக்கின்றன. வலிய கால்களை உடைய பந்தலின்கீழ் இடையன் கொளுத்திய சிறுதீயின் வெளிச்சத்தில் பாணர் குழாத்துடன் வீற்றிருந்த நாணமாகிய நற்பண்பை உடைய தலைவனாக சீறூர் மன்னன் இருந்துள்ளான். இவன் உடைமையற்றவனாகக் காட்டப்பட்டுள்ளான்.

**"கைப்பொருள் யாதொன்றும் இலன்"** [9]

**"வரகு கடன் இரக்கும் நெடுந்தொகை"** [10]

வாளையும், சீறியாழையும் பணையாக வைத்து விருந்து பேணும் இயல்பினனாக இருந்துள்ளான். (புறம் 316:5–7) வில் கொண்டு வேட்டையாடும் தலைவனாக, வறுமையுள்ளவனாக (புறம் 331:2) இருந்துள்ளான் எனப் புறநானூறு கூறுகின்றது. உள்ளது மிகச் சிறிதளவாக இருந்தாலும் வந்தவர்க்கு அளிக்கும் இயல்புடையவன்.

**சீறூர் தலைவி:**

சீறூர் மன்னனின் தலைவியரும் விருந்தோம்பல் பண்பையும், வீரத்தையும் பெற்றுள்ளதை மூதின் முல்லைப் பாடல்கள் காட்டுகின்றன.

**"களிறுபொரக் கலங்கு, கழல் முள்வேலி**
**அரிது உண் கூவல், அம்குடிச் சீறூர்**
**ஒலிமென் கூந்தல் ஒள்ளுதல் அரிவை**
**நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது**
**விருந்து எதிர் பெறுகதில் யானே என்னையும்**
**....... வேந்தனொடு**
**நாடு தரு விழுப்பகை எய்துக"** [11]

களிறுகள் கலக்கியதால் உண்ணுநீர் அரிதாகிய நீர் நிலைகளையும், முள்ளையுடைய கழற்கொடியாகிய வேலியையும் உடைய சீறூரின் தலைவி தான் விருந்தினரைப் பெற வேண்டும் என்பதற்காகவும் தன் தலைவன் வேந்துவிடு தொழில் மேல் செல்லவேண்டும் என்பதற்காகவும் நாளும் தவிராமல் நடுகல்லைக் கைதொழுது பரவுவாள் எனும் நிலையில் விருந்து பேண வேண்டும் என்பதை அடிப்படை நோக்கமாய்க் கொண்டவள் சீறூர் தலைவி.

இனக்குழுச் சமுதாயத்தில் தலையாயது பகிர்ந்துண்ணுதல். இதனை கூட்டுண்ணுதல் என்ற பதத்தில் சங்கப் பாடல்கள் சுட்டுகின்றன. கூட்டுழைப்பில் சிறுவர்களும் வில்லை எடுத்து வேட்டைத் தொழிலில் (புறம் 322:4, 324:3, 326:8) ஈடுபட்டனர். மேலும் இல்லத்தின் முன் அமர்ந்து கூட்டுழைப்பில் கிடைத்த உடும்பைப் பங்கிட்டுக் கொண்டதைப் புறப்பாடல் (புறம் 325:7–10) வழி அறிய முடிகிறது. வன்புலமே (புன்செய் நிலம்) சீறூர் மன்னரின் வாழ்விடம் என அந்நிலத்துக் கருப்பொருள்களின் (புறம் 306, 314, 320–322, 324, 327–328, 330, 333, 335) வாயிலாக அறியலாம்.

**முதுகுடி மன்னர்:**

மருத நிலத்தின் தலைவர்களாக விளங்கியவர்கள் முதுகுடி மன்னர்கள். இவர்கள் உடைமையாளர்களாக வாழ்ந்துள்ளனர். புறநானூற்றின் 20 பாடல்கள் (336–355) இவர்கள் பற்றியதாக காணப்படுகிறது. இப்பாடல்கள் வேந்தருக்கும், முதுகுடிமன்னர்க்கும் இடைப்பட்ட போர் குறித்து கூறுகிறது. உடைமையாளர்களாய் இருந்த இம்மன்னர்கள் மகட்கொடை வேண்டிய வேந்தரோடு முரண்பட்டுப் போரிட்டு அழிந்தமையை இப்பாடல்கள் விளக்குகின்றன. அழகுடன் அமைந்த மகளை ஈன்றத்தாய் போரை நிகழ்த்த காரணமாக இருந்ததாகவும், மகளின் அழகே ஊரின் அழிவைத் தேடித் தந்தது என்கிறது. தாயும் மகளும் குறைகூறப் பெறுகின்றனரே தவிர ஊரை அழித்த வேந்தர் செயல்கள் எப்பாடலிலும் மதிப்பிடப்படவில்லை.

இவர்கள் மூவேந்தர்க்கு மகட்கொடை மறுத்தமைக்கு காரணம் அச்சமுதாயத்தின் திருமண உறவுமுறையே காரணம். இவர்கள் சில குறிப்பிட்ட குடியினருடன் மட்டுமே திருமண உறவு வைத்திருந்தனர் என்பதை சங்கப்பாக்கள் வழி அறியமுடிகிறது.

**“பொருநர்க்கல்லது பிறர்க்கு”** [12]

**“புரையோர் அல்லோர்”** [13]

**“நிரல் அல்லோர்”** [14]

என்பன முதுகுடி மன்னர் சமுதாயத் திருமண உறவு குறிப்பிட்டவர்களோடு மட்டுமே இருந்ததை வலியுறுத்துகின்றன. வேந்தர் மகட் கொடைக்கு உரியவர் அல்லர் என்பதை,

**“..... மைந்தர் தந்தை**
**இரும்பனை அன்ன பெருங்கை யானை**
**கரந்தை அம் செறுவின் பெயர்க்கும்**
**பெருந்தகை மன்னர்க்கு வரைந்திருந்தனனே”** [15]

இப்பாடல் விளக்கி நிற்கின்றது. இக்குடியினர் வேந்தர்களால் அழிக்கப்பட்ட போதிலும் அவர்கள் பொருள்களைக் கொடுத்து மகட்கொடை வேண்டிய போதிலும் முதுகுடி மன்னர் தங்கள் மண உறவு நெறிகளிலிருந்து மாறாமல் வேந்தரை எதிர்த்து அழிந்ததை இப்பாடல்கள் காட்டுகின்றன.

இவர்கள் ஊர்த்தலைவர்களாக இருந்தமையைப் புறநானூறு (புறம் 341:19, 343:17, 350:2, 355:2–3, 336:17, 354:7, 345:20) கூறுகின்றது. இயற்பெயரை

அல்லாமல் தொல்குடி வழி மன்னன் (புறம் 353:10) எனப் பொதுப்பெயரால் சுட்டப்பெற்றுள்ளமையை அறியலாம்.

வேந்தர்கள் பெண்ணை மணக்க வேண்டும் என்பதற்காகப் போரிட்டு வென்றதும், பெண் தரவேண்டும் எனப் போர்செய்து அழித்ததும் சங்கப்பாடல் தரும் செய்திகள். இங்கு பெண்ணை மணக்க வேண்டும் என்பதன்றி அவ்வரசனின் செல்வத்தைப் பரிசாக ஆக்கிக் கொண்ட நிலையைக் (புறம் 314:3, 336, 339, 346, 348, 396, 399) காணமுடிகின்றது.

**குறுநில மன்னர்கள்:**

முடியுடை வேந்தர்களைப் போலவே குன்றாப் புகழ்கொண்டு குறைவிலா நெஞ்சத்தோடு சிறிய நிலப்பகுதிகளைத் தங்களுக்குரியது என எண்ணி ஆட்சி புரிந்துள்ளனர் குறுநில மன்னர்கள் என்பதைச் சங்க நூல்கள் அறிவிக்கின்றன. குறுநில மன்னர்கள் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் வேளிர், மழவர், ஆவியர் போன்ற பல்வேறு குடிவழி வந்தவர்கள். மலைச் சார்ந்த நிலங்களை ஆண்டனர். இவர்களை மலைத் தலைவர்கள் என்று புறநானூறு (புறம் 103, 123, 133, 135, 141, 149, 152, 158, 179) (பெ.மாதையன் சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும் ப.17) பதிவு செய்துள்ளது. இவர்கள் வேந்தர்களைச் சார்ந்தும் ஆட்சி செய்துள்ளனர். வேந்தர்களைப் போல திறைப் பெற்றமையும் சங்க இலக்கியம் (புறம். 20, 93, 318) வழி அறிய முடிகிறது.

**வேந்தர்:**

> **“வன்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு**
> **நாற்பெய ரெல்லை யகத்தவர்”** [16]

சங்க காலத் தமிழகம் முடியுடை மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டியர்களால் ஆளப்பெற்றதை தொல்காப்பிய நூற்பாவால் அறியமுடிகிறது. மூவேந்தரைக் குறிக்கும் தொல்காப்பியனார் சேர, சோழ, பாண்டியர் எனக் குறிப்பிடாமல் மூவேந்தர்க்கும் உரிய தார் இன்னதெனக் கூறுகிறார்.

> **“.... உறுபகை**
> **வேந்திடைத் தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்**
> **போந்தை வேம்பே, ஆர் என வரூஉம்**
> **மாபெருந் தானையர் மலைந்த பூவும்”** [17]

சங்கப் பாடலுள்,

**“மண்டின் கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்**
**முரசு முழங்கு தானை மூவருள்ளும்”** [18]

எனக் குறுநில மன்னர்களால் ஆளப்பட்டு வந்த தமிழகம் முப்பெரும் பிரிவுகளாகப் பகுக்கப்பட்டு மூவேந்தர்களின் அரசுக்கட்டிலாகத் திகழ்ந்தமையைப் புறநானூறு கூறுகின்றது.

**சேரர்:**

சோழ, பாண்டிய நாடுகளைவிட நிலப்பரப்பில் பெரியதாக இருந்த (க.சண்முகசுந்தரம், சங்ககாலச் சேர வேந்தர்கள், ப.3) சேர நாடு ஐந்து நாடுகளை (குட்டம், குடம், தற்கா, பூமி, மலாடு) உள்ளடக்கியது. சேரரின் சின்னம் வில்லும், பனம்பூ மாலையும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஐரை, கொல்லி, பாயல், நன்றா, நேரி எனும் மலைகள் சேர நாட்டிற்கு சிறப்பளிப்பவை ஆகும். ஆன்பொருநை, காஞ்சியாறு, குடவனாறு, காரியாறு, பேரியாறு எனும் ஆறுகள் அந்நாட்டை வளப்படுத்தின.

இவர்கள் தம் வரலாறு சங்க இலக்கியங்களால் உரைக்கப்பெறுகிறது. அவ்வாறு அவர் வரலாறு உரைக்கும் நூல்களுள் பதிற்றுப்பத்தும் அவற்றின் பதிகங்களும் சிறப்புடையனவாகும்.

**சோழர்:**

**“மறக்கெழு சோழர் உறந்தை அவையத்து**
**அறம் கெட அறியாது”** [19]

என அறத்தை நிலைநாட்டிய புகழுக்குரியவர் சோழ வேந்தர்கள். இவர்கள் ஆரியர்களின் வருகை முன்பு வாழ்ந்த கருப்பு மனிதர்கள் எனச் சங்க கால அரசர் வரிசை எனும் நூல் (கா.கோவிந்தன், ப.2) விளக்கம் தருகின்றது.

புனல் நாடு, பன்றி நாடு, அருவ நாடு என்பவற்றைக் கொண்டமைந்த பெருநாடாய் சோழநாடு விளங்கியது. இதன் எல்லையை புறப்பாட்டும் (புறம். 67:12) பட்டினப்பாலையும் (பட்டினப். 285–287) வரையறை செய்கின்றன. சோழர்களின் அறங்கூர் அவையம், உறந்தையில் செயல்பட்டதாகவும், அங்கு ‘அறம்’ நின்று நிலைபெறும் எனப் புறநானூறு (புறம். 39:3–9) கூறுகின்றது.

சோழநாடு சோறுடைத்து எனும் தொடர் வழி மிகு விளைச்சல் உடைய, நாடாக சோழநாடு இருந்தமையை,

**"ஒரு பிடி படியும் சீறிடம்**
**எழு களிறு புரக்கும் நாடு"** [20]

புறம் வழி அறியமுடிகிறது. 'நாளங்காடி', 'அல்லங்காடி' (மதுரைக் காஞ்சி) எனும் சொல் வழி சோழநாடு வாணிகத் தளமாக இருந்தமை புலப்படுகிறது. காவிரி புரக்கும் நாடாக (பட்டினப் 1–7) சோழ நாடு இருந்தது. சோழ நாட்டின் சின்னம் புலிக்கொடி அத்தி மாலையாகும்.

சேரர்களைப் பற்றி அறிந்துகொள்வதற்குப் பதிற்றுப்பத்து எனும் புறநூல் உதவுகிறது. ஆனால் சோழர்களைப் பற்றி அறிய அத்தகைய முழுமையான இலக்கியம் எதுவும் இல்லை என்றாலும், பட்டினப்பாலை, பொருநராற்றுப்படை, புறநானூறு முதலான நூல்கள் வழி அறிய முடிகிறது.

**பாண்டியர்:**

மதுரையை தலைநகராக கொண்டு தமிழகத்தின் தென்பகுதியை ஆட்சி செய்தவர்கள். வேப்பம்பூ மாலையையும், கயல்மீன் சின்னத்தையும் கொண்டவர்கள். மக்கள் பகையோடும் இயற்கை பகையோடும் போராடியவர்கள். வாணிபத்தில் சிறந்து விளங்கியவர்கள் (மதுரைக் காஞ்சி 504–506)

பாண்டியன் அவையில் தமிழ் ஆய்ந்தமையை சங்கப்பாக்கள் வழி அறிய முடிகிறது.

**"தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே"** [21]

**"தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்**
**மகிழ்நனை மறுகின் மதுரை"** [22]

பழமையும், பெருமையும், மொழிவளர் சிறப்பும் கொண்டு அரசாட்சி செய்தார்கள் பாண்டியர்கள்.

**அரசு:**

பொது ஒழுங்கை நிலைநாட்டவும், வர்க்கங்கள் மற்றும் சமுதாயக் குழுக்கள் ஆகிய அனைத்தின் நலன்களையும் பேணி காப்பதற்கான பொறுப்புடைய ஓர் அமைப்பு 'அரசு'. எல்லாக் காலத்திலும் அரசு நிலவவில்லை. ஆதிகாலச் சமுதாயத்தில் அதிகார அரசு இருந்ததான பதிவும் இல்லை. திட்டவட்டமான வரலாற்று நிலைமைகளால் வளர்ச்சி தடைப்பட்ட வர்க்கப் பிரிவுகளை அறியாத மக்களினங்கள் மத்தியிலும் அரசு

இருக்கவில்லை. ஆனால் சமுதாயம் வர்க்கங்களாகப் பிரிவுகொண்டபோது, அதாவது சுரண்டுவோர், சுரண்டப்படுவோரின் தோற்றத்தோடு அரசும் தோன்றியது.

சமுதாயம் வர்க்கங்களாகப் பிளவுண்ட போதுதான் அதாவது மற்ற குழுவின் உழைப்பைத் தொடர்ந்து சுரண்டுகின்ற ஒரு குழுவைக்கொண்ட மக்கள் குழுக்கள் தோன்றியபோது தான் அரசு தோன்றியது என்று வரலாறு எடுத்துக்காட்டுகிறது.

அரசியலில் அதிகாரத்தின் கருவிகள் அல்லது அமைப்புக்கள், நீதிமன்றங்கள், சிறைக்கூடங்கள், படைகள் ஆகியவை இவற்றில் அடங்கும். இவற்றைக் கட்டுப்படுத்துகிற அரசாங்கமே ஓர் அரசியல் அதிகார அமைப்பாகும்.

வர்க்கங்களாக சமுதாயம் முதலில் பிரிக்கப்பட்டபோது ஆளும் வர்க்கம் பெற்றுள்ள சலுகைகளைக் காப்பாற்றிக் கொள்வதற்காக ஒரு தனி இயந்திரம் தேவையாய் இருந்தது. உழைக்கும் மக்களை ஒடுக்குவதற்காக வந்த இத்தகைய இயந்திரம் அடிமை, உடைமை அரசு ஆகும்.

சமுதாயத்தில் இருந்து தோன்றிய, சமுதாயத்திற்கும் மேலாக தன்னை உயர்த்தி வைத்துக்கொண்டு சமுதாயத்தில் இருந்து மேலும் மேலும் தன்னை வேறாக பிரித்துக்கொண்டு செல்லும் சக்தி அரசு என எங்கெல்ஸ் குறிப்பிடுவதை போல் சமுதாயத்திற்கு மேலாக தன்னை உயர்த்தி வைத்துக்கொண்ட அரசு அதன் தலைவனான அரசனை எல்லாம் வல்ல ஆற்றல் வாய்ந்தவனாய் காட்டிக்கொண்டது. இதனை சங்கப் புலவர் சிறப்பாக செய்திருக்கின்றனர் என்பார்[23] பெ.மாதையன்.

ஒரு வர்க்கம் மற்றொரு வர்க்கத்தை ஒடுக்குவதற்கான ஒரு இயந்திரமாகவே அரசு எப்போதும் இருந்து வந்திருக்கிறது. பண்டைய அடிமை முறை அரசு உடைமையாளர்களின் அரசாக இருந்து அடிமைகளை அடக்கி வைத்திருக்கப் பயன்பட்டது. நிலப்பிரபுத்துவ அரசு, பண்ணையடிமைகளை ஒடுக்குவதற்கான இயந்திரமாக மேற்குடியினர் கைகளில் இருந்தது. இன்றைய முதலாளித்துவ அரசு, கூலித் தொழிலாளர்களை சுரண்டுவதற்கான ஒரு கருவியாக இருக்கிறது. சமுதாயம் சுரண்டுவோர், சுரண்டப்படுவோர் எனும் பகைமை வர்க்கங்களாகப் பிளவுப்பட்டுள்ளது என்ற முறைமை வரலாற்றினைச் சங்க இலக்கியம் முழுவதும் காணலாம்.

**அறநெறி:**

நாட்டு எல்லையை அரண் செய்துகொள்ள வேண்டும் என்ற கருத்தில் தன்னை தலைவனகாவே நிலை நிறுத்திக்கொள்ளும் முயற்சியின் விளைவாக உருவானதே அறநெறி என்னும் அவனது சிந்தனை.

**"அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"** [24]

மலைகளை இயற்கையான அரணாக கொண்டு வாழ்ந்த அரசன் தன்னை தற்காத்துக் கொள்ளவும், தான் வாழும் நாட்டைத் தற்காத்துக் கொள்ளவும் நினைத்தான். அதன் வழி தன்னைச் சார்ந்த மக்கள் தன்னை ஏற்றுக்கொள்ளவும் செய்தான். தன்னை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதில் சில நெறிமுறைகளை வகுத்தனர்.

**"அறனொடு புணர்ந்த திறன் அறி செங்கோல்"** [25]

உலகில் அறநெறிப்படி 'கோல் ஒச்சுதல்' மன்னன் கடன் எனப்பட்டது. முறை வேண்டி வருவோர்க்கு எளியோனாய் இருந்து முறை வழங்குதல், தண்டனைகள் அளித்தல் அரசனின் அறநெறி, அரசநெறி, நியதி என போதிக்கப்பட்டது.

**"கடனறி மன்னர் குடைநிழல் போலப்**
**பெருந்தண் என்ற மரன் நிழல்"** [26]

மரநிழல் வெயில் மறைத்து குளிர்தரும். ஆட்சி நிழல், துன்பம் போக்கி அமைதி தரும். ஆக அறநிழலாக அரசு அமையும் முறையை கந்தரத்தனார் முறை தெரிந்து ஆளும் மன்னனின் குடைநிழலை மரநிழலுக்கு உவமையாகக் குறித்துள்ளார்.

சங்க கால ஆட்சியும், அரசியலும் மன்னனை உயிர்நாடியாகக் கொண்டன. அவனை மையமாகக் கொண்டே ஆட்சி வட்டம் சுழன்றதை,

**"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்**
**அதனால் யானுயிர் என்ப தறிகை**
**வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே"** [27]

மோசிக்கீரனார் விளக்கி உரைக்கிறார்.

நாட்டின் நல்வாழ்விற்கு அரசாட்சி இன்றியமையாதது. அரசன் இல்லாத நாடு உயிரற்ற உடம்பு போல கருதப்பட்டது. நாட்டின் வளத்தை மேன்மேலும் பெருக்கவும், குடிமக்கள் வாழ்க்கைக்கு கட்டாயமான கல்வி, தொழில், நலன்

ஓம்பல் முதலிய பொது நலன்களில் கருத்தூன்றவும் பகைவர், கள்வர் முதலியவர்களால் மக்கள் அலைவு கொள்ளாதபடி பாதுகாக்கவும் போன்ற பல செயல்களைச் செய்ய ஒரு நாட்டுக்கு அரசாட்சி கட்டாயமாயிருக்கின்றது. இதனாலேயே ஆட்சியை நிழல் என்று சொல்லும் வழக்கம் ஏற்பட்டது. குடைநிழல் என்றும் கூறுவர்.

சங்க காலத்தில் இருந்த தலையாலங்கானத்து செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் என்ற அரசன் தான் இன்ன காரியத்தை நிறைவேற்றாமல் போனால் தன் குடிமக்கள் வேறு தங்கு இடமின்றி அலமருக என்று வஞ்சினம் கூற நேர்ந்த காலத்தில் நிழல் என்னும் சொல்லை (புறம் 72:10–12) பயன்படுத்தியுள்ளார்.

அரசர்கள் குடிப்பழி தூற்றும் கோலனாதலை ஒருபோதும் விரும்ப படாதவர்கள் என்பதை,

**"கால் பார் கோத்து, ஞாலத்து இயங்கும்**
**காவற் சாகாடு கைப்போன் மானதன்**
**ஊறு இன்றாகி ஆறு இனிது படுமே**
**உய்த்தல் தேற்றான் ஆயின், வைகலும்**
**பகைக் கூழ் அள்ளற் பட்டு**
**மிகப் பல் தீ நோய் தலைத்தலைத் தருமே"** [28]

தொண்டைமான் இளந்திரையன் எனும் புரவலனான பாடுதிறன் பெற்ற புலவன் பாடுகிறார்.

அறநெறியை முதலாக கொண்டிருப்பதே அரசனுக்கு சிறப்புடையது. அவன் மிகப்பெரிய படைகளை உடையவனாய் இருப்பினும் அவனுக்கு சிறப்பு ஏற்படாது (புறம். 55) என்கிறார் மதுரை மருதனிளநாகனார்.

**"அறம் துஞ்சும் செங்கோலையே"** [29]

என அறம் தங்கியிருக்கும் செம்மையான ஆட்சியை உடையவன் சேரமான் யானைக்கண் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என பாடல் விளக்கிச் செல்லக் காணலாம்.

**"கொடியார்த் தெறுதலும் செவ்வியோர்க்கு அளித்தலும்**
**ஒடியா முறையின் மடிவலை யாகி**
**நல்லதன் நலனும் தீயதன் தீமையும்**
**இல்லை என்போர்க்கு இனன் ஆகிலியர்"** [30]

என அரசர் கடைபிடிக்க வேண்டிய அரச நெறியை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் எனும் புலவர் சோழன் நலங்கிள்ளிக்கு எடுத்துரைக்கிறார்.

**"சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்**
**அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல"** [31]

பொருளும், இன்பமும் அறத்தின் பின்னே தோன்றுபவை. அறம் கெடும்பொழுது பொருளும் இன்பமும் தானே கெட்டுவிடும் தன்மை உடையது என அறத்தின் வழி செல்வதால் ஏற்படும் சிறப்பினை நலங்கிள்ளிக்கு எடுத்துரைக்கிறார் கோவூர்கிழார்.

அரசன் அறவோனாக இருந்து, ஆய்ந்து முடிவு கூறுகின்ற செங்கோல் நாட்டில் நிலவவேண்டும். எளியவரான குடிமக்களுக்கு அத்தகைய செங்கோலே மகிழ்ச்சி தருவதாக இருக்கும். வெண்குடையோ குடிகளைக் கொடுமை தாக்காதபடி பேணும் தண்ணருளுள் நிழலாகவே இருத்தல் வேண்டும் என்று அரசமுறையினை சோழன் குளமுற்றத்துஞ்சிய கிள்ளிவளவனுக்கு எடுத்துரைக்கிறார் வெள்ளைக்குடி (புறம் 35) நாகனார் எனும் புலவர்.

**"ஆன் முலை அறுத்த அறனிலோர்க்கும்,**
**மாண் இழை மகளிர் கருச் சிதைத்தோர்க்கும்,**
**குரவர்த் தப்பிய கொடுமையோர்க்கும்,**
**வழுவாய் மருங்கில் கழுவாயும் உள என**
**நிலம் புடை பெயர்வது ஆயினும், ஒருவன்**
**செய்தி கொன்றோர்க்கு உய்தி இல் என**
**அறம் பாடின்றே"** [32]

என சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனுக்கு ஆலத்தூர் கிழார் அறத்திற்கு புறம்பான கொடிய செயல் நான்கினை விளக்கி உரைக்கிறார். 'அறம் பாடின்றே' என்று கூறுவதால் அறநெறிகள் பலவற்றையும் தொகுத்து பாடிய நூல் ஒன்று இருந்திருக்கக் கூடும் என்பது தெளிவாகிறது.

**ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்:**

ஆடுவதை ஒரு கொள்கையாக மேற்கொண்ட சேரலாதன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்று அழைக்கப்பட்டான். இவன் போர்க்களத்தில் வாளை உயர்த்தி ஆடினான் என்றும் (பதிற் 56), மகளிரோடு துணங்கைக் கூத்து ஆடினான் என்றும் (பதிற் 52), ஆடல், பாடல்

விநோதங்களில் காலத்தைக் கழித்தான் என்றும் (பதிற் 51, 60) பதிற்றுப்பத்து இவனை குறித்து பேசுகிறது.

**"ஆறுமுட்டுறாஅ அது அறம்புரிந் தொழுகும்"** [33]

நாடு, காடு, பள்ளம், மேடு எனப் பல்வேறு வகைப்பட்ட அகன்ற நாடுகளில் இருந்து வந்து சேர்ந்தவையும், மலையிலும், கடலிலும் உண்டான செல்வப் பொருள்களை அறம் முதலிய துறைகளில் வகுத்துச் செய்யும் அரசாட்சி மாண்பால் செய்வதற்குரிய அறங்கள் குன்றாமல் மேற்கொண்டு ஒழுகும் மன்னவன்.

வருவாயைப் பகுத்துச் செலவிடும் தன்மையுடைய அரசியல் மாண்பு கொண்டவன். அவ்வறங்கள் குன்றாமல் செய்து ஒழுகும் மன்னனை,

**"பகுக்கும் ஆறு முட்டுறாது அறம் புரிந்தொழுகும் நினக்கு"** என்று விளிக்கிறார் காக்கை பாடினியார் நச்செள்ளையார் எனும் பெண்பாற்புலவர்.

**இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்:**

இமயம் வரை சென்று சேரனின் வில் அடையாளத்தைப் பொறித்தவன். சோழன் வேல்பல் தடக்கைப் பெருநற்கிள்ளியோடு போர் செய்து சோழனோடு போர்க்களத்திலேயே உயிர் துறந்தவன். இவன் அஞ்சாமல் எதிர்நின்று அறப்போர் செய்யும் (பதிற் 20) படையை உடையவன்.

**"போரடு தானை சேரலாத"** [34]

அஞ்சாமல் எதிர் நின்று போர் செய்வது அறம் என்ற அரசியல் கொள்கையை உடையவன் என்று குமட்டூர்க் கண்ணனார் பாடுகிறார்.

சான்றோர்கள் அற வாழ்க்கையை வாழ்பவர்கள். அத்தகைய நல்லறங்களை தாமும் விரும்பிச் செய்வர் உம்முடைய சுற்றத்தவர் என்கிறார் குமட்டூர்க் கண்ணனார்.

**"வெய்துறவு அறியாது நந்திய வாழ்க்கைச்**
**செய்த மேவல் அமர்ந்த சுற்றமோடு**
**பதிபிழைப்பறியாது துய்த்தல் எய்தி**
**நிரையம் ஒரீஇய வேட்கைப் புரையோர்"** [35]

பகையால் உள்ளம் துன்பப்படுவதன்றிப், பல நலமும் பெருகிய வாழ்க்கையும், உண்மையை உரைத்து ஐம்புலனும் அடங்கிய ஒழுக்கத்தையும், நரகத்தை எய்தாதபடி நல்வினை செய்து நீங்கிய அறவேட்கையையும்

உடையவர்கள் சான்றோர்கள் என அவர்கள் மேற்கொண்ட அறங்களை முன்மொழிகிறார் புலவர்.

**இளஞ்சேரலிரும்பொறை:**

வஞ்சி நகரிலிருந்து சேரநாட்டை ஆட்சி செய்த இளஞ்சேரல் இரும்பொறை, மூன்று போர்களில் ஈடுபட்டு கோப்பெருஞ்சோழன், விச்சிக்கோன், இளம் பழையன்மாறன் ஆகிய மூவரை வென்றவன். புலவருக்காக (பெருங்குன்றூர் கிழார்) பெரிய மாளிகை கட்டி, அதில் பல செல்வங்களையும் நிரப்பி, மாளிகையைப் பாதுகாக்க காவலாளிகளை (பதிற். பதிகம் 9) ஏற்பாடு செய்தவன்.

**"அரசவை பணிய அறம்புரிந்து வயங்கிய**
**மறம்புரி கொள்கை வயங்கு செந்நாவின்"** [36]

அறம் செய்வதும், மறம் ஆற்றலும் அரசனுக்கு உரியது எனக் பெருங்குன்றூர் கிழார் பாடுகிறார். இவன் அறம்பல செய்பவன். அறத்திற்கு இடையூறு நேர்ந்தபோது அதைப் போக்குவதற்கு மாறாத மறத்தை விரும்பி மேற்கொள்ளும் கோட்பாட்டை உடைய மன்னன். மேலும்,

**".... நனந்தலை உலகத்து**
**இல்லோர் புன்கண் தீர நல்கும்**
**நாடல்சான்ற நயனுடை நெஞ்சில்**
**பாடுநர் புரவலன் ஆடுநடை அண்ணல்"** [37]

வறியவரின் துன்பம் நீங்குமாறு வேண்டியவற்றை நிரம்பக் கொடுக்கும் அறத்தையே ஆராய்தற்கு அமைந்த நெஞ்சை உடையவன் எனப் புகழ்ந்து பாடுகிறார் புலவர்.

**"அரசியல் பிழையாது செருமேந்தோன்றி"** [38]

அரசு சுமையால் பலவகை அச்சத்துக்கு இடம் உண்டாதலாலும், போரில் விழுப்புண் படுதலாலும் ஏற்படும் துன்பம் இல்லாதவன். ஏனெனில் அரசு 'முறை' தவறாமல் போரில் வெற்றி மேம்பாடு உடையவனாக இருப்பதால் 'அரசியல் பிழையாதவன்' என்கிறார் புலவர்.

**களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல்:**

பொன்முடியைச் சூடாமல் நாரால் ஆன முடியைச் சூடி, களங்காயால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்தவன். அதனால் அவன் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் என்று அழைக்கப்பட்டான்.

பகைவரை வென்று அவரது முரசைக் கைக்கொண்டு ஆண்மைக்குரிய கடனைச் செவ்வையாகச் செய்து முடித்தவன். அதனால் **'ஆண்கடன் இறுத்தவன்....'** (பதிற் 31:14) என காப்பியாற்றுக் காப்பியனார் அவனை அழைக்கிறார்.

இவன் அறக்கொள்கையை உடையவன். சேரநாட்டை ஆண்ட சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் இறந்தபிறகு சேரநாடு கள்வர்களாலும், பகை மன்னர்களாலும் நிரம்பின. அதனை மீண்டும் சிறந்த நிலைக்குக் கொண்டுவர பெரும்பாடுபட்டவன் நார்முடிச் சேரல்.

> **"தொன்னிலைச் சிறப்பின்நின் நிழல் வாழ்நர்க்குக்**
> **கோடற வைத்த கோடாக் கொள்கையும்"** [39]

நல்ல மக்களுக்கு ஒப்ப, அவர்களின் மனதில் இருந்த கொடுமை அறவே நீங்கும்படி செம்மையுறத்திருந்திய அறக் கொள்கையும் உடையவன் நார்முடிச்சேரல் என விளிக்கிறார் புலவர்.

பகை மன்னர் வழி நின்று தம் மறத்தை நிலைநாட்டி மேம்பட்டவராதலால் அவரை அழித்தல் அறமே என உணர்ந்து அவரைப் பற்றிக் கொணர்ந்து அவர் உள்ளத்தில் தன்னிடம் பகைமையின்றி நட்பும் துணைமையும் பிறக்கும்படிச் செய்த திறன் உடையவன். ஆதலால் கோடற வைத்த கோடாக் கொள்கையன் என்கிறார்.

**செல்வக் கடுங்கோ வாழியாதன்:**

மடியா உள்ளதோடு, அறநெறியில் அமைந்தவற்றை / அறத்தின் கூறுபாடுகளைச் செய்து முடித்தவன். தன் புரோகிதனைக் காட்டிலும் அறநெறியில் மேம்பட்டவன்.

> **"அறங்கரைந்து வங்கிய நாவிற் பிறங்கிய**
> **உரைசால் வேள்வி முடித்த கேள்வி**
> **அந்தணர்..."** [40]

அறநூல்களைப் பயின்று விளங்கும் நாவு, புகழ் பொருந்திய பல வேள்விகளை முடித்த கேள்விகளை உடைய அந்தணன். அறநூல்களை ஓதுதலும், ஓதச் செய்தலும் நன்கு பயின்றவர். அதனாலன்றோ, அவர்களை (பார்ப்பனரை) வணங்க கூடியவன் என்று கபிலர் பாடுகிறார்.

'பொய்யாமை' அறம் பலவற்றுள்ளும் சிறந்தது. அத்தகைய அறத்தினை மேற்கொண்டவன். விளையாட்டிலும் பொய் கூறாத வாய்மை உடையவன் என்பதை,

**"நகையினும் பொய்யா வாய்மை"** [41]

இவ்வரி புலப்படுத்தி நிற்கிறது.

**பல்யானைச் செல்கெழு குட்டுவன்:**

யானைச்செல் என்ற தொடர் யானைக் கூட்டத்தைக் குறிப்பிடும். பல யானைக் கூட்டங்களை வைத்திருந்ததால் இவன் பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்று அழைக்கப்பட்டவன். தம் அறிவுடன் ஒத்தவரான முதியவரைத் தழுவிக்கொண்டு அவர் கருத்துப்படி ஆட்சி செய்தவன்.

அறத்தினை / அரசியலை முறைப்படுத்தி ஆட்சி செலுத்தியவன் என பாலைக் கௌதமனார் குட்டுவனைக் குறித்து பாடுகிறார்.

அறத்தை செய்வதற்குத் தடையாக இருப்பவை எவை என்பதை கூறி அவற்றை விலக்க வேண்டும் என்கிறார்.

**"சின்னே காமம் கழிகண்ணோட்டம்**
**அச்சம் பொய்ச் சொலல் அன்புமிக உடைமை**
**தெறல் கடுமையொடு பிறவும் இவ்வுலகத்து**
**அறந்தெரி திகிரிக்கு வழியடையாகும்..."** [42]

மிக்க சினம், மிக்க காமம், மிக்க கண்ணோட்டம், பகைவர்க்கு மிக அஞ்சுதல், வாய்மையுடன் பொருந்தாத பொய்சொல்லுதல், அளவற்ற அன்புடைமை, அளவற்ற தண்டம் இவை அறமறிந்து செய்யும் அரசுமுறைக்குத் தீது விளைப்பவை. இவை அறமற்றவை. அறம் / அரசியல் எவை என்பதை,

**".... இவ்வுலகத்து**
**அறந்தெரி திகிரிக்கு வழியடையாகும்**
**தீதுசேனி கந்து நன்றுமிகப் புரிந்து**
**கடலுங் கானமும் பலபயம் உதவப்**
**பிறர்பிறர் நலியாது வேற்றுப் பொருள் வெஃகாது**
**மையில் அறிவினர் செவ்விதின் நடந்துதம்**
**அமர்துணைப் பிரியாது பாத்துண்டு மாக்கள்**
**மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய"** [43]

வரையறுக்கிறார்.

அறமற்றவையைத் தன் நாட்டில் இல்லையாக்கி, அறத்தை மிகுதியாய்ச் செய்து தன் நாட்டில் வாழும் மக்கள் தம்முள் மற்றவரைத் துன்புறுத்தாமல், மற்றவருக்கு உரிய, தமக்கு தொடர்பு இல்லாத பொருளை விரும்பாமல், குற்றம்

இல்லாத அறிவு உடையவராய் செம்மை நெறியில் தவறாது, தம்மிடம் அன்புடன் வாழும் வாழ்க்கைத் துணையைப் பிரியாமல், பலர்க்கும் பகுத்துத் தந்து, தாமும் உண்டு இனிது வாழ, தம்மிடத்து உண்டாகும் பொருள் பலவும் உதவ 'அரசியலை', 'முறையை' செலுத்திய பேரரசர் வழிவந்தவன் எனப் போற்றுகிறார் கௌதமனார். மற்றொரு பாடலில் அறநூல் பயனை விரும்பும் அந்தணர்களை வழிபட்டு ஒழுகுபவன் என்று கூறுகிறார்.

**"ஓதல் வேட்டல் அவைபிறர்ச் செய்தல்**
**ஈதல் ஏற்றலென்று ஆறுபுரிந்தொழுகும்**
**அறம்புரி அந்தணர் வழிமொழிந்தொழுகி"** [44]

மறை ஓதல், வேட்டல் அவை இரண்டையும் பிறர் செய்யச் செய்தல், வேள்வியை இயற்றல், வறியவர்க்கு ஒன்றை ஈதல், தமக்கு ஒருவர் கொடுத்ததை ஏற்றல் என்ற ஆறு தொழில்களைச் செய்து ஒழுகும் அறநூல் பயனை விரும்பும் அந்தணர்களை வழிபட்டு ஒழுகி அதனால் உலகத்தவர் நின்னை வழிபட, புலவர் பாடும் புகழ் நிறைந்தவன் குட்டுவன்.

**குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்:**

இச்சோழனின் அவைக் களத்தில் அறம் நின்று நிலைபெறக்கூடியது என்று மாறோக்கத்து நப்பசலையார் பாடுகிறார்.

**"மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து**
**அறம்நின்று நிலையிற் றாகலின்"** [45]

அத்தகைய 'அறம்' எவை என்று ஆலத்தூர் கிழார் பின்வருமாறு பாடுகிறார்.

**"ஆன்முலை அறுத்த அறனிலோர்க்கும்**
**மாண்இழை மகளிர் கருச்சிதைத்தோர்க்கும்**
**குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்**
**வழுவாய் மருங்கின் கழுவாயும் உளஎன**
**நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்**
**செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்என**
**அறம் பாடிற்றே ஆயிழை கணவ"** [46]

ஒருவர் செய்த நன்மையை அழித்தவர்க்கு நரகத்திற்கு செல்வது அன்றி தப்பிப் பிழைத்தல் இல்லை என அறநூல் கூறுவதாக பாடுகிறார் புலவர்.

இத்தகு அறத்தோடு வாழும் இம்மன்னனின் அரசே சிறந்த அரசாகும் என்கிறார் வெள்ளைக்குடி நாகனார்.

**"அரசு எனப்படுவது நினதே"** [47]

அறக்கடவுள் பொருந்திய ஆராய்ந்தாற் போன்ற செங்கோலால் ஆராய்கின்ற ஆராய்ச்சியையுடைய நீதியைக் கேட்க வேண்டிய காலத்தில் காட்சிக்கு எளியவராய் இருந்து கேட்பது அறம் (புறம் **35:14–16**) என்கிறார் நாகனார். அத்தகு அரசு செய்ததால் அரசு என்று பாராட்டிச் சொல்லப்படுவது நின் அரசே என்கிறார். ஆறுவகைத் தொழிலையுடைய அந்தணர் அறத்தை விரும்பி வளர்த்த தீயினைப் போல் விளங்கும் நாட்டை உடையவன் (புறம் **397**) கிள்ளிவளவன் எனப் புலவர் பாடுகிறார்.

**கோப்பெருஞ்சோழன்:**

**"அறவோர் புகழ்ந்த ஆய்கோ லன்னே"** [48]

அறத்திறம் உடையவர் புகழ்ந்து கூறும் நீதிநூலுக்கு ஏற்ப ஆராய்ந்து நடத்திய செங்கோலை உடையவன் என பொத்தியார் சோழனின் அறத்தைப் பாடுகிறார்.

**சோழன் நலங்கிள்ளி:**

வேலியின் வெளியே நின்று வேண்டியவர்க்கு அறத்தை எண்ணி உள்ளே உள்ளவர் பிடுங்கி எறியும் கரும்பு, நீர் நிலையில் உள்ள தாமரையின் பூந்தாதைச் சிதறச் செய்யும். அதனால் அது கூத்தரின் ஆடுகளத்தைப் போன்று விளங்கும். இத்தகைய நாடு நின்னுடையது என முதுகண்ணன் சாத்தனார் (புறம். **28**) பாடுகிறார். இவற்றில் அரசன் பிறர்க்கு உதவும் பண்புடையவன் என்பதும், அவ்வாறு உதவாது ஒழிதல் உன்னைப் பாதுகாப்பது அரிது என்று கூறி அறத்தைப் பாடுகிறார்.

**அந்துவன்கீரன்:**

சான்றோர் வழியில் பொருள் ஈட்டி, புகழுடன் வாழ்ந்த இம்மன்னன் உலகப்பற்று மிக்கவராய் இருந்தமையால் அறத்தினை இயம்புகிறார் காவிட்டனார் கீரன் எனும் புலவர்.

**"வசையும் நிற்கும் இசையும் நிற்கும்**
**அதனால் வசைநீக்கி இசை வேண்டியும்**
**நசை வேண்டாது நன்று மொழிந்தும்"** [49]

பெரிய நாடுகளை வென்றவரும் சுடுகாட்டை அடைவர். உனக்கும் அத்தகைய நாள் தவறாது. இந்த உலகத்தில் வசையும் புகழுமே நிற்கும். எனவே வசையை நீக்கி புகழை நிறுத்தல் வேண்டும். அதுவே அறம். அத்தகு புகழை அடைய பின்வருவனவற்றை கைக்கொள்ளுதல் வேண்டும் என்கிறார்.

**"பிறழாமல் முறை வழங்குதல்"**

**"இரவலர்க்கு வேண்டுவன தருதல்"**

என்று புகழை நிலைநிற்க அதற்கான அறத்தை கைக்கொள்ளுதல் அவசியம் என்கிறார்.

**பாண்டிய அறிவுடைநம்பி:**

பிசிராந்தையார் எனும் புலவர் தமக்கு நரை தோன்றாமல் இருப்பதற்கு காரணம் என் நாட்டு அரசன் முறை செய்து மக்களைக் காப்பவன். அறமல்லாத செயல்கள் நிகழாமல் ஆட்சி செலுத்துபவன் என (புறம் **191**) அறச்செயலை பட்டியலிடுகிறார்.

- அறமல்லாதவற்றைச் செய்யாதவனாய் நல்லனவற்றைச் செய்து காப்பவன்.
- பிற அறநூல்களில் சொல்லப்பட்ட நற்குண நற்செயல்களை உடையவன்.
- முறை செய்து மக்களைக் காப்பாற்றுபவன் அறமல்லாத செயல்கள் நிகழாமல் ஆட்சி செலுத்துபவன்.
- தன்னாலும், தன் ஏவல் மக்களாலும், விலங்குகளாலும், நோயாலும், பகைவராலும், துன்பம் உண்டாகாத வண்ணம் மக்களைக் காப்பவன்.
- நெறியறிந்து மக்கள் தன்னிடம் அன்பு கெடாமலும் தான் அவர்களிடம் காட்டும் அருள் கெடாமலும் வரி வாங்குபவன்.

**வேள் ஆய் அண்டிரன்:**

கடையெழு வள்ளல்களுள் ஒருவரான 'ஆய் அண்டிரன்' அறத்தை மேற்கொண்டு வாழ்பவன் என உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடுகிறார்.

**"இம்மை செய்தது மறுமைக்கு ஆம்எனும்**
**அறவிலை வணிகன் ஆஅய் அலன் பிறரும்**
**சான்றோர் சென்ற நெறியென**
**ஆங்குப் பட்டன்று அவன்கை வண்மையே"** [50]

இந்தப் பிறவியில் செய்த அறம் மறுபிறவிக்குப் பயன்படும் என எண்ணிப் பொருளை விலையாகத் தந்து அதற்கு அறத்தைப் பெறும் வாணிகன் ஆய்அண்டிரன் அல்லன்.

இந்தப் பிறவியில் புகழ் பெறுவதற்காகவும், மறுபிறவியில் சொர்க்க இன்பத்தைப் பெறுவதற்காகவும் அறம் செய்யக் கூடியவர். சான்றோர் சென்ற நெறியில் செல்வது சிறந்த அறம் என அவ்வறத்தை மேற்கொண்டவன்.

சான்றோர் தம்மைப் போலவே பிற உயிர்களையும் எண்ணுபவர். பயன் எதனையும் அவர்கள் கருதமாட்டார்கள். வறியவர்க்கு வேண்டுவனவற்றைத் தந்து அனுபவிக்கச் செய்பவர். இத்தகு நெறியினை பின்பற்றக்கூடியன் என்று பாடுகிறார்.

**ஆதனுங்கன்:**

நாள்தோறும் இரவு பகல் என்னாது பலரையும் காக்கும் அறத்துறை பெற்றவன் என கள்ளில் ஆத்திரையனார் இவர்தம் அறம் ‘காத்தல்’ என்று பாடுகிறார்.

**“பலர்புரவு எதிர்ந்த அறத்துறை நின்னே”** [51]

**இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்:**

அரசன் நால்வகை படைகளை உடையதாக இருந்தாலும் அவனது வெற்றி என்பது அவன் மேற்கொண்ட அறநெறியை அடிப்படையாகக் கொண்டது என்று மதுரை இளநாகனார் அறிவுறுத்தி நிற்கிறார்.

**“அறநெறி முதற்றே அரசின் கொற்றம்**
**அதனால் நமரெனக் கோல் கோடாது**
**பிறர் எனக் குணங் கொல்லாது**
**ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்**
**திங்கள் அன்ன தண்பெருஞ் சாயலும்**
**வானத்து அன்ன வண்மையும் மூன்றும்**
**உடையை ஆகி இல்லோர் கையற”** [52]

நம்மவர் என்று அவர் செய்த குற்றத்துக்கு ஏற்ப தண்டிக்காமல் விடுதல் கூடாது. அயலார் என்பதால் அவரது நல்ல குணத்தை ஏற்றுக் கொள்ளாமல் விடக்கூடாது. ஞாயிற்றைப் போன்ற வீரத்தையும், சந்திரன் போன்ற அருளினையும், மழை போன்ற கொடையினையும் கொண்டு விளங்க வேண்டும். இத்தகு அறத்தை, அறநெறியை முதலாக கொண்டு ஆட்சி செய்ய வேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

**ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்:**

**"அறன்நிலை திரியா அன்பின் அவையத்துத்**
**திறன்இல் ஒருவனை நாட்டி முறைதிரிந்து**
**மெலிகோல் செய்தேன் ஆகு"** [53]

அறமானது நிலை கலங்காத அன்பினை உடைய அவையில் அறத்தின் திறம் பொருந்தாத ஒருவனை வைத்து முறை கலங்கி கொடுங்கோல் ஆட்சி செய்பவன் ஆகுக என பகை மன்னரிடம் போரிடுவேன் அவரைப் போரில் புறம் காண்பேன். காணாது போயின் எனது ஆட்சி அறன் நிலை திரிந்த ஒன்றாக இருக்கும் என்று மன்னன் சபதம் செய்ததாக அமையும் இப்பாடலின் வழி, பூதப்பாண்டியன் அறத்தினிடம் கொண்ட மதிப்பும் செங்கோலாட்சி செலுத்த வேண்டும் என்ற எண்ணம் கொண்டிருந்த தன்மையும் புலப்படுகிறது.

**தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்:**

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்கு முப்பொருளின் உறுதி தரும் தன்மையைக் குடபுலவியனார் கூறகிறார். அப்பொழுது உயிரையும், உடம்பையும் படைப்பது அறம் என்கிறார்.

**"நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே**
**உண்டி முதற்றே உணவின் பிண்டம்**
**உணவெனப் படுவது நிலத்தொடு நீரே**
**நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு**
**உடம்பும் உயிரும் படைத்திசினோரே"** [54]

**நம்பி நெடுஞ்செழியன்:**

இம்மன்னன் மேற்கொண்ட அறவழியை பேரெயில் முறுவலார் பின்வருமாறு பாடுகிறார்.

**"இவர் நம்மைவிட வலியவர் என்று கருதி**
**அவர்களை வணங்கி வழிபாடான சொற்களைக்**
**கூறி அறியாதவன்**
**நம்மைவிட எளியவர் என்று எண்ணி அவர்களை**
**விடத் தன்னைத்தானே புகழ்ந்து கூறிக்**
**கொள்ளுதல் கிடையாது**
**தான் மற்றவரிடம் சென்று ஈ என்று கூறி**

**இரத்தலை அறியாதவன்**
**தன்னிடம் வந்து இரந்தவர்க்குத் தன்னிடம்**
**யாதும் இல்லை என்று மறுத்துக்**
**கூறுவதை அறியான்**
**நடுநிலையினின்றும் நீங்கிய குற்றம் பொருந்திய**
**சொற்களைக் கூறுதல் கிடையாது"** [55]

என அறநெறியைப் பட்டியலிடுகிறார்.

**பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி:**

போரினை மேற்கொள்ளும்போது போர் அறமாக மன்னர்கள் சிலவற்றைக் கடைபிடித்தனர். அவற்றை நெட்டிமையார் பின்வருமாறு கூறுகிறார்.

**"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
**பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்**
**எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின் என**
**அறத்துஆறு நுவலும் பூட்கை மரத்தின்"** [56]

பசுவும், பசுவின் இயல்பைக் கொண்ட அந்தணரும், மகளிரும், பிணியுடையவரும், பாதுகாத்துத் தெற்குத்திசை வாழ்பவரான குடியில் இறந்தவர்க்குச் செய்ய வேண்டிய கடன்களைச் செய்தற்குரிய பிள்ளைகளைப் பெறாதவரும் கேளுங்கள். யாம் போரிட இருக்கின்றோம். நீங்கள் இங்கிருந்து நீங்கி உங்கட்குப் பாதுகாப்பான இடத்தை அடைவீராக என்று அறநெறியைக் கூறும் மேற்கோள் உடையவர்களாக மன்னர்கள் விளங்கினார்கள்.

போர் அறத்தில் பெண்களும், ஈன்று புறந்தருதல் என்தலை கடனே என பெண்ணிற்காக கடனை முடிக்காதவர்களும் விலக்களிக்கப்பட்டுள்ளனர். அரசனின் அறத்துள் துணை நிற்கக்கூடிய மறக்குடி பெண்களைப் போர் அறத்துள் மறுத்துள்ளனர் என்பதை இப்புறப்பாட்டு வழி அறியமுடிகிறது.

**அரசன்:**

ஒரு மன்னனுடைய பெரும்செல்வமாக 'அரசு', 'ஆட்சி' திகழக்கூடியது என்கிறார் (புறம் 213) புல்லாற்றூர் எயிற்றியனார். அரசன் என்பவன் எத்தன்மை உடையவராய் இருத்தல் வேண்டும் என்பதை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பின்வருமாறு பாடுகிறார்.

**“கொடியோர்த் தெறுதலும் செவ்வியோர்க்கு அளித்தலும்**
**ஒடியா முறையின் மடிவிலை யாகி”** [57]

தீயவரைத் தண்டித்தலும், நடுவு நிலையுடையவர்க்கு அருள் செய்தலும் என்ற முயற்சியால் மன்னன் சோம்பி இருத்தல் கூடாது என்பதன் வழி மன்னனது ஆட்சி நடுவுநிலைமை உடையதாக இருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது.

அரசன் எத்தகைய பண்புடன் திகழவேண்டும் என்பதை குறமகள் இளவெயினி பாடுகிறார்.

**“தமர்தன் தப்பின் அதுநோன் றல்லும்**
**பிறர்கை யறவு தான் நாணுதலும்**
**படைப்பழி தாரா மைந்தினன் ஆகலும்**
**வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தலும்”** [58]

தனக்கு நெருங்கியவர் பிழையைத் தனக்குச் செய்தால் அதைப் பொறுத்துக் கொள்ளுதல், பிறர் வறுமைக்கு தான் நாணம் கொள்ளுதல், படையில் பிறரால் பழித்துக் கூறப்படாத வன்மை உடையவன். மன்னர் கூடிய அவைக்களத்தில் மேம்பட நடப்பவன் அரசன். நாடாளும் அரசன் எத்தகு பண்புடன் நடக்க வேண்டியவர் என்பதை வரையறுத்து கூறுகிறார் பெண்பாற் புலவர்.

**அரச நியதி:**

அரசன் நீதி வழங்குவதில் நடுநிலை பிறழாமல் இருக்க வேண்டியவன். அரசின் பெருமையெல்லாம் அறநெறியை அடிப்படையாகக் கொண்டது. இதனை,

**“அறநெறி முதற்றே அரசின் கொற்றம்”** [59]

எனப் புறநானூறு கூறுகிறது. குற்றத்திற்கு ஏற்ற தண்டனையை அளித்தல் முறையானது. நமர் எனக் கோல்கோடாது பிறர் எனக் குணங்கொல்லாது நீதி வழங்குதல் வேண்டும் என்பதற்காகவே அறங்கூர் அவையம் இருந்தது. இதன்வழி அரசநியதி வழங்கிய முறையை அறிந்து கொள்ள முடிகிறது.

**“நீ மெய்கண்ட தீமை காணின்**
**ஒப்ப நாடி அத்தக ஒருத்தி**
**வந்துஅடி பொருந்தி முந்தை நிற்பின்**
**தண்டமும் தணிதி நீ...”** [60]

உண்மையாக நீ மனத்தால் ஆராய்ந்து முடிவு செய்த தீமையை ஒருவரிடம் கண்டால் அவரை நீதி நூலில் கூறப்பட்டதற்கு ஏற்ப தண்டித்தல் வேண்டும். அவர் நின்னிடம் வந்து அடியை வணங்கி நின்றால் அவர் பிழை செய்வதற்கு முன் நீ காட்டும் அருளைவிட அதிகமாக அருள் செய்து தண்டனையைக் குறைத்தல் வேண்டும் என அரச நியதியை வரையறுக்கிறார் ஊண்பொதி பசுங்குடையார்.

**"அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கி**
**செற்றமும் உவகையும் செய்யாது காத்து**
**ஞெமன் கோல் அன்ன செம்மைத்து ஆகி**
**சிறந்த கொள்கை அறம் கூறு அவையமும்"** [61]

என அறங்கூர் அவையம் செயல்பட்டதை மதுரைக்காஞ்சி விளக்கி நிற்கிறது. இவ்வவையத்தில் குற்றம் நீங்கிய சான்றோரே பணியமர்த்தப் பட்டனர். இவர்களை அரசனே தேர்ந்தெடுப்பர். அவர்கள் நீதியினின்று பிறழின் அப்பழி அரசனை சாரும் என்பர்.

உறையூரிலிருந்த அறங்கூறவையம் மிகவும் புகழ் பெற்றதை புறப்பாக்கள் வழி அறியமுடிகிறது.

**"மறம் கெழு சோழர் உறந்தை அவையத்து**
**அறம் நின்று நிலை யிற்று"** [62]

**"அறம் துஞ்சு உறந்தை"** [63]

அந்த அவையத்தல் தமக்கு ஒரு குறைவு உடையவர் எல்லாம் வந்து முறையிடுவார்கள். சான்றோர் அதனை கேட்டு தீர்ப்பர்.

**"சான்றோர் இருந்த அவையத்து உற்றோர்**
**ஆசு ஆகு என்னும் பூசல் போல**
**வல்லே களைமதி"** [64]

என்று பெருங்குன்றூர் கிழார் வழக்குடையோனது முறையீட்டை உவமையாகக் கூறுகிறார்.

**"பணைத்தோட் குறுமகள்....**

**......**

**முறையுடை அரசன் செங்கோல் அவையத்து**
**யான்தற் கடவின் யாங்கு ஆகுவது கொல்?"** [65]

நன்மை செய்வாரை அளித்தலும், தீயன செய்வாரை ஒறுத்தலும் ஆகிய நீதியை உடைய அரசனது கோல் கோடாது அவையில் தான் விரும்பும் தலைவியைக் குறித்து பேசுகிறான் தலைவன். மடலேறும் தலைவன் தான் விரும்பும் தலைவியைத் தனக்கு அளிக்குமாறு சான்றோரைக் கேட்பதாக குறுந்தொகை பாடல் அமைகிறது.

அறங்கூர் அவையத்தின் தீர்ப்பு நீதியினின்று பிறழ்ந்துபடின் அப்பழி வேந்தனையே சாரும். செங்கோல் கொடுங்கோல் ஆவதும் அத்தீர்ப்பின் வழியே என்பதை, பூதப்பாண்டியன் தன் பகைவரைத் தோல்வியுறச் செய்வதாகச் சொல்லும் வஞ்சினத்தில் உரைக்கிறான்.

**“அறன் நிலை திரியா அன்பின் அவையத்து**
**திறன் இல் ஒருவனை நாட்டி, முறை திரிந்து**
**மெலிகோல் செய்தேன் ஆகுக”** [66]

இதன்வழி அவையத்தில் தக்க சான்றோர் இருத்தலின் அவசியம் புலப்படுகிறது.

அரசனே அவையில் இருந்து வழக்குகேட்டு நீதி வழங்கியதும் உண்டு. கரிகாலன் அவையில் புகும்போதே முதியோர் தமக்குள் கொண்டிருந்த மாறுபாடு நீங்கினர் என முடத்தாமக்கண்ணியார் (பொருநர் 187–188) பாடுகிறார்.

**அரசனது கடமைகள்:**

குடிமக்களுக்கு நிழலாக கருதப்படுபவர் அரசர். மக்களை பாதுகாத்தலே இவர்களது தலையாய கடமையாகும். ‘நெல்லும் உயிரன்று; நீரும் உயிரன்று, மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்’ என்று வாழும் மக்களை எல்லா பகைவரிடமும் இருந்து காத்தல் அவசியமானதாகும். அப்போதுதான் நாட்டில் கவலைகள் நீங்கி மகிழ்ச்சி நிலவும்.

தொல்காப்பியம் அரசனின் கடமைகளை பின்வருமாறு வரையறுக்கிறது.

**“ஐவகை மரபின் அரசர் பக்கமும்”** [67]

ஓதல், வேட்டல், ஈதல், படை வழங்குதல், குடியோம்புதல் எனும் ஐந்தினை கடமையாகக் கூறுகிறார்.

**“முறை வேண்டு நர்க்கும் குறைவேண்டு நர்க்கும்**
**வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி”** [68]

திரையன் எனும் அரசன் தன்பால் குறைவேண்டி வந்தார்க்கும், முறைவேண்டி வந்தார்க்கும் யார் ? யார் ? எதனை வேண்டினரோ அவரவர்க்கு அவ்வவற்றை அருள் செய்பவன்.

**"கடன் அறி மன்னர் குடை நிழற் போலப்**
**பெருந் தண்ணென்ற மரநிழல் சிறிது இழிந்து"** [69]

அரசன் குடிகள் வருத்தம் நீங்குமாறு குடைநிழல் கொண்டு காக்கும் தன்மையுடையவன் என நற்றிணை கூறுகிறது.

கிள்ளி வளவன் தன் குடிமக்களை புலி தன் குட்டிகளைப் பேணுவதைப் போல் பேணிக்காத்தான் என்பதை,

**"புலி புறங்காக்கும் குருளை போல**
**மெலிவு இல் செங்கோல் நீ புறங்காப்ப"** [70]

புறநானூறு புலப்படுத்துகின்றது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் – குமட்டூர் கண்ணனார் பாடிய பாடல் வழி நாடாளும் மன்னனின் கடமையினை அறிந்துகொள்ள முடிகிறது.

- ❑ காடுகள் முனிவர் வாழும் இடமாக,
- ❑ முல்லைக் கொல்லைகள் (வரகு, சோளம் முதலியவை விளையும் நிலம்) ஒளியுடைய மகளிருடன் வீரர்கள் தங்கும் இடமாக,
- ❑ காடுகள், கொல்லையும் அல்லாத பெருவழியானது ஆறு அலைக்கும் கள்வரும் பிற இடையூறுகளும் அற்றனவாய் வழி நடப்பவர்க்கு ஏற்றனவாய் உள்ளன

இவையல்லாமல், நிலத்தில் விளையும் எட்டுவகைக் கூலங்களையும், விற்கும் வணிகர் குடியைப் போற்றிக் குடிமக்களைப் பாதுகாக்கும் காணியாளர், சுற்றத்தைச் சிறப்பாய் ஓம்பி வருகின்றாய். தமக்கு உட்பட்ட வரிசையாளரைக் காக்கும் காணியாட்சியாளராகிய வேளாளரின் சுற்றங்களையும் நன்றாகப் பாதுகாத்து வருகின்றாய்.

**"கூலம்பகர்நர் குடிபறந்தராஅ**
**குடிபுறந்தருநர் பாரம் ஓம்பி"** [71]

பொருள்களை விளைவிப்போரும் அவற்றை மற்ற நாடுகளுக்குச் சென்று விற்பவரும் 'கூலம் பகர்நர்' (வாணிபம்) அவரைப் புரத்தல் அரசனின் கடமையாதலின் விரிவாக பேசியிருக்கிறார் புலவர்.

நாட்டை ஆளும் அரசன், கூலம் விற்பவர் குடிகளைப் பாதுகாத்தும் குடிமக்கள் பாரத்தைத் தாங்குதல் வேண்டும் என்று பதிற்றுப்பத்து (38) கூறுகிறது.

குடிமக்களை எவ்வாறு காவல் செய்ய வேண்டும் என்று முரஞ்சியூர் முடிநாகனார் பின்வருமாறு கூறுகிறார்.

ஐம்பூதங்களை மன்னருக்கு இணையாகக் கூறி அதன்வழி காவல் முறைமையைக் கூறுகிறார்.

**"பகைவர் பிழையைச் செய்தால்அதை**
**பொறுத்துக் கொள்ளுதல் – நிலம்**
**அந்தப் பிழை பொறுக்கக் கூடாததாக இருந்தால்**
**அந்தப் பகைவரை அழிப்பதற்காக ஆராயும் (வாள் போன்ற)**
**ஆராய்ச்சியின் விரிவு – வானம்**
**அப்பகைவரை அழிப்பதற்கேற்ற மனவலிமை – காற்று**
**நான்கு படை வலிமை, அவற்றால் அவரை அழித்தல் – தீ**
**அவர் வணங்கினால் அவர்க்குச்சு செய்யும் அருள் – நீர்"** [72]

என அரசர் செய்ய வேண்டிய உலக காவல் முறைமையை உதியன் சேரலாதனிடம் அறிவுறுத்தி நிற்கிறார்.

**"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே**
**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**
**நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே**
**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**
**களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"** [73]

தாய், தந்தை, கொல்லன், அரசன், குடிமகனின் கடமைகள் உணர்த்தப் படுகின்றன.

மகனைப் பெற்று வளர்த்தல் தாயின் கடமை. அவனை நற்பண்புகளால் நிறைந்தவனாக ஆக்குவது தந்தையின் கடமை. அவனுக்கு வேண்டும் வேல் முதலிய படைக்கருவிகளைச் செய்து தருதல் கொல்லனின் கடமை. நல்லொழுக்கத்தைக் கற்பிப்பது அரசனின் கடமை. விளங்கும் வாளைக் கையில் கொண்டு சென்று தடுப்பதற்கரிய போரைச் செய்து ஆண் யானைகளைக் கொன்று வருதல் காளையான வீரர் மகனுக்குரிய கடமையாகும். ஈண்டு அறத்தின் பாற்பட்டு அரசனின் நியதிகள் வடிக்கப் பட்டுள்ளன. அறக்கோட்பாட்டின் அடியாக விளங்குவதைக் காணமுடிகிறது.

**"முதுவோர்க்கு முகிழ்த்த கையினை எனவும்
இளையோர்க்கு மலர்ந்த மார்பினை எனவும்
ஏரோர்க்கு நிழன்ற கோலினை எனவும்
தேரோர்க்கு அழன்ற வேலினை எனவும்
நீசில மொழியா அளவை"** [74]

ஐம்பெருங்குரவர் முதலியோர்க்குக் குவித்த கைகளையும், வீரர் படைக் கருவிகள் எறிதற்குக் காட்டிய மார்பினையும், ஏரையுடைய குடிமக்களுக்கு நிழல் செய்த செங்கோலையும், தேரினையுடைய ஊர் அரசர்க்கு வெம்மை செய்த வேலினையும் உடையவனாக அரசன் இருந்தமையைச் சிறுபாணாற்றுப்படைக் கூறுகின்றது.

மக்களின் குறைகளை விசாரித்து நீதி வழங்குவதற்கென்று அறமன்றங்கள் அமைந்திருந்தன. அவற்றுள் நீதி நிலைப்பெற்றிருந்தது.

**"அறங்கெழு நல்லவை உறந்தை"** [75]

**"அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்"** [76]

**"அரசியல் பிழையாது அறநெறி காட்டி"** [77]

என்பதை இவ்வடிகள் உணர்த்தி நிற்கின்றன.

**"நீ மெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி"** [78]

என அரசனின் நீதி வெளிப்படையாக பாடல்கள் வழி உணர்த்தி அரசாட்சி செய்தனர் என்ற குறிப்புகள் அறியப்படுகின்றன.

இவ்வாறு பகைவர் எதிர்த்தபோது அவர்களை வென்று, நீர்வளம், நிலவளம் பெருக்கி, மக்களைக் காப்பாற்றி நீதி வழங்கினர் அரசர்கள். அதனாலேயே உயிருக்கு உறுதி பயப்பனவாகிய உண்ணும் உணவும், பருகும் நீரும் உலகத்துக்கு உயிராக கருதப்படவில்லை. அரசனின் இயக்கமே உலகத்தின் இயக்கமாக இருந்துள்ளதைப் புறப்பாக்கள் பதிவு செய்துள்ளது.

**ஆட்சி சிறப்பு:**

அரசனது கடமைகள் குறித்து பாடிய புலவர்கள், அவர்களது ஆட்சி சிறப்பினையும் புகழ்ந்து பாடியுள்ளனர்.

குறுங்கோழியூர் கிழார் என்ற புலவர் சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைப் பாடியுள்ள பாடல் (புறம் 20) ஒன்றால்

தெளிவாக அறியப்படுகிறது. அவனது படையாண்மையையும், கொடையாண்மையும் மக்களை அறத்தொடு துறக்கும் செங்கோல் திறத்தையும் பின்வருமாறு கூறுகின்றார்.

பெரிய கடலின் ஆழத்தையும் நிலவுலகின் பரப்பையும் காற்று வீசும் நாற்றிசைகளையும் வடிவில்லா வானத்தையும் வரையறுத்து அறிந்தாலும் உன்னுடைய அறிவும், அன்பும், கண்ணோட்டமும் அளப்பதற்கரியது. நின் குடை நிழலில் வாழும் மக்கள் உணவை சமைப்பதற்கான நெருப்பும், செங்கதிரோனின் வெப்பத்தையும் அல்லாது வேறு வெம்மையை அறியார். வானத்திலிடும் வில்லைத் தவிர வேறு பகைவரது வில்லைக் கண்டறியார். வெற்றி வீரர்கள் புடைசூழ சென்று மாற்றாரை வென்று அவர் மண்ணைக் கவரும் மன்னனே நினது நாட்டில் கருவுற்ற மகளிர் விரும்பி உண்டாலல்லது பகைவரால் உண்ண இயலாத மண்ணை உடையாய். அம்பு தங்கும் காவலோடு அறம் தங்கும் செங்கோலையும் பெற்றிருக்கின்றாய். அத்தகைய செம்மையான ஆட்சியைச் செலுத்துவதால் நின் குடிமக்கள் உயிரினும் மேலாக உன்னை நேசிக்கின்றனர். உனக்கு எவ்வித தீங்கும் நேருமோ என அஞ்சுகின்றனர்.

**அரசுரிமை:**

ஆட்சி உரிமை தந்தைக்குப் பிறகு மகன், அவனுக்குப் பிறகு அவன் மகன் என்ற நிலையில் பரம்பரையாக அமைந்திருந்தது. மகளிர் ஆட்சியுரிமை பெறுதல் இல்லை. ஆண் மக்கள் ஆட்சியுரிமைப் பெற்றனர். (பொருநர் 132, பட்டினப் 227) தந்தைக்குப் பின் மகன் ஆட்சியுரிமைப் பெறுவர்.

> **“.......... மற்று நீ**
> **உயர்ந்தோர் உலகம் எய்தி பின்னும்**
> **ஒழித்த தாயம் அவர்க்கு உரித்தன்றே”** [79]

உரிமைத்தாயம் தொன்றுதொட்டு வருவதைக் கோப்பெருஞ்சோழனிடம் தெரிவிக்கிறார் புல்லாற்றூர் எயிற்றியனார். மேலும், அன்பும், நாணும், ஒப்புரவும், கண்ணோட்டமும், வாய்மையும், நடுநிலைமையும் புலப்படப் பிற குணங்களும் ஆகிய குடிகளைக் காத்தற்குப் பொருந்தி அரசனின் துறைகளை முற்றக் கற்ற புதல்வனைப் பெற்றாய் என பாராட்டுவதன் வழி ஆட்சியுரிமை ஆணுக்குரியது (பதிற் 74:17–21) என்பது புலனாகிறது.

‘அரசு’ உரிமை யாரிடம் இருத்தல் வேண்டும் என்று சோழன் நலங்கிள்ளி அவைக்களத்தில் (புறம் 75) கூறுகிறார்

**“மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்**
**பால்தர வந்த பழவிறல் தாயம்”** [80]

தம் குடியில் தோன்றிய மூத்தோருக்கு ஆட்சியுரிமை உண்டு என்பது இதன்வழி புலப்படுகிறது. அத்தகு மூத்தவன் இறந்துபடின், விதியால் தரப்பட்டு வந்த பழைய வெற்றியால் உண்டான அரசுரிமையை பெற்றவன். தம் குடிமக்களிடம் வரியை வேண்டி இரக்கும் மிகுதி இல்லாத ஆண்மையுடைய உள்ளத்தால் சிறியவன் பெற்றானானால், அந்த அரசு உரிமை அவனால் சுமக்க முடியாத சுமையைக் கொண்டதாகும். அடுத்துப் போரிடும் போரைச் செய்யும் மன எழுச்சியையுடைய வலிய முயற்சி கொண்டவன் பெற்றானானால், அது காய்ந்த நெட்டியைப் போல எளிதாக விளங்கும் என்கிறார் நலங்கிள்ளி.

**போர் அறம்:**

**“ஒருவனை ஒருவன் அடுதலும், தொலைதலும்**
**புதுவது அன்று இவ் உலகத்து இயற்கை”** [81]

என்பதற்கிணங்க மன்னன் தன் தலைமையை / தலைமைத்துவத்தை தற்காத்துக்கொள்ளும் வகையில் போர் நிகழ்வுகள் சங்க இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

தமிழர்கள் வீரமரபின் மாண்பைப் பின்பற்றியவர்களாக இருந்தமையைப் புறநானூற்றுப் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

குழவி இறந்தாலும், உருவமற்ற தசையாகப் பிறந்தாலும் நோய்வாய்ப்பட்டு ஒருவன் இறந்தாலும், போரில் இறவாமல் மன்னனாக இருந்தாலும் தருப்பைப் பசு புல்மேல் கிடத்தி வாள்கொண்டு வெட்டி வல்போரின் கண் வீழ்ந்த வீரக்கழல் மறவர் சென்ற வீரவழிச்செல் (புறம் 74:1–2, 93:7–11, 9:5–6) என அடக்கம் செய்வர்.

இதன்வழி போர்குறிக் காயமே புகழின் காயம் என்றும், போர்ப்புண்ணே புகழின் கண் என்றும் போற்றுவதைக் காண முடிகின்றது.

இத்தகு வீரமரபை உடைய மக்களிடையே போர் நிகழ்வதற்கு முன் போர் அடிப்படையிலான அறத்தைக் கடைப்பிடித்தமைக்கு புறம் சான்று பகருகின்றது.

**“ஆவும் ஆன் இயற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும், பிணியுடையீரும் பேணித்**

**தென் புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
**பொன்போல் புதல்வர்ப் பெறாஅதீரும்**
**எம் அம்பு கடி விடுதும் நும் அரண் சேர்மின் என**
**அறத்து ஆறு நுவலும் பூட்கை மறம்"** [82]

எனப் புறநானூறு போர்த் தொடங்குவதற்கு முன்னர் போர்ச் செய்தியினை அறிவிப்பதோடு பாதுகாப்பு குறித்து ஆநிரை, பார்ப்பனர், பெண்டிர், பிணியுடையோர், புதல்வரை பெறாதவர் ஆகியோரைப் போரிலிருந்து விலக்கு அளித்திருப்பது போர் அறமாக இருந்ததைச் சங்க இலக்கியம் வழி அறிய முடிகிறது.

**'ஆண்கடன் இறுத்தி நின்...'** [83]

பகைவரை வென்று அவரது முரசை கைக்கொண்டு ஆண்மைக்குரிய கடனை செவ்வையாக முடிப்பவன் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் என்ற வழி போர் ஆணின் கடன் என்று வரையறுக்கின்றது சங்க இலக்கியம்.

**வரியும், அறமும்:**

அரசிற்கு வருவாய் வரும் வழிகளுள் 'வரி' பெறுதலும் ஒன்று. அவ்வரியினைக் குடிமக்களிடமிருந்து பெறும்பொழுது நெறிபிறழாமல் பெறுதல் வேண்டும் என்று பாண்டியன் அறிவுடை நம்பிக்கு பிசிராந்தையார் பின்வருமாறு விளக்கி நிற்கிறார்.

**"காய் நெல் அறுத்துக் கவளம் கொளினே**
**....**
**யானை புக்க புலம் போல"** [84]

களிற்றுக்கு உணவாகும் நெற்கதிர் அது விளையும் நிலத்திலிருந்து கொண்டு வரப்பட்டு கவளம் கவளமாகக் கொள்ளப்படுமாயின் விளைநிலம் ஒரு மா அளவிலும் குறைந்ததாயினும் பல நாட்கள் அக்களிற்றுக்கு உணவாகும். அது போல அரசன் குடிமக்களிடம் நெறியறிந்து சிறிது சிறிதாக வழி வசூல் செய்வானாயின் மக்களுக்கு வருத்தம் நேராது. அதை விடுத்து மிகுதியான வரியை வாங்குவானாயின் நூறு வயல்களில் விளைந்த நெற்பயிரை யானை தானும் உண்ணாமல் கால்பட்டு அழிதலைப் போல குடிமக்களும் வருந்துவர் என வரி பெறும் முறையில் அறத்தை கடைப் பிடித்தல் வேண்டும் என்று புலவர் உணர்த்தி நிற்கிறார்.

குடிமக்களைக் காத்தற்காகப் பெறும்வரி (புறம் 75) அவர்களை அழிவிற்கு உட்படுத்தாததாக இருத்தல் வேண்டும்.

**அரசநெறியில் பெண்:**

சங்க கால அரச அமைப்பிற்குள் அரசனின் கருத்தாக்கமே அறநெறிகளாக ஆக்கம் பெற்றிருந்தன. அவனது அறநெறிகளை வழிநடத்திச் சென்றவர்களாக அமைச்சரும், சான்றாண்மை மிக்க புலவர்களும் இருந்தனர். அரசனது காலத்து வாழ்வியல் சிந்தனைகள், விதிகள், 'அறம்' என்றே சுட்டப்பட்டிருக்கின்றன.

பெண்கள் ஆணுக்கு நிகராக காட்டப்படவில்லை. ஆணுக்குரிய வளாகவே ஆக்கப்பட்டிருக்கிறாள். எந்த உடைமையும் அற்ற உயிராக இருந்திருக்கிறாள். அரசனின் மனைவி என்ற நாடாளும் உரிமையைப் பெற்ற பெண்ணாக வாரிசுரிமை இருந்த காலத்திலும் மறுக்கப்பட்டிருக்கிறாள். அரசனின் இறப்பிற்குப் பிறகு அரசியருக்கும் உரிமை மறுக்கப்பட்டு உடன்கட்டை ஏறும் உடைமையாளராகவே பார்க்கப்பட்டிருக்கின்றாள். பெண்களைப் பொறுத்தவரை வர்க்கப் பகுப்பு இல்லாமல் கைமை நோன்பும், பிற அவலங்களும் பொதுமைப்படுத்தப் பட்டிருப்பதை சங்க இலக்கியம் வழி ஆய்ந்துணர முடிகிறது.

**அரசி:**

அரசவையில் அரசனோடு இணையாக அரசி சில சமயங்களில் அரியணையில் நிகராக வீற்றிருந்துள்ளமையைச் சங்க இலக்கியத்தில் காண முடிகிறது. ஆனால் நாடாளும் உரிமை அளிக்கப்பட்டதாகச் சங்க இலக்கியத்தில் குறிப்பில்லை. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், வஞ்சினம் உரைக்கும் பொழுது பகைவேந்தரை வென்று அவர் புறம் காணேனாயின் சிறந்த பேரமர் உன் கண்களை உடைய இவளை விட்டுப் பிரிவேனாகுக. (புறம் **71:5–6)** எனக் கூறுவதும், பூதப்பாண்டியன் உயிர் நீத்ததும் பின்பு தீப்பாயும் அவன் தேவியைக் குறித்தப் பாடல்களிலும் அரசுரிமை பெறுவது (புறம் **246, 247)** பற்றிய குறிப்பு இல்லை.

அரியணையில் அரசனுடன் அவன் மனைவியும் அமர்ந்திருந்ததானச் செய்தியை,

> **"வேய் உறழ் பணைத் தோள் இவளோடு**
> **ஆயிரம் வெள்ளம் வாழிய பலவே"** [85]

பதிற்றுப்பத்து புலப்படுத்துகிறது.

புறநானூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு ஆகிய சங்க நூல்களில் அரசியர் பற்றிய செய்திகள் மிகுதியாகவும், அகத்தொகை நூல்களில் ஆங்காங்கே குறிப்பாகவும் இடம்பெற்றுள்ளன. இவ்விலக்கியங்களில் கூறப்பட்டுள்ள

அரசியர் மூவரின் பெயர்கள் கண்ணகி, பெருங்கோப்பெண்டு, கோப்பெருந்தேவி, தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளன. பெரும்பான்மையான இடங்களில் அரசின் (பதிற்றுப்பத்து) பெயரடையாக மனைவி என்ற பொருளிலேயே அரசியின் பெயர்கள் அழைக்கப்பட்டுள்ளன.

**கண்ணகி:**

கடையெழு வள்ளல்களுள் ஒருவன் எனக் கருதப்படும் வையாவிக் கோப்பெரும் பேகனின் மனைவி கண்ணகி. பேகன் மனைவி கண்ணகியை பிரிந்து பரத்தையை நாடிச் செல்ல அதனால் அவள் படும் துயரத்தைக் கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் போன்றோர் தம் பாடல்களில் (புறம் 143–147) பாடியுள்ளனர்.

பேகனிடம் சென்ற புலவர்கள் கண்ணகியின் அழுகையினைக் கூறி அவளது துயரைத் துடைப்பதே நாங்கள் வேண்டும் பரிசில் என்று கூறினர். சமுதாயத்தில் உயர் நிலையில் வாழும் அரசர்களும் பரத்தையர் ஒழுக்கத்தில் ஈடுபட்டு மனைவியரை கீழ்மைப்படுத்தியதை

“கண்ணகி கண்ணீர் விட்டாள், குழல் இறங்கி ஒலிப்பது போல அவள் அழுகை எங்களை வருத்தியது. உள்ளத்தை வாட்டுகிறது” எனப் பேகனால் துறக்கப்பட்ட கண்ணகி காரணமாக கபிலர் பாடுகிறார் (புறம் 143). அவளுக்கு அருள் செய்யவில்லை என்றால் அது கொடியது எனக் கண்ணகி காரணமாக பரணர் பேகனிடம் வேண்டுகிறார் (புறம் 144). நெடுந்தேர் ஏறித் தனிமையில் வருந்தி உறையும் ஒருத்தி துன்பத்தை களைய வேண்டும் என்பதே நாங்கள் வேண்டும் பரிசில் எனப் பரணர் (புறம் 145) கூறுகிறார். வாடிய கண்ணகியின் வாழ்வு மலரட்டும் மயில்தோகை குவிந்தது போல விளங்கும் அவள் கூந்தலில் பூச்சூடிக் கொள்ளட்டும். அவள் மகிழ்வு பெற நீ அருளுக என்று அரிசில்கிழார் (புறம் 146) பாடுகிறார். வாரி முடிக்காத கண்ணகியின் கூந்தல் நீல மணிப் போல் விளங்க மாசறக் கழுவி புதுமலர் சூடி அவள் கவின் பெற நீ அங்கு சென்றால் அதுவே யாம் வேண்டும் பரிசில் என்று பெருங்குன்றூர் கிழார் (புறம் 147) வேண்டுகிறார் என வரும் பாடல்கள் விளக்கி நிற்கின்றன.

இவ்வாறு புலவர்கள் பலரும் தலைவனின் பரத்தை ஒழுக்கம் இழிவு என்றும் அல்லது மனைவியைப் பிரிந்து பரத்தை ஒழுக்கம் கொண்ட மன்னனை தவறு என்று சுட்டிக்காட்டுவதாகவோ இல்லை. தம் பாடல் விளக்கங்களுள் மனைவி துயர் துடைக்க மன்னனிடம் இரந்து நிற்பதை காண முடிகிறது. இவர்களது பாடற்கருத்துகளின் வழி அரசர் தம் அறநெறிக்குள் பரத்தமை ஒழுக்கம் இருந்துள்ளதை அறிய முடிகிறது.

**பெருங்கோப்பெண்டு:**

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்னும் அரசனின் மனைவி. கவிதை படைக்கும் திறன் கொண்ட இவள் அரசனின் இறப்பிற்கு பிறகு அதனால் ஏற்படும் கைம்மை நோன்புத் துன்பத்தால் வருந்தும் பெண்டிராக இல்லாமல் கணவின் உடலை பற்றி எரியும் தீயில் விழுந்து உயிர்விடத் துணிந்தாள். அப்பொழுது தடுத்த, சான்றோர்களை நோக்கி உரைத்ததாக அமைந்த புறநானூற்றுப் பாடல் கைம்மை நோன்பு நோற்று உயிர் வாழும் பெண்டிரின் அவல நிலையைப் புலப்படுத்தி நிற்கின்றது.

தன் கணவனின் இறப்பதற்கு பிறகு கைம்மை நோன்புற்று கொடுந்துயர் அடைவதைக் காட்டிலும் உடன்கட்டை ஏறுதல் மேலானது என எண்ணினாள். இதனை,

**“நாள்இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே”** [86]

என்று முடியும் பாடல்வழி விரிவாக விரித்துரைக்கிறாள்.

“வெந்ததும் வேகாததுமான வேளைக்கீரை கலந்த சோறு, வெள்ளை எள்ளும் புளியும் இட்டு அரைத்த துவையல், வெள்ளரிக்காயின் விதை போன்ற சோற்றுத்திரள் நறுநெய் கலவாதது. நீர் ஊற்றி கையால் பிழிந்து உண்ணும் உணவு, படுக்க பாயில்லாமல் பருக்கைக் கற்கள் மிக்க கட்டாந்தரையில் படுத்தல்” போன்ற கொடுமைகளை கைம்பெண்கள் தம் காலத்திற்கும் கடைப்பிடிப்பதைக் காட்டிலும் இறந்த உடல் மீது வைக்கப்பட்டு எரியும் நெருப்பில் உடன்கட்டை ஏறுதல் வாழ்நாள் கொடுமையைக் காட்டிலும் மேலானது. தாமரைப் பொய்கையைப் போன்றது என்று உணர்ந்து தம் பாடலுள் பதிவு செய்துள்ளமை பிந்தைய அரசும், சமூகமும் மரபாகவே பற்றிக் கொண்டுள்ளனவோ என்று உணர முடிகிறது.

பெருங்கோப்பெண்டு தீப்பாய்வதைக் கண்ட மதுரைப் பேரலவாயர் கணவன் இறந்த பின்பு சிறிது பொழுது தனித்திருந்தாலும் உயிர் தளர்வாள் (புறம் 247) என்று கூறுவதன் வழி பெண் மீது திணிக்கப்பட்ட மரபாக இருந்திருக்கும் வேண்டும் என்பதை அறிய முடிகிறது. பெண்ணிற்கு இவ்வழி அறம் கூற, மற்றொரு பாடலில், ஆணிற்கு கற்பிக்கப்படும் அறத்தின் வழி பெண்கள் ஆடவருக்குரியவராகவே ஆளுமைப்படுத்தப்பட்டிருப்பதை உணர முடிகிறது.

சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதையின் மனைவி இறந்துபட மனம் கலக்கம் அடைந்தான் மன்னன். அவள் பிரிந்தால் தானும்

உயிர் விடுவதாக எண்ணியதையும் எண்ணினான். அவனது மன ஓட்டத்தை அறிந்த சான்றோர் குறிப்பால் உணர்ந்தனர். காதலை விடக் கடமை பெரிது எனக்கூறி அவனைத் தெளியச் செய்தனர். அரசனும் காதலி மறைந்தால் காதலனுக்கு உண்டாகும் துன்பம் பெரிது என்பதை மறுப்பவனைப் போல (புறம் 295) பாடலை பாடுகிறான்.

கணவன் இறந்தமைக்கு மனைவி உயிர் தளர்வாள் என்பதற்காக அவள் உடன்கட்டை ஏறினாள் என்று மதுரைப் பேரலவாயர் எனும் புலவர் கூறுகிறார். கவிபுனை ஆற்றல் பெற்ற பெருங்கோப்பெண்டின் பாடல் கணவன் இல்லாத பெண்கள் மேற்கொள்ளக்கூடிய கைம்மை நோன்பின் அவலத்தைக் காட்டிலும் ஈமத்தீ தாமரை பொய்கை போன்றது என்று கூறுவதன் வழி சமூகத்தில் கணவன் இல்லாத பெண்ணின் நிலை இவ்வாறு தான் இருக்கவேண்டும் என்று விதிக்கப்பட்ட விதியாக இருந்திருப்பதை தெள்ளத் தெளிவாக உணர முடிகிறது.

இறந்த வீரனின் மனைவியராகப் பெண்களைக் காட்டும் சங்கப்பாக்கள் கணவன் இறந்தவுடன் உடன்கட்டை ஏறும் தண்டனையினைப் பெண்கள் பெற வேண்டும் என்று வலியுறுத்தி இருக்கின்றன. இவ்விதிமுறையானது பெண்ணிற்குக் கொடுமையானது. ஆடவனின் ஒரு சார்பு விதி என்றே கொள்ள முடிகிறது. அரச நெறியின் இவ்விதிக்குள் தனக்குப் பின் தன் மனைவியால், தன் பெயருக்கும், புகழுக்கும் ஊறு நேர்ந்து விடக்கூடாது என்று மனைவி தனக்குரிய 'உடைமையள்' என்ற புறநானூற்று காலத்திய உடைமைச் சமூக கருத்து நெறியாக இருக்கிறது என்பதை ஆய்ந்துணர முடிகிறது.

போர்க்களத்தில் கணவனை இழந்த மகளிரின் மயிர் மழிக்கப்பட்டது. மங்கல அணிகலன்கள் களையப்பட்டன. தோற்றுப்போன பகைநாட்டுப் பெண்களின் கூந்தலைக் கொய்து, அக்கூந்தலால் திரிக்கப்பட்ட கயிற்றால் யானைகளை வண்டியில் பூட்டி அந்தக் காவல் மரத்தை தலைநகரத்துக்கு எடுத்துச் சென்ற செய்தியை பதிற்றுப்பத்து (பதிற். 5ம் பத்து பதிகம் 15–17) வழி அறிய முடிகிறது.

எவ்வி எனும் மன்னன் இறக்க, அவனது மனைவியர் இறப்புச் சடங்கினை செய்து, கைம்பெண்டிரின் நிலையை ஏற்று வாழ்ந்த தன்மையினை வெள்ளெருக்கிலையார் விளக்கி உரைக்கிறார்

எவ்வியின் மனைவியர் அவன் இறந்து கிடந்த இடத்தினை மெழுகினர் தரையைத் தூய்மை செய்து, அங்கு இலை இட்டு, அதன் மீது தருப்பைப்

புல்லை வைத்து, அதன்மேல் நல்ல சுவையில்லாத உணவை வைத்துப் படைத்து உண்டனர். சிறிதளவு உணவை உண்பர். அதுவும் ஒரு பொழுதே உண்பர் (புறம் 234) என்கிறது புறப்பாட்டு.

மற்றொரு பாடலில், கணவன் இறந்தால் மனைவி தன் கூந்தலைக் களைந்து கொள்ளும் வழக்கம் இருந்துள்ளதைப் பதிவு செய்துள்ளார் கல்லாடனார்.

**"முலைபொழி ஆகம் உருப்ப நூறி**
**மெய்ம்மறந்து பட்ட வரையாப்பூசல்**
**ஒள்நுதல் மகளிர் கைம்மை கூர**
**அவிர் அயில் கடுக்கும் அம்மென்**
**குவையிரும் கூந்தல் கொய்தல் கண்டே"** [87]

**"கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி**
**அல்லி உணவின் மனையொடு...."** [88]

**"கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கி**
**கழிகலம் மகடூஉப் போலப்"** [89]

இறந்த வீரரின் மனைவியர் உயிரோடு இருப்பதால் கைம்மை நோன்புக்குரியவர்கள் எனப் பெண்கள் சமூகத்தில் ஒதுக்கப்பட்டிருந்தனர். உவமை பொருளாகவும் இருந்தனர். அறம் அற்ற நிகழ்வுகளை நடத்தும் அரசனாலும், அரசு அமைச்சர்களாலும் இந்நெறி தீர்மானிக்கப்பட்டன.

**கல்வி:**

**".....**
**வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்**
**கீழ்பால் ஒருவன் கற்பின்**
**மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே"** [90]

பொருள் கொடுத்து கல்வி கற்ற முறையும் பிறப்பால் இழிநிலை பெறினும் பெற்றக் கல்வியால் உயர்நிலை அடையலாம் என்ற கல்வியின் உயர்நிலையும் இருந்தமையை இப்பாடல் வழி அறியமுடிகிறது.

கல்வி குறித்த ஒரே ஒரு பாடலிலும் கூட 'பெண் கல்வி' குறித்தான குறிப்புகளைக் காணமுடியவில்லை. ஆடவருக்கே கல்வி, "ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன" என்றும். பெண்கல்வி மறுப்புக் கொள்கை நடைமுறைப் படுத்தப்பட்டுள்ளது என்பதும், சாதியமும் கல்வி மறுப்பிற்கு காரணியாக

இருந்திருக்கிறது என்பதையும் பொருளின்மையும், பொதுமக்களையும், பெண்களையும் கல்வியாளராக்க மறுதலித்திருப்பதையும் அறியமுடிகிறது.

கல்வியின் முக்கியத்துவம் உணரப்பட்டக் காலத்தில் பெண்களுக்கு கல்வி முக்கியம் என்பதான செய்தியோ, அவர்கள் குருகுல கல்வியில் இணைந்து கல்வி கற்றார்களா ? என்பதற்கான விளக்கமோ எந்த இடத்திலும் குறிப்புகளுக்கேனும் இடம் பெறவில்லை.

மகடூஉ முன்னிலை எனும் பெண்பாற் புலவர் களஞ்சியமும் கூட 45 பெண்பாற் புலவர்களைப் பட்டியலிட்டுக் காட்டுவதோடு பெண் புலவர் தம் புலமை குறித்தான மேன்மையை உயர்த்திக் காட்டுகின்றது. அதை தவிர எத்தகைய குலத்தைச் சார்ந்தவர் என்றோ, எத்தகைய தொழில் பிரிவைச் சார்ந்தவரென்றோ, அவர்கள் பிறந்த ஊரோ, தாய் தந்தையின் பெயர்களோ புலவர்கள் தாம் கல்வி கற்ற செய்தியோ பதிவு செய்யாதிருக்கிறது. சான்றோர்களை முன்னிலைப்படுத்தாத அவர்களின் முழுமையான பிறப்பு, சிறப்பு, இறப்பு என முழுதான விளக்கங்களோ தரப்படாத வரலாற்று இடைவெளியைக் கொண்ட காலமாக சங்க காலம் இருந்திருக்கிறது.

இந்நிலையானது பெண்ணைக் கல்வி நிலையிலும் அடிமையாக்கும் முயற்சி ஆளுமைப் பண்பை குறைத்து மதிப்பிடும் போக்கு இருந்ததை உணர முடிகிறது.

**"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே"** [91]

மகனை பெற்று உலகிற்கு கொடுப்பது தாயின் கடமை. அவனை கல்வி கேள்விகளில் சான்றோன் ஆக்குதல் தந்தையின் கடன் என்று பெண்ணிற்குக் கல்வி மறுக்கப்பட்டிருந்தது. நாட்டு மக்களை வாழ்விப்பதற்காக வகுக்கப்பட்ட அறநெறிக்குள் பெண்களுக்கான அறம் என்பது உடைமையற்ற, இடர் நிறைந்ததாகவே இருந்திருக்கின்றன என்பதை அறியமுடிகிறது.

**அறிவுடையவனையே அரசு விரும்பும்:**

ஒரு குடியில் பிறந்த அனைவரும் ஒத்த இயல்புடையவர். அவருள் மூத்தவன் கல்வி கல்லாதவனாயின் அவனது வயது காரணமாக அவனைப் பாராட்டாது இளையவன் கல்வியறிவு உடையவனாக இருப்பின் அவன் வழியை அரசு நாடும் என்பதை,

**"ஒரு குடிப் பிறந்த பல்லோ ருள்ளும்**
**மூத்தோன் வருக என்னாது அவருள்**
**அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்"** [92]

புறநானூறு விளக்கி உரைக்கிறது. அறிவின் பெருக்கம் அரசுக்கு வேண்டியுள்ளது. அதற்கு அறிவுடையவனையே அரசு நாடி நிற்கிறது என்பது புலனாகிறது. அத்தகு அறிவினை பெறக்கூடிய கல்வி பெண்ணிற்கு மறுக்கப்பட்ருக்கிறது என்பதை (புறம் **312**) பாடல் வழி தெளிவாக உணர்ந்து கொள்ள முடிகிறது.

**தூது:**

ஒரு வேந்தனின் சார்பாளராக மற்றொரு வேந்தனின் அரசவையில் செயல்பட்டவர் 'தூதுவர்' எனப்பட்டனர். தூது அனுப்புதல் சங்க காலத்தில் வழக்கில் இருந்தது. தொல்காப்பியமும் தூதினை பிரிவினுள் ஒன்றாகப் பதிவு செய்துள்ளது.

**"ஓதல் பகையே தூதிவை பிரிவை"** [93]

எனக் கூறுகிறது.

தூதுவராக ஆண்கள் மட்டுமின்றி பெண்களும் இருந்துள்ளனர். பெண்பாற் புலவரான ஔவையார் அதியமான் அஞ்சிக்காக தூது சென்றதாக சங்க இலக்கியம் கூறுகின்றது.

அதியமான் அஞ்சி ஒருமுறை தன்னுடன் போர் செய்யப் புறப்பட்ட தொண்டைமானிடம் ஔவையை தூது அனுப்பினான். தொண்டைமான் ஔவையை வரவேற்று தன் படைக்கலக் கொட்டிலைக் காட்டினான். பளபளவென்று ஒளி வீசும் ஆயுதங்களை அழகு செய்து மாலை சூட்டி அடுக்கி வைத்திருந்த காட்சியைக் கண்டதும்,

**"இவ்வே பீலி அணிந்து மாலை சூட்டி**
**கண்திரள் நோன் காழ் திருத்தி, நெய் அணிந்து**
**கடியுடை வியல் நகர்...."** [94]

இவை மயில் தொகை மாலையெல்லாம் அணியப்பெற்று நன்கு விளக்கி நெய் பூசி காப்புடை கொட்டத்தில் கண் கவருமாறு அடுக்கி வைக்கப் பட்டுள்ளன என்று கூறி,

**"…. அவ்வே**
**பகைவர்க் குத்தி கோடு நுதி சிதைந்து**
**கொல் துறைக் குற்றில மாதோ…."** [95]

அங்குள்ள அஞ்சியின் படைக்கலன்களோ போர்க்களத்தில் பயன்பட்டு பகைவர்களைக் குத்தியதால் கொம்பும், நுனியும் சிதைந்து கொல்லனுடைய உலைக்களத்தில் செப்பனிட போடப்பட்டுக் கிடக்கின்றன. என்கோமான் அஞ்சியின் கூரிய வேலின் நிலைமையும் அத்தகையதாகும் என்று கூறுகிறார்.

வஞ்சப்புகழ்ச்சியாக தன் தலைவனைப் பழிப்பதுபோல் புகழ்ந்து, தொண்டைமானைப் புகழ்வது போல் பழிக்கிறார். தொண்டைமான் படைக்கலன் அழகுற விளங்கின என்னும் புகழ்ச்சி அவன் போர்க்களம் கண்டு போரிடாத தன்மையால் படைக்கலன்கள் பொலிவு மாறாமல் இருந்ததால் போரில் ஈடுபடாதவன் என இகழ்ச்சியாகவும், அதியமான் படைகலன்கள் பொலிவிழந்து கொல்லர் பட்டறையுள் கிடந்தன என்னும் இகழ்ச்சி அவன் போர்ப் பல கண்டு வென்றவன். எனவே படைக்கலன்கள் நுனி சிதைந்து திருத்தப்படுவதற்கு வந்தன என்று கூறுவதிலிருந்து அதியனுடைய போர் ஆற்றல் புகழ்ந்துரைக்கப்படுகின்றன.

படைகளுள் ஒற்றர்படை குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் வாய்ந்துள்ளது. ஒற்றரின் வழி நாட்டைக் காக்கும் அரிய பொறுப்பு தூது சென்று பாதுகாப்பது. நாட்டு மன்னனின் வெற்றிக்கு தூது செல்வோரும் சிறப்பிடம் பெறுவர்.

ஆணாதிக்கம் ஓங்கியிருந்த அரச வாழ்க்கையில் தூதுவராக ஆண்களே ஆளுமை செலுத்தினர். அன்றைய காலத்திலும் ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளிலும், தூது பெண்டிராக பெண்பாற் புலவரான ஔவையார் ஒருவரே அதியமான் அஞ்சி என்னும் மன்னனுக்காக தூது சென்றுள்ளதை பெண்பாற் புலவர்களின் வரலாற்று வரிசையில் பதிவு செய்திருப்பதைக் காண முடிகிறது.

**பெண் வீரம்:**

தாய் தலைமை பெற்றிருந்த காலம் இருந்தது. அதைப் புரதான பொது உடைமைக் காலத்தில் ஆயுதம் ஏந்திய கைகளோடு, வேகமான நடையொடு வேட்டையாடுவதற்கு என்று தலைமை தாங்கி யாவருக்கும் முன்னே நடந்து சென்றவள் பெண்.

**"யானை தாக்கினும் அரவு மேல் செலினும்**
**நீல நிற விசும்பின் வல் ஏறு சிலைப்பினும்**

**சூல் மகள் மாறா மறம் பூண் வாழ்க்கை**
**வலிக்கூட்டு உணவின் வாட்குடிப் பிறந்த**
**புலிப் போத்து அன்ன புல் அணற் காளை"** [96]

என யாவரும் அஞ்சுதற்குரிய இடத்தும், அஞ்சும் இயல்பு கொண்ட மகளிர் அஞ்சார் என்று மறக்குடி மகளிரின் அஞ்சாமையை உயர்த்திக் கூறுகிறது பெரும்பாணற்றுப்படை.

சீறூரில் உள்ள தலைவியரும் வீரத்தோடு இருந்தமையை,

**"களிறு பொரக் கலங்கு கழல் முள்வேலி**
**அரிது உண்கடவல் அம்குடிச் சீறூர்**
**ஒலிமென் கூந்தல் ஒள்ளுதல் அரிவை**
**நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது**
**விருந்து எதிர் பெறுகதில் யானே என்னையும்**
**........ வேந்தனொடு**
**நாடு தரு விழுப்பகை எற்துக"** [97]

அள்ளூர் நன்முல்லையார் எனும் பெண்பாற் புலவர் பின்வருமாறு கூறுகிறார்.

மறக்குடி மகளிரின் இல்லத்துக்கு சென்ற புலவர், அம் மகளிர் நடுகல்லை வழிபாடு செய்வதைக் கண்டார். அவள் அந்நடுகல்லிடம் நாளும் தன்னிடம் விருந்து வரவேண்டும் என்றும், தன் கணவன் போரில் வெற்றிக்காண வேண்டும் என்றும், தன் கணவனுக்குப் போர் செய்யும் பகைவேந்தர் உண்டாக வேண்டும் என்றும் வேண்டி நிற்பதை கண்டு மறக்குடி மகளிரின் பகையை பெற்றாலும் வெற்றி பெறுதல் உறுதி என்ற துணிவை கண்டு வியந்து பாடுகிறார்.

**"அடல்வேல் ஆடுவர்க் கன்றியும் அவ்வில்**
**மடவரல் மகளிர்க்கு மறம் மிகுந்தன்று"** [98]

வீரம் ஆடவரிடம் மட்டுமின்றி பெண்களிடமும் மிகுந்திருந்தது என்பதை இவ்வரிகள் விளக்கி நிற்கின்றது.

பெண்கள் நேரிடையாக போரில் ஈடுபடவில்லை என்றாலும் வீர உணர்வு மிக்கவர்களாகவே திகழ்ந்தனர் என்பதை புறம் பதிவு செய்துள்ளது.

**"வால்நரைக் கூந்தல் முதியோல் சிறுவன்**
**களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை**
**ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்"** [99]

முதியவளின் மகன், போரிலே தன்னை எதிர்த்து வந்த யானையைக் கொன்று தானும் இறந்தான் என்று சான்றோர் உரைத்த செய்தியைக் கேட்டதால் அடைந்த மகிழ்ச்சி, அவனைப் பெற்றபோது அடைந்த மகிழ்ச்சியைவிடப் பெரியது என்று கூறி மகிழ்வதாக இப்பாடல் அமைகிறது. முதுமை காலத்தில் அவனே அவளுக்குப் பற்றுதல். இருப்பினும் 'அரசனின் அறம்' காத்தல் பொருட்டு மிக்க கொடிதான துணிவுடை செயல்களைச் செய்யத் துணிந்தவளாக சங்க காலத்துப் பெண் இருந்தாள் என்பதை இப்பாடல் விளக்கி நிற்கிறது.

**"கெடுக சிந்தை கடிதுஇவள் துணிவே**
**மூதின் மகளிர் ஆதல்தகுமே**
**..........**
**வேல்கைக் கொடுத்து**
**..........**
**ஒரு மகன் அல்லது இல்லோன்**
**செருமுக நோக்கிச் செல்கஎன விடுமே "** [100]

போரிலே தந்தையையும், கொழுநனையும் இழந்த ஒருத்தி போர் முழக்கம் கேட்டவுடன் போர் விருப்புக் கொண்டவளாய் தனக்கிருந்த ஒரே மகனிடம் வேலைக் கையில் கொடுத்து வெள்ளுடை உடுத்தி, குடுமி நீவி போர்க்களம் நோக்கிச் செல்க என்று அனுப்பி வைக்கிறாள் (புறம் 279). இப்புறநானூற்றுச் செய்தியுடன் இது போர் அறம் என்ற பெயரில் நியதி கட்டாயத்திற்குட்படுத்தப் பட்டிருப்பதாகவே எண்ணி பார்ப்பது என்பதைவிட, பெண்களை / மக்களை அரச நியதிக்கு ஆளுமை செய்யப்பட்டிருப்பதை அறியலாம்.

**"...........**
**படைஅழிந்து மாறினன் என்று பலர்கூற**
**மண் அமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்ட என்**
**முலைஅறுத்திடுவென் யான்......**
**............**
**ஈன்ற ஞான்றினும் பெரிதுஉவந்தனனே"** [101]

முதியவள் ஒருத்தி தன் மகனை போருக்கு அனுப்பினாள். படைக்குத் தோற்று புறமுதுகு இட்டான் என்று பலர் சொல்லக்கேட்டு, அவன் போரில் தோற்று ஓடினான் என்பது உண்மையாய் இருந்தால், அவனுக்குப் பால் தந்த என் முலையை அறுத்து எறிவேன் என்று கூறி வாளை கையில் எடுத்தவளாய்

செருமுகம் நோக்கி சென்றாள். அங்கே தன் மகன் மார்பில் புண்பட்டு இறந்து கிடப்பதைக் கண்டு அவன் பிறந்தபோது அடைந்த மகிழ்ச்சியை விட பெரிது உவந்தாள் என காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் என்ற பெண்பாற் புலவர் மகளிர் தம் வீரச்சிறப்பைக் கூறுகிறார்.

பகைவருடன் புகழ் ஏற்படப் போரிட்டு விழுந்த வல்லமை உடையவரின் மகன் பகைவரின் யானைகள் பலவற்றை வீழ்த்தினான். பகைவர் எறிந்த வேல் அவனது மார்பில் பாய்ந்தது. இதனை அறிந்த அவனது தாய் அவன் வீரத்தைக் கண்டு பூரிப்படைகிறாள். இதனை,

**"புகர்நிறங் கொண்ட களிறட்டு ஆனான்**
**முன்நாள் வீழ்ந்த உரவோர் மகனே**
**உன்னிலென் என்னும் புண்ஒன்று அம்பு**
**மான்உளை அன்ன குடுமித்**
**தோல்மிசைக் கிடந்த புல்அண லோனே"** [102]

எனப் பாடுகிறார் பொன்முடியார். மேலும், செவிலித்தாயான காவற்பெண் எனும் பெண்பாற்புலவரிடம் நின் மகன் எங்குள்ளான் என்று ஒருத்தி வினவுகின்றாள். அதற்கு அப்புலவர் என் மகன் எங்கிருப்பவனாயினும் அறியேன். ஆனால் நிச்சயமாக போர்க்களத்தில் தோன்றுவான் என்கிறாள். இதனை,

**"புலிசேர்ந்து போகிய கல்அளை போல**
**ஈன்ற வயிறோ இதுவே**
**தோன்றுவன மாதோ போர்க்களத் தானே"** [103]

புலி தங்கியிருந்து நீங்கிய கற்குகையைப் போல அவனைப் பெற்ற வயிறு இது என்று உவமையாக கூறுவதிலிருந்து அம்மகளிர் வீரத்தினையும், மறக்குடியின் மாண்பையும் விளக்கிச் செல்கிறார் காவற்பெண்டு எனும் பெண்பாற் புலவர்.

**"நடுகல் கைதொழுது பரவும் ஒடியாது**
**விருந்து எதிர் பெறுகதில் யானே என்ஐயும்**
**ஒ...... வேந்தனொடு**
**நாடுதரு விழுப்பகை எய்துக...."** [104]

மறக்குடி மகள் ஒருத்தி தம் முன்னோர் நடுகல்லை வழிபடுகின்றனர். அந்நடுகல்லிடம் நாளும் தன்னிடம் விருந்து வரவேண்டும் என்றும், தன் கணவர் போரில் வெற்றி பெறவேண்டும் என்றும், தன் கணவனுக்குப் போர்

செய்யும் பகைவேந்தர் உண்டாகவேண்டும் என்று வேண்டி நாள்தோறும் தவறாமல் நடுகல்லைக் கைகூப்பி வழிபடுகின்ற தன்மையினை அள்ளூர் நன்முல்லையார் விளக்கிக் காட்டுகிறார். இதன்வழி ஆண்கள் மட்டுமின்றி பெண்களும் போரில் விருப்பம் கொண்டவர்களாக இருந்திருக்கின்றனர் என்பதை அறிய முடிகிறது.

இப்பாடல்கள் வழி பெண்கள் அரசின் அறத்தைக் காப்பாற்றித் துணை நின்றமையைக் காண முடிகிறது.

**போர்க்களத்தில் பெண்:**

**காவல்புரியும் மங்கையர்:**

> **"குறுந் தொடி முன்கை கூந்தல் அம்சிறு புறத்து**
> **இரவு பகல் செய்யும் திண் பிடி ஒள்வாள்**
> **விரவு வரிக் கச்சின் பூண்ட மங்கையர்**
> **நெய் உமிழ் சுரையர் நெடுந் திரிக் கொளீஇ**
> **கை அமை விளக்கம் நந்துதொறும்"** [105]

குறிய வளையலை அணிந்த முன் கையையும், கூந்தல் அசைகின்ற அழகையும், சிறிய முதுகினையும் உடைய, இரவைப் பகலாக்கும் ஒளியையுடைய வாளை கச்சுடன் சேர்த்துக் கட்டிய மங்கையர் நெய் காலும் திரிக் குழாயை உடையவராய் நீண்ட திரியை இட்டுப் பாவை விளக்குகள் அவியுந்தோறும் கொளுத்தியபடி இருந்தனர் என்பது இப்பாடலின் கருத்தாகும்.

அரசனுக்கு என்று அமைக்கப்பட்ட இல்லத்தில் (பாசறை தனியிருக்கை) விளக்குகள் (பாவை விளக்கு) இருந்தன. அவை அவியுந்தோறும் அவற்றை ஏற்றினர். அவர்கள் காவலையும் மேற்கொண்டவராய் இருந்தனர். அதனால் வாளை கச்சுடன் சேர்த்துக் கட்டியிருந்தனர் பெண்கள். பாசறையில் மன்னனின் தனியிருக்கையினைக் காவல் புரியும் மங்கையர் இருந்தமையை முல்லைப்பாட்டு பதிவு செய்திருக்கிறது.

**பாசறையில் பாடினி:**

ஒளியுடைய வாளையும், வலிமை உடைய களிறுகளையும் உடைய புலால் நாற்றம் பொருந்திய பாசறை. அதில் நிலவின் ஒளியைப் போன்று வெண்மையான ஒளியை வீசும் வேற்படையைப் புகழ்ந்து பாடுபவளாக பாடினி இருந்திருப்பதை,

**"........... புலாஅம் பாசறை**
**நிலவின் அன்னவெள் வேல்பாடினி"** [106]

பதிற்றுப்பத்து பதிவு செய்துள்ளது. இசைக்கும் முழவின் தாளத்துக்கு ஏற்பத் தாளத்தை அமைத்துக் கையை அசைத்துப் பாடுபவளாக பாடினியைக் காட்சிபடுத்தியுள்ளது பதிற்றுப்பத்து.

மன்னனை புகழ்ந்து பாடுபவளாகவும் பெண் இருந்திருப்பதை இதன்வழி அறியமுடிகிறது.

### இகழ்ச்சிக்குரியவர்களாக பெண்களைப் பார்த்த அரசு அதிகாரம்:

பகை மன்னரைப் போரிட்டு வென்ற அரசர்கள், பகைவர்களைத் திறைச் செலுத்த வைப்பர். அவற்றுள் பகைவரை மகளிர் பாவையாக்கி அவர்களை இகழ்வர். கோட்டை வாயிலில் பகைவரை மகளிர் ஆக்கி உருவம் அமைத்து அந்த உருவுக்குச் சிலம்பும், தழையும் பந்தும் கட்டித் தொங்கவிடுவர்.

போரிட வருபவரிடம் உங்களுடைய காலில், கழலையும், அரையில் உள்ள போர் உடையையும் நீக்கி, இச்சிலம்பையும், தழையையும் (பலவகை மலராலும், தளிராலும் அழகாகக் கட்டப்படும் மகளிர் உடை) அணிவீராக என்று அவர்களைப் பெண் (பதிற் 53) பாலராக்கி இகழ்வர்.

தோற்றுப்போன பகைநாட்டு பெண்களின் கூந்தலை வெட்டி கயிறாகத் திரித்து கட்டினர் என்ற செய்தியைப் பதிற்றுப் பத்தின் (பதிற். 5ம் பத்து பதிகம் 44) வழி அறிய முடிகிறது.

### போகப்பொருளாய் பெண்களைப் பார்த்த அரசு அதிகாரம்:

தம் வறுமை நிலையினைப் போக்குவதற்கு பழு மரம் தேரும் பறவை பேல இசைக் கலைஞர்கள் மன்னனையும், வள்ளலையும் நாடி செல்லுதல் மரபு. அவ்வாறு விறலியர் மன்னன் முன்பு ஆடியும் பாடியும் தம் திறனை வெளிக்காட்டினர். விறலியர் பாடும் பாடலில் ஈடுபட்டு அமர்ந்திருந்தான் மன்னன். நீட்டித்து தங்கினால் மன்னன் உள்ளத்தில் காமவேட்கை எழும் என்று அஞ்சி, இவ்வாறு இருப்பது மற்ற மன்னர்க்கு இகழ்ந்து பேசும் பேச்சாகும் (பதிற் 51) என்று தெருளச் செய்கின்றனர் புலவர்.

பெண்கள் நுகர்வுக்குரியவர்களாக பார்க்கப்பட்டிருந்த பார்வையினை பதிற்றுப்பத்து காட்சிப்படுத்துகிறது.

பாரி மகளிரை மணந்து கொள்ள வேண்டும். இதுவே யான் இரந்து வேண்டும் பரிசில் என்று புலவர் கபிலர் விச்சிக்கோன் (புறம் 200), இருங்கோவேள் (புறம் 201) என்பவர்களை வேண்டி நிற்கிறார்.

இக்குறிப்பு அன்றைய சமுதாயத்தில் பெண்களின் பின் தங்கிய நிலையை காட்டுகின்றது. மேலும் திருமணத்தில் பெண்ணின் 'விருப்பம்' மதிக்கப்படவில்லை என்பதை அறிய முடிகிறது.

**பெண் – தண்டணை:**

காவல் மரத்துக் கனியைத் தின்ற பெண்ணுக்கு நன்னன் கொலைத் தண்டனையை விதித்தார். அதிலிருந்து உய்ய அப்பெண்ணைப் போலவே பொற்பாவை செய்து கொடுக்கவும், என்பத்தோரு களிறுகளை கொடுக்கவும் முயன்றனர். ஆனால் அதனை நன்னன் ஏற்றுக்கொள்ளவில்லையெனக் குறுந்தொகை **(292:1–4)** கூறுகிறது.

இதன் வழி போர் வெற்றியைக் குறிக்கும் மரத்தைக் கூட தொடுவது அரச நியதியில் பெரும் குற்றமாகவும், பெண் அதனைத் தொட்டுவிடக்கூடாது என்றும் தண்டனைக்குரிய பெண் கொலை செய்யப்பட்டாள் என்றும் குறிப்புப் பெறப்படுகிறது.

ஒரு பெண்ணைக் காதலித்துப் பின் அவளைத் தனக்குத் தெரியாது என்று கூறும் ஆடவனின் கூற்று பொய்யென்று மெய்ப்பிக்கப்பட்டால் அவனை பெரிய மரத்தில் கட்டி வைத்து சுண்ணாம்பு நீற்றினை அவன் தலையில் ஊற்றினர் எனும் செய்தி பெறப்படுகிறது. அத்துடன் குற்றத்தை மெய்ப்பிக்கும் சாட்சிகள் அக்காலத்தில் இருந்தனர் என்பதையும் **(அகம் 266:15–21)** அறிய முடிகின்றது.

ஆடவரின் குற்றங்கள் மறைக்கப்பட்டிருக்க வாய்ப்பு தரப்பட்டிருக்கிறது. குற்றத்திலிருந்து விலக்கிக் கொள்ளும் விதிமீறல் இலகுவாக நடந்திருக்கிறது. குற்றம் மெய்ப்பிக்கப்பட்டால் என்ற கூற்றின் வழி மெய்ப்பிக்கப்படவில்லை என்றால் பெண்ணின் கூற்று அரசு அவையில் ஏற்றுக்கொள்ள வழி இல்லை என்பதை குறிப்பால் உணரமுடிகிறது.

மேலும் குற்றம் புரிந்தோருக்குச் சிறைத்தண்டனை வழங்கப்பட்டன. குற்றவாளிகளை மட்டுமின்றி போரில் தோற்ற பகைவர்களையும், பகை மன்னர்களையும் சிறையில் அடைக்கும் வழக்கம் இருந்துள்ளது.

கணைக்காலிரும்பொறை என்னும் சேர வேந்தன் குணவாயிற் கோட்டத்தில் சிறையடைக்கப்பட்டான் **(புறம் 74)** யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்னும் வேந்தன் தலையாலங்கானத்து செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனால் சிறைப்படுத்தப்பட்டான் **(புறம் 17)** பகையரசனான மலையமானின் மக்களை யானையின் காலால் இடற ஆணை

செய்யப்பட்டது. (புறம் 46) ஒற்றுவந்தான் என்று கருதி புலவர் இளந்தத்தனுக்குக் (புறம் 47) கொலை தண்டனை விதிக்கப்பட்டது.

இவை அரசனும், அரசனைச் சார்ந்த நாட்டாட்சி அமைப்பும் பாதுகாக்கப்படும்பொழுது விதிக்கப்பட்ட தண்டனைகளாகும்.

காவல் மரக் கனியை உண்டதற்காக நன்னன் புரிந்த பெண் கொலை கொடுமையானது. அதுதவிர இவனுடைய வரலாற்றில் இன்னொரு கொடிய நிகழ்ச்சியும் இடம் பெற்றுள்ளது. பிண்டன் என்கின்ற மன்னனை வென்ற நன்னன் அவருடைய உரிமை மகளிரை மொட்டை அடித்து கூந்தற் கயிறு திரித்து அப்பகைவனின் யானையைப் பிணித்த மற்றொரு கொடுமையும் நற்றிணையில் பரணரால் சுட்டப்படுகிறது. மேலும் தலைவனுக்கு வாயில் மறுக்கும் தோழி தலைவன் தலைவியைத் துறந்து பரத்தமை மேற்கொண்ட கொடுமை மன்னன் நன்னன் செய்த கொடுமையினும் கொடுமை என தோழி உவமையாக கூறுகிறாள்.[107] அரசனின் அறத்துள் பெண்ணிற்கான தண்டனை அறமற்ற நிகழ்வாக இருந்துள்ளமையை சங்கப் பாக்கள் வழி அறிந்துகொள்ள முடிகிறது.

**அரச நெறியும், கற்பு நெறியும்:**

சமூக கட்டமைப்பில் ஆண் தலைமையிலான குடும்ப அமைப்பு தோன்றிய பின்பு கற்பை வலியுறுத்தும் போக்கு கால் கொண்டிருக்க வேண்டும். தொடக்கக் கால தாய்வழிச் சமூகத்தில் இக்கோட்பாடு தோன்றியிருக்க வாய்ப்பில்லை என்பதை பலரும் ஏற்கும் கருத்தே. ஏனெனில் தாய்வழிச் சமூகத்தில் பெண்கள் சுதந்திரம் உடையவர்களாகவும், சமூக மதிப்புடையவர்களாகவும் வாழ்ந்துள்ளனர். இக்காலக் கட்டத்தில் பெண்களுடைய வாழ்க்கை பெண்களாலேயே தீர்மானிக்கப் பெற்றது.

சமூகத்திற்கும், குடும்பத்திற்கும் ஆண் தலைமையேற்றவுடன் பெண்களின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தும் நோக்கில் கற்பைப் பெண்களுக்கு மட்டும் வற்புறுத்தியுள்ளனர். சங்க காலத்தில் கற்பு என்பது திருமணமான பெண்களுக்கு மட்டுமே வற்புறுத்தப்பெற்று வந்துள்ளது.

திருமணமான பெண்களின் பாலியல் நடவடிக்கையில் விளைவு அவளது கணவனையும் பாதிக்கும் என்பதால் அதை விரும்பாத ஆடவர்கள் திருமணமான பெண்களுக்கு மட்டுமே கற்பை வற்புறுத்தியுள்ளனர். ஆடவர்கள் தொழில் நிமித்தமாய் பிரிந்திருக்கும்பொழுது தம் மனைவியர் வேறொருவனுடன் பாலியல் நடவடிக்கைகளில் ஈடுபட்டுவிடக் கூடாது

என்பதற்காகவே அதற்கு ஏற்றார்போல தொன்மக் கதைகளையும் கற்பித்துள்ளமையும் அறிய முடிகிறது.

மனைவி கற்போடு இருந்தால்தான் கடலுக்குள் மீன் பிடிக்கச் செல்லும் கணவன் உயிரோடு திரும்புவான் என்ற நம்பிக்கை நெய்தல் நில மக்களிடம் காணப்பெறுகின்றது. இதற்கு நேரடி சங்க இலக்கிய சான்று இல்லையெனினும் கணவர் இரவில் மீன் பிடிக்க சென்றவுடன் அவன் நல்லபடியாகத் திரும்ப வேண்டும் என்று அவனுடைய மனைவி கோயிலுக்குச் சென்று வழிபட்டமையை அகநானூறு (240:4–8) குறிப்பிடுகிறது.

குறமகளிர் தம் கணவனை தெய்வமென்று நினைத்திருந்தால்தான் அவளுடைய தந்தை தொடுக்கும் அம்பு இலக்குத்தப்பாது என்ற நம்பிக்கை குறிஞ்சி நில மக்களிடம் இருந்துள்ளதைக் கலித்தொகை (கலி 39:16–18) கூறுகின்றது. இவைப் போன்ற வழக்காறுகள் யாவும் பெண்ணைக் கட்டுப்படுத்தும் நோக்கில் கொண்டுவரப் பெற்றவையாகும்.

கற்புடைய மகளிர் கணவர் உடனுறையும் போது தலைவாரி பூச்சூடினர். அவனைப் பிரிந்திருந்தபொழுது தன்னை அலங்கரிக்காமல் இருந்துள்ளனர். போருக்காகவோ, பொருளீட்டல் நிமித்தமாகவோ கணவன் பிரிந்து சென்றுள்ள சூழல்களில மனைவி பூச்சூடிக் கொள்ளாமலும் தன்னை அலங்கரித்துக் கொள்ளாமலும் இருந்தமையைச் சங்கப்பாடல்கள் (புறம் 293, 147:5–8, குறு. 192:5–6) பதிவு செய்துள்ளன. இவை பிரிவுத் துயரின் வெளிப்பாடு காட்டப்பெற்றுள்ளது. எனினும் மனைவி பூச்சூட்டிக் கொள்ளுதலும், தன்னை அலங்கரித்துக்கொள்ளுதலும் கணவனுக்காகவே என்ற குறிப்பும் காணப்படுகிறது.

**மூன்று நிலைகள் – கற்பு:**

வாழும் காலத்தில் தமக்கிருக்கும் சமூக மதிப்பை நிலை நிறுத்திக் கொள்ள பெண் கற்பை வற்புறுத்திய ஆடவரினம் தான் இறந்த பின்பும் தன் மீது சமூகம் வைத்திருந்த மதிப்பு எவ்வகையிலும் சிதைக்கப்பட்டு விடக்கூடாது எனக் கருதி கற்பில் மூன்று நிலைகளை வடிவமைத்துள்ளது.

**“நீத்த கணவற் றீர்த்த வேலின்**
**பெயர்த்த மனைவி வஞ்சியானும்**

................

**கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்**
**செல்வோர் செப்பியி மூதா னந்தமும்**

**நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து**
**தனிமகள் புலம்பிய முதவாலையும்**
**.................**
**காதலன் இழந்த தாபத நிலையும்"** [108]

எனத் தொல்காப்பியம் சுட்டுகின்றது.

**தலைக்கற்பு:**

கணவன் இறந்தான் என்று அறிந்தவுடனேயே மனைவி இறப்பது தலைக் கற்பாகும். பெண்டிர் பசிய கீரைகளை உண்ணாது குளிர்ந்த நீரில் மூழ்காத தம் தம் கணவராகிய வீரர்களின் மார்பினை சேர்ந்து உயிர் நீத்தவராய் (புறம் 62:13–15) களத்தில் கிடந்தனர்.

**இடைக்கற்பு:**

கணவன் இறந்தவுடன் அவனோடு தானும் உடன்கட்டை ஏறுதல் இடைக்கற்பு எனப்படடது. மன்னன் பூதப்பாண்டியன் இறந்தவுடன் அவன் மனைவி பெருங்கோப்பெண்டு உடன் மாய துணிந்ததைப் புறநானூறு (246) கூறுகின்றது. அவ்வாறே, ஆய் அண்டிரன் என்ற மன்னன் இறந்தவுடன் அவன் உடலை எரித்த ஈமத்தீயில் அவனுடைய மனைவியரும் தீயில் உடன் வீழ்ந்து மாய்ந்தமையைக் குட்டுவன் கீரனார் (புறம் 240:1–6) பாடியுள்ளார்.

**கடைக்கற்பு:**

கணவன் இறந்த பின்பு கைம்மை நோன்பு பூண்டு வாழ்வது கடைக் கற்பாகும். இந்நிகழ்வை புறநானூறு பதிவு செய்துள்ளது.

கணவனை இழந்த பெண்கள் கூந்தலை நீக்கி, அணிகலன்களைக் களைந்து (புறம் 250:4–5) நீர்ச்சோற்றை உண்டு பாயின்றி தரையில் படுத்துறங்கினர் (புறம 246:4–10) கணவன் இறந்தபிறகு மனைவி அதுவரை உண்டுவந்த உணவுகளைத் துறக்க வேண்டியவள் (புறம் 248) எனக் கணவனை இழந்த பெண் சாதாரண மனித வாழ்க்கையைக் கூட இழந்துபோகும் கொடிய நிலை சங்க காலத்தில் நிலவி இருந்திருக்கிறது.

**கற்புச் சிறப்பு – பெண்:**

பதிற்றுப்பத்தில் ஒவ்வொரு பதிகங்களின் முகவுரையிலும் அரசியைப் பற்றிச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன. இதன் செய்யுள் பலவற்றில் அரசியின் அழகு நலம், குண நலம், கற்புச் சிறப்பு, ஊடற் பண்பு, புதல்வர் பேறு, கணவனின் பெருமை முதலியன விளக்கப்பட்டுள்ளன.

களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் மனைவி அருந்ததிபோல் கற்புத்திறம் கொண்டவள் (பதிற் 31:27–28) என்று காப்பியாற்று காப்பியனார் கூறியுள்ளார். அவ்வாறே பெருங்குன்றூர் கிழாரும், இளஞ்சேரல் இரும்பொறையின் மனைவி அருந்ததியோடு ஒத்த கற்பினையுடையவள் (பதிற் 89:18–19, 88:28–29) என்று குறிப்பிடுகிறார்.

ஆரிய கற்பும், அடக்கம், பொருந்திய மென்மையும், ஊடற்காலத்துள் இன்மொழியைப் பகரும் இனிய முறுவலும் அமுதம் நிரம்பிய சிவந்த வாயும் அமர்த்த கண்களும், ஒளி விளங்கும் நெற்றியும் அசைந்த நடையும் உடையவள் பெருந்தேவி எனக் குமட்டூர்க் கண்ணனார் (பதிற் 16:10–13) இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மனைவியின் கற்பைக் கூறுகிறார்.

பெண்மைக்குரிய குணமாகிய மடமும், கற்பும், சான்றவளாய் செல்வக்கடுங்கோ வாழியாதனின் மனைவி (பதிற் 70:12–16) விளங்கினாள். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மனைவியும், நாணமும், பெருஞ் சான்றாண்மைப் பண்புகளும் உடையவள் என்பதைப் (பதிற் 19:13–14) பதிற்றுப்பத்து சிறப்பிக்கின்றது.

**பரத்தமை ஒழுக்கமும் – புரவலரும்:**

கடல்பிறக்கோட்டிய சேரன் செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், செல்வக்கடுங்கோ வாழியாதன், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை ஆகிய சேரமன்னர்கள் பிற மகளிருடன் மகிழ்ந்திருந்தனர் எனப் பதிற்றுப்பத்து பாடல்கள் (பதிற் 50:16–22, 52:14–24, 68:18–19, 79:4–7) குறிப்புகள் தருகின்றன. அரசன் பல மணங்கள் புரிந்தமை (பதிற் பதி 4:2–3, 6:1–2, 5:1–3) ஆட்சியால் அனுமதிக்கப்பட்டிருந்தது. அரசர்களின் மணமுறை 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற முறை அரசர்களிடமும் விலக்குப் பெற்றுள்ளமையைப் பதிற்றுப்பத்து வழியாக அறிய முடிகிறது.

**பரத்தையர்:**

சமூக அமைப்பானது மனிதனின் குழு வாழ்க்கை முறை, கூட்டமாக இடம் பெயர்ந்து சென்ற நிலை, அந்தந்த கூட்டங்களில் வாழ்வாதாரம் தேடிய பகுதிகள் வாழ்க்கையை இருத்திக் கொள்ள தேர்ந்தெடுத்துக் கொள்ளப்பட்ட நில எல்லைகள் இவற்றின் தொடர்ச்சியில் ஒரு நிலைத்த வாழ்க்கை முறையைக் கண்டதும் மலை, காடு எனத் தொடங்கி விவசாய உற்பத்திக்கான சமவெளிப் பகுதி கண்டுபிடிக்கப்பட்டபோது அனுபவ அறிவின் திரட்சியில் விவசாயப் பெருக்கத்தை ஏற்படுத்தியது. விவசாய உற்பத்திக்கென ஏற்ற

நிலமாக விளைச்சல் பெருக்கும் நிலமாக நீர் வளத்தை நிலையாக்கிக் கொண்டமைந்த நிலமாக தன் வாழ்தல் தேவைக்கென பிற இடங்களை நாடிச் செல்லும் சூழல் அவசியமல்ல என்ற சூழலைத் தந்த நிலமாக மருத நிலம் அமைந்தது. இவ்வமைவு நிறுவனப்படுத்தப்பட்ட நிலைத்த சமுதாயம் உருவாகவும் காரணமாயிருந்தது. குழு வாழ்க்கையில் இருந்த தலைவன், அரசன் என ஆக்கம் பெற்றதும் மருத நிலத்தில்தான். அவன் சிந்தனையானது தனக்கும் கீழ் எனும் ஆதிக்கம் நிறைந்ததாய் இருந்துள்ளது. விவசாயக் குடிகளில் அவனது ஒழுக்க மரபை விதியாக்கும் முயற்சி நிறைவேறியிருக்கிறது.

இனக்குழு வாழ்க்கையில் இயற்கையோடு, இயல்பான மனப்போக்கிற் கிணங்க வாழ்ந்த முறை என்பது மாறி தனக்கான உடைமைகளைப் பாதுகாக்கும் குடும்ப அமைப்பு உருவாக்கப்பட்டபோது, ஒழுக்கம் என்பது ஆண், பெண்ணிற்கு என தனித்து வரையறை செய்யப்பட்டது. பிந்தைய காலங்களில் சமூகம் என்ற ஒரு நிறுவனம், அரசமைப்பு என்ற முறைகள் பகுக்கப்பட்டன. இப்பிரிவுகள் அரசனின் கட்டளைகளின் வழி பிறந்தவை எனவும், இப்பிரிவுகளை மீறுதல் அரசமைப்பில் குற்றமாகவும் எண்ணப்பட்டது. இப்பிரிவுகளின் போதெல்லாம் ஆண் தங்களது தனி மனித ஒழுக்கத்தில் முறை பிறழ்ந்தவனாகவே இருக்கிறான். பரத்தையர் பிரிவு, பரத்தையர் ஒழுக்கம் போன்ற சொல்லாடல்கள் அதனை விளக்கும்.

திருமணம் செய்த பின்பும் ஆண் தன் பாலியல் வக்கிரத்திற்கு வேறு பெண்ணை தனதாக்கிக் கொள்ளலாம். அவ்வாறு தனதாக்கிக் கொள்ளும் முறை சமூகத்தில் தவறாக எண்ணப்படுவது இல்லை. எண்ணிவிடக் கூடாது. உயர்சாதி பிரிவுகளுக்குள் உள்ள ஆண்களின் பாலியல் வக்கிரத்திற்காக இழிவு செய்யப்பட்ட பெண்கள் எல்லாரையும் காமக் கிழத்தியர் என்பர்.

சாதிய மற்றும் தொழில் ரீதியாக பிராமணன், அந்தணன், அரசன், வணிகன், வேளாளன், இவர்களுள் யார் யார் எத்தகைய சாதி பெண்களை மனைவி அல்லாத காமக்கிழத்தியாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற விதிகளும் வரையறுக்கப்பட்டுள்ளது. அந்த வகையில் ஒத்த கிழத்தியர், இழிந்த கிழத்தியர், வரையப்பட்டார் என மூன்று வகையான பெண்கள் பிரிக்கப் பட்டிருந்தனர்.

**ஒத்த கிழத்தியர்** என்போர் மனைவி அல்லாத ஆனால் கிழவன் எனும் கணவனின் சொந்தச் சாதியில் அவனுக்கு அவனது பாலியல் வக்கிரத்திற்கு உரியவளாக ஆக்கிக் கொண்டு திருமணம் செய்து கொள்ளும் பெண்கள்.

**இழிந்த கிழத்தியர்** எனும் காமக் கிழத்தியர் ஆணின் பாலியல் வக்கிரத்திற்கு மனைவி அல்லாத, அரச குல பெண்ணையும், வணிக வேளாள குல பெண்ணையும், அந்தணன் எனும் சாதிய ஆண் மணந்து கொள்ளுதல். மனைவி இருந்தும் பாலியல் வக்கிரத்தால் அந்தணனைப் போன்றே அரச குலத்தைச் சேர்ந்தவன் அந்தணர் குலப் பெண்ணைத் தவிர வணிகர், வேளாளர் எனும் இரு சாதிகளுள் பிறந்த பெண்களைத் திருமணம் செய்து கொள்ளலாம். அரசனின் மனைவி அல்லாத பெண்கள் இழிந்த கிழத்தியர்.

**வரையப்பட்டார்** என்போர் காமக்கிழத்தியரைப் போன்றே பிரித்து வைக்கப்பட்டார். யாரெனின் கணிகைக் குலத்தில் உள்ள பெண்களுக்கு செல்வத்தைக் கொடுத்து (பொருள்) திருமணம் செய்து கொள்ளும் (மனைவி அல்லாத) பெண்களை வரையப்பட்டார் என்பர்.

இதன்வழி சாதி ஆதிக்கத்தைக் கொண்ட அந்தணன், அரசன், வணிகன், வேளாளன் எனும் ஆதிக்க சாதியிலுள்ள பெண்களின் மீதும் பாலியல் வன்மத்தை திணித்துள்ள விதிகளை தொல்காப்பியத்தின் வழி அறிய முடிகிறது.

பெண் தனது எதிர்ப்புகளை எந்த நிலையிலும் விளக்கிச் சொல்லக் கூடாது என்பதை அறிவுறுத்தும் நிலையில் அடக்கம் (செறிவு), அமைதி (நிறைவு), மனங்கொடாமை (செம்மை), சொல்லுதல் (செப்பு), நன்மை பயப்பனவும் தீமை பயப்பனவும் அறிதல் (அறிவு), உள்ளக்கருத்து அறிதல் (அருமை) இவையெல்லாம் பெண்களுக்குரிய இயல்புகள் என்னும் இவ்வியல்புகளோடு இருக்கக்கூடிய பெண்ணே அறத்தோடு நிற்பவளாக தொல்காப்பியம் போதிக்கிறது.

தலைவன் மேற்கொண்ட ஒழுக்கச்சீர் கேட்டை தொல்காப்பியர்,

**'தங்கிய ஒழுக்கத்துக்கிழவன்'** [109]

**'பிழைத்து வந்திருந்த கிழவன்'** [110]

என்று கூறுகிறார். மேலும் இவ்வொழுக்கத்தின் புன்மை குறித்து,

**'கொடுமை ஒழுக்கம்'** [111]

**'அடங்கா ஒழுக்கம்'** [112]

**'பேணா ஒழுக்கம்'** [113]

என்று சுட்டிச் செல்வர்.

இத்தகைய (பரத்தமை) இயல்பினை ஏற்க விரும்பாத உ.வே.சா. தமது குருந்தொகை நூலாராய்ச்சியில்

**'பலவகையானும் உயர் நெறியாகிய அன்புடைய வாழ்க்கை, பூ விற்குப் புல்லிதழ் வாய்ந்தாற் போலவும், மதிக்கு மறு வாய்ந்தாற் போலவும் பரத்தையின் பிரிவு என்னும் இழிந்த ஒழுக்கத்தினால் சிறிது கலக்கமடைகிறது'**

என்று கூறியுள்ளார்.

கற்புத்திணைப் பாடல்களில் மூன்றில் ஒருபங்கு பரத்தைப் பாடல்களாக இருத்தலின் சங்க காலத்தில் இத்துறைப் பாடலுக்கு இருந்த நன்மதிப்பை ஒருவாறு அறியலாம்[114] என்பார் வ.சுப. மாணிக்கம்.

சங்க இலக்கியங்களில் காட்டப்பட்டுள்ள பரத்தமையொழுக்கம், அக்கால அங்கீகரிக்கப்பட்ட ஒழுக்கமாகவே இருந்திருக்கின்றது. இதனால் பாதிப்படைந்த மனித ஒழுக்கம் பற்றியோ, பாதிக்கப்பட்டவர் யார் என்பது குறித்தோ தெளிவாகக் காட்டப்படவில்லை.

காமக்கிழத்தி, காதற்பரத்தை, நயப்புப் பரத்தை, இற்பரத்தை, தலைநின்றொழுகப்பட்ட பரத்தை, சேரிப்பரத்தை, இல்லிடைப் பரத்தை, பாசிழை மகளிர் (நல்லில் பரத்தையர், மதுரை. **579**), கொண்டி மகளிர் (மதுரை. **583**), வரைவின் மகளிர், பரத்தை முதலான பரத்தையர் குறித்த பல்வேறு பெயர்கள் சங்க அகப் பாடல்களின் அடிக்குறிப்பில், அதாவது திணை துறைக் குறிப்புகளில் காணப்பெறுகின்றன. இப்பரத்தையொழுக்கம் பெரும்பாலும் மருதத் திணையிலேயே பாடப்பட்டுள்ளது.

"மருத நிலத்தில் உணவுக்கு பஞ்சமில்லை. ஆதலின் மக்கள் தங்கள் ஒய்வு நேரங்களைக் கல்வியிலும், கலை வளர்ச்சியிலும் செலவிடத் தொடங்கினார்கள். சோற்றுக் கவலை இல்லாததால் நிலக்கிழார் பலர் பரத்தையோடு பழகலாயினர். எனவே, தமிழ் நூல்களில் பரத்தையர் பிரிவு ஏற்பட்டது" என்று மா.இராசமாணிக்கனார் கூறுகின்றார்.

"சங்க இலக்கியத்தில் மருதம் தொடர்பான **263** பாடல்களில் **221** பாடல்கள் பரத்தையர் உறவு குறித்தனவே" என்ற அறிஞரின் கூற்று பரத்தையரின் பெருக்கத்தையும், அக்காலச் சமுதாய நிலையையும் காட்டுவதாகவே அமைகிறது.

தன் மகனை தாங்கித் தலைவி துன்புறும் நிலையில் வேட்கையினால் பிற மகளிரை விரும்பும் தலைவனின் போக்கு, செவ்வணி காட்டி அவனை மீண்டும் தலைவியின் இல்லத்திற்கு அழைத்து வரும் போக்கு சமுதாயத்தின் ஒழுக்கக் கேட்டையே காட்டுகிறது.

பரத்தைப் பிரிவு என்ற ஒரு வகை இழிவொழுக்கத்தின்பாற்பாடும் பாலியல் வன்மத்திற்குரிய அடிமைப் பெண்கள் இருப்பதை சங்க இலக்கியம் வழி அறிய முடிகிறது. இந்நிலையானது சமனற்ற பாலியல் நிலையிருந் தமையினைச் செவ்வியல் இலக்கியத்தின் வழி காண முடிகிறது.

**முடிவுரை:**

மருதநில அரசு – அறநெறிபட வாழும் முறையை மரபாகக் கொண்டிருந்தது என பொதுமைப்படக் கூறினும், பல்வேறு அரசர்கள் தங்களின் ஆளுமையில் பல்வேறுப்பட்ட தன்மையோடு அமைந்த நெகிழ்வுத் தன்மையுடன் வினையாற்றிச் சென்றிருக்கின்றனர் என அறிய முடிகிறது. அவர்களின் அறநெறிகளுக்குள் நிலைத்த நடுநிலைமையோடான 'அறம்' பின்பற்றப்படவில்லை என்றே ஆய்ந்தறியமுடிகிறது. ஆண்களுக்கு போர் வீரம் செறிந்த அறமும், பெண்களுக்கு குழந்தைப் பேறுறுதலோடு இன்னபிற எனப் பொதுமைப்படுத்திப் பேசிச் செல்லும் அறப்பாங்கும் அமைந்திடக் காணலாம். மேலும் காதலும் வீரமும் போற்றும் பண்பாட்டுத் தளத்தில் பெண்களுக்கான அரசநெறியுள், தண்டனைகளும், உடைமையற்ற நிலையும் கணவனுக்குப் பின் மனைவியின் வாழ்தலுக்கும் பெரும் சுமையோடான சமஉரிமை மறுக்கும் தண்டனைகளும் இருந்திருக்கின்றன. அரசனின் அதிகாரம் போன்று அரசனின் மனைவிக்கும் உரிய உரிமை அளிக்கப்படவில்லை. கற்பு என்ற சொல்லும், தலைக்கற்பு, இடைக்கற்பு, கடைக்கற்பு என பெண்களையே தண்டித்திருக்கிறது. முந்நீர் வழக்கம் மகடுவோடில்லை என கடற் பயணத்திற்கும் தடை விதித்திருக்கிறது. பெண் குழந்தையின் சிறப்பும் பெரிதும் போற்றப்படவில்லை. பெண் கல்வி மறுப்பும் விதிக்கப்பட்டு சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடன் என 'சான்றோன்' என்ற தொடரே பரந்துப்பட பேசப்பட்டிருக்கின்றது.

ஓதற் பிரிவு, தூதிற் பிரிவு, போர்ப்பிரிவு எனச் சொல்லி சங்க இலக்கியத்தில் பரத்தைப் பிரிவு என்பது பெண்களை இழிவு நிலைக்குச் சமூக மதிப்பீட்டில் கீழ்மை நிலைக்கே தள்ளியதைக் காணமுடிகிறது. ஆண்களை சமூக மேம்பட்ட தளத்தில் பார்த்த இந்த அரசு பெண்களைக் கீழ்மை நிலைக்கு பார்த்திருப்பது அறமற்ற சூழலாகவே காணமுடிகிறது.

இனக்குழு வாழ்க்கையில் 'தாய்' போற்றப்பட்டதைப் போல, மருத நில அரசு உடைமைச் சமூகத்தில் பெண் அறம் போற்றப்படவில்லை என்பதை சங்க இலக்கியப் பாடல்கள் வழி துணிந்துரைக்க முனைகிறது இவ்வாய்வேடு.

## சான்றெண் விளக்கம்

## இயல் – 4

1. தொல். பொருள். புறத். 61:7.
2. பெ.மாதையன், சங்க கால இனக்குழுச் சமுதாயமும், அரசு உருவாக்கமும், ப.10.
3. புறம். 187
4. மதுரை. 744–749
5. க.அ.ஜோதிராணி, சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள், ப.11.
6. பெ.மாதையன், சங்க கால இனக்குழுச் சமுதாயமும், அரசு உருவாக்கமும், ப.39.
7. புறம். 314:4–9
8. புறம். 324:9–12
9. புறம். 313:2
10. புறம். 327:7
11. புறம். 306
12. புறம். 342
13. புறம். 343
14. புறம். 345
15. புறம். 340:6–9
16. தொல். பொருள். 384
17. தொல். பொருள். 63:25
18. புறம். 35:3–4
19. நற். 400:7–8
20. புறம். 40:10–11
21. புறம். 58:13
22. சிறுபாண். 66–67
23. சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப.165.

24. புறம். 55:10
25. பொருநர். 230
26. புறம். 146:4–5
27. புறம். 186
28. புறம். 185
29. புறம். 20:17
30. புறம். 29:9–12
31. புறம். 31:1–2
32. புறம். 34:17
33. பதிற். 59:16
34. பதிற். 11:16
35. பதிற். 15:27–30
36. பதிற். 85:9–10
37. பதிற். 86:5–8
38. பதிற். 89:12
39. பதிற். 37:10–11
40. பதிற். 64:3–5
41. பதிற். 70:12
42. பதிற். 22:1–4
43. பதிற். 24:4–10
44. பதிற். 24:6–8
45. புறம். 39:8–9
46. புறம். 34:1–7
47. புறம். 35:5
48. புறம். 221:3
49. புறம். 353:10–12
50. புறம். 134:1–4
51. புறம். 175:10
52. புறம். 55:10–16
53. புறம். 71:7–9

54. புறம். 18:18–23
55. புறம். 239
56. புறம். 9:1–6
57. புறம். 29:9–10
58. புறம். 157:1–4
59. புறம். 55
60. புறம். 10:3–6
61. மதுரை. 489–492
62. புறம். 39:8–9
63. புறம். 58:9
64. புறம். 226:8–10
65. குறுந். 276:1–6
66. புறம். 71:7–9
67. தொல். பொருள். புறத். 74
68. பெரும். 443–444
69. நற். 146:4–5
70. புறம். 42:10–11
71. பதிற். 13:23–24
72. புறம். 2:1–8
73. புறம். 312
74. சிறுபாண். 231–235
75. புறம். 58
76. பொருநர். 230
77. மதுரை. 192
78. புறம். 10:3–4
79. புறம். 213:9–11
80. புறம். 75:1–2
81. புறம். 76
82. புறம். 9:1–6
83. பதிற். 31:14

84. புறம். 183
85. பதிற். 21:37–38
86. புறம். 246
87. புறம். 25:10–14
88. புறம். 250:4–5
89. புறம். 261:17–18
90. புறம். 183:9–10
91. புறம். 312
92. புறம். 183:5–7
93. தொல். பொருள். அகத். 27
94. புறம். 95:1–3
95. புறம். 95:13–15
96. பெரும். 136–140
97. புறம். 306
98. பு.பொ.வெ.மா. 175
99. புறம். 277:3–5
100. புறம். 279
101. புறம். 278
102. புறம். 310:4–8
103. புறம். 86:4–6
104. புறம். 306:4–7
105. முல்லை. 46–49
106. பதிற். 61:15–16
107. சரளா ராசகோபாலன், சங்க அகப்பாடல்களில் நன்னன், பக். 174–175.
108. தொல். பொருள். புறத். 77.
109. தொல். பொருள். கற்பு. 145:15
110. தொல். பொருள். கற்பு. 148:8
111. தொல். பொருள். கற்பு. 145:28
112. தொல். பொருள். கற்பு. 148:6
113. தொல். பொருள். கற்பு. 148:14
114. தமிழ்க் காதல், ப.291.

உழைப்பின் வழி பிறந்த அனுபவ வெளிப்பாடு கலை. மக்களது வாழ்வியலையும், பண்பாட்டையும், நாகரிகத்தையும் பதிவு செய்யும் கலைக் களஞ்சியம்.

கலை எனில் வேட்டைத் தொழிலின் நுட்பம், கைவினைத் தொழிலின் திறன், பெருந்தொழிலின் திறன், புனையா ஓவியத்தின் திறன், நெடுமாடம் எனும் கட்டிடக் கலையின் நுட்பம், கல்லெழுத்து எனும் சிற்பம் என்பதாக சங்க இலக்கியத்தின் வழி அறிவோம். சங்க இலக்கியத்தில் இடம்பெறும் கலை, கலைஞர்கள் குறித்த முழுமையான வாழ்வியல் வரலாற்றுச் செய்திகளை பாடல்வழி முறைப்படுத்தித் தருவதே இவ்வியலின் நோக்கம்.

கலையைத் தொழில் முறையாகப் பயன்படுத்தி அதன் மூலம் பெற்ற வருவாயைக் கொண்டு வாழ்க்கையை நடத்திய பாணர் மரபினரின் வாழ்வியலை விளக்குவதாக அமைகிறது. அந்த வகையில் இவ்வியல் கலைஞர்கள் குறித்த ஆய்வினை விளக்க முனைகிறது.

**கலை – விளக்கம்:**

கலை என்பதற்கு இணையான ஆங்கிலச் சொல் Art என்பதாகும். Art என்றால் திறன், உணர்வு என்றும் பொருள்படும். **கலை** எனில் **திறன்** என்றும் பொருள். திறன் எனில் அரியது, தேடியது, அறிந்தது, உருவாக்கியது, மகிழ்விற்குரியது, தொழில் முனைப்பு, நுட்பம் என்று பல பொருள்கள் உள்ளன.

கலை என்பது உணர்வின் வெளிப்பாடு. அது உணர்வை வெளியிடுவதுடன் பிறருக்கும் அவ்வுணர்வை ஊட்டும் பெருமையுடையது[1] என்பார் டால்ஸ்டாய்.

கண்களையும் காதுகளையும் கவர்ந்து மனதில் மகிழ்ச்சியை ஏற்படுத்தும் செயல் கலை. கண் வழியாக அழகியல் உணர்வையும், செவி வழியாக ஒலியிசை உணர்வையும், உள்ளத்துள் ஒரு சேர உருவாக்கி, சிந்தனையில் கிளர்ச்சியை எழச்செய்யும் தன்மையுடையது[2] கலை.

கலை என்பது ஒருவகை வினை. இசை, பாட்டு, கூத்து, ஓவியம் போன்றவை மனிதனால் உருவாக்கப்பட்டவை. அனைத்துக் கலைகளும் ஐம்புலன்களின் வாயிலாக நுகரப்படுவன. ஐம்புலன்களாலன்றி பிரித்து உணரவியலாது என்பதும் அறிவோம். இன்று கலைகள் என நாம் சிறப்பிக்கும் இசை, இலக்கியம், கூத்து, ஓவியம், திரைப்படம் என்பவை அனைத்தும் ஓசை, ஒளி என்ற இரு புலன்களை சார்ந்தவையே. ஆக இயற்கையின் வழி பிறந்த உழைப்பின் வழி பிறந்த ஊடக மொழிக் கலை.

**கலையின் – தோற்றம், வளர்ச்சி:**

கலையின் பிறப்பிடம் மலை – குறிஞ்சி. உழைப்பைத் தொடர்ந்து ஓய்வு பிறந்தபோது ஒலிப்பு என்பதும் அசைவு என்பதும் ஓரிடத்தில் நின்று நிலைத்து கலை வடிவத்தை வெளிப்படுத்திக் கொண்டன. அப்போது கலை என்ற வடிவம் உருப்பெற்றது. ஓய்வுக்காலத்தில் அசைவும் மொழியும், இசைக்கூத்து என உடலினின்று பிறக்க அதன் தொடர்ச்சியால் கலையும் வளர்ந்தது. இது கலை உருவாக்கத்தின் இயல்புக்கூறு.

“மனத்திற வெளிப்பாடு” எனும் பொருளில் கலை பிறந்தது என்று பேசப்படுகிறது. கால வளர்ச்சியால் கூத்து, பாட்டு, கல் எழுத்து, எழுத்து ஓவியம், சிற்பம், கட்டிடம் என பல்வேறு பரிணாம வளர்ச்சியோடு அமைகின்றது.

நாகரிகம், பண்பாடு என்பன கலைகளின் வாயிலாகப் பிறந்தவை. மக்கள் அறிவு வளர வளர கலைகளில் பல உட்பிரிவுகள் அரும்பியதோடு புதிய கலைகளும் மலர்ந்து இன்று வரை நாட்டில் பல்லாயிரக்கணக்கான கலைகள் தோன்றிவிட்டன.

**கலைஞன்:**

உணர்ச்சி மனித உயிர்க்கு பொது. கலைஞரிடம் இந்த உணர்ச்சி ஆழமும், ஆற்றலும், நுண்மையும், மென்மையும் பெற்று விளங்குகிறது. தான் பெற்ற அத்தகைய ஆழ்ந்தகன்ற உணர்ச்சியை இன்னொருவரும் பெறுமாறு செய்வது ஊடகக்கலை. அப்படி இன்னொருவன் பெறுமாறு செய்வதற்கு கலைஞன் தன் உணர்ச்சிக்கு ஒழுங்கு, முறை வடிவம் தருகின்றான்.

அந்த வடிவம், மொழி வடிவம் பெற்றால் இலக்கியக் கலை, வண்ணத் தோடியைந்து நின்றால் ஓவியக் கலை என்றவாறு தோற்றம் பெறுகின்றன. இப்படி வடிவத்திற்குரிய மூலப்பொருட்களுக்கேற்ப கலைப் பெயர்கள் மாற்றம் பெறுகின்றன.

கலைஞன் காட்டும் கட்புலக் காட்சியும், அதனால் பெறுகின்ற உணர்வும், அந்நிலையினால் கலைஞன் பெறுகின்ற அனுபவ வெளிப்பாட்டு உணர்ச்சி இவையனைத்தும் எல்லாக் கலைகளுக்கும் பொதுவானவையே.

கலை ‘உணர்வின் வெளிப்பாடு’ பயன்கோடலைத் தருவதாய் அமையும். அந்த அடிப்படையில் தான் “கலையின் வெளி” வளர்ந்து வந்திருக்கிறது. அவ்வெளியில் சங்க இலக்கியக் கலைஞர்கள் கலை வெளிப்பாட்டுத் திறனை,

உணர்வின் வெளிப்பாட்டை பிறர் பெற வேண்டிய பயன் எனக் கருதி பாட்டும், கூத்தும் (ஆட்டம்), இசையும், பண்ணும் என இசையின் பரிமாணங்களை விரித்துரைத்து வந்தனர் எனபதை சங்க இலக்கியக் குறிப்புகள் காட்டி நிற்கின்றன.

கூத்தரும், பாண்ரும், பறையனும், பொருநரும், விறலியும், பாடினியும், துடியனும், கோடியரும், கண்ணுளரும், வயிரியரும், கடம்பனும், புலையரும், கலைநெறியின் பாற்பட்டு பயனுரும் மன்னனையும், அவனது அரச விதிகளையும் உலகிற்குப் பறைசாற்றிய வல்லுநர்களாக விளங்கியவர்கள். ஆற்றுப்படையின் அரிய கலை வல்லுநர்கள் அவர்கள். தகவல் பரிமாற்றத்திற்குரிய ஊடகக் கலைஞர்கள்.

இசைகளைத் தெரிந்து தேர்ந்து நுட்பமாக, முறைப்படி வடிவமைத்துக் கொண்ட திறனிசையாளர்கள். இவர்கள் பாணர்குலத் தொழிற் கலைஞர்கள் என்பதை ஆற்றுப்படை நூல்கள் விரித்துரைப்பதறிவோம்.

**“கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்**
**சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும்”** [3]

என சங்க இலக்கிய வகையுள் ஆற்றுப்படை நூல்கள் பாண் மரபினரை வைத்தே எழுந்தன. அவர்கள் தம் வறுமையைத் தீர்த்துக் கொள்ள பொருள் தரும் புரவலரை நோக்கிப் பயணப்பட்டனர் என்பதும் அவர்களின் வாழ்வு தம் புலம் பெயர்ந்த தன்மையாகவே பார்க்கப்படுவதைக் காணலாம்.

**“பழுமரம் தேரும் பறவைப் போல”** [4]

என வரும் சங்க இலக்கியப் பாடல் மூலம் அறியலாம். அவ்வாறு பரிசு பெற்று வறுமை நீங்கப்பெற்ற கலைஞர் மற்றும் குழுக்கள் தம்மை எதிர்ப்படும் மற்றொரு கலைஞனை அப்புரவலனிடம் ஆற்றுப்படுத்துவர். இது சங்க காலக் கலைஞர்களின் மரபாகும். இத்தகு இலக்கியத்திற்கு இலக்கணம் தந்த பதிவாக, தொல்காப்பியத்தினைச் சான்றாதாரமாகக் கூறலாம்.

மன்னனின் கொடைச்சிறப்பும், போர்ச்சிறப்பும் பாடுவது பாணரின் மரபு. மன்னனின் இயல்பை பாடாத பாடல்களே இல்லை. ஆற்றுப்படையின் பொது அமைப்பானது வள்ளல்களின் கொடைச்சிறப்பு, மலையின் சிறப்பு, நாட்டுச் சிறப்பு, ஊர்ச்சிறப்பு, பாணன் (அ) விறலியின் வறிய நிலை இசைக்கருவிகள் என குறிக்கப்பெற்றிருக்கக் காணலாம்.

நான்கு ஆற்றுப்படை நூல்களிலும் வள்ளலை நாடிச் செல்லும் புதிய வறிய பொருநன், பாணன், கூத்தன், உடன் சென்றவர் ஆகியோரது வறிய நிலை, அவர் கொண்டு சென்ற இசைக்கருவிகள் பற்றிய குறிப்பு, பரிசில் பெற்ற பாணன், வள்ளலைக் கண்ட பின்பு பெற்ற செல்வ நிலை பற்றிய குறிப்பு, வள்ளலின் நல்லியல்பு, தலைநகரச் சிறப்பு, அவன் வரவேற்றல், வீரம், உபசரிப்பு, பரிசு வழங்கல் போன்ற செய்திக் குறிப்புகளைப் பொருநர் ஆற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணற்றுப்படை, கூத்தராற்றுப்படை ஆகிய நான்கு ஆற்றுப்படைகளிலும் பொதுப்படையாய் இடம் பெற்றுள்ளமை அறிவோம்.

இவ்வாறு 'ஆற்றுப்படுத்தும் ஒற்றுமை மரபு' சங்க காலக் கலைஞர்களிடம் ஒற்றுமையுணர்வைக் காட்டி நிற்பதை காண முடிகிறது. ஒருவருக்கொருவர் உதவும் பண்பும் இருந்துள்ளமை உய்த்துணர முடிகிறது. தமிழர் பண்பாட்டு அடையாளம் மரபு வழிப்பட்ட, பழக்கம் இன்று வரையிலும் மரபுக் கலைக் குறித்த நாட்டுப்புறக் கலைஞர்களிடம் இருந்து வருவதற்கு தகுந்த சான்றாக தமிழக நாட்டுப்புறக் கலைஞர், ஆய்வாளர், நாடகத்துறை பேராசிரியர் மறைந்த டாக்டர் கே.ஏ.குணசேகரன் என்பதை **18.01.2016** நாளிதழ் (இந்து) பறைசாற்றும்.

**பாண்மரபுக் கலைஞர்கள்:**

பாணர், பொருநர், விறலியர், அகவுநர், கூத்தர், துடியர், கடம்பன், கோடியர், பறையர், வயிரியர், முழவர், கிணைவர், இயவர், கண்ணுளர், ஆடுநர், ஆடுமகள், கிணைமகள், பாண்மகள், பாடுமகள் எனச் சங்க இலக்கியங்கள் இப்பாண்மரபினரைப் பதிவு செய்துள்ளன. இவர்கள் கலைகளை நிகழ்த்தும் தன்மையாலும், கலைகளை வெளிப்படுத்தும் திறன்களின் வகையினாலும் பெயர் பெற்றனர்.

மரபுக் கலைஞர்கள் குறித்த உளவியல் மற்றும் கலைப்பண்பாட்டு வரலாற்று நோக்கில் பதிற்றுப்பத்து, பட்டினப்பாலை ஆகிய இரு நூல்களிலும் ஆய்வறிஞர் கே.ஏ.குணசேகரன் அவர்கள் ஆராய்ந்து உரைசெய்து அளித்தமை இங்கு எண்ணிப் பார்க்கத் தகும்.

பாணர், பாடினி, விறலியர் – நரம்பிசைக் கருவி, மீட்டிப் பண்ணுடன், பாடல் பாடுபவராகவும், துடியர், பறையர், முழவர் – தோல் இசைக்கருவிகளை இசைப்பவராகவும் – குழலர், கோடியர், வயிரியர், இயவர், கோவலர் – துளை இசைக் கருவிகளை இசைப்பவராகவும், கூத்தர், கூத்தியர், கண்ணுளர், விறலியர் – இசைக்கேற்ப ஆடிப் பாடி, அபிநயத்தலை செய்ததும் பாடற்பதிவுகளால் காண முடியும்.

சூதர், வேதாளிகர் – அரண்மனையில் அரசனை துயிலெழுப்பி நன்நிமித்தமாகப் பாடுபவராகவும், போர்க்களம் பாடுவோர் பொருநராகவும், ஆரியக் கூத்தர், வேழம்பர் ஆகியோர் ஊர்தோறும் கழைக் கூத்தினை நிகழ்த்துபவராகவும், சங்க காலத்தில் அரசரின் புகழ்ப்பரப்புனராகவும் மிதவைச் சமூகமாக விளங்கிய கலைஞர்களாகக் காணமுடிகிறது. அரசர்தம் வீரம், கொடை, புகழ் பற்றி இசைப் பாடல்களாக ஊர்ஊராகச் சென்று பாடியவர்கள். ஓரிடத்தில் நடக்கும் நடப்புகளைப் (எதார்த்த நிகழ்வுகளை) பிறிதொரு இடத்தில் வெளிப்படுத்தியவர்களாகவும், ஒற்றர், தூதுவர் என செய்திகளைக் கூறும் தகவலாளர்களாவும் இருந்துள்ளனர்.

இதன் மூலம் அரசர்களிடமும், அவர் தாம் விரும்பிய பொருட்களைப் பரிசுகளாக பெற்றுள்ளனர். ஆனால் நிரந்தர வாழ்தலுக்கான பொருள் ஈட்டியதாக இல்லை. பரிசுகளாகப் பெற்றவை வாழ்வியலுள் முழுப் பயனடையாத நிலையாகவே இருந்துள்ளது. பரிசிலர் என குறிக்கப்படுவோர் தம் வாழ்க்கை நிலை வறுமைப்பட்டதாகவே இருந்துள்ளமையைப் பாடல்கள் விளக்கும். தம் வறுமையைப் போக்க வள்ளல்களை நாடித் தம் சுற்றமொடு இடம் பெயரும் நாடோடிகளாகவும் வாழ்ந்துள்ளதாக கலைஞர்களின் வாழ்நிலையை சங்க இலக்கியத்தில் பார்க்கலாம்.

**தொல் கலைக்குடியினர்:**

தொல்குடியில் முதலாவதாக நிறுத்தப்பட்டிருந்த கலைக்குடும்பத்தினர் பாணர்குல தொழில் இசைக் கலைஞர்கள்.

> **“துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று**
> **இந்நான்கு அல்லது குடியும் இல்லை”** [5]

துடியன், பாணன், பறையன், கடம்பன் இவர்கள் தொல்குடி இனத்தினர் என்பதை உலகறியும். உள்ளம் வருடும் இசைக் கலையோடு உள்ளக் குறிப்பைக் காட்டும் கூத்துக் கலையையும் காட்சிப்படுத்தியவர்கள் இவர்கள். தேர்ந்த மரம் கண்டு, பதமான தோல் கொண்டு, இசைக் கருவிகளை ஆய்ந்தறிந்து அளித்த அறிஞர்கள், பாணர்குலக் கலைஞர்கள். குழலையும், யாழையும், நரம்பிசைக் கருவியையும், நாயனத்தையும், தோல் கருவிகளையும் இன்ன பிற இசைக்கருவிகளையும் கொண்டு பண் இசைத்த வல்லுநர்கள் இவர்கள். ஆடுகளம், போர்க்களம், விழாக்களம் சென்று கலைகளால் வாழ்க்கை நடத்திய நிகழ்த்துக் கலைஞர்கள். வல்லுநர்கள்.

தொல்குடியினரின் கலைகளே தமிழருக்குக் கிடைத்த மூத்த கலைகளாய் முன்னிருப்பவை. அவ்வரலாற்றுச் செய்திகளை உலகறியச் செய்தல் இவ்வாய்வின் கடமையாக உணரப்பட்டிருக்கிறது.

**பாணர்:**

பாணர் எனின் 'பாடுவோர்' என்று பொருள். பாணன் என்பதற்கு பாடவல்ல ஒரு சாதி (தமிழ்ப் பேரகராதி, சென்னைப் பல்கலைக் கழகம், ப.2599, தொகுதி 5) என்று தமிழ்ப்பேரகராதி கூறுகிறது. இவர்கள் பாடி இரந்து வாழும் நிலையில் இருந்திருக்கின்றனர் (பெரும். 285). பாணர்குலம் சீறியாழ்ப்பாணர் (சிறுபாண் 35), பேரியாழ்ப் பாணர் (பெரும். 462), மண்டையாழ்பாணர் (தோற்கருவி இசைப்பவர்), இசைப்பாணர், ஏர்க்களப் பாணர், போர்க்களப் பாணர் (க.காந்திதாசன், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல் ப.50) எனப் பல வகைப்படுத்தப்பட்டுள்ளமையை அறியலாம்.

பாணர் குலத்தார் இசை, ஆடல் கலைகளில் வல்லவர்களாய் திகழ்ந்தனர் (பரி 17), (அகம் 331) இவர்தம் யாழின் இசையானது இடி முழக்கமின்றி மெல்லிய ஓசையுடன் பொழியும் மழையைப் போல இருந்தது. (அகம். 374) என்பார் இடைக்காடனார் எனும் புலவர். இசைத்துறையில் வல்லவர்களான கருங்கோட்டுச் சீறியாழ் வாசிப்போர் பரிசு பொருட்களாக அணிகலன்களைப் பெற்றனர்.

**பாணரும் பரிசும்:**

- பாணர்கள் மனைநிறைவு கொள்ளும்படி பல்வேறு வகையான பொருட்களைப் பெற்றனர். (புறம் 34, பதிற். 32, 37)
- மன்னர்கள் முதலில் பாணர்களின் பசியினைப் போக்கினர். (புறம் 34, 68, 136, 212, 239, 324, 327, பதிற். 38, 65)
- மது கொடுத்து மகிழ்வித்தனர். (புறம் 115)
- கிழிந்த ஆடையுடன் சென்ற பாணர்களுக்கு மன்னர்கள் புத்தாடை அணிவித்தார்கள். (புறம் 69, 136, 138, 376, 398)
- புலமை மிக்க பாணர்களுக்கு மன்னர்கள் தங்கத்தாலான பொற்றாமரைப்பூக் கட்டிப் பெருமைப்படுத்துவர். சூடாய் பொலந்தாமரைப் பூம்பாணரொடு (புறம் 12, 361) ஆடும் வண்டு இமிராத் தாமரை (புறம் 69).
- மன்னர்கள் தாம் அணிந்திருந்த ஆரம் கொடுத்தனர் (புறம் 150), கடகம் ஈந்தனர் (புறம் 150).
- மன்னர்கள் போரில் வென்ற யானைகளையும் (அகம். 106, புறம் 127, மதுரை 219, நற் 310) குதிரைகளையும் (நற் 185), தேரும் (மதுரை 749, சிறுபாண் 248) பரிசிலாகத் தந்தனர்.

- சீறூர் மன்னாகள் தம் ஊர்கள் சிலவற்றைப் பரிசிலாக வழங்கினர்.

**“.... பாணர்க்கு ஒக்கிய**
**நிரம்பா இயல்பின் கரம்பைச் சீறூர்”** (புறம் 302:6–7)

- பாணர்களுக்கு மட்டுமல்லாமல் அவருடன் பெருங்கூட்டமாக வரும் பாணர் சுற்றத்தாருக்கும் உணவும் பொருளும் (புறம் 264:7) கொடுத்து, மன்னர்கள் ‘பாண்கடன்’ ஆற்றியுள்ளனர்.

- பாணர்களைத் தங்கிச் செல்லுமாறு வேண்டினர். (புறம் 224, 320–15)

என பாணர் தம் கலைவாழ்வில் பெற்ற பரிசுகள்[6] ஏராளம்.

நல்ல வலிமை மிக்க மலையேறும் குதிரைகள் வைத்திருந்தாலும் (நற். 185) வறுமையுற்றனர். யாழ்க்கல்வி எனும் நுட்பம் அறிந்தவராக இருந்தாலும் போரின் வரும் பொருள் பெற்றுக்கொள்ள இயலாமையால் “வறுமையாழிப் பாணர்” எனவும் சுட்டப்படுகின்றனர். சமூகத்தில் தாழ்ந்த நிலைக்கு வைக்கப்பட்டான் பாணன் என ரா.இராகவையங்கார் கூறுகிறார். பாணர்கள் பொருளால் வறுமையுற்றவர்கள் என்பதை குறுந்தொகை பாடல் (குறுந் 19) பதிவின் வழி அறிய முடிகிறது.

இதன் வழி பாணர்கள் கலை வாழ்வில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டவர்கள் என்பதை சங்கப்பாக்கள் விளக்கி நிற்பதைக் காணலாம்.

## இழிபிறப்பாளன் எனும் கலைஞர்களின் தொழில்கள்

இழி பிறப்பாளன் என்ற பொருள்படும் சொல்லாக புலைத்தி, புலைய, புலையர், புலையன் என 16 இடங்களில் பாடலுள் வந்திருப்பதைக் காண முடிகிறது.

இச்சொற்கள் நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்களில் 16 இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இழிப்பிறப்பாளன் புலையன் ‘துடி’ எனும் இசைக்கருவியை வாசிப்பவன் என்றும் சுட்டப்பட்டுள்ளது.

- தலைவனை பரத்தையோடு சேரும்படிச் செய்யும் (இழிவான செயல்) வேலையை செய்யும் பாணன் ‘புலையன்’ என்றும்,

- ‘துணி துவைத்தல்’ இழிவான தொழில் என்றும்,

- பறையடித்தல், துடியத்தல், கடுந்துடியத்தல் இழிவான தொழில் என்றும்,
- சுடுகாட்டில் ஈமச்சடங்கு செய்தல் இழிவான தொழில் என்றும்,
- சாமியாடல் (புலைத்தி) இழிதொழில் என்றும்,
- பிரசவக் கட்டில் செய்தல், குழந்தைப் பேறு நிகழும் கட்டில் கட்டும் தொழில் என்றும்,
- பிணத்தை புல்மீது கிடத்தி கள்ளுடனே சில சோறாகிய உணவை புலையன் படைப்பதால் புலையன் செய்த தொழில்கள் இழிதொழிலாகப் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன என்றும் அறியப்படுகிறது.

**“.... முதுவாய்ப் பாண”**[7] அறிவு வாய்த்தலையுடைய பாணன் என பாணன் தலைமைப் பண்பாளன் என்பதை பாடல்கள் பதிவு செய்துள்ளன.

தலைவிக் கூற்றாக வரும் பாடலான

**“வாழி ஆதன்**

**..............**

**பாணனும் வாழ்க!”** [8]

எனும் வரிகளால் அரசனோடு, உயர்ந்தாரோடு பாணன் வாழ்த்தப்படுகிறான். பாணனும் என ‘உம்’ மைகொடுத்து சொல்லப்பட்டதால் அவன் தன்னளவில் தகுதியில்லாதவன் எனினும் தலைவனோடு நட்புடையவன் என்பதால் அவனும் வாழ்த்துக்குரியன் ஆயினான் என தகுதியில்லாதவன் பாணன் என்பது குறிப்பால் உணர்த்தப்படுதலை இங்கு காணலாம்.

‘‘ஏனாதிபாடியம்’’ – எனும் அரசன் வழங்கும் பட்டத்தினை யாழ் வாசித்துப் பெற்று வருவதாகவும், அமைச்சன் சேனாதிபதியர் ஆகியோருக்கு வழங்கும் பட்டம் பெற்றவன் பாணன்.

ஏனாதி என்ற பட்டம் பெற்ற பாணன் அரசன் இட்ட ஆணையால் பரத்தையர் சேரி சென்றான் என்ற பதிவிலிருந்து அதிகாரம் படைத்த அரசன் அடிமைப் பணிக்குப் பாணனைப் பயன்படுத்தினான் என்ற பதிவின் (கலி. 81) வழிக் காண முடிகிறது.

அரசனின் காலடியைப் போன்றும், அவனது நண்பனாகவும், ஏவலாளியாகவும், தூதுவனாகவும், பாணன் இருக்கின்றான் என்று தலைவி

பேசும் வரிகளை கலித்தொகையில் (95) காண முடிகிறது. மேலும் பரத்தையோடு அரசனை (தலைவனை) கூட்டுவிக்கும் பணிக்கும் பயன்படுத்தப் பட்டிருக்கின்றான். (கலித் 95) தலைவன் தலைவி ஊடல் தீர்த்து புதுவருவாயை, கூலிபெற்று வந்தான் பாணன் என்ற பதிவைக் கலித்தொகையில் (98) காண முடிகிறது.

இங்கு தலைவன் என்பான் அரசன். சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறார் என்ற பொதுமையுள் சங்க இலக்கியம் அமைந்த பான்மையை அறிய முடிகிறது.

## இசைக் கருவிகள்:

பாணர் குலக் கலைஞர்கள் தீங்குரல், இமிழிசை, குழலிசை, ஊது இசை, முழவு இசை என இசையின் பல்வேறு பரிமாணங்களையும் நுட்பமாக அறிந்தவர்கள். பண்டைத் தமிழ் கலைஞர்கள் எனும் சிறப்புக்குரியவர் பாணர் குலத்தவர். பாணர் வழித் தோன்றல்களான இசைக் கலைஞர்களின் இசைக் கருவிகள்.

| | |
|---|---|
| யாழ் | துடி |
| குழல் | மத்தளம் |
| முழவு | எல்லரி |
| தண்ணுமை | வயிர் |
| முரசு | கோடு |
| பறை | தூம்பு |
| ஆகுளி | சங்கு |
| பதலை | நரம்பு |
| கிணை | |
| தடாரி | |

தாங்களே செய்துகொள்ளும் தொழிற்கலைஞர்களைக் காண முடிகிறது. இசைக் கருவிகளின் மூலப்பொருட்களைத் தாவர வழி நின்றே முதலில் பெற்றுக் கொண்டவர்கள். விலங்குகளிடமிருந்து தோலும், கொம்பும், எலும்பும் எனப் பதப்படுத்திய கருவிகளை இசைக் கருவிகளாக்கியவர்கள்.

இசைக் கலைஞர்களைப் பதிவு செய்த சங்க இலக்கியம் அவர் தம் கருவிகளையும் அதன் சிறப்பினையும் பதிவு செய்யாமல் இல்லை.

**பாடினி:**

'பாடு' என்ற வினைச்சொல்லின் பெண்பாலைக் குறிக்கும் விகுதியாக 'நி' இணைந்து பாடினி என்ற சொல் உருவாயிற்று. பாடினி என்ற சொல் பாடின (Patina) என்று பாடுபவளைக் குறிக்கும் சொல்லிலிருந்து வந்திருக்கலாம் எனக் கூறுகிறது தமிழ் லெக்சிகன். தமிழ் லெக்சிகனில் நி என்ற எழுத்துப் பெண்ணைக் குறிப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது என்பது ஒருமைக் குரியவராக பெண்ணைப் பார்த்திருக்கும் தன்மையைக் காட்டுகின்றது. பாணர் குழுவினருடன் பயணப்பட்ட குரலிசைக் கலைஞர் பாடினி,

**"ஒரு திறம் பாடினி முரலும் பாலையங் குரலின்"** [9]

பண்ணமைத்துப் பாடும் திறம் பெற்றவள் என்பதை பரிபாடல் புலப்படுத்தி நிற்கின்றது. இசைக் கல்வியின் பெருமை முழுவதற்கும் தகுதியுடையவள் என்பதை,

**"...... பெருந்தகு பாடினி"** [10]

என்ற பாடலடி தெரிவிக்கின்றது.

**"புறம் பெற்ற வயவேந்தன்**
**மறம் பாடிய பாடினியும்மே"** [11]

**"ஆடுநடை அண்ணல்நின் பாடு மகள் காணியர்"** [12]

என அரசனின் மறத்தைப் புகழ்ந்து பாடுகிறாள் பாடினி.

பாடுகின்ற பெண்பார் கலைஞரான பாடினி பல பெயர்களால் அழைக்கப்படுகின்றனர் பாட்டியர், பாடுமகள், பாடுநர் (புறம் 221) எனப் பலவாறு அழைக்கின்றது சங்க இலக்கியம்.

**"பாணர் வருக பாட்டியர் வருக** [13]
**ஆடுநடை அண்ணிற் பாடுமகள் காணியர்**
**பாடுநர்க் கீத்த பல்புகழன்னே"** [14]

என வரும் பாடலடிகள் வழி அறியப்பெறுகின்றது.

**பாசறையில் பாடினி:**

**"உரவுக்களிற்றுப் புலாஅம் பாசறை**
**நிலவின் அன்னவெள் வேல்பாடினி"** [15]

புலால் நாறும் பாசறையில் நில ஒளியைப் போன்று வெண்மையான ஒளியை வீசும் மன்னனின் வேற்படையைப் புகழ்ந்து பாடக்கூடியவள் பாடினி.

மேலும் மன்னனின் புகழ் பாடும்போது, முழவடித்து பாடுவதாக கூறுகிறது புறநானூறு.

**“பிசி பிணிக் கொண்ட மண்களை முழவிற்**
**பாடினி பாடும் வஞ்சிக்கு”** [16]

மன்னனின் புகழைப் பாடும்போது முழவிசைத்துக் கொண்டு பாடினி பாடினாள்.

**“முழவில் போக்கிய வெண் கை**
**விழவின் அன்னநின் கலிமகிழானே”** [17]

இசைக்கும் முழவின் தாளத்துக்கு ஏற்பத் தாளத்தை அமைத்துக் கையை அசைத்துப் பாடுபவள். முழவை இசைத்தவள் பாடினி என்பது ஆந்திர மாநில பகுதியில் இருந்து தமிழகத்திற்கு பிழைப்பு தேடி வருபவர் குழந்தையை இடுப்பில் சுமந்து வருவதுபோல, மத்தளத்தை கழுத்தில் சுமந்து, முழக்கியும், இசையோடு பாடியும், மக்களையும், பார்வையாளர்களையும், வாழ்த்தி, பொருள் வேண்டி பாடக்கூடிய தன்மையை ஒப்புநோக்கி பார்க்க முடியும்.

புலவு நாறும் என்ற சொல்லாடல் வழி அவள் போர்க்களத்தில் பாடுவதும், நிலவு வரும் நள்ளிரவு பொழுதிலும் முழவிசைத்து பாடி, புண்பட்ட வீரர்கள் கிடந்தபோது, உள்ளதை உள்ளவாறு போர்க்களத்து நிகழ்வுகளை மிகைப் படுத்திடாத வகையில் உள்ளதை புகழ்பவளாக வீரத்தை புகழ்பவளாக இருந்த பாடினியின் குணத்தை அறிய முடிகிறது.

புலவர்கள் புதியதாக கூறிய செய்திகளை அறிவோமாயின் புனைந்து பாடுதல் என்பது அவர்களிடம் இணைந்திருக்கிறது என்பது பொதுமைப் படுத்தி பார்க்கப்பட்டு வருகிறது. ஆனால் உள்ளதை, எதார்த்த நிகழ்வை, நிதரிசனத்தை, பாடும் திறம் எமக்குரியது என்பதை ஆணித்தரமாக சொல்லும் பாடல் இது. புனைந்துரைத்தல் என்ற நிலையில் இருந்து உள்ளதை பாடும் திறம் பெற்றவர்கள் கலைஞர்கள் என்பது புலப்படுகிறது.

“வறுமையின் காரணமாகவோ, மன்னனிடம் வந்தால் பெரும் பொருள் பெறுவோம் என்பதற்காகவோ தம்மை ஆதரிப்பதற்காகவோ மன்னனை மிகுதியாக புகழ்ந்து பாடினாள் மகிழ்ச்சி அடைவான் என்பதற்காகவோ யாம்வரவில்லை” நேரடியாக, தம் உள்ளக்கருத்தை மன்னனிடம் பதிவு செய்திருக்கின்ற பான்மையைப் பதிற்றுப்பத்து **(61)** பாங்குற நவில்கின்றது.

பாடினி மன்னன் இருக்கும் பாசறைக்குச் சென்று பாடியவளாக காணமுடிகிறது. இதனால் இவளை மன்னனுடன் இணைத்துப் 'பாடினி வேந்தே' (பதிற் 14, 17) என மன்னன் அழைக்கப்படுகிறான். இவ்வாறு அழைக்கப்படுவதற்கு உரையாசிரியர்கள், மகளிரைத் தனித்துப் பாடுவது மரபன்று. ஆதலால் ஆண்மகனொடு சேர்த்துப் பாடுதலே (பதிற். 14, 15) வழக்கு என்பார்கள்.

இக்கூற்று பெண் அறம் பற்றி வாசிப்போருக்கு முரணை தோற்றுவிப்பதாக உள்ளது. காரணம் ஆணுடன் இணைந்தே பெண் உயர்த்தப்பட வேண்டும் என்ற பான்மையைப் புலப்படுத்துவதாய் உணரமுடிகிறது. காடு மலையும் சுற்றி ஐவகை நிலங்களிலும் திரிந்து போர்க்களத்தில் தனித்து நின்று பொய்யோ, மெய்க்கீர்த்தியோ பாடிடாமல் போர்க்களத்து நிகழ்ந்ததை பாடி உரைக்கும் பான்மை என்பது சார்பற்று தற்சார்புடன் நின்று கலையை வெளிப்படுத்தும் பாண் மகளின் தனித்திறத்தை மறைத்து ஆடவரின் ஆளுமையின் பாற்பட்டதாகவே காணமுடிகிறது.

**பாடினி பெற்ற பரிசில்கள்:**

இவர்கள் பெற்ற பரிசில்கள் வாயிலாக இவர்தம் புலமையினை அறிய முடிகிறது. நல்ல அணிகலன்கள் (பதிற். 87), பொன் தாமரையான மலர் (புறம் 11, 319), பொன்னரி மாலை (புறம் 361, 364), முத்த மாலை (பொருநர் 159–162), களிறும், தேரும் (மதுரை 749–752) முதலானவற்றை பரிசிலாக பெற்றுள்ளனர்.

இத்தகு சிறப்புமிக்க பெண்பாற் கலைஞரான பாடினி என்ற சொல் அக இலக்கியங்களில் காணப்படவில்லை. புற இலக்கியங்களிலும் (புறம் 11:11, 14. 242:3, 319:14, 361:11, 364:1; பதிற். 14:17, 17:14, 87:1), பரி பாடல்களிலும் (பரி. 17:17) காணப்படுகின்றது.

புறத்திற்கு உரியவளாக பாடினி எனும் பெண்பாற் கலைஞர் இருந்தது புலப்படுகிறது.

பாடி இசைப்பவர் எனும் தன்மைக்குரியவராக பாடினி எனும் பெண்பாற்கலைஞர் இருந்தமையை உணரலாம்.

**கூத்தர்:**

கூத்து என்பது ஆட்டம் என்னும் சொல்லை முன்னிறுத்தி சொல்லும் விதமாகவே உள்ளது. உரையாசிரியர்களும் கூட 'ஆடியும்' எனக் கூறிய பின்னரே பாடியும், இசைத்தும் என்ற பொருண்மையில் உரைக்கக் காணலாம்.

ஆடல், பாடல், இசைக்கருவிகளை இயக்கும் திறம் வாய்ந்த நிகழ்த்து கலைஞர். பாணர் குழுவினரோடு தனித்தோ கூத்தர் குழுவினரும் அரசர்கள், குறுநிலத் தலைவர்கள், வள்ளல்கள், பொதுமக்கள் போன்றோர்களை நாடி இயல், இசை, நடனம் எனும் முக்கலை தழுவிய கலைஞர்களாகவும், அதன்வழி பெற்ற பரிசுகள் கொண்டு வாழ்க்கை நடத்தியவர்களாகவும் காட்சிப்படுத்துகிறது சங்க இலக்கியம்.

கூத்துக் கலைஞர்களான இவர்கள்,

**"தொல்லவை உரைத்தலும், நுகர்ச்சி ஏத்தலும்**
**பல்லாற் றானும் ஊடலின் தணித்தலும்**
**உறுதி காட்டலும் அறிவுமெய் நிறுத்தலும்**
**ஏதுவின் உணர்த்தலும் துணிவு காட்டலும்**
**அணிநிலை உரைத்தலும் கூத்தர் மேன"** [18]

மேற்கொண்ட பணிகளைத் தொல்காப்பியர் வரையறுக்கிறார்.

- முன்னோர்களின் வரலாற்றை எடுத்துரைத்தல்.
- குடும்ப வாழ்வில் தலைவன் தலைவி நுகர்ச்சியைப் புகழ்தல்.
- தலைவன் தலைவியர் இடையிலான ஊடலைத் தணித்தல்.
- வாழ்க்கை உறுதிகளைக் காட்டல்.
- கேட்போர் அறிவினை மெய்ம்மையில் நிறுத்துதல்.
- காரண காரியங்களோடு உணர்த்துதல்.
- துணிவு காட்டுதல், உறுதிப்படுத்துதல்.
- அழகு நிலை உணர்த்துதல். மேலும்,

**"நிலம் பெயர்ந்து உரைத்தல் அவள்நிலை உரைத்தல்**
**கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய"** [19]

இடம்பெயர்ந்து போய்த் தலைவனோடு பேசி, அவனுக்குத் தலைவியின் நிலை உணர்த்தும் செயல் கூத்தருக்கும் உரியது என்கிறார் தொல்காப்பியர். மேலும் கூற்று நிகழ்த்துவோரில் இவர்களும் ஒருவர் என்கிறது.

ஆடியும், பாடியும் இவர்கள் உலகினை உற்றுநோக்கி அறிந்து, விளக்கி உரைக்கும் கூத்துக் கலைஞர்கள். ஆதலால் கூத்தர் என்பர். 'அர்' விகுதி இணைந்தே உரைக்கப்பெறும் பான்மையை அறிய முடிகின்றது. கூத்து கலைஞர்கள் என்பவர் கூட்டமாக (ஆண்/பெண்) ஆடுபவர், பாடுபவர் என்று இணைந்தே இருப்பதால் கூத்தர் எனப் படுகின்றனர்.

இங்கு கூத்தர் என்பது பன்மை பெயரோடு அழைக்கப்படுகின்றது. மரியாதை நிமித்தமாக அல்ல என்பதை உய்த்துணரலாம்.

இவர்கள் அறிவு வாய்ந்தவர்கள். முழவு இசைப்பதில் வல்லவர். பெரும் சுற்றத்தாருடன் வாழ்வை நடத்துபவர்கள். மன்னர்களின் முன் ஆடும் திறம் பெற்றவர். முழவு எனும் பெரும் இசைக்கருவிக்கு ஆடும் திறனுடையவர்.

இவர்கள் கொடையாளர் வழங்குவதை ஓம்பாது உண்பர். வழிநடந்த வருத்தத்தை மரத்தடியில் போக்கி கொள்வர். ஆடவர் எருக்க மாலையை அணிவர். பெண்டிர் மார்பில் ஆவிரை மலர் மாலை விளங்கும். பலவகை வாத்தியங்களை உடையராய்ச் செல்வர். அவர்கள் மன்றத்தில் ஆடிவிட்டு நீங்குவர். இது கூத்தரின் இயல்பாகும் என உரையாசிரியர்[20] குறிப்பிடுகின்றனர். (அகநானூறு, அ.மாணிக்கம் (உரை) ப.6, பாடல் 301)

இங்கு கூத்து என்பது ஆட்டம், ஆட்டம் ஆடுவோர், என்பதனுடைய தனிக்குறிப்பாக விளக்கி உரைக்கக் காணலாம்.

ஊர்களில் உள்ள பொதுமன்றங்களில் இவர்கள் ஆடிப்பாடி (அகம். 301:22–23) மக்களை மகிழ்வித்தனர்.

மன்றம் என்பது ஊரின் பொது இடம். அதுவே கலைஞர்களின் அரங்கம். ஆடல் அரங்கம், இசை அரங்கம், இசைப்பாட்டு அரங்கம். ஒரு கலைஞன் பாட்டு இன்றி ஆட்டத்தை நிகழ்த்துவதில்லை. இசையின்றி பாட்டு அரங்க கலையாக அமைந்திடாது. ஆக இசை, பாட்டு, இசைப்பாட்டு, ஆட்டம் என்பன இசைக்கருவி இசைப்போர், இசைக்கேற்ப பாடுவோர், இசையோடு பாட்டினைக் கேட்டு ஆட்டத்தை மன்றலில், ஆடுகளத்தில் அரங்கமாக எண்ணி பொதுவியல் நிகழ்வாக நிகழ்த்துவதை ‘கூத்து’ என்ற சொல் விளக்கும்.

கலைஞர்கள் பலரும் பல்வேறு இசைக் கருவிகளைப் பயன் படுத்தியுள்ளனர். ஆனால் கூத்தர்களே மிகுதியான கருவிகளைப் பயன் படுத்தியுள்ளனர் என அறியமுடிகிறது என்பர் கைலாசபதி.

யாழ், முழவு, ஒரு கண்கிணை, பெருவங்கியம், குழல் உள்ளிட்ட இன்னும் பல கருவிகள் கூத்தர்களின் பைகளில் கட்டப்பட்டிருந்தன. (பதிற் 41) மத்தளம், சிறுபறை, கஞ்சதாளம், பீலி, நெடுவங்கியம், தூம்பு, சல்லிகை, கரடிகை போன்ற கருவிகளையும்[21] எப்போதும் தம்முடன் வைத்திருந்தனர்.

**“பண்டு நற்கு அறியாப் புலம் பெயர் புதுவிர்**
**சந்து நீஷப் புல் முடிந்து இடுமின்”** [22]

கூத்தர்கள் தம் குழுவினருடன் பொருள் தேடிச் செல்லும் வழிகள் பிற கூத்தர் குழுவினருக்கு தெரியும் பொருட்டு புல்லை முடிந்து வைத்து செல்வர் என மலைபடுகடாம் கூறிய வழி அவர்தாம் சென்ற பாதையின் கடினத் தன்மையை விளங்கிக்கொள்ள முடிகிறது.

விலங்குகள் வாழும் காடுகளிலும், மலைபகுதிகளிலும் சென்று வரும் சுரவழி கடந்த கூத்தர்கள் தாம்பெற்ற இன்பம் பெறுக வையகம் என்ற இலக்கிய குறிப்பின் வழி இத்தொடர் அமைந்து உச்சரிக்கப்படாத ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே தாம் பெற்ற இன்பம் என்பதை மட்டுமே சிந்தனை கொண்டவர்களாக தம் இனத்தாரை கொடிய இடர்தரும் பாலைவழி தடங்களில் எல்லாம் ஆங்காங்கே குறித்த இடங்களில் தடம் மாறாமல் சென்று பொருள் தேடும் பாணர்கள் உயத்துணரும் வகையில் தாம் சென்ற வழித்தடங்களில் கிடந்த புல்பூண்டுகளை அறிந்து அவை தன் கையில் அடர்த்தியான முடிச்சேரும்போது அவற்றை ஓர் இடத்தில் புல்முடியாக வைத்து தடம் சொல்லியும், தடயங்களை ஏற்படுத்தியும் சென்றிருக்கின்றனர். இம்முறையானது புல்முடி வைத்த பான்மையானது கலைஞர்கள் உலகெங்கும் பரவிக் கிடக்கும் எல்லா கலைஞர்களையும் தம் இனமாகக் கருதி, தம் உறவாக கருதி, தம் ஒக்கல் குடியினராக கருதி உதவி செய்யும் பாங்கினை கொண்டவர்களாக இருந்துள்ளனர். கூத்தனும், பாடினியும் கூட்டம் கூட்டமாக செல்லும் போது இத்தகு தடயம் அமைக்கும் முறையாக புல்முடி இட்டு சென்ற முறை அமைந்திருக்கின்றது என்று கூத்தர் பற்றிய விளக்கங்களின் ஊடாக உறுதிப்படுத்தமுடிகிறது.

இவர்கள், விறலியின் பின் நின்று முழவிசைத்தும், பதம் பிடித்தும் ஆடிக்காட்டும் கலைஞனாக கலை நிகழ்ச்சியை முடிக்க கூடிய ஆற்றல் பெற்றவன் (அகம். 352). இவர்களது வாழ்வியலை,

**"தலைவி ஒருத்தி தலைவனைப் பிரிந்த**
**துரயத்தின் போது கோடியர் நலிந்த ஊரில்**
**வாழும் மக்களின் துயர் போன்றது எனது துயர்"**

என்று கூறுவதிலிருந்து கோடியரின் வாழ்க்கை ஆறாத் துயரத்துடன் இருந்துள்ளமை அறியமுடிகிறது.

**"பூப்போது சிதைய வீழ்ந்தெனக் கூத்தர்**
**ஆடுகளங் கடுக்கும் அகநாட் டையே"** [23]

இவர்களின் வாழ்க்கை நிலைக்கு ஆடுகளம் மிகவும் பயன் உடையதாய், தொழில் நிகழ்த்தும் இடமாகவும் விளங்கிற்று. கூத்தர்களில் சிலர் கயிற்று நடனத்தையும் (கழைக் கூத்தாடி) நிகழ்த்தி வாழ்க்கை நடத்தியுள்ளனர். இதனை உச்ச சுரத்தில் இசை கூட்டப்பெற்று ஒலிக்கும் பல்லியங்கள் உண்டாக்கும் இசைக்குத் தக்க இறுகக் கட்டப்பெற்ற கயிற்றில் ஆடும் பெண்ணொருத்தி தளர்வுற்ற நிலையை ஓர் உவமை[24] குறிக்கிறது. வேறொரு இடத்திலும் பல்லியங்களின் இசைக் கூட்டுக்கிசைய இறுகக் கட்டிய கயிற்றில் ஆடும் பெண்ணைக் குறித்த குறிப்பும் காணப் பெறுகின்றது. இந்நிகழ்ச்சிக்கு அவர்கள் குழுகுழுவாய்ச் சென்றனர். கலைஞர்களின் பெருஞ்சுற்றம், உறவினர்கள், ஆடும் பெரிய குடும்பத்தினர் போன்ற குறிப்புகள் கூத்தர்களின் வாழ்க்கை நிலையை[25] நன்கு உணர்த்துகின்றன.

ஓவியம் வரைபவரால்அழகுறச் செய்யப்பட்ட அழகுடையது அல்லிப்பாவை. '**அல்லியம்**' என்ற கூத்து கூத்தர்களால் நிகழ்த்தப்பட்டதைப் புறநானூறு (புறம் 33:16–17) கூறுகிறது. அல்லிப்பாவை என்பது ஆண் வேடமும் பெண் வேடமும் உடைய பாவை என்று குறிப்புரை கூறுவதிலிருந்து இக்கூத்து பற்றி அறியமுடிகிறது.

தோல்பாவைக் கூத்து நிகழ்த்தியவர்களாக இருக்கலாம் என்பது உய்த்துணர முடிகிறது. பாவை என்பது பொம்மை என்ற உயிரற்ற பொருளாக, மரத்தால் ஆன பொம்மையாக புனைந்த ஆண் / பெண் ஓவியங்களாக செய்து அவற்றை ஆட்டுவிக்கும் நிகழ்த்துக் கலை.

### பொருநர்:

இசைக்கலையில் தேர்ச்சி பெற்றவர்கள். குழுக்களாக வாழ்ந்தனர். ஆடல், பாடல் ஆகியவற்றில் வல்லவர்களாக விளங்கினர்.

இவர்கள் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் என்று பல திறப்படுவர். பொருநர் இசைப் பாடலோடு ஆடலிலும் வல்லவர். யாழொடு, தடாரி, கிணை போன்ற இசைக் கருவிகளை இயக்கி, ஏர்க்களத்தும் போர்க்களத்தும் உழவரும் வீரரும் செய்யும் செயல்களை இவர்கள் நடித்துக் காட்டுவர். இப்பொருநர் யாழ் முதலாகிய இசைக்கருவி வல்லராதலைப் பொருநராற்றுப்படை தெரிவிக்கின்றது. நிறுத்தம், கீதம், வாச்சியம் ஆகிய மூன்றிலும் இவர்கள் பயிற்சி பெற்றவர் என்பது நச்சினார்க்கினியர் உரையால் அறியப்பெறும். இவர்கள் விடியற்காலத்தில் சென்று இல்லத்தில் முன்னின்று தடாரிப்பறை கொட்டிப் பாடுதல்[26] மரபாகும்.

கரிகாற் பெருவளத்தானிடம் கலை நிகழ்வை நிகழ்த்திப் பல பரிசுகளைப் பெற்று திரும்பிய பொருநர் குழு எதிர்ப்படும் மற்றொரு பொருநர் குழுவின் வறுமை தீர கரிகாற் பெருவளத்தானிடம் ஆற்றுப்படுத்துவதாக அறியப்படும் பொருநராற்றுப்படையின் வழி அவர்கள் தம் வாழ்வியலை அறிய முடிகிறது.

பொருநன், தடாரி என்ற பறையை அகன்ற கண் அதிரும் படி, ஆகுளி என்ற பறையைக் கொட்டிக் கொண்டு போர்க்களம் நோக்கி செல்கிறான். அவ்வாறு செல்லும் அவனது நிலையை,

பட்டினி கிடந்து, அரும்பு மலர்ந்த பூக்களை நாரால் மாலையாய்க் கட்டி விளங்கும் தலைமயிர் அழகுபெறச் சூடிக் கொண்டு, பறைகளுடன் கட்டப்பட்ட கலங்கள் வைத்துக் கொண்டுள்ள பையை உடையவனாய் சோற்றுக்குரிய அரிசி இல்லாமையால் இன்றியமையாத வேறு எந்தச் செயலையும் செய்ய விரும்பாமல், பொருள்மீது விருப்பம் கொண்ட இருக்கை உடையவனாய்ப் பின் அரிய வழிகளைக் கடந்து களம் சென்றான் எனப் போர்க்களம் பாடும் பொருநனின் நிலையினைக் கல்லாடனார் பாடுகிறார்.

இவர்கள் தம் வாழ்க்கை முறையில் சில குழுக்கள் அவைக்களத்தில் தங்கியிருந்தமையும், சில குழுக்கள் வறுமையின் துயரப்பிடியில் சிக்கித் தவித்தமையும் சங்கப் பாடல்கள் மூலமும் பொருநராற்றுப்படை மூலமும் அறியப்படுகின்றன.

பொருநரில் போர்ப்பொருநர் எனப்பட்டோர் அரசவையிலும், போர்க்காலங்களிலும் கலை நிகழ்வை நிகழ்த்தி வாழ்க்கையை நடத்தியுள்ளனர். ஏர்ப்பொருநர் என்போர் மருத நிலப்பகுதியில் மக்களில் உழவுத் தொழில் புரிந்த கலைஞர்களாவர். பரணிப் பொருநர் என்போர் போர்க்களத்தில் வெற்றி பெற்ற பின் போரின் வெற்றியை ஆடிப்பாடிக் கலையாக நிகழ்த்தியோர் எனக் கொள்ளலாம்[27] என்பார் க.காந்திதாசன்.

இவர்கள் மற்றொருவர் போல் வேடம் கொண்டு நடிப்பவர். போர்க்களம் சென்று வீரர்க்கு உற்சாகம் ஊட்டினர். முரசு கொட்டி வஞ்சிப்பாட்டும் பாடுவர். (புறம். **394**) பாசறையில் காலையில் கிணை கொட்டி, மன்னரைத் துயில் எழுப்பினர். (புறம். **397**) கலையறியாதவரிடம் கரந்துண்ணும் இரவலராய் தம் வாழ்வினை நடத்தாதவர்கள்.

**விறலியர்:**

சங்ககாலப் பெண்பாற் நிகழ்த்துக் கலைஞர். ஆடல், பாடல் கலைகளில் திறனுடையவர்கள் மட்டுமின்றி முழவு, யாழ், தூம்பு, எல்லரி, ஆகுளி, பதலை

என அனைத்து இசைக்கருவிகளையும் இசைக்க வல்லவர்களாக திகழ்ந்தனர்.

**"..... விறலி ஓர் வண்ணம் நீரும்**
**மண்முழா அமைமின் பண்யாழ் நிறுமின்**
**கண்விடு தூம்பின் களிற்றுஉயிர் தொடுமின்**
**எல்லரி தொடுமின் ஆகுளி தொடுமின்**
**பதலை ஒருகண் பையென இயக்குமின்"** [28]

முழவில் மார்ச்சனை இடுதல், யாழிலே பண்ணை நிறுத்துதல், பெருவங்கியத்தை இசைத்தல், எல்லரி வாசித்தல், சிறுபறை அறைதல், பதலையை மெல்லக் கொட்டுதல் போனற பல கருவிகளை வாசிக்கும்படி கூறுகிறான் பாணன்.

**"துயிலும் கோதை துளங்கு இயல் விறலியர்**
**கொளைவல் வாழ்க்கை நும் கிளை இனிது உணீஇயா"** [29]

அசைகின்ற மாலை அணிந்த இயல்புடையை விறலியர் இசைப்பாட்டில் வல்லவராக திகழ்ந்தனர். இவர் தம் இசைப்பாட்டின் வழி பெற்ற வருவாய் மூலம் சுற்றத்தார் இனிதாக உண்ணுகின்றனர் என்று விறலியைச் சுட்டுவதன் மூலம் பெரும்சுற்றத்தாருடன் வாழ்ந்திருந்த நிலையை அறிய முடிகிறது.

**"பாடுவல் விறலியோர் வண்ண நீரும்**
**மண்முழா அமைமின் பண்யாழ் "** [30]

**"சுகர்புரி நரம்பின் சீழியாழ் பண்ணி**
**விரையொலி கூந்தல்நும் விறலியர் பின்வர "** [31]

என்ற வரிகள் மூலம் அவர்தம் இசைப்புலமையையும் அறிய முடிகிறது.

ஒளி பொருந்திய நெற்றியினையும், மடப்பம் பொருந்திய பார்வையையும், மிக்க ஒளியையுடைய விளங்குகின்ற பற்களின் அமிழ்து போன்ற உமிழ்நீரை அடக்கிய சிவந்த வாயையும் தளர்ந்த நடையையும் உடைய விறலியர் என அவர் தம் தோற்றத்தினை,

**"சுடர் முதல் மடநோக்கின்**
**வாள்நகை இலங்க எயிற்று**
**அமிழ்து பொதித்துவர் வாய், அடைநடை விறலியர்"** [32]

பதிற்றுப்பத்து விளக்கிச் செல்கிறது.

மார்ச்சனை எனும் மண் பூசப்பெற்ற முழவு ஒலிக்க, அம்முழவு ஓசைக்கு ஒத்திசைக்கும் பண்ணோசை இனியதாக அமையப் பெற்ற சிறிய யாழையும், ஒளி வீசும் நெற்றியையும், விறல்பட ஆடும் விறலியர் முழவின் தாளத்திற்கு ஏற்ப ஆடி அரசனை மகிழ்வித்த செய்தியை (பொருநர்.109–110) அறியலாம்.

**"ஆடுக விறலியர், பாடுக, பரிசிலர்" [33]**

இதனால் 'ஆடல் விறலியர்' என்றும், பாணர் முதலிய பரிசிலர் அரசன்பாற் சென்று பரிசிற் பொருட்டுப் பாடும் இயல்பை உடையதால் பாடுக பரிசிலர் என்றும் புலவர் பாடுகிறார்.

**"பாண்டில் விளக்குப் பரூஉச்சுடர் அழல**
**நன்னுதல் விறலியர் ஆடும்" [34]**

**"சுடரும் பாண்டில் திருநாறு விளக்கத்து**
**முழாஇமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணையாக" [35]**

என வரும் பாடலடிகள் வழியாக விறலியர் இரவிலும் ஆடல் புரிந்துள்ளமை அறியமுடிகிறது. நாடக ஒளியாக அவர்கள் பயன்படுத்திய விளக்கு பாண்டில் எனப்பட்டது.

**"கழைவளர் அடுக்கத்து இயலி ஆடுமயில்**
**விழவுக்கள விறலியில் தோன்றும் நாடன்" [36]**

தோகை விரித்தாடும் மயில் போல ஆடுவர் என்கிறது அகநானூறு. செவ்வரி ஓடிய பெரிய தங்களின் கண்களைக் காட்டி விறலியர் கூத்தரின் புறத்தே சுற்றிச் சுற்றி ஆடுவர் என்ற செய்தியும் மலைபடுகடாம் (44–46) வழியாக அறிய முடிகிறது.

ஆடுவதோடு மட்டுமல்லாமல் குறிஞ்சி முதலான பலவகைப் பண்களில் இனிய குரலில் பாடுவதிலும் வல்லவராக திகழ்ந்துள்ளார் என்பதை,

**"இறும்புது கஞலிய இன்குரல் விறலியர்**
**நறுங்கார் அடுக்கத்துக் குறிஞ்சி பாடி" [37]**

**"குரல்புணர் இன்னிசைத் தழிஞ்சி பாடி" [38]**

**"நகைவ ரார நன்கலஞ் சிதறி**
**ஆடுசிறை அறுத்த நரம்புசேர் இன்குரல்**
**பாடு விறலியர் பல்பிடி பெறுக" [39]**

**"நரம்பு மீது இறவாதுடன் புணர்ந்து ஒன்றிக்**
**கடவது அறிந்த இன்குரல் விறலியர்" [40]**

இப்பாடலடிகள் உணர்த்தி நிற்கின்றன.

**"ஒருதலைப் பதலை தூங்க ஒருதலைத்**
**தூம்பகச் சிறுமுழாத் தூங்கத் தூக்கிக்**
**கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்**
**சுரன் முதலிருந்த சில்வளை விறலி"** [41]

ஆடலிலும், பாடலிலும், வல்லவராக திகழ்ந்த விறலியர், இசைக் கருவிகளை (பதலை, சிறுமுழா) காவுத் தடியில் சுமந்து தம்மை ஆதரிப்பவர்களை நாடி செல்லக்கூடிய நிலையில் அவர்களின் வாழ்வு இருந்தமையை புறநானூறு பதிவு செய்திருக்கிறது.

**"நல்யாழ் ஆகுளி பதலையொடு சுருக்கி**
**செல்லா மோதில் – சில்வளை விறலி"** [42]

கையில் சில வளையல் அணிந்தவள். ஒளி பொருந்திய நெற்றியினை உடைய விறலி என ஏணிச்சேரி முடமோசிக்கீரனார் பாடுகிறார்.

**பாடுபொருள்:**

விறலியின் பாடுபொருள் அரசர்களின் வீரம் குறித்ததாக அமைகிறது. இதனை,

**"மின் இழை விறலியர் நின் மறம் பாட"** [43]

மூங்கிலை ஒத்த தோளினையும், குளிர்ந்த கண்களையும், எழுதப்பட்டாற் போன்ற எழுதலையுடைய இளைய துகிலையும், பூத்தொழிலையுடைய துகிலையணிந்த அல்குலையும், தேனீக்கள் பரவிய கூந்தலையும், மின்னுகின்ற இழையையும் கொண்ட விறலியர் மன்னனது வீரத்தைப் புகழ்ந்து பாடுகிறாள்.

**பரிசில்கள்:**

**"ஆடு சிறை அறுத்த நரம்புசேர் இன்குரற்**
**பாடு விறலியர் பல்பிடி பெறுக"** [44]

அசைகின்ற சிறகுகளையுடைய கின்னரப்பறவையை வென்ற யாழினது நரம்பின் இசையோடு ஒன்றுபட்டுச் சேர்ந்த இனிய குரலையுடையவளாக பாடுகின்ற விறலியர் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனிடமிருந்து பல பிடிகளைப் (யானை) பரிசாகப் பெற்றனர்.

பொன்னாலும் முத்தாலுமான நகைகளையும் பரிசிலாக (பெரும்பாண் 55–56, மலைபடு 569–570, பதிற். 40, 54, மதுரை 218–219, புறம் 105, 141, 170) பெற்றுள்ளனர்.

இவர்களை ஆதரிக்கும் வள்ளல்கள் இறந்த பிறகு பாணர் மலர் சூடவில்லை என்றும், விறலியர் தொடியணியவில்லை என்பதையும் புறநானூறு பதிவு செய்துள்ளது.

**"பாணர் சென்னியும் வண்டு சென்று ஊதா**
**விறலியர் முன்கையும் தொடியின் பொலியா**
**இரவல் மாக்களும்..."** [45]

இதன்வழி ஒரு மன்னனிடம் கலை நிகழ்த்துவோர் கலை நிகழ்த்தியோர் எனும் வகையில் ஒரு நிலத்தில் மட்டும் வாழ்ந்திருந்ததும் அதனால் அந்நிலத்து மன்னன் இறந்ததால் பிற பழி அறியும் நிலையில் வாழ்ந்திருந்ததையும் அறியலாம். கதை தழுவிய கூத்தான 'நாடகம்' ஆடுதலில் விறலியர் தேர்ந்த கலைஞர்களாக விளங்கினர். நாடகம் ஆடுவதில் வல்லவராக இருந்த காரணத்தாலேயே விறலியரை 'நாடக மகளிர்' என்றனர்.

**"நாடக மகளிர் ஆடுகளத்து எடுத்த**
**விசிவீங்கு இன்னியங் கடுப்பக் கயிறுபிணித்து"** [46]

நிறமுடைய கலவையைப் பூசியதும் வளைந்து விளங்கும் சந்துடையதுமான முன்கையினை மூங்கில் போன்ற தோளும் ஒளிபொருந்திய நெற்றியும் உடைய விறலியர் (புறம். 32) தம் பூக்களுக்கு விலையாக (பரத்தைத் தொழில் – நுகர்வுப் பொருள் மாடங்கள் பொருந்திய மதுரையையும் தருவான் என கோவூர்க்கிழார் பாடியிள்ளனர். மன்னனது வீரத்தைப் புகழ்ந்துப் பாடுபவர் விறலியர். (பதிற். 54) இசைப்பாடலில் (பதிற். 49:2–3) வல்ல வாழ்க்கையை உடையவள்.

**"நன்னுதல் விறலியர் ஆடும்"** [47]

நல்ல நுதலினை உடைய விறலியர் செங்குட்டுவனின் புகழ்களைத் தெருக்களில் பாடினர். கூத்தும், குரவையும், விழாவும் நடக்குந்தோறும் நாட்டரசனை வாழ்த்துவது அவனது புகழை ஓதிப் பாராட்டுவது வழக்கமாய் கொண்ட விறலியர் விறல் பொருந்தப் பாடுபவர், ஆடுபவர் என அவர்தம் திறமையினைப் பறைசாற்றி நிற்கின்றன சங்கப் பாக்கள்.

விறலி தனியாகவும் பரிசில் பெற செல்லும்போது அவளது நிலையினை ஔவையார் (புறம். 130:1–4) பின்வருமாறு கூறுகிறார். தோளில் உள்ள காவடியின் ஒரு பக்கத்தில் பதலை என்ற ஒரு கண்பறை தொங்கவும், மற்றொரு பக்கத்தில் துளையைத் தன்னிடத்தில் உடைய சிறு சிறு முழா என்ற வாத்தியம் தொங்கவும், அக்காவடியைத் தோளில் சுமந்து கொண்டு, உணவு அளிப்பார் இல்லாததால் கவிழ்ந்த என் உணவுக் கலத்தை உணவிடத் திருப்புவர் யார்? என்று சொல்லி பாலை நிலத்தில் திரிபவள்.

இவர்கள் தம் வறுமை நீங்க மன்னனை நாடி செல்க என அறிவுறுத்தப் பட்டமையை நெடும் பல்லியத்தனார் பாடுகிறார்.

சில வளையல்களை அணிந்த விறலியே நீருடன் சமைக்கப்பட்ட புல்லரிசிக் கூழை உண்பதை விட்டு விடுவதற்கு நல்ல யாழையும், சிறு பறையையும், ஒரு தலை மாக்கிணையையும் கட்டிக் கொண்டு செல்க என (புறம். 64:1–7) ஆற்றுப்படுத்துகிறார்.

வறுமை தீர மன்னனை நாடி ஆடியும் பாடியும் பிழைப்பு நடத்துபவர் விறலியர். அத்தகு விறலியர் பாடலில் ஈடுபட்ட மன்னன் நீண்டநேரம் தங்கினால் மன்னன் உள்ளத்தில் காமவேட்கை எழும் என்று புலவர் அஞ்சி மன்னனை (ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் – காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்) தெருளச் செய்வர் என்ற பாடல்வழி (பதிற். 51:19–22) பெண் கலைஞரை சமூகம் பார்த்த பார்வையினைப் புரிந்துகொள்ள முடிகிறது.

**எழில் நலம்:**

விறலி மனக்குறிப்புப் புறத்து வெளிப்பட்டபடி ஆடும் மங்கையர். விறல்பட ஆடும் வல்லமை உடையவர்.

உள்ளக்குறிப்பு வெளிப்பட ஆடுபவர் அவர்தம் எழில் நலத்தினை கேசாதிபாத வர்ணனையாக பாடுகின்றனர் புலவர்.

மேகம் போன்ற கூந்தல், ஆண்மயில் இவர் சாயிலுக்கு நிகராகோம் என்று எண்ணிப் பெண் மயிலுக்குப் பின்னால் மறைதற்குக் காரணமான சாயல். ஓடி இளைப்பை அடைந்த நாயின் நாவைப் போன்ற அணிகலன் அணியாத அடி. பெண் யானையின் கைபோல் திரண்டு செறிந்த தொடை. வாழையின் பூவைப் போன்ற கூந்தல். வேங்கை மலர் போன்ற சுணங்கு (தேமல்) கோங்கின் அரும்பு, அரும்பு அணிகலன் அடங்கிய முலைகள். நுங்கின் நீர் போன்ற இனிய நீர் ஊறும் பற்கள், முல்லை சூடுதற்கேற்பக் கற்பு, மெல்லியல்பு மான் போல் பார்வை. ஒளியுடைய நெற்றி ஆகியவற்றை உடைய விறலியர். (சிறுபாண்

13–33), (மலைபடு 83–46) என அவள் தம் அழகு புனைவுகளாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

'விறலியர் பூவிலை பெறுக' புறம் 32 என்ற வரியின் மூலம் பாலியல் உறவுத் (பரத்தமை) தொடர்பான குறிப்புப் பொருள்[48] என்பதை உயத்துணர முடிகிறது.

தம்மை ஆதரிப்பவர்களை நாடிச் சென்று, அவர்கள் புகழினைப் பாடி, ஆடி, இசைக்கருவிகளை இசைத்து பரிசில் பெற்ற விறலியர், ஆற்றுப்படைக் குரியவராகவும், (தொல். 1037) தூது செல்பவளாகவும் (நற். 100:170) இருந்திருக்கின்றனர்.

ஆடலும், பாடலும் அவர்கள் தொழில் என்பது ஐயத்திற்கிடமின்றி இருந்த நிலையில் அரசர்கள் மற்றும் குறுநில மன்னர்களின் வெற்றிகளைக் குறித்த போர்ப் பொருண்மையுடைய நிகழ்ச்சிகளை நிகழ்த்தியமையால் அவர்கள் விறலியர் எனப்பட்டனர் என்று கருத்துரைக்கப் பெறுகின்றது. மேலும் 'உணர்ச்சிகளை வெளிப்படுத்த வல்ல தகுதியுடைய மகளிர்' என விளக்கலாம் என்பார்[49] க.கைலாசபதி.

உள்ளத்துள் தோன்றும் உணர்வுகளை உடலால் வெளிப்படுத்துவோரான இவர்கள் அரசவை மகளிராகவும், காமக்கிழத்தியராகவும் பின்னர் மாறினர். இடைக்காலத்தில் அவர்கள் பரத்தையராகவும், விலை மகளிராகவும் தாழ்ந்தனர். அவர்களை ஒழுக்கக் கேட்டின், இழுக்கிய நடத்தையின் பண்புக் கூறுகள் சார்ந்தன என்பன இவர்களின் வாழ்க்கை நிலையின் இருவேறு கூறுகளாகக் காணமுடிகின்றது[50] என்பர்.

**வயிரியர்:**

இசைக்கருவியின் அடிப்படையில் பெயர்பெற்ற நிகழ்த்துக் கலைஞர். வயிர்–ஊதுகொம்பு, வயிரம் ஏறிய மரத்தால் செய்யப்படதால் வயிர் எனப் பெயர்பெற்றது. வயிர் என்பது ஊதி இசைக்கும் குழல் கருவி என்பர். இக்கருவியினை இசைத்து பாணர் குழுவினருடன் ஒருவராக இருந்தமையால் வயிரியர் எனப்பட்டனர்.

> **"..... திண்கால்**
> **வயிர் எழுந்து இசைப்ப வால்வளை ஞரல்"** [51]
>
> **"கலிமயில் அகவும் வயிர்மருள் இன்னிசை"** [52]
>
> **"வளை நரல வயிர் ஆர்ப்ப"** [53]

**"வயிரும் வளையும் ஆர்ப்ப"** [54]

**"வளியெறி வயிரின் கிளி விளி பயிற்றும்"** [55]

**"ஏங்குவயிர் இசைய கொடுவாய் அன்றில்"** [56]

**"கோடுமுற்று இளந்தகர்ப் பாடுவிறந்து அயல**
**ஆடுகள வயிரின் இனிய ஆலி"** [57]

இவ்வரிகள் 'வயிர்' எனும் ஊதுகொம்பின் சிறப்பினை எடுத்தியம்பு கின்றன. இக்கருவி திட்பமான மரத்தால் செய்யப்பட்டது என்றும், வயிரின் ஓசை கிளி, துணை பிரிந்து அழும் அன்றிலின் குரல், மயிலின் அகவலோசை, செம்மறியாட்டின் குரல் போன்று இருக்கும் என்றும், வயிரையும் வளையையும் (சங்கு) சேர்ந்தே இசைக்கப்படுதல் மரபாக இருந்தமையையும் இச்சங்கப் பாக்கள் நமக்கு தரும் செய்திகள் ஆகும்.

**கண்ணுளர்:**

கண் + உள் + அர் = கண்ணுளர். 'கண்' – கருவியாகு பெயராக கூத்தைக் குறிக்கும். 'உள்' – விகுதி சேர்ந்து, அது உட்பொருளோடு (கதையோடு) நடத்தும் நாடகம். கண்ணுள் + அர் – கண்ணுளர் – கதை கூறும் நாடகத்தார். நாடகக் கலைஞர். கூத்தர் என்று பொருள்[58] கூறுவர்.

தமிழ்ப்பேரகராதி 'கண்ணுள்' என்பதற்கு கூத்து என்றும், கண்ணுளர் என்பதற்கு நடிகர்கள், கூத்தர்கள், பொருநர், பூவேலை செய்வோர் என்றும் பொருள் தருகிறது.

கண்ணுள் புகுந்து உணர்வினை இழுப்பதாலோ, கவர்வதாலோ இப்பெயர் பெற்றிருக்கலாம் என்பர். இவர்கள் மாறுவேடம் பூண்டு ஆடும் கூத்தராவார். இவர்கள் சாந்திக் கூத்தாடுபவர்கள் என்று உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். சாந்திக்கூத்து என்பது தலைவனின் சாந்த குணங்களைப் போற்றிப் பாடுவதும், ஆடுவதுமாகும் என்றும் தலைவன் சாந்தமாக ஆடியது. அதாவது இன்பமாக ஆடியது என்றும் பொருள் கூறுகின்றனர். சாந்திக் கூத்தினை வரிச்சந்துக் கூத்து என்றும் விநோதக் கூத்து என்றும் இருவகையாகப் பகுப்பர்.

இதன்வழி நாடகம் ஆடிய கூத்தர் கண்ணுளர்[59] என்று அழைக்கப் பெற்றனர்.

வயிரியர் இசைத்துப் பாட, கண்ணுளர் அதற்கு ஏற்றாற் போல நாடகம் ஆடியிருப்பர் என்பதை,

**“வரியுளை மாவும் களிறும் தேரும்**
**வயிரியர் கண்ணுளர்க்கு ஓம்பாதுவீசி”** [60]

பதிற்றுப்பத்து விளக்கி நிற்கிறது.

**“இலங்குவளை விறலியர் நிற்புறஞ் சுற்ற**
**புனல்கால் கழீஇய மணல்வார் புறவிற்**
**புலம்புவிட் டிருந்த புனிறில் காட்சிக்**
**கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ”** [61]

கண்ணுளரைக் கூத்தர்களான சுற்றத்துக்குத் தலைவன் என அழைக்கிறது மலைபடுகடாம்.

**கிணைவன்:**

தோற்பறைக் கருவியாகிய ‘கிணை’ எனும் இசைக்கருவியை இசைப்பவன் கிணைவன். இவர்கள் வள்ளல்கள் குறுநில மன்னர்களின் அவைகளில் தங்கி அவர்களை துயில் எழுப்பவும், வீரர்களுக்கு ஊக்கமளிக்கவும் கிணைப்பறையினை இசைத்துள்ளனர்.

இவர்களை கிணையவன், கிணைமகன், கிணைவர், கிணைப் பொருநர் என்று சங்க இலக்கியம் அழைப்பதைக் காண முடிகிறது.

கிணை – மருதப் பறை, உடுக்கை என்று பொருள் விளக்கம் தரும் தமிழ்ப் பேரகராதி. கிணைப்பறை கொட்டிக் கொண்டு வேளாளரைப் புகழ்ந்து பாடும் கலைஞன் என்றும் பொருள் விளக்கம்[62] தருகிறது.

**“நெல்லமல் புரவின் இலங்கை கிழவோன்**
**வில்லி யாதன் கிணையேம் பெரும**
**வல்லன் எந்தை பசி தீர்த்தல் எனக்**
**கொன்வரல் வாழ்க்கை நின் கிணைவன் கூற”** [63]

வள்ளல்களை நாடி, விடியற் காலத்தில் சென்றுபாடும் இயல்புடையவன் கிணைப்பொருநன் என்று கூறுகிறது புறநானூறு.

மருத மக்கள் சமூகத்தை நாடி வாழ்ந்த கலைஞரான இவர்கள், அவர்களது புகழினை பாடி அவர்கள் தரும் பரிசில்களைக் கொண்டு தம் வாழ்வியலை நடத்தியுள்ளனர்.

**கிணை மகள்:**

தோற்பறை கருவியாகிய ‘கிணை’ எனும் இசைக்கருவியை இயக்கிய பெண்பாற் கலைஞர் கிணைமகள் எனப்பட்டனர்.

**“கிணைமகட்கு எளிதால் பாடின வரினே”** [64]

வேளிர் குலத் தலைவனான பாரியின் பறம்பு மலையைக் கிணைமகள் பாடிச் சென்றால் எளிதாக அனைத்தும் கிடைக்கும் என கபிலர் பாடுகிறார். அவ்வகையில் பாரியிடம் எதுவும் கேட்காமல் கிணைமகள் பாடினாலே அவள் வறுமை தீரும் அளவு பரிசில்கள் கிடைக்கும் என்று கூறுவதிலிருந்து இசைக் கருவி முழக்குவதோடு (புறம். 319:16) பாடவும் வல்லவள் என்பதை அறிய முடிகிறது.

**துடியர்:**

**“துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று**
**இந்நான்கு அல்லது குடியும் இல்லை”** [65]

எனப் புறநானூறு நான்கு தொல்தமிழ்க்குடியினரைக் குறிப்பிடுகிறது. அவற்றுள் துடி கொட்டி ஆடுபவர் துடியர். வேட்டையில் விலங்குகளை அச்சுறுத்திச் சிதறி ஓடச்செய்து வேட்டையை எளிதாக்கும் இசைக்கருவி துடி. துடியர் ஆதி வேட்டைச் சமூகத்துப் பழங்குடி மக்கள். துடியரின் கையில் துடி இல்லாதபோது, எப்போதும் வேல் இருக்கும்.

**“துடியன் கையது வேலே”** [66]

எனப் புறநானூறு கூறுகிறது.

துடிக்கூத்து ஆடுதல் ஆதித் துடியரின் நிலை. சங்க காலத்தில் பாடுதலே துடியரின் கலைச்செயல்பாடு. துடியர் இனத்துள் சிறுவர்களும் பாடுதலில் மிக வல்லவர்களாகத் திகழ்ந்தனர்.

**“சிறாஅர் துடியர் பாடுவல் மகாஅர்”** [67]

என புறநானூறு கூறுகிறது.

**“துடிய பாண பாடுவல் விறலி**
**என்னா குவிர் கொல்ளியிர் நுமக்கும்”** [68]

என்ற புறப்பாக்கள் வழி துடியர் பாணர் குழுவினர் முதன்மை பெற்றவர் என்பதை அறியமுடிகிறது.

துடியரை மக்கள் இழிபிறப்பாளர், புலையர், இழிசினர் என்பர்,

**“வில்உழுது உண்மார் நாப்பண் ஒல்லென**
**இழிபிறப்பாளன் கருங்கை சிவப்ப**
**வலிதுரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி”** [69]

இழிந்த பிறப்பினையுடைய புலையன் தன்கை சிவப்ப வலிமையான அச்சம் தரக்கூடிய கருந்துடியை முழக்கிக் கொட்டினான் என்ற பொருள்பட அமைந்துள்ளமையும், கருந்துடி எனும் சொல்லை இழிவானவன் என்றும் இங்கு உட்பொருள் சுமத்தப்பட்டிருக்கிறது. புதிய விளக்க உரைகளில் துடியை இசைப்பவன் புலையன் என்று குறிக்கப்பட்டுள்ளது. மேலும் கருங்கை கொண்டு சிவக்க (வலிமையோடு) இசைத்தான் என்பது சாதிய வழியாக 'கருங்கை' என்பது வெறுக்கத்தக்க, இழிந்த என்று பொருள்பட அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

ஈமச்சடங்கு செய்யும் தொழிலையுடையவன் புலையன். கள்ளிச் செடிகள் பரந்து மூடிய முள்ளிச் செடிகள் நிறைந்த வறண்ட காட்டிற்கு படுக்கவைத்த படுக்கையான பாடையைத் தூக்கிச் செல்லும் பணியாளனை இழிபிறப்பாளன் என்று ஐயாதிச் சிறு வெண்டேரையார் பாடியுள்ளார்.

**"...... புலையன்**
**பேழ் வாய்த் தண்ணும்மை இம் தொட்டன"** [70]

அகன்ற வாயையுடைய தண்ணுமை எனும் மத்தளத்தின் கண்ணி ஓங்கி அடித்தான் புலையன் என மேளம் அடிக்கும் தொழிலை உடையவன் என்ற பதிவினைக் காணமுடிகிறது.

**"துடி எறியும் புலைய!**
**எறிகோல் கொள்ளும் இழிசின"** [71]

எறிகோல் என்றது, 'பறையை அடிக்கும் குறுந்தடி என்பர். துடி எனும் பறையை கொட்டும் புலையனே! பறையை அடிக்கும் சிறிய தடியைக் கையில் வைத்திருக்கும் புலையனே!' என பதிவு செய்திருக்கின்றமையைக் காணமுடிகிறது.

பறை, முழவு எனும் மரத்தாலான கருவிகள், எலும்புக் கருவி, கொம்புக் கருவி, நரம்பு கருவி என இயற்கைகளிலிருந்தும், விலங்குகளிலிருந்தும் செய்முறை கருவிகளாக செய்யப்பட்டிருந்த இசைக் கருவிகளைக் கொண்டு மன்னனின் கொடையும், கொள்கையும், வீரத்தையும் புகழ்ந்து பாடினர், ஆடினர். மன்னர்களைப் புகழாரத்தில் திளைக்கச் செய்தவை. இசைக் கருவிகள் எனின் அதனை மறுத்துவிட முடியாது. அவ்வாறே இசைக் கலைஞர்களையும் மறந்துவிட முடியாது. ஆனால் ஆற்றுப்படை எனும் பேரிலக்கியங்களைத் தந்த கலைஞர்களான இவர்களின் வறுமை தீர்க்கப்படாமல் இருந்திருக்கிறது என்பதை சங்கப் பாக்கள் வழி அறிந்துகொள்ள முடிகிறது.

கலைச் சமூகத்தில் உயர்ந்த இடத்தில மதிப்புறும் வகையில் வைத்து பார்க்கப்படாமலிருக்கிறது. வடமொழி புலவருக்குத் தந்த மதிப்பு, பாணர் குலத்துக்கு முற்றிலும் மறுக்கப்பட்டிருக்கிறது.

**இயவர்:**

'இயவர்' என்ற சொல் வழிப்போக்கர், நாடோடிகள் எனப் பொருள்படும் என்பர். இவர் தம் இசைக்கருவி 'இயம்'. (மலைபடு **232–232**, மதுரைக். **363–364**, கலித் **105:24**) இயம் எனும் இசைக்கருவிக்கு கயங்குடைந்தன்ன, கடி இடி உருமின் எனும் உவமைகளை நோக்கும்போது, முரசு, மத்தளம் போன்ற கருவியாக இருக்கலாம்[72] எனக் கருத இடமுண்டு என்பர்.

கிணை, முழவு, தண்ணும்மைகளுக்கு இருப்பது போலத் தோல் பரப்பில் 'கண்' போன்ற அமைப்பினைக் கொண்டது இயம் எனும் கருவி. அதன்மேல் இயவர் ஒரு குறுந்தடி (மதுரைக். **302–305**) கொண்டு இசை எழுப்பி ஆடுவர்.

துணங்கைக் கூத்தில் தோள் உயர்த்தி ஆடுதலைப் போல் தொடி அணிந்த தமது தோள் உயர்த்தி ஒச்சி ஆடுவது இயவரின் கூத்து வழக்கமாகும்.

இவர்கள் பகைவரின் கடம்ப மரத்தை வெட்டி வீழ்த்தி அதிலிருந்து முரசு செய்வர். வெற்றியைப் புகழ்ந்து பாடி ஆடுவர். அம்முரசுக்குப் பகைவரை வெல்கின்ற போர்வீரர் போர்க்களத்தினின்று திரும்ப வந்து அரிய பலியை இட்டு வழிபடுவர். அம்முரசினை அடித்து முழக்குபவர்கள் தொடியணிந்த தோளையுடைய இயவர்கள் (பதிற். **17:1–7**) என்கிறது பதிற்றுப்பத்து. இவர்கள் முரசு அடிக்கும் முறைமையினைப் பின்வருமாறு கூறுகிறது.

போர்க்களத்திற்குச் செல்ல விரும்பும் விருப்பத்தால் தானியங்களுள் ஒன்றான சிவப்பான தினையைத் குருதியுடன் கலந்து தூவிப் பலியிடுவர். பின் நீராடி வார்க்கப்பட்ட முரசின் கண்ணில் குருதியைப் பூசுவர். வலக்கையிலே குறுந்தடியை ஏந்தி முரசு அடிக்கும் வீரர், தொடியணிந்த தம் தோள்களை உயர்த்தி ஆடி முழக்குவர் (பதிற். **19:1–10**) என்பதிலிருந்து போர்ச் சடங்கு செய்வர் இயவர் என்பது புலனாகிறது.

**அகவுநர்**

சங்க இலக்கியம் இக்கலைஞரை அகவுநர் (பரி.**15**, அகம் **113**, அகம் **152, 208, 249**), அகவர் (மதுரை. **223**) அகலவன் (பதிற் **43**) என்று அழைக்கிறது.

அகவுநர் என்பவர் பாடலும், சிறிதே உடலசைத்து ஆடலும், செய்து, கையில் நுண்கோல் கொண்டு, வருங்கால நிகழ்வு குறித்துக் குறிசொல்லி வள்ளல் முன்னர் நல்வாழ்த்துப் பாடி ஆடுகின்ற இரவலர் என்பர்.

நுண்கோல் வைத்திருக்கும் இரவலரான இவர்கள் (அகம் 152) விடியல் பொழுதில் வள்ளலின் அரண்மனை வாசலில் நின்று பாடுபவர் (அகம் 208) முசுண்டை எனும் வள்ளல் அகவுநருக்கு ஏந்தெழில் திமிலையுடைய ஏற்றையும், நெடுந்தேர், களிறு (அகம் 249) முதலிய வளமான பரிசிலையும் வழங்கியுள்ளான்.

இவர்கள் மன்னர் தம் போர்க்களத்தையும் கொடை முதலியவற்றையும் சிறப்பித்துப் பாடியுள்ளனர்.

**மன்றம் படர்ந்து மறுகு இறைபுக்கு**
**கண்டி நுண்கோல் கொண்டு, களம் வாழ்த்தும்**
**அகவலன் பெறுக மாவே.....** [73]

எனவரும் பகுதி இவர்தம் கையில் உள்ள கோலின் இயல்பினைப் புலப்படுத்துகின்றது.

**அகவன் மகள்**

அகவுநருள் பெண்பாலர் 'அகவன் மகளிர்' ஆவர். இவர்கள் பாட்டுப் பாடும் முதுமகளிர் என்று பின்வரும் பாடல் வழி அறியமுடிகிறது.

**"அகவன்மகளே அகவன் மகளே**
**மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்**
**அகவன் மகளே பாடுக பாட்டே**
**இன்னும் பாடுக பாட்டே அவர்**
**நன்னெடுங்குன்றம் பாடிய பாட்டே"** [74]

இவர்கள் வள்ளல்களிடம் இருந்து யானையைப் பரிசாகப் பெற்றதை,

**இன்கடுங் கள்ளின் அகுதை தந்த**
**வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்**
**மடப்பிடிப் பரிவில் மானப்** [75]

குறுந்தொகை கூறுகிறது. இவர்கள் புண்ணிய மலையில் வளர்ந்த மூங்கிலை ஆய்ந்து பார்த்து நுண்ணிய கணுக்களைக் கொண்ட மெல்லிய கழையைத் தேர்ந்து அறுத்துவந்து அதையே நுண்கோலாகக் கொள்வர்

என்கிறது (97)அகநானூறு. ஆடல், பாடல், இசை என தம் கலைவாழ்வினை நடத்திய கலைஞர்களின் வாழ்கை பதிவாக சங்க இலக்கியம் இருப்பதை மேற்கூறிய பாக்கள் வழி உழித்துணர முடிகிறது.

**கலைஞரும் வறுமையும்**

பழந்தமிழர் தம் வாழ்வியலை வழுவாமல் பதிவு செய்த ஒளிவிளக்காய் சங்க இலக்கியம் விளங்குகிறது. இவ்விலக்கியம் மனிதனின் அடிப்படையான சமுதாய அமைப்பின் கட்டமைப்பை விளக்கும் பழங்காலச் சான்று ஆதாரமாக திகழ்கின்றது. "தமிழ்ச் சமுதாய வரலாற்றில் சங்க கால இலக்கியத் தோற்றம் முதலாவது பெரும் / அரும் நிகழ்ச்சி என்பதால் குடும்பம், அரசு, பொருளியல், சட்டம், பழக்கம், ஒழுக்கம், மதம், கல்வி ஆகிய தொடக்கக் காலத் தமிழ்ச் சமுதாய நிறுவனங்களின் (Social Institutions) கூறுகளின் சாயங்களைச் சங்க இலக்கியம்[76] பெற்றிருக்கின்றது.

நோக்கில் தமிழ்ச் சமூக வரலாற்றில் கலையும், அக்கலையினையே தம் வாழ்க்கையாக கொண்டு வாழ்ந்த கலைஞர்களும் முக்கிய பங்கு வகிக்கின்றனர்.

மனித வாழ்வில் அடிப்படை தேவைகளான உணவு, உடை, உறையுளைத் தேடி, திரிந்து 'கலை' ஒன்றினையே மூலாதாரமாக கொண்டு பிழைப்பு நடத்தியவர்கள் கலைஞர்கள். ஆடல், பாடல் கலைகளில் வல்ல கூத்தரும், பாணரும், பொருநரும், விறலியும், சொல்லொனா வறுமையில் வாடினர். தமிழ்ச் சமூதாயத்தில் வறுமை இருந்ததனை விளக்கி நிற்கிறது சங்க இலக்கியம்.

இவர்கள் மிக்க பசியால் வாடினர். அவர் தம் தோற்றத்தினைக் கோவூர்கிழார் பின்வருமாறு பாடுகிறார்.

> **"உடும்பு உரித்து அன்ன புன்எழு மருங்கின்**
> **கடும்பின் கடும்பசி....."** [77]

உடம்பின் தோலை உரித்தபின் எலும்புகள் வெளிப்பட்டுத் தோன்றுவது போல எலும்புகள் வெளிப்பட்டு விளங்கும் விலாப்பாகத்தை உடையவர்களாக காணப்பட்டார்கள் பாணர்கள். மேலும்,

> **"காரென் ஒடுக்கல் கடும்பசி இரவல"** [78]

வறுமையால் வாடி மேனி கறுத்து பசியால் தம் எழில் மாறி சமூகத்தில் இனம் காணப்பட்டார்கள். மேலும் இவர்தம் வறுமை நிலையினைப் புறநானூறு பின்வருமாறு காட்சிப்படுத்துகிறது.

“உடலில் வியர்வை ஒழுக அலைந்து புலர்ந்து வயிறானது ஒட்டி வாட (350) தம் வறுமை வருத்தத்தோடு (377) உடல் மெலிவித்து தம்மிடமே தங்கியிருக்கின்ற வறுமைத் துன்பமான (383) அடுபசி வருத்தும் (390) அவை வேனிற்காலத்து வெப்பத்தைப் போல வறுமை (அருங்காலம்), எனக்கு உண்டான துன்பமான வெம்மை (397) அம்வெம்மையான பசிப் பகையாக இருந்து (400)” கலைஞனை வெற்றிக்கொள்கிறது.

சிறுபாணாற்றுப்படை (131–140) விறல்பட ஆடும் விறலியரின் வறுமை நிலையினைப் பின்வருமாறு படம்பிடித்துக் காட்டுகின்றது.

விழிக்காத கண்களை உடைய நாய்க்குருளை தம் பசி மிகுதியால் பால் கறக்கப்படாத தன்மையிலும் பாலை உண்ணுகின்றதை தன் பசி மிகுதியால் பொறுக்க முடியாத குட்டியை ஈன்ற தாயாகிய நாய் குரைக்கும் அடுக்களை. அந்த அடுக்களையோ பொலிவற்று காணப்படுகின்றன. சமைப்பதற்கு வேண்டியவை இல்லாத நிலையில் இருக்கின்றது. அங்கு காளான் பூத்து விளங்கின.

இக்காட்சியினை நோக்கும்போது அவ்வட்டிலில் நீண்ட நாளாக சமைக்கப்படாதிருந்த தன்மை புலப்படுகிறது. குட்டியினை ஈன்ற தாய் நாயும் காளானும் அட்டிலில் இருப்பது அக்கலைஞரின் வறுமை நிலையினைத் தெளிவுப்படுத்தி நிற்கின்றது. அத்தகைய அடுக்களையில் அடுபசியால் வருந்துகின்ற விறலியோ குப்பையில் வளர்ந்த வேளைக்கீரையை உப்பில்லாமல் வேகவைத்து வறுமை இயல்பானது என்பதை அறியாதவர் கண்டு இகழ்வாரோ என நாணம் கொண்டு கதவை அடைத்து தம் பெரிய சுற்றத்துடன் பகிர்ந்து உண்டனர். விறலியின் இச்செயல் குப்பையில் கிடந்ததால் அக்கீரையை எவரும் விரும்பமாட்டார். அத்தன்மையிலான கீரையை வேகவைப்பதற்கும் உப்புமில்லை. இத்தகைய வறுமையிலும் உற்றாருடன் இருந்து உண்ணும் இல்லத்தியன்ற கடமையினின்று வழுவாமையைப் புலப்படுத்தி நிற்கின்றது.

இக்கலைஞர் கரிய பெரிய சுற்றத்தினை (சிறுபாண். 139, பொருநர் 61, பெரும்.25, புறம். 69:5, புறம்.150:13) உடையவர்.

அவர்களும் பெரும் பசியால் வாடினர். இவ்வறுமையே கலைஞரை ஆற்றுப்படுத்தியது. அதனால் பரிசில் தரும் வள்ளல்களை நாடிச்சென்று தம் கலையினை வெளிப்படுத்தி நின்று பரிசில் பெறுவர். இப்பரிசில் வாழ்க்கையினைப் புறம் பாங்குற வெளிப்படுத்தி நிற்கின்றது.

பழுத்த மரங்களை நாடிச் செல்லும் பறவை போல் சென்று, நீண்டவை என எண்ணாது கடப்பதற்கரிய பல வழிகளைக் கடந்து, தாம் பாடி பெறும் பரிசிலால் மகிழ்ந்து, தம் சுற்றத்தவரை உண்பிப்பர். பிற்காலத்துக்கு வேண்டுமே என்று பாதுகாக்காமல் தாமும் உண்டு முகம் மலர்ந்து மற்றவர்க்கும் தருகின்ற அவர்களது வள்ளல் தன்மையைப் புறநானூற்று (47:1–6) வழி அறியலாம்.

உன்னை விரும்பி வாழ்கின்ற மகளிர்க்கும், உன்னால் அன்பு காட்டப்பட்ட மகளிர்க்கும் பல மாட்சிமையுடைய கற்புடைய உன் உறவினரான மூத்த மகளிர்க்கும், நெடுநாளாக கடனாகப் பொருளைத் தந்து உதவி செய்தவர்க்கும், இன்ன தன்மை உடையவருக்குத்தான் தரவேண்டும் என்பது இல்லாமல் இன்னவர்க்கு இதனை தரலாமா ? என்று எண்ணிப் பாராமல், இதை வைத்துக் கொண்டு நெடுநாள் வாழலாம் என்று எண்ணாது, வேண்டாதவர் என யாரையும் வெறுக்காது, இப்பெருஞ்செல்வத்தை எல்லோர்க்கும் வழங்குதல் வேண்டும் என்று தம் மனைவியிடம் அறிவுறுத்துகின்ற உள்ளப்பாங்கு வறுமையில் கடமை உடையவர்களாய் திகழ்ந்த கலைஞர்களைச் சுட்டுகிறது (163) புறநானூறு.

**முடிவுரை:**

முன்னோரின் நுட்பமான அறிவின் வளர்ச்சியில் விளைந்த வடிவங்களில் பல கலைகள் உண்டு. தமிழிசையும், நுண்கலை சிற்பமும், ஓவியமும், கூத்தும், பாட்டும் என இவற்றின் களம் ஆளுமைக்குரியவை. தமிழ்க்கலைப் பண்பாட்டு வளர்ச்சியின் வடிவங்கள். ஆனால், இன்று பிறரால், அதிகார வர்க்கத்திற்குள் ஆளப்பட்டு அடிமைச்சின்னமாய் ஆக்கப்பட்டு கிடக்கின்றது.

நமது மரபுக் கலைஞர்களின் முகங்களை, வரலாற்றுப் பதிவுகளை, முழுமையாய்ப் படித்தறியும் களத்தை, காலத்தை எதிர்கால சந்ததியினருக்கு உருவாக்கித் தருவது ஆய்வாளரின் கடமை. அந்த வகையில் மரபுக் கலைஞர்கள் சமூகப் பொருளாதார தளத்திலும் வறுமை நிலையில் இருந்தமையைச் சங்க இலக்கியத்தின் வழி அறிய முடிகிறது.

முதன்மொழி தமிழ், உலகச் செம்மொழி தமிழ், செறிவு கண்டது தமிழ், தமிழே பிற மொழிக்கு மூலம், முதன்மை தொன்மை என்றெல்லாம் வியந்துரைக்கும் நாம் கலையின் பிறப்பிடம் பாணர்குடியே என்பதை உலகறியச் செய்திடாத பார்வை ஏன்? மரபுக் கலைஞர்களை, மரபுக் கலைஞர்களின் வாழ்தலை கேள்விக்குள்ளாக்கியது ஏன் ?

**“ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி**
**பெற்ற பெருவளம் பெறார்க்கு அறிவுறீஇச்**
**சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும்”** (தொல்.புறத் 36)

என்று அவர்களைப் பழுமரம் தேடும் பறவை போல அவர்களை வழி நெடுக பாலை வழியில் வறுமை சுமந்து அழைத்திடச் செய்தது ஏன்?

அரச விதி வந்த காலத்தில் எல்லாம் பொருளாதார நிலையில் அடித்தள மக்களாகவே ஒதுக்கப்பட்டது ஏன்? சமூகத்தில் ஏற்றத்தாழ்வுடனேயே அவர்களின் இருத்தலை செய்தது ஏன்?

உழைப்பின்றி உணவில்லை எனின் உழைப்பிலிருந்து பிறந்த, கூத்துக்கலைக்கு இரந்து பெறும் வாழ்க்கை நிலை பிறந்தது ஏன்?கூத்துக்கலைஞனை ஏனோ இச்சமூகம் விளிம்பு நிலைக்குத் தள்ளியது வர்ணப்பகுப்பின் விளைவா? தொழில் பகுப்பின் ஒதுக்கீடா? இயற்கையும், விவசாயமும் மலையும், தொழிலும், வாணிபமும் என இச்சமூகத்திற்காக வாழ்ந்த தன் அறிவை பகிர்ந்தளித்த அவர்களுக்கு இச்சமூகம் தந்த இழிவுப் பரிசா? போன்ற கேள்விகளுக்கு தொழில்முறை பகுப்பால் பொருளாதார கீழ் நிலைக்கு ஆட்பட்டவர்களாயினர் என்றே குறிப்புகளைத் தரவாகக் கொள்ள முடிகிறது.

கூத்துக்கலைஞனே முதன்மைக்குரியவன். பாணர்குலமே இசை வரலாற்றில் மூத்தகுடி. அவரே இசைக் கலை வல்லுநர் எனும் இடத்தில் வைத்துப் போற்றப்படக்கூடியவர். ஆனால் இக்கலைஞர்கள் ஊர் ஊராக, மலை நெடுகிலும், காடுகளிலும், வயல்புறத்தே சேரிகளிலும் திரிந்து வாழ்ந்து வந்திருக்கின்றனர். ஆனால் அவர்களுக்குப் போர் தொழில் மதிப்புறு தொழில் செய்ய அனுமதிக்கப்பட்டதற்கான எந்த பதிவும் இல்லை. அவர்கள் பெருந்தொழில் செய்ததாக எந்த பதிவும் இல்லை.

அவர்கள் குடும்ப நிறுவனமாக மகிழ்ந்து செயல்பட்டதாக எந்த செய்தியும் இல்லை. அவர்களது கைவினைத் தொழில்கள் உயர்ந்த நிலையில் பேசப்பட்டதில்லை.

பாணர்குல பெண்கலைஞர்களை நுகர்வுக்குரியவளாக, பார்க்கப் பட்டிருக்கின்ற (கேசாதிபாதவர்ணனை / பாதாதிகேச வர்ணனை) சமூகதளத்தில் பெண்ணிற்கான இருப்பு அடிமை நிலையில் இருந்துள்ளமை அறிய முடிகிறது.

கூட்டமாக குடிபெயர்ந்து, பாடி இரந்து பெறும் விளிம்புநிலை மக்களாக, எந்த உடைமையும் அற்றவர்களாகவே வாழ்ந்து வந்ததை சங்க இலக்கியம் தெற்றென விளக்கி நிற்கிறது.

நாளைய நம்பிக்கை என்று எந்த பொருளுடைமையும் அற்றவர்களாக வாழ்ந்தவர்கள் கலைஞர்கள். வேட்டைச் சமூகத்தின் வழித் தோன்றல்களான இவர்கள் மூத்தகுடியினர்கள். தம் அறிவுத்திறம் பட்ட அனுபவ அறிவால் சமூகத்தைத் தங்களின் வாழ்விடமான குகையிலிருந்து காட்டுக்கும், காடுகளிலிருந்து சமவெளிக்கும், கடலுக்கும் பாலைக்கும் என நால்வகை நிலத்திலும் சென்று பரவி பல்வேறு கூத்து, இசைத்தொழில், கைவினைத் தொழில்களைச் செய்து வந்தனர். அவர்களின் தொழில் முறையானது அவர்களிடமுள்ள இசைக்கருவிகளால் வலை போன்ற கைவினைக் கருவிகளால் அரசி விதியுள் / அரச நியதியில் கீழ்மை நிலைக்கே பார்க்கப்பட்டுள்ளது. அதனைப் பிற வர்க்கத்தினர் இசைக்கவும், இசைக்கருவிகளைத் தொடவும் விரும்பவில்லை. மதிக்கத்தக்கதாகப் பார்க்கவும் இல்லை. அவர்களின் வாழ்க்கை நிலை சமூகத்தில் புறக்கணிக்கப்பட்டது. அதனால் தொழில் நெடுந்தொழில், பெருந்தொழில், வாணிபம் என எத்திசைக்கும் சென்று தம் பொருள்களை விற்றுப் பயன்பெறவும் முடியாதவர்களாக வாழ்ந்திருந்தனர்.

வேட்டைச் சமூகம், இனக்குழுச் சமூகம், சீறூர், சிறுகுடி, முதுகுடி, வேளிர், மழவர், சிற்றரசர், வேந்தர் என சமூக வளர்ச்சியின் படிநிலைகளில் தொழில் எனும் மையத்தை உருவாக்கியவர்கள் தொல்குடிக் கலைக்குடும்பத்தினர்.

'குடி' எனும் செல்லை உருவாக்கியவர்கள், குடும்பம் என்பதும் அரசு என்பதும் தொல்குடி மக்களான, இனக்குழு சமூகத்தின் தொழிற்கலைஞர்களால் உருவாகியிருக்கிறது என்பதை அறிவோம். சங்க இலக்கியத்தில் எழுதப்பட்டிருக்கும் பதிவுகளின் வழி பாதீடுக்குரியவர்கள். ஆனால் சமப்பங்கை இழந்து, சமன்பாட்டை இழந்து, தொழில் இழந்து, பொருள் இழந்து, பெருந்தொழில் உடைமையை இழந்து, அன்றாட கூலிகளாக கைகளை மட்டுமே நம்பி, கலைகளை மட்டுமே நம்பி இறுதியில் இழிப்பிறப்பாளனாக, இழிசினனாக, புலையனாக வாழ்ந்தவர்கள்.

தொல்குடிச் சமூகத்தைச் சமூக, பொருளாதார வரலாற்றில் கீழ்நிலைக்குத் தள்ளியிருக்கிறது என்பது சங்க இலக்கியத்தின் வழி ஆய்ந்துணர முடிகிறது.

# சான்றெண் விளக்கம்

## இயல் – 5

1. க.காந்திதாசன், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், ப.4.
2. மேலது. ப.8.
3. தொல். புறத்.36.
4. பெரும்பாண். 20
5. புறம். 335
6. பக்தவத்சல பாரதி, பாணர் இன வரைவியல, பக்.63–64.
7. புறம். 319:9
8. ஐங்குறுநூறு
9. பரி. 17:17
10. பொருநர். 47
11. புறம். 11:10–11
12. பதிற். 44:7
13. மதுரை. 749
14. பதிற். 44
15. பதிற். 61:15–16
16. புறம். 11:10–11
17. பதிற். 61:17–18
18. தொல். பொருள். கற்பு. 27
19. தொல். பொருள். கற்பு. 28
20. அகநானூறு, அ.மாணிக்கம் (உரை. ஆ) பாடல் 301, ப.6.
21. பக்தவத்சல பாரதி, பாணர் இன வரைவியல், ப.74.
22. மலைபடு 392–393.
23. புறம். 28:13–14
24. க.காந்திதாசன், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வில், ப.79.
25. மேலது, ப.79.

26. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் கலையும், கலைக் கோட்பாடும், ப.48.
27. க.காந்திதாசன், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வில், ப.87.
28. புறம். 152:14–17
29. பதிற். 49:2–3
30. புறம். 152:13–14
31. புறம். 109:15–16
32. பதிற். 51:19–21
33. பதிற். 58:1
34. பதிற். 47:6–7
35. பதிற். 52:13–14
36. அகம். 82
37. மலைபடு. 358–359
38. பதிற். 57
39. பதிற். 43:20–22
40. மலைபடு. 535–536
41. புறம். 103:1–4
42. புறம். 64
43. பதிற். 54
44. பதிற். 43:21–22
45. புறம். 244
46. பெரும்பாண். 55–56
47. பதிற். 47:7
48. வெ.மு.ஷாஜகான்கனி, தமிழ் நாடக வகையும், வரலாறும், ப.206.
49. க.காந்திதாசன், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வில், ப.20.
50. மேலது. ப.73.
51. திருமுரு. 119–120
52. நெடுநல். 99
53. மதுரை. 85
54. முல்லை. 92

55. நற். 304
56. குறிஞ்சி. 219
57. அகம். 378
58. வெ.மு.ஷாஜகான்கனி, தமிழ் நாடக வகையும், வரலாறும், ப.176.
59. க.காந்திதாசன், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், ப.90.
60. பதிற். 20:15–16
61. மலைபடு. 46–50
62. க.காந்திதாசன், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், ப.96.
63. புறம். 379:6–9
64. புறம். 111:4
65. புறம். 335
66. புறம். 285
67. புறம். 291
68. புறம். 280:8–9
69. புறம். 170
70. நற். 347
71. புறம். 287
72. வெ.மு.ஷாஜகான்கனி, தமிழ் நாடக வகையும், வரலாறும், ப.209.
73. பதிற். 43:26–28
74. குறுந். 23
75. குறுந். 298
76. க.ப.அறவாணன், சங்க இலக்கியச் சமூகவியல், ப.63.
77. புறம். 78:1–2
78. புறம். 141:6

சங்க இலக்கியத்தில் தொழிற்சார் மரபுப் பெயர்களாக பொதுப் பெயர்களும், சிறப்புப் பெயர்களும் இருப்பது சிறப்பு. காரணம், நூற்றுக்கும் மேற்பட்ட தொழில்கள் இருந்தமையும், நாட்டு வளர்ச்சிக்கு சங்க இலக்கிய மாந்தர்கள் பெரும்பங்கு வகித்தனர் என்பதையும் தொழிற்பெயர்களின் வழி அறியலாம். அவற்றுள் ஆண்களுக்கான தொழிற்பெயர்களும், பெண்கள் தொழில்களைச் செய்து வந்தமைக்கான பெண்பாற் தொழிற்பெயர்களும் பரந்துப்பட்டு சுட்டப்பட்டுள்ளமை பாடல்கள் வழி காணமுடிகிறது. ஆகவே, இவ்வியல் தொழிற்வழி பிறந்த ஆண்பாற் பெயர்களையும், பெண்பாற் பெயர்களையும் நிரலாக்கி தொகுத்தளிக்கிறது. தொழிற்சாற் பெயர்களின் வழி தமிழர்களின் தொழில்நுட்பத்திறன் மற்றும் பலதிறப்பட்ட தொழில்களையும் அறிந்துகொள்ளலாம். தமிழரின் தொழில்கலை வரலாற்றினை முழுமையாக அறிந்திட இவ்வியல் துணை நிற்கும்.

**ஆண்பாற் பெயர்கள்:**

வேட்டைச் சமூகம் தொடங்கி மருதநில அரசு வகித்த காலம் வரை சங்க இலக்கியத்தில் பதிவாகி உள்ள தொழில்சார் ஆண்பெயர்கள் இவ்வியலுள் விளக்கம் பெறும் வகையில்;

வில் ஏர் உழவர் – வில்லை ஏராகக் கொண்டு உழும் உழவர் (நற். 3:5), கடல்மேம் பரதவர் – கடல்மேல் சென்று வாழ்க்கை நடத்தும் பரதவர் (நற். 4:1), உமணர் – உமணர் (நற். 4:7) “வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி.....”, குறவர் – குறவர்கள் வெட்டிக் குறைத்த வாசனைக் கொடிகள் (நற். 5:3, 44:8), காழோர் – யானைப் பாகரில் குத்துக்கோலை உடையோர் (நற். 74:5), கைவல் கம்மியன் – கைத்திறமை உடைய பொற்கொல்லன் (நற். 94:4), முதுவாய்க் குயவ – முதிய அறிவுள்ள குயவன் (நற். 200:4), செஞ்சால் உழவர் – செவ்விய சால் அடித்து உழும் உழவர் (நற். 340:7), ஏவல் இளைஞன் – வீரர் (நற். 389:5), ஆடுகள மகன் – தலைவன் ஆடுகின்ற களத்திற்கு உரியவன் (குறுந். 31:6), ஏனல் காவலர் – தினைப்புனம் காப்பவர் (குறுந். 54:2), தச்சன் (குறுந். 61:1), முதுவாய்க் கோடியர் – அறிவு முதிர்ந்த கூத்தர் (குறுந். 78:2), விலைஞர் – கைவளையல் விற்பவர் (குறுந். 117:6), காவலர்க் கணக்கு – நாழிகைக் கணக்கர் (குறுந். 261:7–8), களைஞர் – களை எடுப்பவர் (குறுந். 192:5), மகிழ்நன் – மருதநிலத் தலைவன் (ஐங். 24:3), கொண்கன் – நெய்தல் நிலத் தலைவன் (ஐங். 101:5), ஓங்குமலை நாடன் – உயர்ந்த மலை நாடன் (ஐங். 205:3), கைவல் சீறியாழ்ப்பாண – இசைத்தல் வல்ல சீறியாழை உடைய பாணன் (ஐங். 472:1), கோவலர் – பலப்பசுக்களை உடைய ஆயர் (ஐங். 476:3), இயவர் – இசைக்கருவிகளை இயக்குபவர் (பதிற். 17:7), கண்ணுளர் – சாந்திக் கூத்து ஆடுபவர் (பதிற். 20:16), பாசவர் – ஆட்டு வாணிகர் (பதிற். 21:9), சாகாட்டாளர் – வண்டி ஓட்டுபவர் (பதிற். 27:14), கொலைவில் வேட்டுவர் –

கொலை செய்யும் வில்லையும் உடைய வேடர் (பதிற். 30:9), களம்வாழ்த்தும் அகவலன் – போர்க்களத்தை வாழ்த்திப்பாடும் பாணன் (பதிற். 43:28), வன்கைவினைஞர் – வலியகையை உடைய உழவர் (பதிற். 58:15), சென்னியர் – பாடும் பாணர் (பரி. 7:80), குரல் வித்தகர் – இசைப்புலமை உடையவர் (பரி. 10:24), கடன்அறி காரியக் கண்ணவர் – கடமையை அறிந்த கண்ணனான அமைச்சர் (பரி. 19:22), மலைக்கிழவோன் – மலைக்குரியவன் (கலி. 40:34, 41:44), கான்அகல் நாடன் மகள் – காடு அகன்ற மலை நாட்டை உடையவனின் மகன் – குறிஞ்சி நிலத் தலைவன் (கலி. 39:10), புலையன் – கீழானவன் (கலி. 85:22), பாணன் – புலையன் (கலி. 95:10), மாயப்பொதுவன் – பொய் சொல்வதில் வல்ல ஆயன் (கலி. 112:21), சிறுகாரோடன் – சிறியவனான தோல் தைக்கும் சக்கிலியன் (அகம். 1:5), வயிரியர் – கழைக்கூத்தர் (அகம். 45:11), கொடுந்திமிற் பரதவர் – வளைந்த படகை உடைய பரதவர் (அகம். 70:1), போர்வல் இளைஞர் – போரில் வல்ல ஏவல் இளைஞர் (அகம். 74:2, 104:3), கொடுவில் எயினர் (அகம். 79:14), தொகுசொற் கோடியர் – புகழைத் தொகுத்துக் கூறும் கூத்தர் (அகம். 111:9), செந்நெல் வினைஞர் – உழவர் (அகம். 116:2), கொடுவில் ஆடவர் – வெற்றி வீரர் (அகம். 159:5, 167:9, 179:7), நோன் ஞாண் வினைஞர் – வலிய கயிற்றாலான தூண்டிலை உடைய மீன் பிடிப்பவர் (அகம். 186:2), நயவன் – இசைவல்லான் (அகம். 212:6), வல்வில் ஆடவர் – ஆறலைக் கள்வர் (அகம். 263:7), வலவன் – தேர் ஓட்டி (அகம். 400:12), காடு உறை இடையர் – காட்டில் தங்கும் இடையன் (அகம். 394:13), நாடன் – குறிஞ்சி நிலம் உடையவன் (புறம். 49:1), பசிப்பிணி மருத்துவன் – மன்னன் (புறம். 173:11), நெல்அரிசி தொழுவர் – நெல்லை அறுவடை செய்கின்ற உழவர் (புறம். 209:2), தண்பணைக் கிழவன் – மருதநிலத்துத் தலைவன் (புறம். 342:11), கம்மியன் – பொற்கொல்லன் (புறம். 153), இருபிறப்பாளர் – வீடுபேறு ஒன்றையே விரும்பி புலன்கள் அடங்கப்பெற்ற அந்தணர் (புறம். 367:12), கிணைவன் – கிணைப் பொருநன் (புறம். 391:12), ஏழின் கிழவ – நரம்பு ஏழிலும் உரிமை உடையவன் பொருநன் (பொருநர். 63), வேழம் காவலர் – பயிரை அழிக்காமல் யானையைக் காப்பவர் (பெரும். 51), ஆன்றடங்கு அறிஞர் – கல்வியால் நிறைந்து அறிவில் செருக்கின்றி அடங்கிய மெய் உணர்வுடைய பெரியோர் (மதுரை. 481), கண்ணுள் வினைஞர் – ஓவியர் (மதுரை. 518), கலிங்கம் பகர்நர் – ஆடை விற்பவர் (மதுரை. 513), முதுவாய்க் கோடியர் – பேரறிவுடைய கூத்தர் (பட்டினப். 253) என நூற்றுக்கும் மேற்பட்ட தொழிலார்களைச் சுட்டிச் செல்வதைக் காணலாம்.

**பெண்பாற் பெயர்கள்:**

வேட்டைச் சமூகம் தொடங்கி தாய்வழிச் சமூகம், இனக்குழுச் சமூகம், மருதநில அரசு என ஐவகை நிலங்களிலும் பெண் தொழிலாளர்கள் இருந்தமைக்கான ஆதாரங்களாக பாடல்கள் அமைகின்றன.

கொடிச்சி – தினைக்காக்கும் கொடிச்சி (நற். 22:1), திருந்து இழை மகளிர் – திருந்திய அணிகலன்களை அணிந்த பெண்கள் நன்னிமித்தம் எதிர்பார்த்து நிற்பவர் (நற். 40:4), ஆடுமகள் – கயிற்றின் கழை ஏறி விளையாட்டுக்கள் நடத்தி விளையாடுபவர் (நற். 95:2), மீன் எறி பரதவர் மடமகள் – மீன் வேட்டையாடும் பரதவர் மகள் (நற். 101:7), குறவர் மடமகள் ஏனல் காவல் – குறவர் மடமகள் தினைப்புனம் காவல் (நற். 102:8–9), செம்முது செவிலியர் – செவ்விய முதுமை செவிலியர் (நற். 110:6), நொதுமலாட்டி – புதுமலர் தெருவுதொறு நுவலும் நொதுமலாட்டி (நற். 118:9–10) பூவிலை மடந்தையர், விழவு ஆடும் மகளிர் – விழாக்களத்தில் துணங்கை ஆடும் பெண்கள் (நற். 138:9), செய்வினை குறுமகள் – செய்யும் கடமைகளை அறிந்த என் இளைய மகள் (நற். 179:3), குளிர்படு கையள் கொடிச்சி – கிளி கடி கருவி பொருந்திய கையையுடைய கொடிச்சி (நற். 306:3), மகட்கொடை – பரத்தை (நற். 310:5), மடம்கெழு பெண்டே – விறலி, ஆள்இல் பெண்டிர் – ஆடவர் இல்லாத கைம்பெண் தன் முயற்சியால் செய்த பஞ்சு (நற். 353:1), பாடினள் கொடிச்சி – மந்திகள் பலாக்கொட்டையை உதிர்க்கவும், மலைவளம் பாடி மலைநெல் குற்றவும் செய்யும் கொடிச்சி (நற். 373:3), அகவன் மகள் – தெய்வங்களை அழைத்துப் பாடி குறி சொல்லும் கட்டுவிச்சி (குறுந். 23:1), ஆடுகள மகள் – ஆடுகின்ற களத்திற்குரிய பெண் (குறுந். 31:4), ஆடுமகள் – தேவராட்டி (வெறியாட்டு ஆடுபவள்) (குறுந். 105:3), பெருமுது பெண்டிர் – பெரிய முதிய பெண்டிர் (விரிச்சி சொல்லுதல்) (குறுந். 181:7), தெரி தீம் மகளிர் – ஆராய்ந்த சொற்களை உடையவள் (குறுந். 250:6), வெண் கடைச் சிறுகோல் அகவன் மகளிர் – அகவல் மகளிர் (குறுந். 298:6), நலத்தகைப் புலத்தி – நன்மையையும் அழகையும் உடைய வண்ணாத்தி (குறுந். 330:1), வெறியாள் – வெறியாடும் மகள் (குறுந். 366:3), சிறுதொழு மகளிர் – சிறிய தொழில் செய்யும் மகளிர் (ஐங். 16:2) தொழுவறைகளில் பணி செய்யும் கடையர் மகளிர், மனைகெழு பெண்டிர் – வீட்டில் உறையும் நல்லியல்புடைய மகளிர் (ஐங். 382:5), பாடினி – பாண்மகள் (பதிற். 14:17, 17:14), விறலியர் – பாணரில் பெண்பாலர் (பதிற். 18:6), நல்யாழ் இளைஞர் – பாண்மகளிர் இசை பயிலும் இளைய மாணாக்கியர் (பதிற். 41:2), பாடு விறலியர் – பாடும் இயல்புடைய விறலியர் (பதிற். 43:22), பாடுமகள் – பாடும் பாடினி (பதிற். 44:7), ஆடுமட மகள் – நடந்தும், அசைந்தும், ஆடல் செய்யும் இளமகள், சாலினி தெய்வம் ஏறப்பெற்று வெறியர் கலம் – அசைந்தாடுதல் (பதிற். 51:10), மின்னிழை விறலியர் – மன்னனின் வீரத்தை புகழ்ந்து பாடுதல் (பதிற். 54:6), ஆன்றோள் – கற்புக்குரிய குணநலன்கள் அமையப்பெற்றவர் (பதிற். 55:1), பாண்மகள் (பதிற். 60:3), ஆடுக விறலியர் – ஆடும் விறலியர் (பதிற். 58:11), வேல்பாடினி – வேற்படையை புகழ்ந்து பாடும் பாடினி (பதிற். 61:16), செறுவினை மகளிர் –

உழவர் மங்கையர் (பதிற். 73:3), மனமகளிர் – அரசனால் தலைக்கோல் பட்டம் தந்து பாராட்டப்பட்ட கூத்தியர் (பரி. 7:80), அடியோர் – வரைந்துகொண்டு கணவருடன் உடன் உறையும் கற்புடைய மகளிர் (பரி. 8:43), பதிவத மாதர் – கற்புடைய மகளிர் (பரி. 10:23), நயனில் பரத்தை – நன்மையில்லாத பரத்தை (பரி. 12:45), அடியுறை மகளிர் – கோயில்களில் கூத்தாடும் மங்கையர் (பரி.14:5), விறலியர் – ஆடல் மங்கையர் (பரி. 17:15), பிழையாத பெண்டிர் – தம்மை மணந்த கணவனின் சொல்லை மீறாத கற்புடை மங்கையர் (பரி. திரட்டு 2:25), தொடிமகள் – விறலி (கலி. 36:4), தை இய மகளிர் – கோலம் செய்து கொள்ளும் பரத்தையர் (கலி. 27:19), குறவர் மடமகளிர் (கலி. 39:16), கொடிச்சியர் – குறிஞ்சி நில பெண்டிர் (கலி. 40:11), அரமகளிர் – தெய்வ மங்கையர் (கலி. 40:23), அணங்கு – சூர் அர மகளிர் (கலி. 49:47), தளரியலவர் – பரத்தையர் (கலி. 66:17), புலைத்தி – வண்ணாத்தி (கலி. 72:14), ஏனல் அம் காவலர் – காவல் மகளிர் (அகம். 12:6), குறமகள் (அகம். 52:3), அண்டர் மகளிர் – ஆய மகளிர் (அகம். 59:5), சேரிஅம் பெண்டிர் (அகம். 65:4), அலர்வாய் பெண்டிர் – அலர் கூறும் வாயையுடைய பெண்டிர் (அகம். 70:6), முதுவாய்ப் பொய்வல் பெண்டிர் – கட்டுவிச்சி (அகம். 98:8–9), இறைமகளிர் – கூத்தியர் (அகம். 97:10), பாண்மகள் – மீன் விற்பவள் (அகம். 126:9), விறலி – கூத்தாடுபவள் (அகம். 82:10), ஆடுமகள் – ஆடும் கூத்தியர் (அகம். 151:9), அரியற் பெண்டிர் – கள் விற்கும் மகளிர் (அகம். 157:1), குறமகள் காக்கும் ஏனல் (அகம். 188:23), கிளிகடி மகளிர் (அகம். 194:15), பாட்டி – பாணரின் பெண்டிர், பாணினி (அகம். 196:4), பழையர் மகளிர் – பரதவ மகளிர் (அகம். 201:7), மீன்கொள் பாண்மகள் – மீனைப் பிடிக்கும் பாணர் மகள் (அகம். 216:1), பழையர் மகளிர் – எயினர் மகளிர், உழத்தியர் (அகம். 331:5), மூதில் பெண்டிர் – மறக்குடி மகளிர் (புறம். 19:15), கடைசியர் – உழத்தியர் (புறம். 61:1), கிணை மகள் – கிணை என்ற பறையை உடைய விறலி (புறம். 11:4), பருத்திப் பெண்டின் – பருத்தியை நூற்கும் பெண் (புறம். 125:1), ஆடுமகள் – விறலி (புறம். 128:6), பாடுவல் விறலி – பாடக்கூடியவள் விறலி (புறம். 152:13, 172:3), தொடிகழி மகளிர் – அவனுடைய வளையல் கழிக்கப்பட்ட உரிமை மகளிர் (புறம். 238:6), உயவற் பெண்டிர் – கைம்மை நோன்பால் வருந்தும் பெண்டிர் (புறம். 246:10), முருகுமெய்ப்பட்ட புலத்தி – தெய்வம் ஏறி ஆடுகின்ற புலைமகள் (புறம். 259:5), விரிச்சி ஓர்க்கும் செம்முது பெண்டிர் – விரிச்சி கேட்கும் செம்மையுடைய முதியவள் (புறம். 280:7), பூவிலை பெண்டே – பூவை விற்கும் பெண்டிர் (புறம். 293:6), கிணைமகள் (புறம். 399:16), அடுமகள் – சமைப்பவள் (புறம். 399:1), புரிமாலையர் பாடினி – பொன் அரி மாலை பெறுவதற்குரிய பாடினி (புறம். 361:12), பெருந்தகு பாடினி – இசைக்கல்வியின் பெருமை முழுவதற்கும் தகுதியுடைய பாடினி (பொருநர். 47), இன்நகை மகளிர் – இனிய முறுவல்

கொண்ட ஏவல் மகளிர் (பொருநர். 85), ஒண்நுதல் விறலியர் – ஆடல் பாடல் வல்லவர் (பொருநர். 110), உமட்டியர் (சிறுபாண். 60), கிணைமகள் – கிணைவரின் மனைவி (சிறுபாண். 136), நுளைமகள் (சிறுபாண். 158), எயிற்றியர் (சிறுபாண். 175), நாடக மகளிர் – கூத்தியர் (பெரும். 55), ஆய்மகள் – இடைச்சி (பெரும். 162), கள்அடு மகளிர் – கள்ளைச் சமைக்கும் மங்கையர் (பெரும். 339), தொல்முது பெண்டிர் – பழமை மூத்த பெண்டிர் (வீடுதோறும் சென்று பல பொருட்களை விற்றவள்) (மதுரை. 409), வெறி ஆடு மகளிர் – செவ்வேலுக்கு வெறி ஆடல் ஆடும் மங்கையர் (பட்டினப். 155), கொண்டி மகளிர் (பட்டினப். 246), கிளி கடி மகளிர் (மலைபடு. 329), தினைகுறு மகளிர் – தினையைக் குற்றும் குறமகளிர் (மலைபடு. 342), பழையர் மகளிர் – கள்விற்கும் மகளிர் (மலைபடு 459), இன்குரல் விறலியர் – இனிய குரல் உடைய விறலியர் (மலைபடு. 358, 536) இவ்வாறு ஆண் தொழிலாளர்களைப் போலவே பெண் தொழிலார்களும் நூற்றுக்கும் மேற்பட்ட தொழில்களைச் செய்து சமூக நலனில் தங்களை இணைத்துக் கொண்டிருந்தனர் என்பதை இவ்வியல் விளக்கத்துள் காணலாம்.

சங்க இலக்கியப் பாடல்களில் பதிவாகியுள்ள ஆண், பெண்பாற் பெயர்கள் நெடும்பட்டியலாக பின்னிணைப்பில் (இணைப்பு 2) இணைக்கப்பட்டுள்ளன.

**முடிவுரை:**

எழுத்திலக்கியங்களுக்கு முன்பு சங்ககால மாந்தர்களின் உழைப்புத் தொழில் பொதுமையாக பார்க்கப்பட்ட நிலையை வால்காவிலிருந்து கங்கை வரை எனும் வரலாற்று நாவலில் பார்க்கமுடிகிறது. சங்க இலக்கியப் பாடற் பதிவுகளில் பெண்ணின் தொழில்சார் வரலாற்றுப் பதிவு பெரும்பான்மையும் மறைக்கப்பட்டிருப்பதாக ஒப்புநோக்கி அறியலாம். எனினும் பெண் தொழில்சார் பெயர்கள் நூற்றுக்கும் மேற்பட்டு ஐவகை நிலங்களிலும் ஆண்களைப் போலவே மிகுதியும் இடம்பெறுவதைக் காணலாம்.

தொழிற்பெயர்களின் வழி ஆண்களை நிலம்சார் பெருந்தொழில் புரிவோராகவும், பெண்களை பெருந்தொழில் சாராத பெயர்களைச் சுட்டியும் பாடல்கள் பதிவு செய்துள்ளமையைக் காணலாம். காலச்சூழலை ஒப்பிட்டு நோக்கின் ஆண், பெண் தொழில்வழியே நாடு வளர்ச்சி அடைந்திருக்கிறது என்பதை ஆய்ந்துணர முடியும். இவ்வியல் தமிழரின் தொழில்நுட்பத் திறன்களையும், திறன்பட்ட தொழிலாளர்களையும் அறிந்திட அறிய களமாய் விளங்கும் என்பதை ஆய்ந்துரைக்கிறது.

மனிதன் இயற்கையின் தேவையை தொடர்ந்து பெற்றுக்கொள்ள வேண்டும் என்ற விருப்பமே தொடர் வழக்கமாக மரபாக உருப்பெற்றது எனலாம். தேவையெனின் உயிர் வாழ்தலுக்கான நலம் பேணும் தொழில் என்றும் கொள்ளலாம். தொழில் எனின் வழக்கமாக தொடர் நிகழ்வாக உழைப்பாக விரும்பி ஏற்றுக்கொள்வது. அவனது வாழ்க்கையில் இயற்கை நலம் பேணும் சிந்தனை இயல்பானது. இயற்கை, மனிதன், உழைப்பு என்ற மூன்றும் ஒன்றின் ஒன்று சுழற்சிப் பாதையில் அமைவதை மனிதகுலம் அறியும். அந்தச் சுழற்சி முறையானது இயல்பாக வருங்கால சந்ததியினருக்கும் கற்றுத் தரும் ஒரு பயிற்சிக் களமாகவே சடங்கு நிகழ்த்தும் களம் அமைவதை சமூக வரலாற்றுப் போக்கின் தன்மையோடு ஒப்பிட்டுப் பார்த்துக்கொள்ள முடியும். இச்சூழலில் உருவான தேவையை முன்னிறுத்திய மரபு முறையே பின்னர் மரபுச் சடங்கு என பெயர்பெற்றுக்கொண்டு தொடர்வதையும் அறிவோம். சங்க காலத்திற்கு முந்தைய மனிதகுலத்தில் தொட்டுவந்த மரபு முறைகளே இன்றும் இயற்கை வழிபாடு, முன்னோர் வழிபாடு, சூரிய, சந்திர வழிபாடு என ஐவகை நிலங்களிலும் ஆங்காங்கே அவரவர் விருப்பத்திற்கே முறைப்படுத்திக் கொள்ளப்பட்டு வந்தது. அத்தகைய ஐவகை நிலங்களிலும் செய்யப்பட்ட வழிபாட்டு முறைகள் தம் முன்னோரின் சடங்கு முறைகளாக சங்க இலக்கியப் பாடல்களிலும் எழுத்துரு பெற்றமை அறியலாம். சங்க இலக்கியத்தில் தம் முன்னோரின் சடங்கு முறை, வழிபாடு, சடங்கு, பழங்கதைகளான தொன்மக் கதைகள் என குறியீட்டு முறையில் மரபு மாறாமல் கடைப்பிடிக்கப்பட்டு வந்துள்ளமையும் தமிழரின் சடங்கு முறைகளாக அவை எவ்வாறு பாடல்களில் பதிவுற்று நிற்கின்றன என்பதை இவ்வியல் விளக்க முனைகின்றது.

ஒரு நிகழ்வு வழக்கமாகியே பின் தொடர் நிகழ்வான சடங்காக மாறிவிட்டது.

மனிதன் இயற்கையோடு போராடத் தொடங்கிய நாளிலேயே தேவை என்ற அடிப்படை, வாழ்வாதார தேடலை வழக்கமாக கொண்டிருந்தபோதே சரியாக ஒரு அணுகுமுறை கடைப்பிடித்தாக வேண்டுமென்ற கட்டாயத்தில் தோன்றிய வழக்கமான செயலே மரபாகியது. பின்பு அது கற்பனை கடவுளரின் அருவ உருவ வணக்கமாகி மரபு என்ற வழக்கமான சொல் சடங்கானது. அறிந்துணர்ந்த நுட்பமான அறிவியல் செயல்களை என்றும் சொல்லமுடியாத காலங்களில் தேவை நிறைவேறும் செயலுக்கு ஆயத்தமாகும் மரபு செயல்பாட்டு முறையே சடங்கு எனக்கொள்ளப்பட்டது. பிறப்பிலிருந்து இறப்பு வரை மனித வாழ்க்கையோடு ஒரு நிகழ்வு நடந்தேற அல்லது குழந்தைப்

பிறந்தவுடன் தாயின் தொப்புள் கொடியை அறுக்கும் முறையை, தேவையான அறுவை முறை செயலாக்கத்தினை வழக்கமானது என்பது கொள்ளவேண்டி, தருணத்தை முறைப்படுத்திக்கொள்ள வேண்டுமென்ற கட்டாயத்தினை மரபாக கொண்டதால் பின்னர் அவ்வறிவியல் முறையினைச் சடங்கு என பெயராக்கிக்கொண்டனர். ஆக ஒரு தேவையை நிறைவேற்றும் **தொடர் நிகழ்வு மரபு முறையை சடங்கு** என சொல்லலாம்.

**சடங்கு – விளக்கம்:**

மக்கள் தாங்கள் செய்துவரும் வழிபாடு, விழா முதலியவற்றை முந்தையோர் முறைப்படி செய்து வரும் செயல் சடங்கு[1] என்பர்.

சடங்கு என்பது சிரத்தைக்குரிய வாழ்வில் குறியீட்டளவில் உந்துதலைப் பெற அல்லது நேரடியாகப் பங்கெடுத்துக் கொள்ள, பொருத்தமான நடத்தை முறைகளுடன் தன்னார்வமாக நிகழ்த்தும் ஒரு நிகழ்வாகும்[2] என்பார் ரோத்தன் பூலர்.

''சாஸ்திர விதி பற்றியும் வழக்கு பற்றியும் அனுஷ்டிக்கும் கிரியை'' சடங்கு[3] என்கிறது சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி.

'சடங்கு' வாழ்வியலோடு இணைந்த ஒன்றாகவும், வழிவழியாக செய்து வரும் செயல் என்றும், மேற்கூறிய விளக்கங்கள் வழி அறியபெறுகிறது.

சடங்குகள் எல்லாம் அந்தந்தப் பண்பாட்டுச் சமூகங்களுக்குப் பொது என்றாலும், ஆணுக்குரியவையும், பெண்ணுக்குரியவையும் வேறுபடுகின்றன. இத்தகு வேறுபாட்டினைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது. ஆணுக்கு ஆள்பவனுக்கு உரிய சடங்குகள் பெரிதும் அன்று அவனுக்கு சமூக வாழ்வினைகளான போர், வேளாண்மை, அரசாட்சி ஆகியவற்றைச் சார்ந்தும், பெண்ணுக்கு மனையுறை மகளிர்க்கு உரிய சடங்குகள் அவர்களது பாலியல் உடல் சார்ந்தும், அவ்வுடல் வதுவை (திருமணம்), மகப்பேறு, கைம்மை ஆகிய இன விருத்தி அல்லது இனவிருத்தித் தடை சார்ந்தும்[4] காணப்படுகின்றன. இத்தகு பெண்களுக்கான வாழ்க்கை வட்டச் சடங்குகளைப் பக்தவச்சல பாரதி[5] அவர்கள் கூறுவர்.

மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான ஒவ்வொரு பருவ மாற்றத்தின் போதும் செய்யப்படும் சடங்குகளை வாழ்க்கை வட்டச் சடங்குகள். வாழ்வின் தகுதி பெயர்வினை அடையாளப்படுத்தும் வகையில் நிகழ்த்தப்படும்முறையான செய்முறைகளே சடங்குகள். இச்செய்முறைகள் ஒவ்வொரு தகுதி பெயர்வின் போதும் பல்வேறு விதமான காரணங்களை

நிலைநிறுத்தி செல்கின்றன. முன்னோரிடமிருந்து பெற்ற ஒவ்வொரு சடங்கும் அடுத்தடுத்த தலைமுறைக்காக மாற்றி அளிக்கப்படுகின்றன.

சடங்குகள் அனைத்தும் மனித வளமையை ஒட்டி அமைந்த செய்முறை சடங்குகள் எனும் போது பெண்களை அடிமை படுத்தும் வழக்கங்களாகவும் இருக்கின்றன என்பதனையும் வெளிப்படுத்தி நிற்கின்றன. வாழ்க்கை வட்டச் சடங்குகள் அனைத்தும் 95 விழுக்காடு பெண்களாலேயே பெண்களுக்கே என்று சொல்லும் அளவிற்கு அமைந்துள்ளன.[6] சங்க இலக்கியப் பாடலான புறநானூற்றில் பூப்புச் சடங்கு குறித்து விளக்கும் பாடலாக,

**“பாரி பறம்பின் பனிச்சுனை போல**
**காண்டற் கரியளாகி மாண்ட**
**பெண்மைநிறைந்தபொலிவொடு மண்ணிய**
**துகில்விரி கடுப்ப நுடங்கி தண்ணென**
**அகில் ஆர் நறும்புகை சென்றடங்கிய**
**கபில நெடுநகர்க் கமழும் நாற்றமொடு**
**மனைச் செறிந் தனளே வாணுதல்....”** [7]

என பெண் பூப்பு அடைந்ததால், பிறரால் காண்பதற்கு அரியவளாக, பெண்மை நிரம்பிய பொலிவொடு, நன்கு வெளுத்து மடித்த துகில் போல, அகிலின் நறும் புகை கமழும் கபிலநிற வீட்டிற்குள் மனைச் செறிக்கப்பட்டாள் என்று பெண்ணின் பூப்புச் சடங்கினை இப்பாடல் வெளிப்படுத்தி நிற்பதை காணலாம்.

அவ்வாறு மனை செரிக்கப்பட்ட பூப்புப்பெண்ணின் கருவுயிர்ப்பு பையினை வலுப்படுத்திக்கொள்ள அதிக கவனம் அதாவது உடல் பராமரிப்பு எனும் தேவையை ஒட்டியதால் அம்முறை மரபாக வழிவழியாக செய்யப்பட்டு வருகிறது. அந்த உடற்கூற்று கருவுயிர்ப்பு பயன் கருதிய பராமரிப்பு என்பதை வலியுறுத்திக்கொள்ளும் முறைக்கே மரபு என பெயரிடப்பட்டது. சமஸ்கிருத மையமாதல் தலைகாட்டிய சூழலில் மரபு சடங்கு என்ற சொல்மாற்றத்துள் இழுக்கப்பட்டுள்ளது.

**வதுவை சடங்கு:**

சங்க இலக்கியத்தின் அகப்பாடல்களுக்குத் தொல்காப்பியம் வகுத்த மரபின்படி வதுவைக்கு முந்தைய களவு வாழ்க்கை, வதுவையின் ஊடாக மாறிக் கற்பு வாழ்க்கையாக அமைகிறது. அன்றி பெற்றோர், ஊரார் சம்மதத்தோடும், ஆண் மடலேறுதல் மூலமாகவோ, பெண்ணோடு உடன்போக்குச் செல்லுதல் மூலமாகவோ வதுவை நடைபெறுகிறது.

அகநானூறு 'முன்னமும் பின்னமும் முறைமுறை தரதர' பெண் தலைமையில் இயற்கை மலர் சூடி வதுவை எனும் திருமணம் நடைபெற்றதை பாடலாய் வடித்துத்தந்து சென்றள்ள நிலையில் 'பொய்யும் களவும் தோன்றிய பின்னர் அய்யர் யாத்தனர் கரணம் என்பர்' என்று திருமணச் சடங்கு ஏற்பட்டதன் காரணத்தை கூறுகிறார் தொல்காப்பியர்.

ஆனால் களவு வாழ்க்கை திண்ணிய கற்பாகி வாழ்ந்தும், உடன் போக்கு வழி வாழ்ந்தும் அன்புடை நெஞ்சம் தான் கலந்தனவே என வாழ்ந்த சங்க கால மக்களை கொடுப்பக் கொள்வதுவே என மேல் கீழ் என்ற பாலியல் உறவு பான்மையை இறுக்கமாக்கிச் செல்வதும் சமஸ்கிருத சடங்கின் வழி பிறந்திருக்கிறது என்பதை இவ்வியல் விளக்க முனைகிறது.

தொன்று இயல் மரபின் மன்றல் என்ற வரியின் மூலம் வதுவை இரு வீட்டார்களாலும், ஊர்ப் பெரியவர்களாலும் தீர்மானிக்கப்பட்டது என்பதே அன்றைய நடைமுறைப் பண்பாடாக இருந்தமையை[8] அறியமுடிகிறது.

**"நம் ஊர்ப்**
**பிரிந்தோர்ப் புணர்ப்போர் இருந்தனர் கொல்லோ ?**
**தண்டுடைக் கையர், வெண்தலைச் சிதவலர்**
**நன்றுநன்று என்னும் மாக்களொடு**
**இன்று பெரிது என்னும் ஆங்கணது அவையே"** [9]

பெண் வீட்டில் புதுமணலைப் பரப்பிப், பொலிவுடைய எம் மகளுக்குத் திருமணம் எனச் சொல்லி மணத்துக்கு வேண்டுவனவற்றைச் செய்கின்றனர். இதனை,

**"நனைவிளை நறவின் தேறல் மாந்திப்**
**புனைவினை நல்இல் தருமணல் குவைஇப்**
**பொம்மல் ஓதி எம் மகள் மணன் என**
**வதுவை அயர்ந்தனர் நமரே"** [10]

அகநானூறு கூறுகின்றது.

பெண் கேட்டு வந்தவனுக்குப் பெண்ணின், தந்தை வேங்கை மரத்தின் கீழ் இருந்து அம்மலைக்குரியவனுக்கு மணம் செய்து கொடுப்பதை விரும்பி உடன்பட்ட செய்தியைக் கலித்தொகை **(41:42–44)** விரித்துரைக்கிறது.

**".... நுந்தையும்**
**மன்றல் வேங்கைக் கீழ் இருந்து**
**மணம் நயந்தனள் அம்மலைகிழவோற்கே"**

இதன் வழி ‘பெண்’ கேட்டு மணம் நிச்சயிக்கும் நிகழ்வு இருந்தமை வெளிப்படுகிறது.

**சிலம்புகழி அயர்தல் (அ) சிலம்பு கழி நோன்பு:**

பெண்ணிற்கு மணம் நிச்சயித்த பிறகு அவளது பாதங்களில் உள்ள சிலம்பினை மணவினை தொடங்குவதற்கு முன்தாய் வீட்டில் சிலம்பு கழி அயர்தல் செய்வர். இது சிறப்பாக போற்றப்படும் (அகம் 49:13–18, 117:8–9, 315:7–8, 14–15, 321:15–17, 369:21–26, 383:11–14, 385:15–18) ஒரு சடங்காக கருதப்பட்டுள்ளது.

> **“அதர் உழந்து அசையினகொல்லோ – ததர்வாய்ச்**
> **சிலம்பு கழீஇய செல்வம்**
> **பிறருழைக் கழிந்த என் ஆயிழை அடியே?”** [11]

> **“நும்மனைச் சிலம்பு கழீஇய அயரினும்**
> **எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்**
> **சொல்லின்.....”** [12]

திருமண நிகழ்ச்சிக்கு முன்பாகத் தலைவியின் காலில் அணிந்திருக்கும் சிலம்பைக் கழற்றுதற்கு சடங்கு நடத்தப்படுகிறது. இச்சடங்கு தாய் வீட்டில் நிகழ வேண்டும் என்று தாய் விரும்புவாள். ஆனால் உடன்போக்கில் செல்லும் தலைவியர்க்கு இச்சடங்கும், மணவினையும் தலைவனது இல்லத்தில் நடைபெறுகிறது. இதனால் தாய் சிலம்பு கழி நிகழ்வு மணமகன் வீட்டில் நிகழ்ந்து விட்டதால் தன் இல்லத்தில் வதுவையேனும் நிகழ வேண்டும் என்று விரும்புவதாக மேல்வரும் பாடல்கள் விளக்கி நிற்கின்றன.

இச்சிலம்பு உடன்போக்கு மேற்கொண்ட தலைவி தன் போக்கை தாய் அறிந்துவிடுவாளோ என்று பயந்து தானே கழற்றி வைத்துவிட்டு சென்ற நிலையினை, (அகம் 321:15–17) அகநானூறு வழி அறியமுடிகிறது.

சிறுமியாகப் பருவப்பெண் மங்கை எனும் தகுதியினின்று கருவுயிர்ப்புக் காலத்தை மேற்கொள்ளும் சூழலுக்குரியவளாக காட்டும் வகையில் மங்கையாக இருந்தபோது அணிந்திருந்த காலனியான சிலம்பினை கழற்றும் மரபு முறை இருந்துள்ளது. உடன் போக்கு செல்வோர் தன் காலில் அணிந்துள்ள சிலம்பை கழற்றி வைத்துவிட்டு செல்லுதல் இருந்ததையும் அகநானூற்றுப் பாடல் விளக்கும்.

இதன்வழி பெண்ணிற்கு திருமணம் முன் சிலம்பு கழி அயர்தல் இருந்திருப்பதை (அகம். 282:11–18) அறியமுடிகிறது. திருமணம்

நடைபெறுவதற்கு முன்பு இல்லுறை தெய்வங்களுக்குப் பலி (நைவேத்தியப் பொருள்) செலுத்திய முறையினையும் அகம் வழி அறிய முடிகிறது.

சங்க காலத்தில் நடைபெற்ற வதுவை எனும் 'நல்மணச் சடங்கினை' அகம் **86, 136** எனும் இரு பாடல்கள் பின்வருமாறு கூறுகிறன.

"இருள் அகன்ற விடியற்காலத்தில், திங்களை நாள் (உரோகிணி நாள் மீன்) அடைந்த பொழுதில், பெண்வீட்டில் மணம் நிகழ்ந்தது. வீட்டில் விளக்கு ஏற்றி, மாலைகள் தொங்கவிடப்பட்டன. வரிசையாகக் கால்கள் நாட்டி, பெரும் பந்தல் அமைக்கப்பட்டது. கீழே புதுமணல் பரப்பப்பட்டது. மணநிகழ்ச்சிக்கு வந்தவர்களுக்கு உழுந்து பெய்து ஆக்கிய களிமிதவை (பொங்கல்) யோடு, மிக்க சோற்றைப் பரிமாற அவர்கள் உண்ணும் ஓசை இடைவிடாது கேட்டது. உச்சியில் குடம் ஏந்தி, புது மண் பானை கொண்டு மணவினையை நிகழ்த்தும் முதுசெம் பெண்டிர் முன்னவும் பின்னவும் முறை முறை தரத்தர, புதல்வர்களைப் பெற்ற தலை (தேமல்) படர்ந்த வயிற்றையுடைய வாலிழை மகளிர் நால்வர் கூடி நின்று கற்பினின்றும் வழுவாது நல்லபலாகிய உதவிகளையும் செய்து, உன்னை மனைவியாகப் பெற்றோன் விரும்புகிற பிணையாக ஆகுக என்று வாழ்த்தி, மங்கல நீருடன் கலந்து சொரிந்த ஈரமான இதழ் அலரி (பூக்கள்) யையும் நெல்லையும் மணப்பெண் கூந்தலில் தூவினார்கள்." (அகம் **86**) என நல்லாவூர் கிழார் வதுவை நல் மணச் சடங்கினைக் கூறுகிறார்.

மேலும், அகம் **136**ஆம் பாடல் பின்வருமாறு விளக்கம் தருகிறது. "பறவை நன் நிமித்தத்தில் விசும்பில், திங்களும் உரோகிணியும் கூடிய நன்னாளில், பெண்வீட்டைப் புனைந்து அலங்கரித்தனர். நன்கு சமைத்த (புழுக்கிய) நெய் மிகுந்த வெண்சோற்றை உறவினர்க்குப் பரிமாறினர். முதலில் கடவுளை வழிபட்டனர். மணமுழவும் முரசமும் ஒலிக்க, மணப்பெண்ணுக்கு மகளிர் கூடி மணநீராட்டினர். மணமகளை இமையாது நோக்கித் தம் நாணத்தை மறைத்தனர். வாகை இலையையும், அறுகம்புல்லின் மேகத்தின் முதல் பெயலால் ஈன்ற நீல மணி போன்ற இதழையுடைய பாவை போன்ற கிழங்கில் உள்ள குளிர்ந்த அரும்புடன் சேரக்கட்டிய வெண்மையான காப்பு நூலை (வெண்நூல்) அவளது உறவினர்கள் அவளுக்குச் சூட்டினார்கள். தூய மண உடையைக் கட்டுவித்தனர். மணப் பந்தலில் அமர்ந்திருந்த மணப்பெண்ணின் வியர்வையை ஆற்றினர். பின்னர் அவளை மண மகனுக்குக் கொடையாய் ஈந்தார்கள்."

இப்பாடல்கள் வழி வதுவை நல்மணத்தின்போது பின்வரும் சடங்குகள் செய்யப்பட்டதை அறியமுடிகிறது.

- மணப்பெண் வீட்டில் மணவினை நிகழ்த்தப்பட்டது.
- நற்சகுனம் பார்த்து, திங்களும், உரோகிணி விண்மீனும் சேரும் நல்ல நாளில் விடியற்காலமே மணவினை தொடங்கப்பட்டது.
- மணவீடு அலங்கரிக்கப்பட்டது. விளக்கேற்றி மாலைகள் தொங்கவிடப்பட்டன. புதிதாகக் கால்கள் நாட்டிப் பந்தல் அமைக்கப் பட்டும் கீழே புதுமணலும் பரப்பப்பட்டது.
- மணத்திற்கு வந்தோர்க்குக் காலையிலேயே உழுந்து கலந்த சோறு வழங்கப்பட்டது (அ) நன்குவெந்த நெய்ச்சோறு வழங்கப்பட்டது.
- கடவுளை வழிபட்டு மணவினை தொடங்கப்பட்டது.
- மண முழவும், முரசும் முழங்கப்பட்டன.
- மகளிர் கூடி மணப்பெண்ணை மணநீராட்டினர். பின்னர் காப்பு நூலை சூட்டி, மணப்புடவை அணிவித்தனர்.
- மணவினையை நிகழ்த்தும் முதிய பெண்கள் தம் உச்சியில் குடத்தையும், புதுமட்பாண்டத்தையும் வைத்திருந்தார்கள். இவர்கள் மணவினைக்குரியவற்றை முன்னும் பின்னும் முறைமுறை தரத்தர புதல்வர்களைப் பெற்ற மகளிர் நால்வர் மணப்பெண்ணைச் சூழ்ந்திருந்து சடங்குகளைச் செய்தார்கள்.
- இவர்களே, மலர்களும் நெல்லும் கலந்த நீரை மணமகள் தலைமீது தூவி, தெளித்து ''கற்பில் வழுவாது நற்பல உதவி செய்து, உன் கணவன் விரும்பும் மனைவியாக ஆகுக'' என வாழ்த்தினார்கள்.
- மணம் முடிந்த பின்னர் மணமகளின் உறவினர்கள் விரைந்து புகுந்து 'பேரில் கிழத்தி ஆகுக' என வாழ்த்தி, கணவன் கையில் ஒப்படைத்தார்கள். மணமகனுக்குக் கொடையாக ஈந்தார்கள்.

இச்செய்திகளிலிருந்து[13] வதுவை நல்மணம் தொடர்பான நிகழ்வுகளில் நடைபெறும் சடங்குகள் யாவற்றிலும் பெண்கள் பங்குபெற்றுள்ளதையும், மணவினையை நடத்தி வைப்பவர்கள் பெண்களாகவும் இருந்துள்ளமையும், மணச்சடங்கு யாவும் மணப்பெண் வீட்டில் செய்யப்பட்டமையும் அறியமுடிகிறது.

சங்க கால மணவினையில் ஆண், பெண் கழுத்தில் தாலி கட்டும் சடங்கோ, ஆண் வீட்டார்க்குப் பெண்வீட்டார் பொருள் தரும் வழக்கமோ,

திருமணத்தை ஓர் ஆண் நடத்தி வைக்கும் முறையோ, புரோகிதன் ஓத, அக்கினியைச் சாட்சியாக வைத்து அதனை வலம் வருவதோ, அம்மி மிதித்து அருந்ததியைப் பார்க்கும் சம்பிரதாயமோ காணப்படவில்லை.

இதனை எஸ்.வையாபுரிப் பிள்ளையவர்கள், தமிழகத்தில் திருமணம் எனும் தாம் எழுதிய கட்டுரையில், "பாணிக்கிரகணம், ஓமம், தீவலம் வருதல், சப்தபதி முதலியன சங்க காலத்தில் நிகழ்ந்தன அல்ல. புரோகிதர்கள் மந்திரம் ஓதுதலும் மணவினையில் இல்லை என்றே கூறலாம். தாலி கட்டும் சடங்கும் காணப்படவில்லை"[14] என மணச்சடங்கினைக் குறித்து விளக்கி செல்கிறார்.

ஆனால் கலித்தொகையில், உவமையாக அமைந்த பகுதியின் வழியாக வேதம் ஓதிய அந்தணன் நடத்தி வைத்த திருமணத்தில்அக்கினியை வலம் வருவது போல என விளக்கம் அமையக் காணலாம்.

**"காதல் கொள் வதுவை நாள், கலிங்கத்துள் ஒடுங்கிய**
**மாதர் கொள் மான் நோக்கின் மடந்தை தன் துணையாக**
**ஓதுடை அந்தணன் எரி வலம் செய்வான் போல"** [15]

என்ற கூற்றிலிருந்து சடங்குகள் சமஸ்கிருத மையமாகும் சூழலை கொண்டிருந்ததை அறிய முடிகிறது. ஆக கற்றார் ஏத்தும் கலி எனும் சங்க இலக்கியப் பாடலான எட்டுத்தொகையிலும் இடைசெறுக்கலாக ஆரியத்தின் ஊடுருவலின் தாக்கம் அமையக் காணலாம்.

**பரிசம் கொடுத்தல்:**

சங்க காலத்தில் தலைவன் தான் விரும்பிய தலைவியை மணந்து கொள்வதற்காக பரிசம் கொடுக்கவும் நினைத்ததைச் சங்கப் பாக்கள் வழி அறிய முடிகிறது.

**"அசையினள் இருந்த ஆய்தொடிக் குறுமகள்**
**நலம்சால் விழுப்பொருள் கலம்நிறை கொடுப்பினும்**
**பெறல் அருங் குரையள் ஆயின்"** [16]

**கருவாய்த்தல்:**

மகளிர் தமக்குக் கருவுயிர்க்க வேண்டும். கருவுயிர்ப்புப் பயன் கிடைக்க வேண்டும் என்ற தம் தேவையை முன்னிட்டு தம் குல தெய்வத்தை வழிபடுவதை சங்க இலக்கியத்துள் காணலாம். வழிபடும் போது அத்தெய்வத்திற்கு விருப்பமானவற்றை படைப்பதாகவும் வழிபாட்டுச் சடங்கு செய்வதை பல்வேறு இடங்களில் பதிவுற காணலாம்.

கருவுயிர்ப்புச் சடங்கு

**"கரு வயிறு உறுக எனக் கடம்படுவோரும்**
**செய் பொருள் வாய்க்க எனச் செவி சார்த்துவோரும்**
**ஐ அமர் அடுக என அருச்சிப்போரும்..."** [17]

எம் வயிறு கருப்பம் எய்துக, எய்தின் இன்ன இன்ன பொருள்களை உனக்கு தருவோம் என்று வேண்டி நிற்பதை பரிபாடல் விளக்கி நிற்கிறது.

**"குன்றக் குறவன் கடவுட் பேணி**
**இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்"** [18]

குன்றக் குறவன் தான் இறைவனை இரந்து வழிபட்டுப் (தவம் செய்து) பெற்றவள். துன்பம் அறியாமல் வளர்க்கப்பட்ட மகள் என்று கூறுவதன் வழி குழந்தைப் பேற்றிற்காக தவம் புரிந்தமை பெறப்படுகிறது. இந்த தவத்தினைக் 'குறவன்' மேற்கொண்டதாக தெரிகிறது.

மேற்கூறப்பட்ட குறவரின் தவமும் தம் மனைவி கருவுயிர்ப்புப் பெற்று தம் கருவுயிர்ப்புப் பயனை எத்தகைய இடையூறும் இன்றி வாழ்ந்திட வேண்டும் என தம் சிறு தெய்வ வழிபாட்டு சடங்காக மேற்கொள்ளப்பட்டமையும் தம் அன்பு கெழுமிய மனைவிக்கு தானே தன்னை வருத்திக்கொள்ளும் மரபு முறைகள் பல பெருந்தெய்வ வழிபாட்டுச் செருகலில் மறைந்து போனது என்பதை ஈண்டு உணரலாம்.

**"ஒண்சுடர் விளக்கம் மடையொடு**
**நல்மா மயிலின் மென்மெல இயலி**
**கடுஞ்சூல் மகளிர் பேணி கைதொழுது**
**பெருந்தோட் சாலினி மடுப்ப"** [19]

முதல் சூல் கொண்ட மகளிர் ஒரு துன்பம் இல்லாது மகப்பேறு பெறுமாறு அருள வேண்டும் என்பதற்காக கடவுளை வழிபட்டுப் பலி செலுத்தியதாக மதுரைக்காஞ்சி கூறுகிறது.

சூலுற்ற மகளிர் கடவுளைத் தொழுது தந்த மடைப்பலியைச் சாலினி என்ற தேவராட்டி கடவுளுக்கு செலுத்தியதாகப் பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. கடவுளை வழிபட்டுப் பலி செலுத்தச் சென்ற சூல்கொண்ட பெண்கள், விளக்கு முன்னே வர அதன் பின்னே சென்றார்கள். மேலும் அவர்கள் சென்ற ஊர்வலத்தில் யாழ், முழவு, ஆகுளி முதலான கருவிகள் இசைத்தன. பூசைக்கு வேண்டும் பல பொருள்களுடன், நெய் விளக்கு முற்பட

பால்சோறு முதலிய உணவுகளுடன் தெய்வம் ஏறி ஆடும் மகளான தேவராட்டியுடன் தெய்வத்தைக் கைகுவித்துத் தொழுது வணங்கினாள்.

சூல் உற்றதற்கு தெய்வங்களுக்குப் பலிச்சோறு படைத்தது பழைய சடங்கும், புதிய சமய வழிபாடும் கலந்ததொரு வழக்கமாகத் தெரிகிறது (magica & religious rile) என்பார்[20] ராஜ்கௌதமன்.

சூலுற்ற பெண்ணுக்கு புளிச்சுவை வேட்கையும், மண்ணைத் தின்று ருசிக்கும் இயல்பும் இருந்துள்ளதை சங்கப்பாக்கள் தெரிவிக்கின்றன.

**"…. பசும்புளி வேட்கைக்**
**கடுஞ்சூல் மகளிர் போல….."** [21]

**"வயவுறு மகளிர் வேட்டுஉணின் அல்லது**
**பகைவர் உண்ணா அருமண் ணினையே"** [22]

மகப்பேறுற்ற மகளிரை அணங்கு வருத்தம் தராதபடிக்கு இல்லத்தை சுற்றி நெய்யுடன், வெண்சிறுகடுகு பூசினர் என்பதை பின்வரும் பாடல் மூலம் அறிய முடிகிறது.

**"கரும்புடைக் கடுஞ்சூல் நம் குடிக்கு உதவி**
**நெய்யொடு இமைக்கும் ஐவித் திரள் காழ்**
**விளங்கு நகர் விளங்கக் கிடந்தோட் குறுகி"** [23]

குழந்தை பெற்ற பெண்ணோடு 'புனிறு நாற்றம்' (நற். 380:1–4), (நற். 40 ) என்ற ஒரு நாற்றம் பற்றி கூறுகிறது சங்கப்பாக்கள். கழகத் தமிழகராதியில் ஈன்றணிமை என்றும், தீட்டு என்றும், பிஞ்சு, இளமை என்றும் பொருள்கள்[24] கூறப்படுகின்றன.

சங்க காலத்தில் பிரசவித்தல் எனும் உடல் கூற்றியல் வினை, தொற்றிப் படரும் 'புனிறு' அல்லது இழிவான தீட்டோடு சம்பந்தப்படுத்தப்பட்டது. பிரசவித்த பெண் படுப்பதற்கென்றே தனிக்கட்டில் செய்யப்பட்டது. (புறம் 82) தீட்டுக்காலம் முடியும்வரை அவள் அந்தக் கட்டிலில் படுத்திருந்தாள். தீட்டுப்பட்ட அந்தப் பெண் தனியாகக் காக்கப்பட்டாள். அவளது உடல்தீட்டு, சடங்கு ரீதியான தீட்டாகப் பரவிப் பிறரை, சமூகத்தைத் தொற்றி விடாதபடி அவள் பாதுகாக்கப்பட்டாள். பிரசவத் தீட்டுப் பரவாதபடி அவள் தனியாக வைத்துப் பாதுகாக்கப்பட்டது போல அந்த பிரசவம் தீட்டால் கவர்ந்திழுக்கப்படும் பேய் மற்றும் தீய சக்திகளை நெருங்கவிடாதபடி தடுத்துக் காக்கும் மாந்தீரிக ஆற்றல் படைத்த இயற்கைப் பொருட்களை அவள் இருக்கும் இடத்தில் தூவினார்கள்.

இரவங்கனி, வேப்பந்தழை, மைஇழுது (நெய்), ஐயவி (வெண்கடுகு), நறும்புகை ஆகியவை தீய சக்திகளை விரட்டும் பண்புகொண்டவையாகச் சங்க காலத்தில் (நற். 370, நற். 40) நம்பினார்கள் என்ற செய்தி பெறமுடிகிறது.

குழந்தைப் பெற்று குறிப்பிட்ட காலம் வரை தனியே பாதுகாக்கப்பட்ட பெண்ணின் புலவுப் புனிறு தீர்ந்தபிறகு, சுற்றத்தாரோடு புறப்பட்டுக் குளத்தில் நீராடுவர். இச்செய்தியினை,

**"கணவர் உவப்ப புதல்வர்ப் பயந்து**
**பணைத்து ஏந்து இளமுதலை அமுதம் ஊற**
**புலவுப்புனிறு தீர்ந்து**
**பொலிந்த சுற்றமொடு வளமனை மகளிர் குளநீர் அயர"** [25]

மதுரைக்காஞ்சி வழி அறியமுடிகிறது.

பெண்ணின் பிரசவம் 'கரும்புடை நம்குடிக்குக் கடுஞ்சூல் உதவிய' (நற். 370) செயலாகப் போற்றப்பட்டாலும், அவை தீட்டுக்குரியவையாக கருதி, நீராடும் சடங்கினை மேற்கொண்ட செய்தியும் புலப்படுகிறது.

**கைம்மை:**

கணவனை இழந்த பெண்கள் கைம்மை நோன்பு ஏற்று வாழவேண்டும் என்று சமூகம் விதித்த வழக்கத்தை சங்க இலக்கியம் வழி காணலாம். இப் பெண்களை, உயவல்பெண்டிர் (புறம் 246–10), ஆள்இல் பெண்டிர் (நற். 353), தொடிகழி மகளிர் (புறம். 238:6), கழிகல மகடூஉ (புறம். 261:18) என்று அழைக்கிறது சங்க இலக்கியம்.

இறந்துபட்ட வீரனின் மனைவியர், தன்தலைமுடியை மழித்து, அணிகலன்களை களைத்து (புறம். 261:15–18), அதிகாலை வேளையிலேயே எழுந்து பனிநீராடி, கீரை உணவு உண்டு நோன்பு நோற்று (புறம் 62:13–15), மற்றவர்களைப் போலன்றி, நாள்தோறும் பொழுது மறுத்து, அல்லியில் விளைந்த புல்லரிசியை உணவாகக் கொண்டு (புறம் 248), உணவில் நெய் இல்லாமல், வெள்ளை எள் துவையல், புளி பெய்து சமைத்த வேளைக் கீரை உணவு, அல்லி அரிசியைக் கொண்டு பசி போக்கி, படுக்கப் பாய் இல்லாமல், பரல் கற்களைப் பரப்பி அதில் படுத்தல் (புறம் 246) என கைம்பெண்ணுக்கு வரையறுக்கப்பட்டவை எல்லாம் சடங்குகளைப் போல, கணவனை இழந்த பெண் பின்பற்ற வேண்டியவையாக வழக்கத்தில் இருந்தமையைச் சங்கப் பாக்கள் புலப்படுத்தி நிற்கின்றன.

உடன்கட்டை ஏறும் வழக்கம் இருந்துள்ளதை புறப்பாடல்கள் வழி அறியலாம். வைதீக தாக்கத்தினால் (நெருப்பிலிட்டு எரிக்கும் ஈமச் சடங்கு) ஏற்பட்ட இச்சடங்கு, சமயம் ஓங்கிய சமூகப் பண்பாட்டில் ஏற்பட்டது என்றும் இதைத் தவிர்க்க கைம்மை நோன்பு குறித்த சங்கப்பாடல் கருத்துக்கள் சமயங்கள் ஓங்கிய காலத்திற்கு முற்பட்டவை என்பார் (ப. 96) ராஜ்கௌதமன்.

இவை சமூகத்தில் பெண்கள்மீது ஏற்றப்பட்ட வாழ்க்கை வட்டச் சடங்குகளாக சங்க கால சமூகம் வரையறுக்கப்பட்டுள்ளமையை அறியலாம். இவ்வாறு வாழ்க்கை வட்டச் சடங்குகள் சங்க இலக்கியத்துள் இடம்பெற்றமைதலைக் காணலாம்.

**குறி கூறுதல்: (கட்டுவிச்சி)**

கட்டுவிச்சியை 'அகவன் மகள்' என்று கூறுவர். இவள் தெய்வங்களை அழைத்துக் குறி கூறும் இயல்பை உடையவள். வெள்ளிய நுனியை உடைய சிறுகோல் ஒன்றை, அதாவது வெள்ளிப்பூண் கட்டிய சிறிய கணுக்களோடு கூடிய மூங்கிற் கோலைக் கையிலே பிடித்திருப்பர். இவர்கள் முறத்தில் நெல்லை இட்டு அதனை எண்ணி, அதனால் போந்த சில நிமித்தங்களை அறிந்து கூறுவாள். தெய்வம் ஏறிக் குறி கூறுதலும் உண்டு. இதனை,

**"அகவன் மகளே! அகவன் மகளே**
**மனவுக் கோப்பு அன்ன நல்நெடுங் கூந்தல்**
**அகவன் மகளே! பாடுக பாட்டே"** [26]

**"வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்"** [27]

**"இறுங்கழை இறும்பின் ஆய்ந்துகொண்டு அறுத்த**
**நுணங்கு கண் சிறுகோல் வணங்கு இறை மகளிரொடு"** [28]

**"நுண்கோல் அகவுநர்"** [29]

என வரும் பாடலடிகளால் அறியலாம்.

தலைவனை நினைத்து வருந்தும் தலைவியின் மேனி வேறுபாடு கண்டு தாய் குறி கேட்கின்றாள். அதற்கு முருகனாள் வந்தது என்று குறி கூறப்படும். ஏனெனில், முருகன் கன்னி மகளிரைத் தீண்டி வருத்துபவன் என்றும் (குறிஞ்சி 174–175, நற். 288:10, அகம் 98:9–10) அந்த துன்பம் தீர அப்பெருமானுக்கு வெறியாட்டு எடுத்து வழிபாடுச் செய்யவேண்டும் என்றும் சங்ககால மக்கள் கருதினர்.

இதனை,

**"குன்ற நாடன் பிரிவின் சென்று**
**நல்லுதல் பரந்த பசலைகண்டு, அன்னை**
**செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇ**
**கட்டின் கேட்கும் ஆயின்"** [30]

நல்ல நுதலில் பசலை பரந்ததைக்கண்டு, அன்னை செம்மையான முதிய பெண்டாகிய கட்டுவிச்சியை அழைத்து, முறத்தில் நெல்லையிட்டு முறத்தின் முன் தலைவியை நிறுத்திக் 'கட்டுக்குறி' கேட்கின்றனல். அதற்கு கட்டுவிச்சி,

**"ஏனற் செந் தினைப் பால் ஆர் கொழுங்குரற்**
**சிறு கிளி கடிகம் சென்றும், 'இந்**
**நெடு வேள் அணங்கிற்று' என்னும் கொல்"** [31]

இத்தன்மை நெடுவேள் அணங்கியது என்று குறி கூறுகின்றாள். இதனை,

**"......**
**சூர் உறை வெற்பன் மார்பு உறத் தணிதல்**
**அறிந்தனள் அல்லள், அன்னை வார்கோல்**
**செறிந்து இலங்கு எல் வளை நெகிழ்ந்தமை நோக்கி**
**கையறு நெஞ்சினள் வினவலின், முதுவாய்ப்**
**பொய் வல் பெண்டிர் பிரப்பு உளர்பு இரீஇ**
**முருகன் ஆற் அணங்கு என்றலின்"** [32]

என வரும் அகநானூற்றுப் பாடல் மூலமும் அறிய முடிகிறது. பிரம்பு அரிசியைப் பரப்பி வைத்து இது முருகனின் செயலால் நிகழ்ந்தது என்று கூறுவர்.

தலைவியின் மேனியின் வேறுபாட்டினை அறிந்த அன்னை முதிய பெண்டாகிய கட்டுவிச்சியை அழைத்து, குறி கேட்டு, அத்தன்மை முருகனால் ஏற்பட்டுள்ளது என்பதை கட்டுவிச்சி கூறிய பிறகு முருகனுக்கு வேலன் வெறியாட்டு எடுப்பர்.

**கழங்குக் குறி:**

வேலன் கூறும் கழங்குக் குறியாகும். கழற்சி வித்துப் பலவற்றை முருகன் முன் போட்டு, தன் கையில் பிடித்திருக்கும் சிறுபைகள் கட்டிய கோலால் வாரி எடுக்கின்ற காலத்து, குறிப்புக் கண்டு கூறும் ஒருவகைக் குறி.

**“அணங்கு அறி கழங்கின் கோட்டம் காட்டி**
**வெறி என உணர்ந்த உள்ளமொடு, மறி அறித்து**
**அன்னை அயரும் முருகு நின்**
**பொன் நேர் பசலைக்கு உதவாமாறே?”** [33]

தெய்வத்தை முன்னிட்டு அறியப்படுவது கழங்குக் குறி. இது,

“வேலன் தன் தலையிலே ஓர் ஆடையைச் சுற்றி ஒருபுறம் தொங்கும்படி செய்து கொள்வான். ஒரு கோலைக் கையிலே வைத்துக் கொள்வான். கோலின் மேற்பகுதியில் பல தலைகள் இருக்கும். அவற்றின் ஒவ்வொன்றிலும் சிறு பையைக் கட்டித் தொங்க விட்டிருப்பான். கோல் வளைந்திருக்கும். முருகன் முன்னிலையில் கழற்சிக் காய்கள் பலவற்றைச் சிதறப் போட்டிருப்பான். அக்காய்களை வேலிலுள்ள சிறு பைகளால் வாரி எடுப்பான். அப்போது குறிப்பாகச் சிலதோன்றும், அதுவே கழங்குக் குறியாகும்.” என பாடல் குறித்துச் செல்லக் காணலாம்.

**வெறியாட்டு:**

தலைவி தலைவனை நினைத்து வருந்தும் பொழுது தலைவியின் உடம்பு மெலிந்து போவதை அறிந்து பெற்றோர் தம் மகளுக்காக செய்யும் சடங்குகளுள் ஒன்று வெறியாட்டு.

தொல்காப்பியர் இத்தகைய வழக்கத்தைக் “களம்பெறக் காட்டினும்” என்றும்

**“கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்**
**ஒட்டிய திறத்தால் செய்திக் கண்ணும்”** [34]

என்றும் குறிப்பிடுகிறார்.

அணங்குடை முருகன் (புறம் **299:6**), நெடுவேள் அணங்குறு மகளிர் (குறிஞ்சி **174–175**), முருகு ஆற்றுப்படுத்தல் (அகம் **22:11**), முருகு அயர்தல் (குறுந் **362:1**) வெறி (ஐங் **243**:2) (நற் 273:4-5, 98:27) (பரி 5:15) வெறி யயர்தல் (அகம் **182:17–18**) வெறியாட்டு (தொல் **63, 109**) என்று வெறியாட்டு குறித்த பதிவினைக் காணமுடிகிறது. ஐங்குறுநூற்றில் ‘வெறிபத்து’ என்ற பத்து இப்பொருள் பற்றி அமைந்துள்ளது.

தெய்வம் ஏறி ஆடும் ஆட்டத்திற்குப் பெயர் வெறியாட்டு. வெறியாட்டில் முருகனுக்குப் பூசை செய்வோன் ‘வேலன்’ எனப்படுவான். முருகனின் வேலைத் தாங்கி, வேடம் பூண்டு நிற்றலால் வெறியாட்டாளனும் ‘வேலன்’ எனும் பெயர் பெறுகின்றான்.

வேலன் வெறியாடும் திறத்தையும், கட்டுவிச்சி குறி கேட்ட தாய் செயலையும் அகம் (98) விரித்துரைக்கக் காணலாம்.

**வழிபாட்டில் பெண் – குறமகள்**

வேலன் ஆடுவதே அன்றிக் குறமகளும் ஆடுதல் வழக்கம் உண்டு என்று நச்சினார்க்கினியர் உரைக்கின்றார். (சங்க இலக்கியம் ப.182) ஆண்மகன் மட்டுமின்றி குறமகளிரும் வெறியாட்டு எடுத்து முருகனை வழிபட்ட நிலையினை முருகாற்றுப்படை (227–245) வழி அறியமுடிகிறது.

'வெறியாடும்' களம்கோழிக்கொடியை முறைப்படி ஏற்றி நெய்யையும், வெண்சிறுகடுகையும் அந்த இடத்திலே அப்பி வைக்கின்றனர். வழிபடுதற்குரிய மந்திரத்தை மென்மையாக உச்சரித்து அழகிய மலர்களைத் தூவுகின்றனர். மாறுபட்ட நிறமுடைய இரு ஆடைகளை உள்ளொன்றும் புறம் ஒன்றுமாக உடுத்துக் கொள்கின்றனர். சிவந்த நூலால் கையிலே காப்புக் கட்டிக் கொள்கின்றனர். மிகு வலிமைபெற்ற பெருமையுடைய, காலினை உடைய கொழுத்த ஆட்டுக்கிடாயினது உதிரத்தோடே தூய வெள்ளரிசியையும் கலந்து சிறு பலியாகக் இடுகின்றனர். பல் வகையான சோற்றுப் படையல்களையும் கூடைகளில் பரப்பி வைக்கின்றனர். சிறிய பச்சை மஞ்சள் கலவையுடனே மணமுள்ள சந்தனம் முதலியனவற்றையும் தெளிக்கின்றனர். குளிர்ச்சியான பெரிய செவ்வலரி மலர் மாலையினையும் மற்றுமுள்ள மணமுல்லமலர் மாலைகளையும் அறுத்துத் தொங்கலாகக் கட்டி வைக்கின்றனர். மலைப்பக்கத்து ஊர்கள் எல்லாம் பசியும் பிணியும் பகையும் நீங்கி மழையும் வளனும் பெருகுமாறு வாழ்த்துகின்றனர். அருவி ஒரு பால் முழக்கமிட்டுப் பாய்வதும் ஒரு வகையான இசையை எழுப்பிக் கொண்டிருக்கிறது. அதற்கு இணையாகப் பலவேறு வகையான வாத்தியங்கள் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. கெடாத வலிமையுடைய முருகன் யானையும் வாழ்த்தி, மயிலையும் வாழ்த்தி, குறமகளிர் வெறியாடலைச் செய்திருக்கின்ற பதிவினை அறியமுடிகிறது.

தலைவியின் மேனி வேறுபாடு கண்ட தாய் அவ்வேறுபாடு அணங்கால் நேர்ந்தது என நினைத்து பூசாரியான வேலனை அழைத்து முருகனை வழிபட்டுத் தலைவியின் வேறுபாட்டுக்கான காரணம் அறிய நடத்தும் ஒரு வழிபாடாக வெறியாட்டு அமைந்திருப்பதை சங்க இலக்கிய தரவுகளின் வழி ஆய்ந்துணர முடிகிறது. வேலன் எனும் பூசாரியே இதை நிகழ்த்துவான். இவ்வழி பாட்டில் இடம்பெறும் ஒரே ஆண் வேலன்தான். ஆண் வழிச் சமூகமாக மாறிய சங்க காலத்தில் பெண்கள் ஆண்களின் கட்டுப்பாட்டிற்குள் முடங்கிப்போன நிலையின் வெளிப்பாடாக வெறியாட்டு அமைகிறது.

இவ்வழிபாடு பெண்களாலும் நிகழ்த்தப்பட்டது என்பதற்குச் சங்க இலக்கியத்தில் சான்றுகள் உள்ளன.

**"முருகு மெய்ப்பட்ட புலைத்தி போலத்**
**தாவுபு தெறிக்கும் ஆன்மேன்"** [35]

தெய்வமானது உடலில் ஏறிய புலைமகளைப் போல் தாவித் துள்ளித் திரியும் பசுக்கூட்டத்தினைக் கவரச் செல்லாதே என்ற பதிவின் வழி அறியலாம்.

பழந்தமிழரிடையே இருந்த 'வெறியாட்டு' எனும் பழக்கத்தைக் காமக்கண்ணியார் எனும் பெண்பாற் புலவர் சிறப்பாக பாடினமையால் வெறிபாடிய காமக்கண்ணியார் என அழைக்கப்பெற்றார். (தாயம்மாள் அறவாணன், மகடூஉ முன்னிலை (பெண் புலவர் களஞ்சியம், ப. **262)** இவர்கள் பாடிய பாடல் (அகம் **22**, **98**, நற். **268)** வெறியாடலை பற்றியதாகவே அமைந்துள்ளது. இப்பாடல்கள் வெறியாடலை பின்வருமாறு கூறுகிறது.

"தலைவன் விரைவில் திருமணம் செய்து கொள்வதாகக் களவில் பிரிந்து சென்றவன் வாராது இருந்தனன். அவனைத் தழுவி மகிழ்ந்த தலைவி தற்போது அவனால் தழுவப் பெறாமையால் வருந்தி வாட்டம் உற்றாள். மகளின் வாட்டத்தைப் பார்த்துத் தாய் கலங்கினாள். முருகனை வணங்கி வழிபட்டு வேண்டிக் கொண்டால் மகள் துன்பம் தீரும் என்று முதுபெண்டிர் கூறினர். அதற்கு ஏற்ப வெறி ஆடுகளம் அமைக்கப்பெற்றது. களத்தில் வேலினை நிறுத்தினர். கண்ணியும் சூடினர். வேலனின் புகழையும் பாடினர். பலிக்கொடையும் வழங்கினர். குருதியைச் செந்தினையில் கலந்து தூவினர்" என அகம் **22** ஆம் பாடல்வழி வெறியாடல் செய்தியினை அறியலாம்.

காதல் நோயால் வாடிய தலைவியின் மேனியைப் பார்த்த தாய் பொய் பேசுவதில் வல்லவரான கட்டுவிச்சியிடம் கலந்து பேசினாள். அவர்கள் முருகன் ஆரணங்கு என்றனர். எனவே, வேலன் வெறியாடலுக்கு ஏற்பாடு செய்தனர். என் மகள் முன்பு போல அழகை எய்துவாளாக என்று வேண்டிக் கொண்டனர். வேலன் ஆடுதலுக்கான வெறியாடு களம் அமைக்கப்பெற்றது. அதற்கான பந்தல் இடப்பெற்றது. பல்வேறு இசைக்கருவிகளுடன் இசைக் கலைஞர்கள் அழைக்கப் பெற்றனர். வேலன் வெறியாட்டு முடிந்த பின்பும் நலம் பெறாத என்னைப் பார்த்து ஊர் மக்கள் என்ன பேசிக்கொள்வரோ ? என் களவு மணம் வெளிப்பட்டு விடுமோ ? என்று கலங்குகிறாள். இதனால் "யான் உயிர்வாழ்தல் அதனினும் அறிதே" என வருந்துவதாக பாடுகிறார் (அகம் **98)** ஆசிரியர்.

இவ்வெறியாட்டுத் துறைப்பாடல்கள் அன்னையின் அறியாமை, வேலனின் அறியாமை, தோழியர் எதிர்ப்பு, தலைவியின் கற்பு மனநிலை ஆகியவற்றை உணர்த்துகின்றன. இச்சடங்கு அறத்தொடு நிற்கவும், வரைவு கடாவவும், பயன்படுகிறது. உண்மை உணரப்படா நிலையில் சமுதாயத்தில் இடம்பெற்ற நம்பிக்கை அடிப்படையிலான சடங்கிற்கும், கற்பொழுக்கத் தொடக்கத்திற்கும் இடையே ஒரு போராட்டம் நடைபெறுவதை வெறியாட்டு காட்டுகிறது.

**யானை வழிபாடு:**

திருப்பரங்குன்றத்தில் முருகனின் ஊர்தியாகிய யானையைக் கன்னிமை மகளிரும் திருமணம் பெற்ற மகளிரும் வழிப்பட்டமையை (பரி.**19:85–94**) அறியலாம்.

**அம்பா ஆடல்: (தைந்நீராடல்)**

அம்பா என்றால் தாய் என்று பொருள்படும். தாயுடனே மகளிர் ஆடுவதால் அம்பா ஆடல் எனப்படும். இதனை தைந்நீராடல் என்றும் குறிப்பிடுவர். கன்னி மகளிர் இளமையில் நோற்கும் நோன்புகளிலே ஒன்று இவ்வாடல் ஆகும்.

கன்னி மகளிர் தம் ஆயத்தாருடன் நீராடி மகிழ்வதாக சங்கப் பாக்கள் (நற். **80:6–8**) (ஐங். **84:3–6**) கூறுகின்றன. தம் வேண்டுதல் நிறைவேறும் பொருட்டுப் பெண்கள் தை மாதம் தண்ணிய குளத்தில் நீராடு செய்வதாக (நற். **80:6–8**) கூறுகின்றது குறுந்தொகை.

பெண்கள் நதியில் நீராடி அதற்கு வழிபாடு செய்வதற்கு,

**“புகை, பூ, ஆவி, ஆராதனை, அழல்**
**நகை அமர் காதலரை நாளணிக் கூட்டும்**
**வகை சாலும் வையை வரவு”** [36]

பல்வேறு பொருட்களைக் கொண்டு சென்றுள்ளனர். மேலும் தைந்நீராடல் நோன்பில் நதிக்குப் படைக்கும் படையல் குறித்தும் பரிபாடல் விளக்கி நிற்கிறது.

**“வையை நினக்கு மடை வாய்த்தன்று”** [37]

மகளிர் தம் ஆயத்தாருடன் தைந்நீராடும் பாவை நோன்பில் வண்டல் விளையாட்டுக்கு உரிய பாவை நீர்த்துறையிடத்து வைத்து, வயிர் (கொம்பு) எனும் துளைக்கருவி இசை ஒலிக்க, பெண்கள் குரவைக் கூத்தாடுவதாக அகநானூறு (**269:14–20**) கூறுகிறது.

போரில் விழுப்புண்பட்டு வந்த வீரர்களின் புண்களைப் பேய்கள் தீண்டித் துன்புறுத்தாமல் அவர்களைக் காப்பதற்கு அவர்தம் மனைவியர் பின்வரும் சில சடங்குகளைச் செய்வதாக புறநானூறு **(281)** கூறுகிறது. இரவமரத் தழையுடன் வேப்பிலையும் சேர்த்து இல்லத்தில் செருகி வைப்பர். வளைந்த கொம்பை உடைய யாழும் பலவகையாகப் பிற வாத்தியங்களும் ஒலிக்க, கையை மெல்ல எடுத்து மையான மெழுகைவிட்டு வெண்சிறு கடுகைத்தூவி, ஆம்பல் குழலை ஊதி, ஒலிக்கும் மணியை அடித்து, காஞ்சிப் பண்ணைப் பாடினள். அகில் புகை உண்டாக்குதல் என புண்பட்ட தம் தலைவனைப் பேயிடமிருந்து காப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட சடங்கினைக் கூறுகிறது.

**கார்த்திகை விழா:**

வீடுகளிலும், வீதிகளிலும் விளக்கேற்றி மாலைகளைக் கட்டி விளக்கேற்று விழாவைக் கொண்டாடினர். மழை நீங்கிய பருவத்தில் சந்திரன் அறுமீனாகிய கார்த்திகையோடு சேரும் நாளில் இவ்விழா நடைபெற்றது.

இவ்விழா ஊரிலுள்ள பலரும் சேர்ந்து கொண்டாடுவதாகவும், இவ்விழாவிற்குப் பிரிந்த தலைவர் வரவேண்டும் என்றும் தலைவி கூறுவதினால் இவ்விழாவில் ஆடவர்களும் உடன் இருந்து கொண்டாடுதல் வழக்கமாக இருந்துள்ளதை (அகம். **141:5**) அறியமுடிகிறது.

**விரிச்சி கேட்டல்:**

**“புள்ளும் ஓராம்; விரிச்சியும் நில்லாம்”** [38]

எனும் பாடல்வரி மூலம் புள் நிமித்தத்தைப் போல விரிச்சி கேட்டலும் சங்க கால மக்களிடையே இருந்து வந்த வழக்கமாகும்.

விரிச்சி என்பது நற்சொல்லைக் குறிக்கும், விரிச்சி கேட்போர், வீட்டிலுள்ள பெருமுது பெண்டிராய் இருப்பர். மாலைக் காலத்தில் ஊரின் ஒருபால் சென்று விரிச்சி கேட்டலும், காவல் பொருந்திய தன் மனையிலே உள்ள மணலைப் பரப்பிய பந்தரில் சென்று விரிச்சி கேட்பர். மணி ஒலிக்க நாழியில் கொண்ட நெல்லுடனே சென்று, அந்நெல்லையும், முல்லைப் பூவையும் நீருடன் சொரிந்து விரிச்சியை நோக்கி நிற்பர். அப்பொழுது அவர்கள் காதில் விழுகின்ற சொற்களைக் கொண்டு நலம், தீங்குகளை உணர்ந்து கொள்ளுதல் மரபாக[39] இருந்தது.

இதனைப் பின்வரும் பாடல்கள் வழி அறிய முடிகிறது.

**“பெருமுது பெண்டிர், விரிச்சி நிற்ப”** [40]

**“திருந்து இழை மகளிர் விரிச்சி நிற்ப”** [41]

**“செம்முது பெண்டின் சொல்லும் நிரம்பா”** [42]

கணவனின் உடற்புண்கள் பெரியவையாக உள்ளன. இயல்பாக நண்பகலில் ஒலிக்காத வண்டுகள் ஒலிக்கின்றன. விளக்கு எரியாமல் அவிகின்றது. கூகை கூவுகின்றது. இத்தீய நிமித்தம் மாறுமோ என்று சகுனம் பார்க்கும் குறி கூறும் பெண்டிர், சொற்களை எதிர்பார்க்கின்றனர். அதுவும் பொய்யாகின்றன என மனைவி கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

சங்ககால மக்கள் நாள் பார்த்தும், புள்நோக்கியும் (புறம் **204:10–11, 124:1–3**, மலைபடு **448**, அகம் **20:1–4**) வாழ்ந்திருந்தமைக்கான சான்றுகளைக் காண முடிகிறது. நல்நிமித்தம் (நற் **246:1–7**, ஐங் **218:1–3**, குறுந் **260:1–4**, கலி **101:34–35**) தீநிமித்தம் (புறம் **41**) பார்த்து மக்கள் வாழ்ந்திருந்தனர் என வழிபாட்டுச் சடங்குகளின் பதிவுகளைச் சங்க இலக்கியத்துள் காணலாம்.

**தொன்மம்:**

தொன்மம் என்பது பழமை எனப் பொருள்படும். தொல் பழங்கதை என்றும் கூறலாம். தொல்குடியினரின் வாய்மொழிக் கதைகள் தங்களின் முன்னோர் வழி மரபுக் கதைகளாக அமைந்திருப்பதையும் அறிவோம். முன்னோரின் பழம் மரபுக் கதைகளையே தொன்மக் கதை என்கிறோம். தாம் கண்ட கேட்ட அனுபவ அறிவின் கவிதையியல் என்றும் கூறலாம். வேட்டைச் சமூகம் தொடங்கி பழைய கற்காலம், புதிய கற்காலம், செம்பு காலம், இரும்பு காலம், விவசாயம், தொழில் என விரியும் சமூக வரலாற்றுப் படைப்பில் பரிணாம வளர்ச்சியில் அறிந்துணர்ந்த செய்திகளை விளக்கும் கதைகள் தொன்றுதொட்டு மாறாமல் அல்லது மையப்பொருள் மாறாமல், வடிவங்களில் மாற்றமோ, கதையாடலில் மாற்றமோ பொதிந்து அமைவதே தொன்மங்களின் இயல்பு. தொன்மம் என்பது பழமையைப் பாதுகாப்பது என்ற நோக்கில் மக்களிடம் பல வடிவங்களில் அமையலாம். அத்தகைய வடிவங்களாக சங்க இலக்கியப் பாடல்களாகவும், தொல்மரபுக் கதைகளைக் கூறிச் செல்வதைக் காணலாம். காலச் சூழல் மாற்றத்தில் மதங்களின் பல சமயங்களின் வருகையில் சொல்லப்பட்ட கதைகள் அவ்வக்காலத்து வாய்மொழி மரபுக் கதைகளோடு மாற்றுருப் பெற்றும் அமைந்துவிடும் தன்மையும் உண்டு. அம்முறையானது சமக் காலத்தில் புராணச் செய்தியாக பேசப்பட்டு வருகிறது. அத்தகைய புரண இதிகாசப் பதிவுகள் சங்க இலக்கியத்தில் பெறும் இடத்தினை விளக்கிச் செல்கிறது. சங்க இலக்கியத்தில் பெண் அறம் குறித்த இவ்வாய்வேடானது தொன்மச் சடங்கு மற்றும் தொன்மக் கூறுகளில் பெண்கள் இடம்பெற்றுள்ள பதிவுகளை இவ்வியலுல் முன்வைக்கிறது.

**பாட்டியல் தரும் விளக்கம்:**

இலக்கியத்திற்கு இலக்கணத்தை வரையறுக்கும் வெண்பாப் பாட்டியல் காப்பியத்திற்கு இலக்கணம் கூறும்போது புராணத்திற்கும் இலக்கணம் கூறுகிறது.

> **"கருதுசில குன்றினுமக் காப்பியமா மென்பர்**
> **பெரிதறமே யாதி பிழைத்து – வருவது தான்**
> **காப்பிய மாகுங் குலவரவு காரிகை**
> **யாப்பிற் புராணமே யாம்"**

என்ற வெண்பாவால் அறியலாம். சிதம்பரப் பாட்டியல் காப்பியம், புராணம் என்ற இரண்டையும் ஒன்றெனக் கூறுகிறது.

> **"அறையுமிதிற் சிலகுறைபா டெனினும் குன்றா**
> **தறம்பொருளின் பம்வீட்டிற் குறைபா டாகப்**
> **பெறுவது காப்பியமாகும் புராண மாடும்"**

என்ற விளக்கங்கள் வழி புராணம் (Genre) 'இலக்கிய வகைமை' என்பது தெளிவாகிறது.

**கலைக்களஞ்சியம் தரும் விளக்கம்:**

தொன்று தொட்டு இன்று வரைக்கும் பரவியிருப்பதே புராணம் என்று கலைக்களஞ்சியம்[43] கூறுகிறது.

தொகையகராதி புராணத்திற்கு இரண்டு விதமான இலக்கணத்தைக் கூறுகிறது. (i) புராணலக்கணம் – (ரு) உலகத் தோற்றம், ஒடுக்கம், முனிவர், அரசர் மரபு, அவர் சரிதம், மநுவந்தரம், (ii) புராணலக்கணம் – (ய) சர்க்கம், விசர்க்கம், விருத்தி, இரட்சை, மனுவந்தரம், வமிசம், வமிசானுசரிதம், சங்கிதை, ஏது, ஆசிரியம்.

முதலில் கூறிய புராணம் (Myth) என்பதின் இலக்கணமாகவும், இரண்டாவதாகக் கூறியுள்ளதைப் புராணம் (Genre) என்பதின் இலக்கணமாகவும் கருதலாம் என்று சு.அ.இராமசாமிப் புலவர் (தொகையகராதி) அவர்கள் கூறியுள்ளார்.

**அகராதித் தரும் விளக்கம்:**

தொன்மம் என்பது "ஒரு வகையான கதை அல்லது நிரனிரைவில் அமைந்த ஒரு கதையாடல்; தனியொருவரால் ஆக்கப்படாமல் மரபுவழிப்பட்டு

வருவது; மனிதன் மற்றும் இன்னபிற இயற்கைக் கூறுகளின் தோற்றம் பற்றி விவரிப்பது. பொதுவாக மிகைப்படுத்தப்பட்டதாகவும், அதீதக் கற்பனை உடையதாகவும் இருக்கக் கூடியது. இதன் மூலம் ஒரு குறிப்பிட்ட பண்பாடு அதன் சமூக ஒழுகலாறுகளை நிலைப்படுத்திக் கொள்கிறது''[44]என்று வரையறுக்கிறது அகராதி.

Dictionary of Modern Critical Terms என்ற அகராதி "தொன்மங்கள் எப்படித் தோன்றியிருக்கும் என்று அறிய முடியாத கதைகள்; யாராலும் தோற்றுவிக்கப்படாதவை; சமய நம்பிக்கைகளை விளக்குவதற்குத் துணைபுரியக் கூடியவை; பெரிதும் கடவுளைப் பற்றிய, வீரநாயகர்களைப் பற்றிய செய்திகளை உள்ளடக்கமாகக் கொண்டு வருபவை; அவை நம்ப முடியாதவையாகவும், மீவியல்புத் தன்மை உடையவையாகவும் இருக்கும்'' என்று கூறுகிறது.

மேற்கூறிய விளக்கங்கள் வழி தொன்மம் என்பது "மிகத் தொன்மையானது. உரை கதையாடல் வடிவில் வழிவழியாகச் சொல்லப் படுவது. சமயத்தோடும், சடங்கோடும், கரணங்களோடும் தொடர்புடையது. உலகின் தோற்றம் பற்றியும், உயிர்களின் தோற்றம் பற்றியும், கூறுவது. கடவுளர், தேவதைகள், தெய்வத்தன்மை வாய்ந்தோர், பண்பாட்டு நாயகர்கள் ஆகியோரைக் கதை மாந்தர்களாகக் கொண்டு புனைவாக வருவது'' என்பதை விளங்கிக் கொள்ள முடிகிறது.

தொன்மங்கள் சமயக்கோட்பாட்டில் நியமங்களாகவும் போற்றப் படுகின்றது. அவை பெரிதும் இறையியல், சடங்கு இவற்றோடு தொடர்புடையவை. இவற்றுள் இன்றியமையாப் பாத்திரங்களாக மனிதர்கள் வருவதில்லை. ஆனால், மனிதப் பண்புகளைப் பெற்றள்ள விலங்குகள், தெய்வங்கள், பண்பாட்டு நாயகர்கள் (இராமன், கண்ணன் போன்ற பாத்திரங்கள்) போன்றவர்களே பெரிதும் பாத்திரங்களாக வருகின்றனர்.

இவர்களின் செயல்கள் உலகம் இன்றுள்ளது போல் இல்லாதிருந்த தொடக்கக் காலத்தில் நடந்தது போல் கூறப்படும். அல்லது வேற்று உலகங்களான மேலுலகத்திலோ கீழ் உலகத்திலோ நடந்ததாகக் கூறப்படும். தொன்மங்கள் உலகத்தின் தோற்றம், மனிதனின் தோற்றம், குறிப்பிட்ட விலங்குள் சில குறிப்பிட்ட பண்புகளைப் பெற்றிருப்பதற்கான காரணம், இயற்கை நிகழ்வுகளுக்கான காரணம் இவற்றையெல்லாம் விளக்குவனவாக அமைகின்றன. மேலும் தெய்வங்களின் காதல் லீலைகள், வீரதீரச் செயல்கள் அவர்களின் வெற்றி தோல்விகள், உறவு முறைகள் போன்றவற்றையும் அவை விவரிக்கின்றன. சில நேரங்களில் சடங்குகள், விலங்குகள் (Taboos) இவற்றைப் பற்றியும் தொன்மங்கள் கூறுகின்றன.

**தொல்காப்பியம் தரும் விளக்கம்:**

தொல்காப்பியர் வனப்புப் பற்றிக் கூறுமிடத்தில்,

**"தொன்மைதானே**
**உரையொடு புணர்ந்த பழமை மேற்றே"** [45]

என்ற நூற்பாவில் 'தொன்மை' என்ற சொல்லைக் குறிப்பிடுகிறார். இந்நூற்பாவிற்கு உரை எழுதும் இளம்பூரணர் "தொன்மையாவது உரையொடு பொருந்திப் போந்த பழமைத்தாகிய பொருண்மேல் வருவன. அவை இராமசரிதம், பாண்டவ சரிதம் முதலாகியவற்றின் மேல்வருஞ் செய்யுள்" என்று கூறுகிறார்.

நச்சினார்க்கினியர் "தொன்மையாவது உரைவிரா அய்ப் பழமையாகிய கதை பொருளாகச் செய்யப்படுவன. அவை பெருந்தேவனார் செய்த பாரதமும், தகடூர் யாத்திரையும் போல்வன. சிலப்பதிகாரமும் அதன் பாற்படும்" என்று உரை எழுதுகிறார்.

என வரும் விளக்கங்கள் வழி தொன்மச் செய்திகளைப் பாடுபொருளாகக் (Content) கொண்டு வரும் உரை கலந்த செய்யுள் வகையே 'தொன்மை'[46] என்பது புலனாகிறது.

தொன்மம் என்ற சொல் புராணம் என்ற சொல்லுக்கு இணையாகப் பயன்படுத்தப்படுகிறது. இவற்றில் புராணம் என்பது வடசொல்லாக இருப்பதாலும், வெவ்வேறு சூழலில் வெவ்வேறு பொருளைத் தருவதாலும் Myth என்ற ஆங்கில சொல்லுக்கு இணையாக 'தொன்மம்'[47] என்ற சொல் வழங்கப்படுகிறது.

Myth என்ற ஆங்கிலச் சொல் Mythos என்ற கிரேக்கச் சொல்லில் இருந்து வரவழைக்கப்பட்டதாகும். அரிஸ்டாட்டில் முதன் முதலில் தம்முடைய கவிதையியல் (Poetics) என்ற நூலில் கதைக்கரு என்ற பொருளில் இச்சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். பிறகு இச்சொல்லும் சூழலுக்கு ஏற்ப வேறுபட்ட பொருள்களில் கையாளப்படுகிறது.

Myth என்ற சொல் ஒரு செய்தியை (அ) கருத்தைத் தவறு என்றோ பொய் என்றோ உணர்த்துவதற்காகவும் சில இடங்களில் பயன்படுத்தப்படுகிறது.

"India: Myth & Relaity Images of India in the fiction by English Writers."

“The Myth of Free Trade: Paterns of Protectionism Since 1945”

என்ற இவ்விரு தலைப்புகளிலும் பொய் / தவறு என்ற பொருளில் Myth என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. இதைப் போன்று பொருளாதாரம், சமூகவியல், பெண்ணியம் போன்ற துறைகளிலும் பொய்மை அல்லது தவறு (False or Error) என்ற பொருளில் இச்சொல் வழங்கப்பட்டு வருகிறது. ஆனால் இச்சொல் கதையாடல் (a Narrative) என்ற பொருளில் வழங்கப்படுகிறது. அது சூழலுக்கேற்ப இச்சொல்லின் பொருளை புரிந்துகொள்ள வேண்டியுள்ளது.

**அறிஞர்களின் கருத்து:**

Myth என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையாகத் தமிழில் பல்வேறு சொற்கள் (Terms) கையாளப்படுகின்றன. திறனாய்வளார்களிடையே தொன்மை, மித்து, பழம் மரபுக் கவிதை, ஐதீகம், தொன்மப் புராணக் கதை, புராணக் கதை, புனைகதை, பழங்கதை, புராணம் என இச்சொல்லைப் பயன்படுத்துவதில் ஓர் ஒருமைத்தன்மை (Standardization) இல்லை.

ஆக பலரும் பல சொற்களையும் கையாள்வதால் Myth என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையான தமிழ்ச்செல் ஒன்றை உருவாக்க வேண்டிய தேவை ஏற்பட்டுத் தற்போது தொன்மம் என்ற சொல் க.பஞ்சாங்கம், கதிர்.மகாதேவன், பா.மருதநாயகம், தி.சு.நடராசன், அ.அ.மணவாளன், அன்னிதாமசு போன்ற திறனாய்வாளர்களால் இயல்பு வழக்கத்திற்கு வந்து நிலை பெற்றுவிட்டது.

**புராணம்:**

‘புராணம்’ என்ற வடசொல்லிற்கு தமிழில் பல பொருள்கள் வழங்கப் படுகிறது. சான்றோர் தம் கதை கூறும் நூல், பழமை, இலக்கிய உவமை என்று விளக்கம் கூறுகிறது.

க.செ.நடராச என்பவர், “சிவ புராணம் என்பதற்குச் சிவனது அநாதி முறைமையான பழமை என்று பொருள் கூறப்படுவதிலிருந்து, புராணம் என்பது பழமையானதென்ற பொருளிலே தமிழில் வழங்கிவருதல் தெரிகிறது” [48]

இவற்றிலிருந்து புராணம் என்ற சொல் பழமை என்ற பொருளிலும், அடியார்களின் சரித்திரம் உரைப்பன (பெரிய புராணம், புலவர் புராணம்) என்ற பொருளிலும், இறைவன் குடிகொண்டிருக்கும் திருத்தலங்களின் பெருமை, வளம், இறைவனின் திருவிளையாடல்கள் ஆகியவற்றை விவரிக்கும் தலபுராணம் (திருவாரூர்ப் புராணம், திருப்பெருந்துறைப் புராணம்) என்ற

பொருளிலும், விரத மகிமைகளைக் கூறுவன (ஏகாதசிப் புராணம், சிவராத்திரிப் புராணம்) என்ற பொருளிலும், இலக்கணம் கூறுவன (மாபுராணம், பூதபுராணம்) என்ற பொருளிலும், பதினென் புராணங்களைக் குறிப்பன என்ற பொருளிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை அறியலாம்.

ஆதிமனிதர்கள் இயற்கை மற்றும் விலங்குகளின் சீற்றங்களை எதிர்த்து வாழ்ந்தனர். இயற்கையில் கிடைக்கும் பொருட்களை உணவாக கொண்டனர் விலங்குகளிடமிருந்து தம்மை காத்துக் கொள்ளவும், உணவிற்காகவும் அவற்றை வேட்டையாடினர். கல், மரம், தோல் இவைகளால் செய்யப்பட்ட வில், அம்பு, ஈட்டி முதலியவை அவர்கள்தம் ஆயுதங்களாக மாறின. படிப்படியாக வளர்ச்சி அடைய (நெருப்பு, கால்நடைப் பராமரிப்பு, விவசாயம்) தொடங்கினான்.

நாகரீகத்தை நோக்கி மனிதன் நகர்ந்தாலும், “உடல் மற்றும் கருவிகளின் போதாமையை ஈடுகட்ட மனிதர் முயன்ற முயற்சியில், இயற்கை மற்றும் இயற்கை இகந்த சக்திகளை, இனம் தெரியாத, அடையாளப்படுத்த முடியாத சக்திகளைக் கண்டு அஞ்சி, அடங்கி, பணிந்து, சாந்தி செய்வித்து பலி கொடுத்து, அதன் வழியாக மனிதர்கள் தங்களுக்கும், அவற்றுக்கும் இடையில் பௌதீக ரீதியில் இல்லாமல் மாந்திரீக, சமய ரீதியிலான உறவைக் கட்டமைத்துக் கொண்டார்கள். கடவுள் மற்றும் கடவுள் சார்ந்த கற்பனைகள் கருத்துக்கள், சடங்குகள், விழாக்கள், போர்கள் எல்லாம் இவ்வாறு உருவாக்கம் பெற்றதாகக் கொள்ளலாம்”[49] என்பார் ராஜ்கௌதமன்.

சங்க காலத் தமிழ்ச் சமூகத்தின் இந்த உருவாக்கத்தின் மிகப் புராதனமான கூறுகளையும், வடக்கிலிருந்து வந்து அறிமுகமாகிய புராணக் கடவுள்கள், அறக்கடவுள்கள், சமயங்கள், சமயங்களின் போதனைகள், நிறுவனங்கள் ஆகியன மிக வளர்ச்சியடைந்த கூறுகளையும் காண முடிகிறது.

சமூகத்தில் மனிதன் தமக்கு ஏற்பட்ட அச்சத்தின் காரணமாக இயற்கையை வணங்க ஆரம்பித்தான். அதன் நீட்சி இன்று வரையிலும் தொடர்கிறது.

காய்கனி, கிழங்கு முதலிய இயற்கை விளை பொருளையும், வேட்டையாடிய விலங்கு பறவை இறைச்சியையும் உண்டு வாழ்ந்து அநாகரிக நிலையிலிருந்த மனிதன், தீயும், இடியும் போன்ற பூத இயற்கைக்கும், பாம்பு போலும் நச்சு உயிர்க்கும், இறந்தோர் ஆவிகட்கும் அவற்றுள் ஒரு சாரன பேய்கட்கும், அஞ்சிய அச்சமே, தெய்வ வணக்கத்தை அல்லது சிறு தெய்வ

மதத்தை முதலில் தோற்றுவித்தது. அதனால் கொல்லும் தன்மையுள்ள எல்லாவற்றையும் தெய்வமாகக் கொண்டு, அவை தம்மைக் கொல்லாதவாறு படைத்தும், இருதிணை உயிர்களையும் காவு கொடுத்தும் வந்தனர்.

அச்சத்திற்காக தொடங்கிய வழிபாடு, தன்னை காக்க வேண்டும் என்பதற்காகவும் மாறியது.

மனிதனின் வாழ்க்கை பல்வகைத் துன்பம் நிறைந்தது. அதனால் அவற்றினின்று தப்புவதற்குத் தொன்றுதொட்டுப் பாதுகாப்புத் தேடிக்கொள்ள வேண்டியதாயிற்று. உடமைகளையும், உயிரையும், காப்பதற்கு முன்பு காவற்காரனும், பின்பு அரசனும் ஏற்பட்டனர். ஆயினும் மக்களால் தடுக்க முடியாத கொள்ளைநோய், பஞ்சம், கடுங்காற்று, பெருவெள்ளம் முதலிய துன்பங்களைத் தடுத்தற்கும், நீக்கற்கும், மனித இனத்திற்கும் மேறபட்ட சில மறைவான தெய்வங்களே ஆற்றல் உள்ளவை என்று கருதி, அனைவரும் அவற்றை வணங்கவும், வழிபடவும் தலைப்பட்டனர். அத்துன்பங்கள் அத்தெய்வங்களின் சீற்றத்தால் நேர்வன என்று நம்பினர்.

மேலும் பல்வேறு தீங்குகளுக்கும், அச்சங்களுக்கும் பெரிதும் இடம் தரும். காரிருளைப் போக்கி, உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவு தேடவும், இனத்தாருடன் உறவாடவும், பேரளவாக உதவும் கதிரவனையும், சிற்றளவாக உதவும் திங்களையும், உண்ணக் காய்கனியும், தங்கத் தண்ணிழலும் குடியிருக்க உறையுளும், உதவும் பல்வகைப் பழுமரங்களையும், இளமை முதல் முதுமைவரை எல்லார்க்கும் இன்னுயிர்த் தீம்பால் உதவும் ஆவையும், இன்னோரன்ன பிறவற்றையும், தெய்வமாகப் போற்றியதும், வணங்கியதும் மாக இருந்தனர்.

இவ்வாறு தோற்றம் பெற்ற வழிபடுதல் பின்பு கருதுகோளாக மாறியது. குறிஞ்சி நிலத்திலேயே வாழ்ந்த மாந்தர், பின்னர் ஏனை நிலங்களிலும் பரவியபின், அவ்வவ் நிலத்திற்கேற்ப ஒவ்வொரு தெய்வமும் தோன்றிற்று. அதன்பின் ஒவ்வொரு பெருநிலத்திற்கு பேராற்றிற்கும் பெருந்தொழிலுக்கும், பெருநன்மைப் பேற்றிற்கும், காதற் பண்பிற்கும், சாதல் தீங்கிற்கும் ஒவ்வொரு தெய்வம் இருப்பதாக கருதப்பட்டது.

கண்ணாற் காணும் இயற்கைக் கூறுகளும், நிகழ்ச்சிகளும் தோற்றங்களும், ஆவிகளும் வினைகளுமன்றி, மனத்தாலேயே படைத்துக் கொள்ளும் தெய்வங்களெல்லாம் கருதுகோளின்[50] விளைவேயாகும்.

இவ்வாறு சமூகம் தம்முடைய வழிபாட்டை அமைத்துக் கொண்டது. காடு, மலை, கடல், சுரம் முதலான பழைய கால நாகரிகப் பகுதிகளில் வாழ்ந்த குடிகளிடம் தாங்கள் வாழ்ந்த இயற்கைப் பகுதிகளான மரங்கள், மலைச்சாரல்கள், மலை உச்சிகள், காடுகள், மலைச்சுனைகள், நீரூற்றுக்கள், நீர் நிலைகள், கடல் துறைகள், காட்டுப்பூக்கள், ஆள் அரவமற்ற இடங்கள், இரவுக்காலம் என ஆகியவற்றில் கடவுள், தெய்வம், சூர், அணங்கு சூலி, முருகு ஆகியவை தங்கின. நடமாடின என்ற நம்பிக்கை மக்களிடையே இருந்துள்ளது[51] என்பதை சங்கப்பாக்கள் வழியாகக் காண முடிகிறது.

தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே, இந்தியாவிற்குள் புகுந்துவிட்ட ஆரியர்களின் மொழி தமிழில் கலக்கத் தொடங்கிற்று. தொல்காப்பியரும்,

**“வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ**
**எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே”** [52]

என்று தம் நூலில் வழிவகுத்துள்ளார். ஆடு மாடு மேய்க்க வந்த ஆரியர் ஆட்டக் கலையிலும் வல்லவராயினர். அவர்கள் கழைக் கூத்தாடியதை,

**“ஆரியக்கூத்தாடினாலும் காரியத்தில் கண்”**

எனும் பழமொழியும் அவர்கள் கூத்தினை தெரிவிக்கும்.

தமிழரொடு கலந்த ஆரியர் தமிழ் மொழியைக் கற்றனர். தமிழர் பண்பாட்டையும், தமிழ் மொழியையும் கெடுக்கச் சூழ்ந்தனர். எதிர்த்து நில்லாது அடுத்துக் கெடுக்கத் தம் செயலைச் செவ்வனே செயற்படுத்தினர். (ஞா.தேவநேயப் பாவாணர், தமிழர் மதம், பதிப்பாசிரியர் உரை) இவர் தம் வருகை மூலம் நடந்த நிகழ்வுகளை நாவல் வரலாற்று இலக்கியம் பின்வருமாறு கூறுகிறது.

“எல்லாவற்றையும் விடப் பெரிய ஆபத்தும், தீங்குகளுக்கெல்லாம் வேராயிருப்பதும், அசுரர்களின் அரச பதவியும் – அதற்கு துணையாயிருக்கும் புரோகிதப் பதவியுமே அகும். அசுர சமூகத்தில் ஜனங்களுக்கு எந்த அதிகாரமும் கிடையாது. அவர்களுடைய அரசன் சொல்வதை அப்படியே ஏற்று, அதன்படி நடக்க வேண்டுவதே தன்னுடைய கடமையென்று, ஒவ்வொரு அசுரனும் கருதுகிறான். இவர்கள் செய்யும் காரியங்களின் பொறுப்பை மேலே தேவதைகளும், கீழே அரசனும், ஏற்றுக்கொள்வதாகவும், ஆகவே இவர்கள் தங்களுடைய சொந்தப் பொறுப்பில் எந்த விஷயத்தையும் வாயினால் சொல்லவோ அல்லது செய்யவோ அதிகாரம் கிடையாதென்றும், அவர்களுக்கு அவர்களுடைய புரோகிதர்கள் போதிக்கிறார்கள்.”[53] இதன்வழி

மக்களை அடிமைப்படுத்தியிருந்த நிலையும், மனிதத் தன்மைக்கு மதிப்பில்லாத இடமும், பெண்ணுக்கு உரிமை மறுப்பும் சமூகத்தில் விதைக்கப் பட்டிருந்தமையை உணர முடிகிறது.

"ஜன சமூகத்தின் உழைப்பைக் கொண்டு, அரசன் சகல போகங்களையும் அனுபவிப்பான், தெய்வங்கள் பெயரையும், கடவுள் பெயரையும் சொல்லி ஜனங்கள் மௌனமாகக் கீழ்ப்படிந்து நடக்கும்படி செய்வதற்காகப் புரோகிதனுக்கு அரசன் லஞ்சம் கொடுத்து, அவனைத் தனக்குப் பக்க பலமாக வைத்துக் கொள்வான். இவ்விதம் அரசனும், புரோகிதனும் சேர்ந்து ஜனங்களைத் தங்களுடைய நிரந்தர அடிமைகளாக்கி விடுவார்கள்."[54] "இந்திரன், அக்னி, வருணன் முதலிய தெய்வங்களின் பெயரால், மக்களை அரசன் உத்தரவுக்குள் கீழ்ப்படியும்படி தூண்டினார்கள். அக்காலத்து அரசர்கள், மக்களின் நம்பிக்கையைப் பெறுவதற்காக, ஏராளமான செலவு செய்து இந்தத் தெய்வங்களின் பெயரால் வேள்விகளை நடத்தினார்கள்."[55] "இன்றும் தெய்வங்களின் பெயரால் வேள்விகளும், பிராமணர்களுக்கு தானம், தட்சிணை தருவதையும் காண முடியும். இவையெல்லாம் தெய்வங்களின் மகத்தான சக்திகளின் மீது மக்களுக்கு நம்பிக்கை உண்டாக்குவதற்காகவும், அந்தத் தெய்வங்களின் கிருபையினாலேயே நாம் இந்த சுகபோகத்தை இளங்கன்றின் மிருதுவான மாமிசம், மது, மெல்லிய ஆடைகள், முத்து ரத்தின ஆபரணங்கள் இவைகளை எல்லாம் உபயோகிக்கும் பாக்கியத்தைப் பெற்றிருக்கிறோம் என்ற நம்பிக்கை உண்டாவதற்காகவே இவைகளைச் செய்கிறோம்"[56] என தெய்வ வழிபாட்டின் கருதுகோளை விளக்க முனைகிறார் ராகுலசாங்கிருத்தியாயன்.

"ஆரியர் தம் வெண்ணிறத்தாலும், பேச்சுத் திறத்தாலும், சூத்தாலும், தமிழ் மன்னர்கள் அவர்களுக்கு அடிமையாயினர்.

முதுகுடுமிப் பெருவழுதி என்னும் ஒரு பாண்டிய மன்னன் பல வேள்விகளைச் செய்தான். மக்கள் வரிப்பணத்தை வேகள்வி செய்யவும், ஆரியர்க்கு விருந்து வைக்கவும் பரிசில் வழங்கவும் பயன்படுத்தினான். அதனால் பல்யாகசாலை முதுகுமிப் பெருவழுதி என்னும் பெயரும் பெற்றான்.

பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்னும் சேரவேந்தன் தன்னைப் பாடிய பாலைக் கௌதமனார் விருப்பப்படி பத்துப் பெருவேள்வி செய்து புலவரையும் அவர் மனைவியையும் துறக்கம் பெறச் செய்தான்"[57] என்ற செய்திகளினின்று தொன்மச் சடங்குகளின் மீதான நம்பிக்கைகளை அறியமுடிகிறது. மேலும் அந்தணர்கள் பல்வேறு ஆரிய வழிக் கதை புராண இதிகாசச் செய்திகளை சங்க இலக்கியத்தில் பாரதக் கதை (பெரும். **415–**

417, சிறுபாண். 239–247, பரி. 25:1–5, புறம். 2:13–16, கலி. 104:57–59, 52:2–3, 139:33–37), யமுனை ஆற்றில் நீராடும் பெண்களின் ஆடைகளை எடுத்த கண்ணன் (கலி. 101:58–60), சூரனை அழித்த கதை (கலி. 93:25–26, 104:13–14; பரி. 5:4), இராமன் இலங்கை மேல் படையெடுத்துச் செல்லும் (அகம். 70:12–17; புறம். 378:17–19) கதை, குதிரை வடிவில் வந்த அசுரனை (பரி. 3:31–36) அழித்தல், பாற்கடலை கடைந்தமை (பரி. 2:71–72, 3:33), பிரகலாதன் கதை (பரி. 4:12–21), முப்புரம் எரித்தக் கதை (பரி. 5:25), அகலிகை (பரி. 19:50–53), மகாபாரதத்தின் கிளைக் கதையான பகீரதனின் கதை (கலி. 150:9) போன்ற தொன்மக் கதைகள் இடைச்செருகலாக சமயம் பரப்ப வகைச் செய்தமை அறிய முடிகிறது.

வடமொழியில் தோன்றிய ஆதிகாவியமாகிய வால்மீகி இராமாயணம், வியாசரின் மகாபாரதம் ஆகிய நூல்களின் கதைகள் தொன்மங்களாக சங்க இலக்கியத்தில் பல்வேறு இடங்களிலும் உவமைகளாகவும், எடுத்துக்காட்டு களாகவும் கையாளப்பெற்றுள்ளன.

**முடிவுரை:**

தமிழர்களுடைய கதைக் கேட்கும் ஆர்வத்தை அறிந்த ஆரியர்கள் தங்களது சமயங்களைப் புகுத்தும் நோக்கில், புராணச் செய்திகளை நெடுங்கதைகளாகவும், இதிகாசங்களாகவும், காவியங்களாகவும், காப்பியங்களாகவும், சைவ மத செய்திகளாகவும், சிவனின் திருவிளையாடல் களாகவும், முருகனின் அறுபடை வீடுகளாகவும் பதிவு செய்தனர். இவ்வாறு பௌத்தம், சமணம், சைவம், வைணவம் என அவரவர் கற்பனைக் கதைகளை, அவரவர் சமயங்களின் தெய்வங்களைச் சிறப்பித்துச் சொல்லும் வகையில் தங்களது சமயப் பரப்புரைகளை பதிவுச் செய்துகொண்டனர். அத்தகு பரப்புரைச் செய்தி சங்க இலக்கியத்திலும் பல்வேறு இடங்களில் இடைச் செருகல்களாக பாடல் பதிவுகளாக இடம்பெற்றுள்ளமை இவ்வியலில் விளக்கம் பெற்றுள்ளது.

சங்க இலக்கியத்தில் பெண் அறம் குறித்த ஆய்வில் ஐவகை நிலங்களிலும் பெண் தெய்வங்கள் எந்தச் சமயச் சார்புடனும் தலைமை வகித்து நிற்கவில்லை. பாலை நிலத்தில் கொற்றவை எனும் பெண் தெய்வம் சுட்டப் பட்டிருக்கின்றது. ஆனால், கொற்றவை எந்தச் சமயத்திலும் முதன்மைப் படுத்தவில்லை. இச்சூழலில் பாலை என்ற ஒரு நிலமும் இல்லை என்ற குறிப்போடு, பெண் தெய்வங்களை முதன்மைப் படுத்திய பதிவுகளும் காணக் கிடைக்கவில்லை என்ற செய்தி இவ்வியலில் முன் வைக்கப்பட்டுள்ளது.

# சான்றெண் விளக்கம்

## இயல் – 7

1. மு.சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப.232.
2. பக்தவத்சல பாரதி, மானுடவியல் கோட்பாடுகள், ப.272.
3. மேலது, ப.233.
4. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும், தொல்காப்பியமும், தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.79.
5. தமிழர் மானிடவியல், ப.24.
6. க.அ.ஜோதிராணி, தமிழர் பண்பாட்டுத் தளத்தில் சடங்குகள் – முன்னுரை.
7. புறம். 337:6–12
8. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும், தொல்காப்பியமும், தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.83.
9. குறுந். 146
10. அகம். 221:1–4
11. நற். 279:9–11
12. ஐங். 399:1–3
13. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும், தொல்காப்பியமும், தமிழ்ச் சமூக உருவாக்கமும், பக். 84–86.
14. மு.சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும், சடங்குகளும், ப.264.
15. கலி. 69
16. அகம். 280:4–6
17. பரி. 8:106–108
18. ஐங். 257
19. மதுரை. 607–610
20. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும், தொல்காப்பியமும், தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.89.
21. குறுந். 287:4–5

22. புறம். 20:14–15
23. நற். 370:2–4
24. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும், தொல்காப்பியமும், தமிழ்ச் சமூக உருவாக்கமும், பக்.90–91.
25. மதுரை. 600–603.
26. குறுந். 23:1–2
27. குறுந். 298:6
28. அகம். 97:9–10
29. அகம். 152:4, 208:3
30. நற். 288:4–7
31. நற். 288:8–7
32. அகம். 98:5–10
33. நற். 47:8–11
34. தொல். களவு. 24
35. புறம். 259:5–6
36. பரி. 6:11–13
37. பரி. 11:8
38. குறுந். 218:3
39. மு.சண்முகம் பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப.160.
40. முல்லை. 6–11
41. நற். 40:1–4
42. புறம். 280:1–4
43. கலைக்களஞ்சியம், தொகுதி 7, ப.436.
44. The Concise Oxford Dictinary of Literary Terms
45. தொல். 1259
46. க.கோபி, தொன்மம் ஒரு அறிமுகம்.
47. மேலது
48. க.செ.நடராச, ஈழத்து தமிழ் இலக்கிய வளர்ச்சி, ப.119.
49. ராஜ்கௌதமன், பாட்டுத் தொகையும் தொல்காப்பியமும் தமிழ் சமூக உருவாக்கமும், ப.175.
50. ஞா.தேவநேயபாவாணர், தமிழர் மதம், பக்.6–8.

51. ராஜ்கௌதமன், பாட்டுத் தொகையும் தொல்காப்பியமும் தமிழ் சமூக உருவாக்கமும், ப.176.
52. தொல். சொல். 401
53. ராகுல சாங்கிருத்தியாயன், வால்காவிலிருந்து கங்கை வரை, ப.162.
54. மேலது, ப.163.
55. மேலது, ப.212.
56. மேலது, பக்.212–213.
57. ஞா.தேவநேயப்பாவாணர், தமிழர் மதம், பதிப்பாசியர் உரை.

நாட்டின் வளர்ச்சியில் பெரும் பங்கு வகிப்பவை இலக்கியங்கள். அவ்விலக்கியங்கள் பெண்கள் பெறும் இடத்தினை எவ்வாறு சமூக மதிப்பீட்டுத் தளத்தில் வைத்திருக்கின்றன என்ற ஆய்வுப் பார்வையில் ஆய்வேட்டின் ஏழு இயல்களிலும் அளிக்கப்பட்ட தரவுகளின் ஆதாரங்களை முன் வைத்து சங்க இலக்கியத்தில் பெண்களின் மதிப்பீடு முனைந்துரைக்கப்படுகிறது.

மனித குல வாழ்விற்கு அடிப்படை ஆதாரமாக இயற்கையும், வேட்டைத் தொழிலும் இருந்தன. மனித சமூகம் கூட்டமாக, குகைகளிலும், மரங்களிலும் வாழ்ந்த காலக்கட்டத்தில் வேட்டைத் தொழில் முதன்மையானதாக இருந்தது. வேட்டைச் சமூகம் பெண்ணை முதன்மைப்படுத்தியது. உற்பத்திக் கருவிகளின் முதல் மூலதனமாக குழந்தைப்பேறு அமைந்திருந்ததை அறிந்த மனிதன் பெண்ணை முதன்மைப்படுத்தினான். வேட்டைக்குத் தலைமை தாங்கியவள் பெண். குழு வாழ்க்கையைப் பேணிப் பாதுகாக்கும் தாய்வழிச்சமூகம் நிலவியது. தாய்வழிச் சமூகத்தின் தலைமையில்'பெண்' மறு உற்பத்தியின் காரணியாக செயல்பட்டாள்.

மனித குலம் பாலின வேறுபாடின்றி உணவுக்கு இயற்கையை நாடிச் சென்றனர். விலங்குகளை வேட்டையாடினர். அவர்களுக்குள் சமத்துவம் இருந்தது. மனித குலப் பெருக்கத்தில் பெண்களின் குழந்தைப்பேறு கருவுறுதல் முக்கியமானதாகக் கருதப்பட்டபோதும், ஆண் பெண் சம உரிமை முறை மாறவில்லை. உரிமை வேண்டும் என்ற பேச்சுக்கே இடமில்லாமல் இருந்தது. சம உரிமை கொடுக்க வேண்டும், சம உரிமை பெறவேண்டும் என்ற எண்ணம் எழாத காலமாக[1] இருந்தது.

சமுதாய வளத்தின் ஆதாரம் பெண். உற்பத்தியின் முதல் மூலதனமாக மனித சக்தியாக விளங்கியவள், உபரியினை சேமிப்பாக்கி உற்பத்தியில் முக்கியப்பங்கு வகித்தவள். கூட்டுழைப்பின் திறனாக்கம் பெற்றவள். விவசாயத்தில் முக்கிய பங்கு வகித்தவள், கலப்பையைக் கண்டறிந்தவள்[2] என பரிணாம வளர்ச்சியில் சமூக வளர்ச்சிக்கென முன்னின்றவள்.

**தாய்வழிச் சமூகம்**

ஆதிமனிதர்கள் குகைகளிலும், பெரும் மரப்பொந்துகளிலும் வாழ்ந்தனர். காட்டில் கிடைக்கும் காய்கனிகளையும், வேட்டையில் கிடைக்கும் மிருகங்களையும், பறவைகளையும் உண்டனர். கிடைப்பதை அனைவரும் பகிர்ந்து உண்டனர். ஒரு குலம் என்பது சொற்ப எண்ணிக்கையிலான மனிதர்களைக் கொண்டிருந்தது.

இந்த ஆதிக்குலத்தின் தலைவியாகப் பெண் திகழ்ந்தாள். கோழியைச் சுற்றி குஞ்சுகள் போல தாயைச் சுற்றியே மனிதகுலம் வாழ்ந்து வளர்ந்தது. இந்த ஆதிநாட்களில் தகப்பன் என்று யாருமில்லை. எல்லாம் தாய் மட்டும் தான். வேட்டைக்குச் செல்வது(ம்) தவிர மற்ற எல்லாப் பணிகளையும் பெண்களே செய்தனர். உணவுத் தேடலில் கிடைப்பவற்றை மொத்தம் சேர்த்து அனைவருக்கும் சமப் பங்கீடு செய்தவள் தாய்தான்.

உயிரினங்களை ஆய்வு செய்த டார்வின், பெண் இனம் மிகுந்த உடல் வலிமையுள்ளது. மனித இனத்திலும் இது விதி விலக்கல்ல. ஆதியில் பெண்களே வலிமைமிக்கவளாய் திகழ்ந்திருக்கிறாள். கால்நடை வளர்ப்பு, விவசாயம், மண்பாண்டங்கள் செய்தல், நூல் நூற்பது, நெசவு, தையல், கூடைமுடைதல் போன்ற அனைத்தையும் கண்டுபிடித்தவர்கள் பெண்கள்தான்.

ஆண்கள் வேட்டைக்குச் செல்லும்போது குகைகளில் இருந்த பெண்கள் கால்நடை வளர்ப்பு போல பல விஷயங்களை கண்டு பிடித்தனர். இயற்கையில் விளையும் காய்கறிகள், கனிகள், தானியங்கள் பற்றி அறிந்தனர். மழைக்காலத்தில் விதைகள் முளைப்பது, வளர்ச்சியடைந்து பலன் தருவதைப் பற்றிய பருவகால அறிவைப் பெற்றனர். பெண்கள் விவசாயத்தில் ஈடுபட்டனர்.

ஆதி வாழ்க்கையில் பெரிய மரத்தடியில் வயதானவர்களும், குழந்தைகளும் இருந்தனர். ஆண்கள் வேட்டை, மேய்ச்சல் பணிகளுக்குச் சென்றனர். ஆண்களும், பெண்களும் விவசாயப் பணிகளில் ஈடுபட்டனர். குழந்தைகள் மரம் விட்டுமரம் தாவி விளையாடுவர். தாத்தா பாட்டிகளிடம் கதை கேட்டுப் பொழுது போக்குவர். பெண் காடெல்லாம் சென்று காய்கனிகள், கிழங்குகள் என்று உணவு சேகரித்து வருவாள். கிடைப்பவற்றைப் பெண்ணே குலம் முழுமைக்கும் பகிர்ந்தளித்தாள். பறவைகளிலும், மிருகங்களிலும் உணவு தேடுவதும் வேட்டையாடுவதும் தாயின் பணியாக தொடர்கிறது. புலி, சிங்கம் முதல் கழுகு என வேட்டையாடச் செல்வது பெண்தான். வாரிசுகளைப் பெற்று, இயற்கையோடு போராடி அவற்றை வளர்ப்பதும் பெண் இனம்தான்.

ஆதியில் மனிதகுலத்தில் பெண்ணின் தலைமையே இருந்தது. பட்டினிகிடந்தாலும் அவள் உடலில் எஞ்சியிருக்கும் ரத்தத்தையும் பாலாக மாற்றிக்குழுந்தைக்குப் புகட்டி வளர்ப்பவள் பெண்தான். தாய் என்பது மனித குலத்தில் தலைவியைக் குறிக்கும் சொல் ஆகும்.

**கால்நடை வளர்ப்பு (பெண்)**

வேட்டையாடுவது என்பது உணவுக்காக மட்டுமல்ல. தங்களை அழிக்க வரும் கொடூர விலங்குகளை எதிர்த்து போராடுவதாகவும் மாறியது. வாழ்க்கைப்

போராட்டமும், இயற்கை மீது ஆதிக்கம் செலுத்தும் போராட்டமும் இணைந்தே இருந்தன. மனிதன் இப்போரில் பல தலைமுறைகளாக முயன்று போரிட்டு வெற்றி கண்டான்.

உணவை சேமித்து விற்பனை செய்தது நாகரீகத்தின் அடிப்படையாக இருந்தது. மனிதன் ஆடுமாடுகளைப் பிடித்து வளர்க்கத் தொடங்கினான். கன்றுகளையும், குட்டிகளையும் காட்டிலிருந்து தூக்கி வந்து தங்கள் குகையருகில் அடைத்து இரைபோட்டு வளர்க்கத் துவங்கினர். இதைக் கண்டுபிடித்தது பெண்கள் தான். ஆண்கள் வேட்டைச் சமூகத்திலிருந்தபோது பெண்கள் மேய்ச்சல் சமூகத்தையும், விவசாயத்தையும்[3] உருவாக்கினர்.

வேட்டைச் சமூகத்திலும், மேய்ச்சல் சமூகத்திலும் மனிதன் காட்டுக்குள் அலைந்து திரிந்தான். இடம் விட்டு இடம், காடு விட்டு காடு பெயர்ந்தான். ஆனால் விவசாயம் கண்ட பின்பு வாழ்வு நிலைத்தது. ஒரே இடத்தில் நிலைத்து வாழ முடிந்தது. கால்நடைகளை மேய்த்துக் காப்பதிலும், காடுகளை அழித்து விவசாயம் செய்வதிலும், உடல் வலுவுள்ள ஆண்களே அதிகம் ஈடுபட்டனர். கால்நடை மந்தை, விளைநிலம் என்னும் சொத்து ஆணுக்குரியதாகிவிட்டது.

“ஐவகை நிலங்களிலும் பல தொழில்களைச் செய்து சமூக உற்பத்திக்கும் பொருளாதாரத்திற்கும் வளம் சேர்த்திருக்கின்றனர் பெண்கள். ஆனால் உடைமை, அரசு உருவாக்கம், விவசாய உற்பத்திக்கான சிறு தொழிலின் வகையில் தொடர்ந்த நில உடைமையோடியைந்த தொழில் வளர்ச்சியில், குழந்தைப் பேறுகாலத்தில் பெண் தனித்திருந்த காலத்து, அவளின் உடல் உழைப்பு அமையாமற் போன வேளையைத் தமக்கு சாதகமாக ஆக்கிக்கொண்டு தனது உழைப்பின்வழியே தான் உற்பத்தி என வளத்தை தனக்கே என அதிகாரப்படுத்திக் கொண்டான். இவ்வாறு உருவான உடைமையின் நீட்சியே உடைமைச் சமூகம் உருவாகிப் பெண்ணைப் பலவீனமானவள் என ஒதுக்கியது.”

ஆண்கள் உடைமையைத் தனக்குரியதாக அதிகாரப்படுத்திக் கொண்டபோது அவள் உடைமையற்றவள், பொருளாதார உரிமையற்றவள் என பொருளற்ற அடிமையாக்கப்பட்டாள். குழந்தைப்பேற்றின் உடைமையாளன் என்பதன் குறியீடாக ஒருவனுக்கு ஒருத்தியாக மனைவியாக்கினான். அன்று தொட்டே அவள் வீட்டு விலங்காகவே ஆண்களின் பார்வையில் அடங்கி ஆணைச் சுமந்தாள். ஆண் மகனையே பெற்றுத்தருதல் இது அதிகாரப் பகிர்விற்கானவன் ஆண் என்ற கருத்தமைவை நியாயப்படுத்திக் கொள்ளும் ஆளுமைச் சிந்தனை[4] என்ற கட்டளையோடும் வாழத் தலைப்பட்டாள்.

சமூக சமத்துவ விடுதலையே முழுமையானது. அதனையே அறம் என்று கூறலாம். சமத்துவம் என்பது வெறும் சொற்பொருள் பற்றியது அல்ல. உண்மையான உணர்வு அறிவு, பகிர்வு பற்றியது.

சமூகத்தை முன்னேறவிடாமல் தடுப்பவை ஆளுமை, அதிகாரம். இவைகள் ஆண்களுக்கானது என்று ஆண் பெண் முரண்பாட்டை விதைத்தவர்கள் மருதநில மன்னர்கள்.

**உடைமைச் சமூகம் – பெண்**

நில உடைமைச் சமூகத்தின் தோற்றமானது பெண்களை அடிமைப்படுத்தியதிலிருந்து தொடங்கியது. பெண்களின் மறு உற்பத்தி உறவானது ஒட்டுமொத்த சமூகத்திற்கான வளர்ச்சிக்குரியது. சமூகத் தேவைக்குரியது என்ற நிலை மறைந்து தனி உடைமைக்கென சொந்தமாக்கி பெண்களை தனி உடைமையைக் காக்கும் உயிராக்கி அடிமைப்படுத்தியது.

வாரிசுகளை உருவாக்கிய பெண்கள் தங்களை விட்டுச்சென்று விடக்கூடாது என்பதற்காகவும், தானே குழந்தையின் தந்தை என்பதை உறுதி செய்து கொள்ளுவது தாய் காட்டும் அடையாளம் தான் என்பதை உணர்ந்து கற்பு பெண்ணுக்குரியது என்றானது. கற்பு என்பது பெண்கள் மேல் புனிதமாக ஏற்றப்பட்ட ஆண் ஆதிக்க மதிப்பீடு என்பர்.

அரசு உடைமையாளன் விதித்த அறநெறிப் பதிவுகளில் ஆணாதிக்கச் சிந்தனையில் விளைந்த கற்பென்பது பெண்களுக்குரியதாக மட்டுமே ஒதுக்கப்பட்டது. நடைமுறையில் கற்பு பெண்ணிற்கும், கற்பு மீறல் ஆணுக்கும் உரியதென வழக்கமானது என்பதை சங்க இலக்கியப் பாடல்கள் வழி அறியலாம்.

**பிள்ளைப்பேறு (ஆண் மகவு ஈன்றெடுத்தல்)**

“236 புலவர்களால் பாடப்பட்ட 882 களவுப் பாடல்களையும், 233 புலவர்களால் பாடப்பட்ட 966 பாடல்களையும் கொண்டதான சங்க இலக்கியங்கள் தலைவி தலைவன் இருவரை மட்டுமே மையப்படுத்தியனவாக அமைந்திருக்கின்றன. ஆனால், கற்பு நிலையில் நோக்கும்போது பெண்களை கீழ்நிலையில் பார்க்கும்முறை அறியப்படுகிறது. மேலும், ஆண் மகனைப் பெறுதலே சிறப்பு என்றும் பாடல்பதிவுகள் உள்ளன.

**“கணவன் உவப்ப புதல்வர்ப் பயந்து”** [5]

என குழந்தைப்பேறில் கணவன் மகிழ்வது ‘ஆண்’ பிறப்பிலேயே என்பதை சங்கப் பாக்கள் (நற். 355:1; குறுந். 8:6; ஐங். 401:2, 406:1, 409:1, 2, 405:4, 442:5; அகம் 176:19; அகம். 184:1–2; கலி. 75:24–25; புறம். 160:18–19, 222:3) காட்டுகின்றன.

இப்பாடல்கள் புதல்வனைப் பெற்ற தாயினையும், கணவன் மனைவி இருவருடன் மகன் இருந்தமையையும், புலப்படுத்தி நிற்பதன் வழி 'ஆண்' மகவின் முதன்மையை விளக்கி நிற்கிறது. மேலும்

திருமண சடங்கினைச் செய்ய வரும் மகளிர்களுள் புதல்வனைப் பெற்றவர்களே சடங்கில் முதன்மை பெறுகின்றனர் என்பதை,

**"புதல்வற் பயந்த திதலை அவ்வயிற்று**
**வால் இழை மகளிர் நால்வர் கூடி"** [6]

அகநானூறு விளக்கி நிற்கிறது. நாட்டினைப் பாதுகாக்க, ஆண் மகவினை உருவாக்குவதில் சமூகத்தில் உள்ள ஒவ்வொருவரின் கடனாக அமைந்திருப்பதை முன்மொழிகிறது புறநானூறு.

**"ஈன்று புறந்தருதல் என்தலை கடனே**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக் கடனே**
**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**
**நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே**
**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**
**களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"** [7]

இத்தகு ஆண் மகனே நாட்டை ஆளும் திறன்பெற்றதை,

**"எண்ணியல் முற்றி ஈரறிவு புரிந்து**
**சால்பும் செம்மையும் உளப்படப் பிறவும்**
**காவற்கமைந்த அரசுதுறை போகிய**
**வீறுசால் புதல்வன் பெற்றனை"** [8]

அறிவு அமைந்து, சால்பும் நடுவுநிலையும் முதலிய நற்பண்புகளும் நாடு காத்தற்கு வேண்டும் அரசியல் அறிவு வகை பலவும் முடியக் கற்றுத் துறைபோன சிறப்பும் நிறைந்த நல்ல மகனைப் பெற்றெடுத்தாய் என நாட்டிற்காக புதல்வனைப் பெற்றமையைப் புலப்படுத்துகிறது பதிற்றுப்பத்து.

இத்தகைய புதல்வனைப் பெற்றவர்களே, இவ்வுலகத்தில் புகழோடு விளங்கி, மறுமை உலகத்து வாழ்வையும் குற்றம் இல்லாது பெறுவர் என்று பலரும் கூறிய பழமொழி இதுவே என்று செல்லூர்க் கோசிகன் கண்ணனார் என்ற புலவர் (அகம். 66:1–6) பாடுகிறார்.

இதன்வழி ஆண் மகவினைப் பெற்றெடுத்த தாய்மையே புகழ்குரியதாக பேசப்பட்டமையைச் சங்கப்பாக்கள் வழி காணமுடிகிறது. இது ஆணாதிக்கத்தின் குறியீடாகவே உள்ளது என்பதை புரிந்து கொள்ள முடிகிறது.

**பரத்தமை**

பரத்தமை ஒழுக்கம் சமுதாயத்தின் இயல்பான ஒன்றாகவே இருந்துள்ளதைச் செவ்வியல் இலக்கியம் காட்டுகின்றன.

**“எம்போல் ஒருத்தி நலன்நயந்து என்றும்**
**வரூஉம் என்ப வயங்குபுகழ்ப் பேகன்”** [9]

என அரசனின் பரத்தமை முதற்கொண்டு தலைவனின் பரத்தமை வரை பேசுகிறது சங்க இலக்கியம்.

பொருளாதார வழிப்பட்ட ஆணாதிக்கத்தின் ஒரு கூறாகப் பரத்தமை இருந்துள்ளதை அறியமுடிகிறது. இப்பரத்தமை ஒழுக்கம் அங்கீகரிக்கப்பட்ட ஒழுக்கமாக, பிரிவுகளுள் ஒன்றாக தலைவி அனுமதிக்காத (வாயில் மறுத்தல்) தன்மையாக காட்டப்பட்டுள்ளது.

ஆண், பெண் இருபாலர் தொடர்பால் நிகழும் இப்பரத்தைமையில் பெண் மட்டும் (பரத்தை) (மதுரைக்.570–579) இகழப்படுகின்றாள்.

ஆண் ஒருவனின் ஒழுக்க மீறலால் இரு பெண்களின் மனநிலையும் வாழ்க்கை நிலையும் பாதிப்படைவதை,

**“மனையோள் வவ்வலும் அஞ்சுவல், சினைஇ”** [10]

இவ்வரிகள் காட்டுகின்றன. தலைவனின் வருகைக்காக எதிர்பார்த்து கொண்டிருந்த பரத்தையர், பலரும் அவனது பிரிவால் உண்டான கவலை மிகுந்து கண்களிலிருந்து வெம்மையாய்க் கண்ணீர் வடிக்கின்றனர் என நற்றிணை (30:5–7) பரத்தையர் தம் நிலையினைக் காட்சிப்படுத்துகிறது.

ஆணின் இவ்வொழுக்கம் பெண்ணால் ஏற்றுக் கொள்ளக்கூடியதாக இல்லை. அவ்வொழுக்கத்தினை கொடுமை ஒழுக்கம், பேணா ஒழுக்கம், கிழவோன் கொடுமை, பிழைத்து வந்த கிழவன் என ஆணினைக் கூறும் இச்சொற்கள் வழி பெண்ணின் மனநிலையினை புரிந்துகொள்ள முடிகிறது.

பரத்தமையை பெண் ஏற்றாக வேண்டும் என்று சங்க இலக்கியம் விதி செய்திருக்கின்றமையை குறுந்தொகைப் பாடல் (45) விளக்கி நிற்கும்.

பரத்தையிடம் சென்று திரும்பிய தலைவனை ஏற்றுக்கொள்ளுதல் கற்பொழுக்கமாகும் என்று குறுந்தொகை (45) கூறுகிறது. இந்நிலை தலைவிக்கு மனதினுள் வருத்தத்தினைத் தரும். அவள் வருந்ததற்குரிய செயலை தலைவன் செய்யினும் அதனை மன்னித்து, மறந்து வாயில் நேர்தற்குரிய பெண் பிறப்பாக

பிறத்தல் துன்புறுவதற்கே ஆகும் என்று தோழி கூற்றாக ஆலங்குடி வங்கனார் எனும் புலவர் பாடுகிறார். இதன் வழி பெண்ணின் உணர்வை மதிக்காத சமூகமாக சங்க சமூகம் இருந்தமை புலப்படுகிறது.

ஆணின் இவ்வொழுக்கத்தின் கொடுமையினை அவனுக்கு உள்ளுறை மூலம் உணர்த்தி நிற்கிறாள் தோழி என்பதை அகம் (146–3), ஐங்குறுநூறு (18–1) பாடல்கள் சான்றுகாட்டி நிற்கின்றன.

பரத்தையர் உண்மை அன்பு இல்லாதவர், அறம் அற்றவர், கற்பு உடையவர் அல்லர், அவர்கள் தம் மகவிற்கு சமூகத்தில் மதிப்பு இல்லை என்பது நற்றிணை (330) பாடல்வழி அறியலாம். ஆனால் மற்றொரு பாடல் (அகம் 16 : 6–10) அவளது தாய்மை பண்பினை விளக்கி நிற்கிறது. தலைவனின் மகன் தெருவில் சிறிய தேரை உருட்டி விளையாடுகின்றான். தெருவில் தனியனாய் கண்டு பொன் அணிகள் அணிந்த கூறிய பற்களை உடைய காமக்கிழத்தி அவனை நெருங்கி அவன் தனக்கும் மகனாவான் என எண்ணி, என் உயிரே வருக என்று அணைத்துக் கொண்டாள். பெண் கூற்றாக புலவர் (சாகலாசனார்) பாடுகிறார். இது ஆணாதிக்கச் சிந்தனை கொண்ட புலவர்களிடம் இருந்துள்ளமைக் காணலாம்.

இதன்வழி அவளது உணர்வுகளுக்கு இச்சமூகம் மதிப்பு தரவில்லை என்பதும், அவளது வாழ்வு இகழ்ச்சிக்குரியதாகவும் பார்க்கப்பட்டிருக்கின்ற நிலையினை அறியமுடிகிறது. பரத்தையருக்கு குழந்தைப் பேறடையும் உரிமை மறுக்கப்பட்டுள்ளது.

தலைவியின் பேறுகாலம் வரை பரத்தையிடம் இருந்துவிட்டு புதல்வனை ஈன்றெடுத்தப் பிறகு மீண்டும் தன் இல்லிற்கு (நற்.40) செல்லும் போக்கு சமுதாயத்தின் ஒழுக்கக்கேட்டையே காட்டி நிற்கிறது.

**“பூப்பின் புறப்பா டீராறு நாளும்**
**நீத்தகன் றுறையா ரென்மனார் புலவர்**
**பரத்தையிற் பிரிந்த காலை யான** “[11]

என ஆண் பிரியவேண்டிய காலமும் பிரியாது இருக்க வேண்டிய காலத்தையும் வரையறுத்து கூறுகிறார் தொல்காப்பியர்.

பரத்தையர் குறித்த பல்வேறு பெயர்கள் சங்க அகப்பாடல்களிலும் திணை, துறைக் குறிப்புகளிலும், உரைகளிலும் காணப்பெறுகின்றன.

காமக்கிழத்தி, காதற்பரத்தை, சேரிப்பரத்தை, இற்பரத்தை, நயப்பு பரத்தை, ஒள் இழை மகளிர், பரத்தை (ஐங்.48:4), குறுமகள் (அகம் 16:6), பாசிழை மகளிர் (மதுரை 579), மாண் இழை மகளிர், வரைவின் மகளிர், குறுந்தொடி மடந்தை (அகம் 36.11) ஆயிழை மகளிர் (அகம் 26), நேரிழை மகளிர் (அகம் 336.11), விலைக் கணிகை (பரி.20), விலைநலப் பெண்டிர் (புறம் 365.8), குறுமகள் (நற்.120), மாணிழை மகளிர் (நற்.30.5) வாலிழை மகளிர் (நற்380.5) குறுந்தொடி மகளிர் (குறு 384.2) கனங்குழையவர் (கலி.3.66.13), எழில்உண்கண் நல்லார் (கலி. 3.67,6) கொடியன்னார் (கலி 3.67.10) எழில்நல்லார் (கலி.3.67.14), துணைமலர்க் கோதையார் (கலி.3.70.9), ஏதிலார் (கலி.78:13), கொண்டிமகளிர் (மதுரை. 583) எனப் பலப் பெயர்களில் பரத்தையர் குறிக்கப்பெறுகின்றனர். ஆனால் இவ்வொழுக்கத்திற்கு காரணமான ஆடவனை பரத்தன் என்றும் பரத்த என்றும் அழைக்கின்றனர்.

**"மாயப்பரத்தன் வாய்மொழி நம்பி"** [12]

**"பகலாண்டு அல்கினை பரத்த"** [13]

உழவுத் தொழிலை மேற்கொண்டு வாழ்ந்த நிலம் மருதநிலம். மிகுந்த விளைச்சலை மருதநிலம் கண்டது. நிலையான வாழ்க்கை முறை மருத நிலத்திலேயே அமைந்தது. பெருகிய விளைச்சலின் வாணிபம் சிறந்தது. பல்வேறு தொழில்களில் நாடு செல்வங்களைக் குவித்தது. மண்ணும் பொன்னும் போர்வழி மிகுந்தன. தலைவன் அரசனானான் அரசு அதிகாரம் உயர்வு தாழ்வை ஏற்படுத்தியது. இது சமூகப் பொருளாதார அடிப்படையில் சாதியையும் உருவாக்கிக் கொண்டது. அரசனின் சிந்தனை விதியாகியது. அந்த வழி இலக்கியமாக உருவாக்கப்பட்டது. இலக்கியமே சமூக ஒழுங்கை கற்றுக் கொடுக்கும் தளம். இக்களத்தில் மரபு வழக்கு என விதிகள் தளர்த்தப்பட்டன. தளர்த்தப்பட்ட இவ்வொழுங்கு குறிப்பிட்ட மேட்டுடை வர்க்கத்தினருக்கு நியதிகளாய் அமைந்துவிட்டன.

பரத்தையர் பொருள் மிகுந்தவரும் அல்லர். வரைவு எனும் திருமணம் செய்யும் தகுதியை இழந்தவர். உரிமையற்றவர், இகழ்ச்சிக்குரியவர், பிள்ளைப்பேறு அற்றவர். ஐவகை நிலங்களின் கருப்பொருள்களுக்கான இடம், பெயரும் உரிமையும் இழந்தவர். ஊர்ப்புறத்தில் வசிக்கும் தாழ்ந்த குலத்தவர் (சேரிப் பரத்தையர்). குடும்பமாக வாழ தடை விதிக்கப்பட்டவர், நிரந்தரமாக ஒரு ஆடவனோடு வாழும் உரிமை மறுக்கப்பட்டவர்.

பரத்தையர் என்ற ஒரு இனம் எல்லா நிலங்களிலும் இருந்துள்ள நியதியினை எண்ணிப் பார்க்குமிடத்து அவர்கள் பொருளாதாரக் கீழ்நிலையில்

தள்ளப்பட்டவரே என்பதும் பொருளற்ற அடிமைகள், சாதிய அடிமைகளாக (சேரிப் பரத்தை) ஆக்கப் பட்டமையும் அறிய முடிகிறது.

'பிரிவு' எனும் ஒரு தன்மை வழி ஐவகை நிலங்களிலும் பரத்தையர் என்ற ஒரு பிரிவினரை தம் காமப்பொருளாகத் துய்த்து வந்துள்ளமை அறிய முடிகிறது. பொருள் உடைமை எனும் சொந்தமற்ற பெண்கள் வாழ்ந்ததும், ஆணின் உடைமைக்கு அவர்களின் அதிகாரமானது காம மிகுதியின் போதும் ஆளுமை செய்யப்பட்டிருக்கிறது. பரத்தைப் பிரிவு என்ற ஒருவகை இழிவொழுக்கம் பாலியல் வன்மத்திற்குரிய அடிமைப்பெண்கள் இருப்பதைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் மருதம் தொடர்பான 263 பாடல்களில் 221 பாடல்கள் பரத்தையர் உறவு குறித்தனவாக அமையக் காணலாம்.

அரச நியதிகள் பரத்தையரை அடிமைகளாக, நுகர்வுக்கு உரியவராகவே ஆக்கியிருக்கின்றது.

பரத்தையரை பழம்தேர் வாழ்க்கைப் பறவை போல என மதுரைக் காஞ்சி (576) சுட்டுவதைக் காணலாம் என்ற பாடல் வரிகளுக்கு ஏற்ப பரத்தையர் வாழ்வு இருந்துள்ளதை சங்க இலக்கியம் விளக்கி நிற்கிறது.

**"காதலி இழந்த தபுதார நிலையும்**
**காதலன் இழந்த தாபத நிலையும்"** [14]

இழந்த மனைவியை எண்ணி வருந்துவது தபுதார நிலை. ஒரு பாடலில் (புறம். 245) மட்டுமே தபுதார நிலை பற்றி பேசக் காணலாம். ஆனால், கணவனை இழந்த மனைவியின் துயரைப் பற்றி விளக்கும் தாபத நிலைக் குறித்து பல பாடல்கள் (புறம். 373, 240, 246, 247, 238, 250) விளக்கம் தந்து செல்வதைக் காணலாம்.

## தொல்காப்பியம் வழி பெண் மதிப்பீடு:

பெண்ணுக்கான இலக்கணமாக தொல்காப்பியம் பின்வருவனவற்றை பட்டியலிடுகின்றது.

காலத்தால் பழமையான தொல்காப்பியம் பெண்ணுக்குரிய இலக்கணத்தையும், பண்பையும் வரையறுத்துச் சொல்கின்றது.

**"அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்**
**நிச்சமும் பெண்பாற் குரிய என்ப"** [15]

அச்சம், நாணம், பேதமை ஆகிய இம்மூன்றும் பெண்ணுக்குரிய இயல்பாகும்.

**"உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றென்"** [16]

உயிரினும் நாண் சிறந்தது. அதனினும் குற்றந் தீர்ந்த காட்சியினையுடைய கற்புச் சிறந்ததென கற்பினைக் குறித்து கூறுகிறார்.

**"கற்புங் காமமும் நற்பா லொழுக்கமும்**
**மெல்லியற் பொறையும் நிறையும்**
**....... கிழவோள் மாண்புகள்"** [17]

கற்பு – அறியாமை – ஒழுக்கம் – பொறுத்துப் போதல் ஆகியன பெண்களிடத்து எப்பொழுதும் இருக்க வேண்டிய நற்குணங்கள் என்கிறார்.

**"உயிரும் நாணும் மடனும் என்றிவை**
**செயிர்தீர் சிறப்பின் நால்வர்க்கும் உரிய"** [18]

உயிரும், நாணும், மடனும் என்று சொல்லப்பட்ட இவை குற்றம் தீர்ந்த சிறப்பினையுடைய தலைமகட்கும், தோழிக்கும், செவிலிக்கும் உரியது என்கிறார்.

**"செறிவும், நிறைவும் செம்மையுஞ் செப்பும்**
**அறிவும், அருமையும் பெண்பா லான"** [19]

அடக்கம், அமைதி, மனங்கோடாமை சொல்லுதல், நன்மை பயப்பனவும், தீமை பயப்பனவும் அறிதல், உள்ளக் கருத்தறிதலருமை ஆகிய இவையெல்லாம் பெண்பாலுக்குரிய இயல்புகளாகும் என்கிறார்.

**"தற்புகழ் கிளவி கிழவன்முன் கிளத்தல்**
**எத்திறத் தானும் கிழத்திக் கில்லை**
**முற்பட வகுத்த இரண்டலங் கடையே"** [20]

ஒரு பெண் எவ்வளவு திறனுடையவளாக, சிறப்புடையவளாக இருந்தாலும் தன்னுடைய உயர்வினை தன் கணவன் முன்பாகச் சொல்லுதல் கூடாது என்கிறது. தன்னுடைய ஆண்மகன் பரத்தையிடத்துச் சென்று அவளது இன்பம் கசந்து தன் மனைவியிடம் வந்து கெஞ்சி நிற்கும்பொழுது வேண்டுமானால் தன் உயர்வை கணவனிடம் கூறலாமே தவிர இணைந்து வாழ்கின்ற காலத்து பெண் தன் கணவனிடம் தன் பெருமைகளைச் சொல்லவேக் கூடாது என்கிறது தொல்காப்பிய கற்பியல் இலக்கணம்.

**“தன்னுறு வேட்கை கிழவன் முற் கிளத்தல்**
**எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லை”** [21]

பெண் தன்னுடைய காதல் வேட்கையையும் வாயினால் கணவனிடம் வெளிப்படுத்துதல் கூடாது. குறிப்பாகவே தன் ஆசையைக் கூறுதல் வேண்டும்.

பெண்கள் கப்பலேறி வெளிநாடுகளுக்குச் செல்லுதலும் பழக்கமில்லை. போர்க்களத்தில் அமைந்துள்ள படைவீட்டிற்கு ஆடவர்கள் பெண்களை அழைத்துச் செல்லும் பழக்கமுமில்லை என்பதை,

**“முந்நீர் வழக்கம் மகடூஉவோடுஇல்லை”** [22]

**“எண்ணரும் பாசறைப் பெண்ணொடும் புணரா”** [23]

என்னும் நூற்பாக்கள் சான்றாகின்றன.

கணவனைப் பேணலும், வீட்டிற்கு வரும் விருந்தினரை உபசரித்தலும், சுற்றத்தாரைப் பாதுகாத்தலும் பெண்ணின் சிறந்த கடமைகள் என வரையறுத்துள்ளது தொல்காப்பியம்.

**“விருந்துபுறுந் தருதலுஞ் சுற்றம் ஓம்பலும்**
**பிறவு மன்ன கிழவோள் மாண்புகள்”** [24]

இப்பகுதியிலிருந்து தொல்காப்பியர் பெண்களுக்கு கூறும் இலக்கணமாக பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

அச்சம், நாணம், பேதமை எனக் குறிப்பிடும் தொல்காப்பியர் உயிரினும் சிறந்தது நாண் என்கிறார். பெண்களிடத்து இருக்கக்கூடிய நற்குணங்களாக கற்பு, அறியாமை, ஒழுக்கம், பொறுத்துப் போதல் ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார். அடக்கம், அமைதி, மனங்கோடாமை சொல்லுதல், நன்மை பயப்பனவும், தீமை பயப்பனவும் அறிதல், உள்ளக்கருத்தறிதல் அருமை போன்றவற்றை இயல்புகளாக குறிப்பிடுகிறார். மேலும் பெண்கள் கப்பல் ஏறி வெளிநாடுகளுக்குச் செல்லும் பழக்கம் இருந்திருக்கவில்லை. கணவனைப் பேணுதல், வீட்டிற்கு வரும் விருந்தினரை உபசரித்தலும் சுற்றத்தாரைப் பாதுகாத்தலும் ஆகியனவே பெண்களுக்கான இயல்புகளாக தொல்காப்பியம் வரையறுக்கின்றது.

**ஆண்–இலக்கணம்:**

பெண்ணுக்கான இலக்கணத்தை வரையறுத்த தொல்காப்பியம் ஆணுக்கான இலக்கணத்தையும் வரையறுக்கின்றது.

ஆணுக்குரிய இலக்கணத்தைக் கூறும்பொழுது,

**“பெருமையும் உரனும் ஆடூஉ மேன”** [25]

**“காமக் கிழத்தி மனையோள் என்றவர்”** [26]

**“மாயப்பரத்தை உள்ளிய வழியும்”** [27]

எனும் நூற்பாக்கள் ஆணின் இலக்கணத்தையும், ஒழுக்கத்தையும் விளக்கும் பதிவுகளாக உள்ளன.

விலை மகளிடம் ஆண் மகன் செல்லுதல் என்பது அன்று சமுதாயத்தில் அங்கீகரிக்கப்பட்ட ஒழுக்கமாவே கருதப்பட்டது. ஆண்களுக்கு கற்பு நெறி மிக மிகத் தளர்த்தப்பட்டு அதே நேரத்தில் பெண்களுக்கு மிகக் கடுமையாக நிலை நாட்டப்பட்டிருக்கிறது.

காமக்கிழத்தியாக விளங்கும் பெண்ணுக்கும் மனைவியாக விளங்கும் பெண்ணுக்கும் அக்காலச் சமுதாயத்தின் உறவு நிலை எப்படி இருக்க வேண்டும் என்பதை தொல்காப்பியம்,

**“தாய்போற் கழறித் தழீஇக் கோடல்<br>ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிய<br>கவவொடு மயங்கிய காலை யான”** [28]

இவ்வாறு கூறுகிறது.

ஆண்மகன் மனது எந்த நிலையிலும் சோர்வடைந்து விடக்கூடாது என்பன ஒழுக்கமாகவே கூறப்பட்டுள்ளது. ஆடவன் பல பெண்களை நாடினாலும் மனைவி அவன் உள்ளத்தில் துன்பமோ, சோர்வோ ஏற்படும்படி நடந்து கொள்ளக்கூடாது. ஏனென்றால் ஆண்மகனின் சோர்வைப் போக்கி அவனைக் காப்பது பெண்ணாகிய மனைவியின் கடமை என்கிறது தொல்காப்பியம். (தொல்.பொருள். கள.172) மனைவி காமக்கிழத்தியின் உயர்வுகளையும், சிறப்புகளையும் தன்னுயர்வாகவே கருதிக் கொள்ள வேண்டுமென்றும், மனைவி, காமக்கிழத்தி ஆண் மகன் பணிக்கின்ற கட்டளைகளை அப்படியே ஏற்று நடத்துதல் வேண்டும் என்பதும், மனைவியாகிய பெண்ணின்மகனுக்கு அந்த காமக்கிழத்தி தாய் அதாவது ‘மகன்தாய்’ என்றும் ஆண் சார்ந்த கொள்கையை வழிநடத்தி விளக்குகிறது தொல்காப்பியம்.

ஆண் ஒரு செயலை, தொடங்கும் போதெல்லாம் தன் மனைவிக்கும் முன்பாகத் தன் பணியின் உயர்வுகளைக் கூறலாம் என்கிறது தொல்காப்பியம்.

**“கிழவி முன்னர் தற்புகழ் கிளவி**
**கிழவோன் வினைவயின் உரிய என்ப”** [29]

ஆனால், பெண்ணிற்கு இவை மறுக்கப்படுகிறது என முரணை பாலின வேறுபாடாகப் பதிவு செய்துள்ளது தொல்காப்பியம்.

இல்லத்தலை மக்கள் ஒத்த கிழவனும் ஒத்த கிழத்தியும் பத்து வகை ஒப்புமைப் பண்புகளை உடையவர்களாக விளங்க வேண்டுமென வரையறுத்துக் கூறுகிறது தொல்காப்பியம். (தொல்பொருள். களவு **90:3**, மெய்ப்பாடு **25**) அப்பண்புகளில் தலைமகன் “மிக்கோ னாயினும் கடிவரை இன்றே” (தொல்.பொருள். களவு. **90:4**) என்கிறது தொல்காப்பியம்.

பெண்ணுக்கு அச்சம், நாணம், மடம், அடக்கம், பெருமை பேசாது இருத்தல், வேட்கையைக் கூறாதிருத்தல் போன்ற பண்புகளையும் பெருமை, உரன், பரத்தமை, ஒழுக்கம், தற்புகழ் கூறல் போன்றவற்றை ஆணுக்குரியது என்றும் வரையறுத்துக் கூறியுள்ளமையை அறியலாம்.

முதன்மை இலக்கணமான தொல்காப்பியம் பெண் அறம் பேணவில்லை என்பதை நூற்பாக்கள் தெற்றென விளக்கி நிற்கின்றன.

**கற்பு**

‘கற்பு’ என்பதற்கான இலக்கணத்தைப் பெண்ணிற்கு வரையறுத்துவிட்டு, ஆண் உயர்ந்தவன், தலைவியைப் பெற்றுக் கொள்பவன் என்ற உடைமை ஆதிக்கச் சிந்தனைக் கொண்டவனாகவும் இருப்பவன் என்று வரையறுக்கிறது தொல்காப்பியம்.

**“கற்பெனப் படுவது கரணமொடு புணரக்**
**கொளற் குறிமரபிற் கிழவன் கிழத்தியைக்**
**கொடைக்குரிய மரபினோர் கொடுப்பக் கொள்வதுமே”** [30]

**“ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
**ஒன்றி உயர்ந்த பால தாணையின்**
**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**
**மிக்கோ னாயினும் கடிவரை இன்றே”** [31]

என்ற நூற்பா வழி தலைவனும் தலைவியும் வாழ்நிலையால் ஒத்த இவ்விருவரும் காண்பர். அவற்றில் தலைவன் அதாவது ‘ஆண்’ மிக்கோனாயினும் கடிவரை இன்றே பெண்ணை விட உயர்ந்தவனாக (தகுதி) இருந்தாலும் கடிவரை இல்லை என்று கூறுகிறது.

'பெண்'ணை பொறுத்த வரை.

**"உயிரினும் சிறந்தன்று நாணே, நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று"** [32]

உயிரைவிட, நாணத்தைவிட கற்பு சிறந்தது என்கிறது. மேலும்

**"கற்பு வழிபட்டவள் பரத்தை ஏத்தினும்**
**உள்ளத் தூடல் உண்டுஎன மொழிப"** [33]

அத்தகைய கற்புடையவள், கற்பு வழிப்பட்டவள் ஆண் பரத்தையை நாடினாலும், அவளைப் புகழ்ந்து பேசுவதன் வழி பெண் அவனது இருப்புக்கு உட்பட்டவளாக, விதியை மீறாது, இருப்பதே சமூக நியதி என்ற போதனை விதிக்கப்பட்டிருக்கிறது என்பதை இந்நூற்பா வழி அறிந்து கொள்ள முடிகிறது.

பெண்ணிற்கு என்று வரையறுத்த கற்பில் மேலும் மூன்று நிலைகளைப் பற்றி குறிப்பிடுகிறார் தொல்காப்பியர் (தொல்.1025) கணவன் இறந்தவுடன் மனைவி இறத்தல், உடன்கட்டை ஏறுதல், கைம்மை நோன்பு நோற்றல் இம்மூன்று வகையான கற்பினைச் சங்க இலக்கியம் காட்சிப்படுத்துகிறது.

மேலும் பெண்ணை அழைக்கும் போது கற்பு என்ற சொல்லாட்சியுடன் கையாளுவது அவள் அத்தன்மையுடன் இருத்தல் வேண்டும் என்பதை வலியுறுத்திச் செல்வதாகவே இருந்திருக்கிறது. ஏனெனில் இச்சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் பல்வேறு அடைமொழிகளுடன் பல இடங்களில் கையாளப்பட்டுள்ளன. சான்றாக மாசில் கற்பு (நற்.15:7), முல்லை சான்ற கற்பு (நற். 142. அகம் 274), மறுவறு கற்பு ( பரி.5, திரு.6) திருநகர் அடங்கிய கற்பு (அகம் 114:13) அருந்ததியணைய கற்பு (ஐங்.442) மீனொடு புரையும் கற்பு (பதிற்.89, புறம் 122, கலி,2) கடவுட் கற்பு (அகம் 314, 184, புறம் 198) நன்றி சான்ற கற்பு (நற் 330.10) நிலையிய கற்பு (கலி2) ஆன்ற கற்பு (அகம் 198) போன்ற பல தொடர்கள் பெண்ணை தெய்வ நிலைக்கு ஏற்றி கூறுவதாக அமைந்திருப்தை அறிய முடிகிறது.

**"மீனொடு புரையும் கற்பின்**
**வாணுதல் அரிவையொடு காண்வரப்"** [34]

அருந்ததி போன்ற கற்புடையவள் அரசமாதேவி. திருமணம் நிகழும்போது மகளிர் தாம் மணக்கும் கணவனைப் பிரியாமல் கற்புவழி ஒழுகும் இயல்பு மேம்பட அருந்ததியைக் காட்டுதல் மரபு என்ற கருத்தியலை கொண்டு கூட்டி மிகைப் படுத்தினரோ எனின் அதனை ஆய்ந்துணர முடியும்.

**"காமர் கடவுளும் ஆளும் கற்பில்"** [35]

அழகிய கடவுளையும் ஏவல் கொள்ளும் கற்பையுடைய காமர்கடவுள் அருந்ததி என்பர். கற்புடை மகளிரை கடவுள் என்பதும், அவருக்கு தெய்வம் ஏவல் செய்யும் என்பதும் அறிஞர்தம் உரையின் வழி அறியமுடிகிறது.

ஆறிய கற்பும், அடக்கமான பெண்மையும் உடையவள் ஊடல் காலத்திலும் இனிய சொல்லையே கூறும் இனிய முறுவலினை உடையவள்.

**"ஆறிய கற்பின் அடங்கிய சாயல்**
**ஊடினும் இனிய கூறும் இன்னகை"** [36]

அரசன் காதல் மகளிரை நாடிச்சென்ற பிறகும் சினம் கொள்ள வேண்டிய போதும் சினம் கொள்ளாத கற்புடையவள். அரசமாதேவி ஊடல் கொண்டபோதும் வன்சொற்கள் இன்றி மென்மையானவற்றையே பேசுபவள் என்பது ஊடல் கொண்டபோது பொதுவாய் மகளிர் வெளியில் வெம்மையும், உள்ளே தண்மையும் கொண்ட சொற்களைப் பேசுதல் இயல்பு. ஆனால் அரசியோ (அகம்/புறம்) இனிமையான சொற்களையே பேசுபவள். இத்தகைய கற்பாள் உயர்ந்த நின் காதல் மகளிர், **"புரையோர் உன்கண் துயிலன் பாயல்"** (பதிற். **16:18)** என குலமகளின் கற்பினை பதிற்றுப் பத்து கூறுகிறது.

கணவன் இருக்கும் போதும், அவன் இறந்த பிறகும் அவனைச் சார்ந்தே பெண்ணின் வாழ்வு இருந்தமையை கற்பின் **3** படிநிலைகள் சுட்டிக்காட்டுகின்றன. கணவன் இறந்தபிறகு அவனுடன் இறக்காமல் இருக்கும் பெண்கள் தீப்பாய்தல் அதாவது உடன்கட்டை ஏறுதலே மேலானது என்பர். இந்நிலையினை பின்வரும் பாடல்கள் சான்றுகாட்டி நிற்கின்றன. மகளிர் போர்க்களத்திற்குக் சென்ற கணவர் திரும்பி வராமையால் மன்றத்தில் எரியை மூட்டி துயில் பாய்ந்து உயிர் விடுதலை உடனே சென்று (போர்க்களத்தில் சென்று) கணவர் பெற்ற விழுப்புண்ணின் திறம் காண விரும்பி விரைகின்றனர்.

**"நல்லில் புலம்பக் கடைக்கழிந்து**
**மன்றம் பேணார் புண்உவந்து"** [37]

என்று கணவனை இழந்த பெண்களின் செயல்பாட்டினைப் புறநானூறு கூறுகின்றது.

ஆய் அண்டிரன் இறந்ததும் அவனது உரிமை மகளிர் அவன் எரியும் ஈமத்தில் உடன் வீழ்ந்து எரிவதை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் காண்கிறார். மேலும், அவரது மனக்கண்ணில் ஆயனை தேவர் உலகில்

உள்ளவர் வரவேற்பதைக் கண்டதாக புறநானூற்று 241–ம் பாடலை பாடியுள்ளார். குட்டுவன் கீரனார் எனும் புலவரும் இப்பொருள்பட பின்வரும் பாடலைப் பாடியுள்ளார்.

> **"பாடுநர்கு அருகா ஆஅய் அண்டிர**
> **கோடுஏந்து அல்குல் குறுந்தொடி மகளிரோடு**
> **காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப**
> **மேலோர் உலகம் எய்தினன்"** [38]

இந்நிலை (தீப்பாய்தல்) மேலானது என்று மகளிர் கருதியமை புலப்படுகின்றது. ஏனெனில் கைம்மை மகளிராக வாழ்தல் மிகவும் கொடுமையானது என கைம்மை நிலையின் அவல நிலையினை சங்கப்பாக்கள் வழி அறியமுடிகிறது.

உணவில் நெய் சேர்க்காமல், இலைக்கறியாகிய கீரையோடு கூடிய பழஞ்சோற்றை எள்சாந்தோடு புளிசேர்த்துச் சமைத்த வேளைக் கீரையுடன் அல்லி அரிசியை உணவாகக் கொண்டு, சிறுசிறு பரல்கற்கள் போடப்பட்ட படுக்கையில் பாய் இல்லாமல் உறங்குதல் வேண்டும்" (புறம் 246) மேலும் தலைமுடியை மழித்துக் கொள்ளுதல், (புறம். 25:12–14) வளையலை நீக்கிவிடுதல் (புறம் 250) உண்ணவேண்டிய பொழுதை மறுத்துப் பொழுதல்லாத வேளையில் அல்லி அரிசியை உண்ணுதல் (புறம் 248) வெந்ததும் வேகாததுமான வேளைக்கீரை கலந்து சோறு. வெள்ளை எள்ளும் புளியும் இட்டு சமைத்த குழம்பும், அணில் மீதுள்ள வரியைப் போன்று முற்றிய வெள்ளரிக்காயின் விதைகளைப் போன்ற பெரிய பெரிய சோற்றுப்பருக்கைகளைத் நெய்கலவாத சோற்றுத் திரளையில் நீர் ஊற்றி கையால் பிழிந்து (புறம் 247) உண்ணுதல்.

முதலான கைம்மை நோன்பினைக் கடைப்பிடித்தே வாழ வேண்டும். கணவன் இறந்தபிறகு வாழும் பெண்ணின் நிலை இவ்வாறாகவே இருத்தல் வேண்டும் என்று அரச விதி சொல்லப்பட்டிருக்கிறது. கணவன் இறந்துவிட்டால் அவனது மனைவி அவனுக்குப்பின் எத்தகைய ஆதாரத்துடனும், பற்றுக்களோடும், தலைவரின் உழைப்பு அல்லது அவன் ஈட்டிய பொருள்களோடு இயல்பு வாழ்க்கையில் பொருளாதாரத் தகுதி பெற்றவளாக வாழக்கூடாது என்பதையும் அன்றாட உணவினையும் பிறர் போல உண்ணக்கூடாது. பக்கையில் படுத்தல் கூடாது, வளையல்கள் அணியக்கூடாது. உப்பில்லாத கீரை, நெய்யிடாத சோற்றுத் திரள், தலை மழித்து என தம்மை வருத்திக்கொண்டு உயிர்வாழும் வரை உலகில் அரசநியதியைக் கைக்கொண்டு வாழவேண்டும் என்ற அரசியல் நீதி சங்க காலத்தில் பெண்களுக்கான

வரையப்படாத சட்டங்களாக இருந்திருக்கின்றன என்பதை அறியமுடிகிறது, மேலும் அவன் இறந்த பிறகும் அவன் நினைவுடனேயே பெண்கள் வாழ வேண்டும் என்பதற்காக, கணவன் இறந்தபின் படையலுக்கான இடத்தைச் சாணத்தால் மெழுகும் பெண்களைச் சங்க இலக்கியம் (புறம் 249) காட்டுவதிலிருந்து இக்கருத்தினை அறியமுடிகிறது.

கணவனை இழந்த பெண் சாதாரண மனித வாழ்க்கையைக் கூட இழந்துபோகும் கொடிய நிலை சங்க காலத்தில் இருந்தமை பெண் கைம்மை அரச நீதியில் உரிமை மறுப்பாக எண்ணமுடிகிறது.

இக்கைம்மையின் அவல நிலை சாதாரண பெண்களுக்கு மட்டுமின்றி அரசகுலப் பெண்ணாக இருந்தாலும் இந்நிலை இருப்பதைப் பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு வேதனையோடு பேசுவதிலிருந்து அறிந்துகொள்ள முடிகிறது.

பெண்களுக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கும் இச்சடங்கின் கொடுமைகளை ஆடவர்களுக்கு உணர்த்தும் வகையிலும் அத்தகைய கைம்மை கொடுமையை விதி செய்து வைத்திருக்கும் அறிவிற்சிறந்த ஆடவராகிய சான்றோர்களுக்கு உரைப்பதாகவும், பிந்தைய சமுதாயத்தில் பெண்களே விரும்பி உடன்கட்டை ஏறியதற்கான காரணத்தையும் விளக்கும் வகையில் அறியத்தரும் செய்தி நம்மை அடிமைச் சமூகமாக தனிப்படுத்தி எழுந்த முயற்சியாகவே எண்ணிப் பார்க்க முடிகிறது. கணவனின் பிணம் எரியும்போது அந்த எரியுள் விழுந்து உயிர் இழக்கச் செல்லும் போது செல்க எனச் சொல்லாது எரியுள் விழவேண்டாம் ஒழிக என்று எரியுள் மூழ்கவிடாமல் தவிர்த்த சான்றோரே! குழுமி உள்ள சான்றோர்களே! இத்தகைய உங்களின் போக்கு மாறுபாடானது. குழுமியுள்ள சான்றோர்களே இது சூழ்ச்சிச் செயல் கணவனை இழந்து வாழும் நான் உலகில் கொடுமையோடு வாழ வேண்டும் என்று கருதியே நீங்கள் செய்யும் சூழ்ச்சி

> **"பல் சான்றீரே! பல் சான்றீரே!**
> **செல்க எனச் சொல்லாது, ஒழிக என விலக்கும்**
> **பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே!"** [39]

எனப் பேசும் அவளது குரலில் பொதுவான பெண்களுக்குரிய நியதியினை மறுத்து அரசகுலப் பெண்டிர்க்கு மூழ்கும் எரியுளை விலக்குவதும், அரச பொதுவிதியிலிருந்து விலகிய சமூக முரணாகவே உள்ளதை அறியமுடிகிறது. இது பெண்களுக்குள் வேறுபாட்டை விதைக்கும் 'பாங்கு' மட்டுமின்றி, கைம்மை படும் வேதனையைப் பெண்கள் அனுபவிக்க வேண்டும் என்ற அரச நியதியை

விதியை சுமக்கச் சொல்லி அறிவிக்கும் கொடுமையான போக்கு என்பதும் சங்க கால பெண்களின் மீது அரச நியதி கொண்ட அடிமை முறை என்பதும் அறிய முடிகிறது.

இப்பாடலை பூதப் பாண்டியனின் மனைவியான பெருங்கோப்பெண்டு பாடியுள்ளாள். இது சமூக நியதியை, அரச நியதியைப் பதிவு செய்யும் பாடலாகவே அமைந்துள்ளது. சமூகச் சிக்கலை, கொடுமையை, அடிமையை வெளிப்படுத்தும் தன்மையாகவே இந்நிலை உள்ளது.

**போர்க்களத்துள் பெண்**

> **"அடல்வேல் ஆடவர்க் கன்றியும் அவ்வில்**
> **மடவரல் மகளிர்க்கு மறம் மிகுந்தன்று"** [40]

வெற்றியை உடைய மறக்குடியில் தோன்றிய ஆடவர்க்கே அன்றி, அக்குடியில் பிறந்த பெண்களுக்கும் மறப்பண்பு விளங்கியதை மூதின்முல்லை வழியாக பதிவு செய்திருக்கிறார் ஒக்கூர் மாசாத்தியார். பெண்கள் வீரவுணர்வும், போர் விருப்பம் கொண்டவர்களாகவும் இருந்துள்ளமையை சங்கப்பாக்கள் (புறம் 278, 277, 279, 295, 310, 86, 306) தெற்றென விளக்கி நிற்கிறது. இருப்பினும், போர்க்களத்தில் அற அடிப்படையிலான வரையறையில்

> **"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்**
> **பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
> **தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
> **பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்**
> **எம் அம்பு கடிவிடுதும் நும் அரண் சேர்மின்"** [41]

என்ற நெட்டிமையார் பாடல் வழி பெண்கள் போர் அறத்தில் இருந்து விலக்களிக்கப் பட்டிருந்தனர் என்பதை அறிய முடிகிறது. இந்நிலை பொதுவுடைமை சமூகத்தில் ஆணுக்கு நிகராக, ஒரு குழுவிற்கே தலைமை தாங்கி வேட்டையாடியதையும், போர்க்களத்தில் வாள் ஏந்தி போராடியதையும் காட்டும் தாய்வழிச் சமூகம் மதிக்கப்படவில்லை என்பதை அறியமுடிகிறது.

சங்கச்சமூகம் பெண்ணிற்கான கடமையாக. "ஈன்று புறந்தருதல் என்தலை கடனே" (புறம் 312) என்கிறது. குழந்தைப் பேற்றிற்குரியவர் பெண்கள் எனக் கருதி அவளது உடல்திறன் குறைத்து மதிப்பிடப்பட்டிருக்கின்றது. போர்க்களத்தில் மறுக்கப்பட்டிருக்கிறது. நாடு காக்கும் பணியில் பெண்கள் கடமையாற்றியுள்ளனர் என்ற பொது கருத்து உரைக்கப்பட்டிருந்தாலும் போர்க்களத்தில் பெண்களின் உடல்திறன் மதிக்கப்படாமல் விலகி வைத்திருந்த

நிலை அவர்களை வலிமையற்றவர்களாகக் காட்ட ஆண்கள் முனைந்த ஆதிக்க விதி என்று உணர வைக்கிறது.

வேட்டைச் சமூகத்தில் இயற்கையோடு போராடிய பெண் அரசனது அரசியலுக்குள் போர் அறத்துள் மறுக்கப்பட்டிருக்கிறாள்.

அரசனின் அறம் காக்க தம் குடிவழி பிறந்த குழந்தையைப் போர்க்களத்திற்கு அனுப்பிய மறக்குடி மகளிரின் வீரத்தை ஒக்கூர் மசாத்தியார், காக்கை பாடினியார், நச்செள்ளையார், பூங்கண் உத்திரையார், காவற்பெண்டு, பொன்முடியார் போன்ற புலவர்கள் பாடியுள்ளனர். இப்பாடல்கள் வழி தம் குலம் தழைக்கப் பிறந்த ஒரு மகனையும், தம் நாட்டு பொருளீட்டுவதற்காக ஈந்த (இழந்த) பெண்ணின் போர் அறம் அரசனின் அறத்துள் (வீரமகனைப் பெற்ற) சமமாகப் பார்க்கப்பட்டதாக பதிவுஇல்லை. அரசனின் அறநெறி வழிநின்ற பெண்ணிற்கு அரசனின் அறம் பெற முடியாமல் போனது. அரசனின் அறத்துள் ஆணிற்கு தரப்பட்ட தாயம் அரச உரிமை (பொருநர் 132, பட்டினப்.227, புறம் 213, பதிற்.74) பெண்ணுக்கு மறுக்கப்பட்டிருக்கிறது.

பெண்களின் வாழ்வு என்றும் பிறரை சார்ந்திருப்பதிலேயே அமைந்து விடுகிறது. அச்சார்பு துணையினை (தந்தை, தமையன், கணவன், மகன்) நாட்டிற்காக இழக்கின்றனர். கணவனை இழந்த மகளிரின் நிலை சமூக தளத்தில் மிக கொடுமையானது (கைம்மை) என்பதை அறிந்திருந்தாலும் நாட்டிற்காக தமையனையும், கணவனையும் போருக்கு அனுப்பி அவர்களை இழந்தும், தமக்கு ஒரே ஆதாரமான தம் மகனையும் போருக்குச் செல்வாயாக என அனுப்பிய பெண்ணின் வீரம்அரசனின் அறத்துள் சமமாக பார்க்கப்படவில்லை என்பது தெற்றென விளங்கி நிற்கிறது.

**"மூதில் பெண்டிர் கசிந்து அழ நாணிக்"** [42]

இவ்வரி மறக்குடி மகளிரின் மறத்தை, மாண்பை விளக்கி நிற்கிறது. போர்க்களத்தில் கணவன், புதல்வர் உயிர்போயினவே என்று அழாமல் மகிழ்ச்சி அடைந்த வீரச்செருக்குற்ற பெண்கள் இருந்துள்ளமை புறப்பாடல் விளக்கும். தமக்கு உண்டான வீரச்சிறப்பு, மானம், வெற்றி என்ற இவற்றை எண்ணி மகிழ்ந்தனர். இவர்கள் தன்மானத்தை இழக்கும்வேளையிலும் வீரத்திற்கு இழுக்கு ஏற்பட்ட சூழலிலும் மட்டுமே துயரடைவர், அழுவர் என புறநானூறு பதிவு செய்கிறது.

நாட்டிற்கு மாண்பினை ஏற்படுத்தி நிற்கும் பெண்களின் இப்பண்பு அரசனின் போர் அறத்துள் இணைக்கப்படாமலே உள்ளதை அறியலாம்.

**மனையுறை மகளிர்**

ஆண்கள் பொருள் ஈட்டுவதற்காக கடல் கடந்து செல்லும் போது பெண்களை உடன் அழைத்துச் செல்வதில்லை. போருக்குச் செல்லும் காலத்தும் அவர்கள் செல்வது இல்லை என்பதை,

> **"முந்நீர் வழக்கம் மகடூ உவொடு இல்லை"** [43]

> **"எண் அரும்பாசறை பெண்ணொடு புணரார்"** [44]

தொல்காப்பியம் மொழிகிறது. சங்க இலக்கியமும்,

> **"வினையே ஆடவர்க்கு உயிர் வாணுதல்**
> **மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"** [45]

தொழில்தான் ஆண்மக்களுக்கு உயிராகும். இல்லின்கண் உறையும் மகளிருக்குக் கணவன் உயிராவர் என்று பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடுகிறார். பெண்கள் இல்லிற்கு உரியவள் என்று பெண்ணிற்கான இடத்தை வரையறுக்கிறார்.

பெண்பாற் புலவரான ஔவையும், வினை ஆடவர்க்கு, மனை பெண்டிர்க்கு என்ற பொருளில்,

> **"...............வினை முற்றி வரூஉம் வரை நம்மனை**
> **வாழ்த்தும்............................"** [46]

என்று கூறியுள்ளார்.

இதன்வழி சங்கச்சமூகம் பெண்ணிற்கான 'இடம்' 'இல்' இருத்தல் என்பது புலனாகிறது. சமூக உற்பத்தியில் ஆண் பெண் இரு பாலினமும் சமத்துவம் கொண்டது. பெண்கள் மனையில் இருப்பவர்களாகவே காட்சிப்படுத்துகிறது.

**பொருள்**

> **"அருளும் அன்பும் நீக்கித் துணை துறந்து**
> **பொருள்வயிற் பிரிவோர் உரவோர் ஆயின்,**
> **உரவோர் உரவோர் ஆக**
> **மடவம் ஆக மடந்தை நாமே"** [47]

அருளையும், அன்பையும் துறந்து தன் துணைவியையும் விட்டு பிரிந்து பொருள் தேடும் முயற்சியின் பொருட்டு பிரியும் தலைவன் அறிவுடையவர் என்று கூறும் தலைவியின் கூற்று வழி பொருள் பெறுதலும் அதன் பயனும் ஆணைச்

சார்ந்ததாகவே இருக்கும் நிலையினையும் அவன் வரவை எதிர்நோக்கிக் காத்திருத்தல் / இல் இருத்தல் பெண்ணின் கடனாக இருந்த நிலையினையும் அறிய முடிகிறது.

**"பொருள்வயிற் பிரிவார்ஆயின் இவ் உலகத்து**
**பொருளே மன்ற பொருளே**
**அருளே மன்ற ஆகும் இல்லதுவே"** [48]

பொருளே உலகத்தின் செல்வமாகிய உறுதி பொருளாகிவிடும். அருள் என்பது தன்னை ஏற்றுக்கொள்வார் யாரும் இல்லாததாகிவிடும் என்று கூறும் தலைவியின் கூற்றின் மூலம் பொருள்வயின் பிரிவின்வழி பொருளின் சிறப்பையும் சங்க காலத்தில் அவை நிலைப்பெற்ற பான்மையும் அறிய முடிகிறது.

அத்தகு பொருளை ஈட்ட பெண்கள் மேற்கொண்ட அனைத்துத் தொழில்களும், முயற்சிகளும் பெரிதும் பேசப்படவில்லை என்பது தெளிவு. அவள் பொருளிற்காக பிரிந்து சென்று பொருள் ஈட்டவில்லை என்பதாலேயே அவள் உழைப்பும் காட்சிப்படுத்தப்படவில்லை என்பது ஆய்வில் உய்த்துணர முடிகிறது.

**அரச நியதியில் பெண்ணிற்கான தண்டனை**

நன்னன் எனும் மன்னன் நீரில் மிதந்து வந்த காவல் மரத்துக் கனியை உண்ட பெண்ணிற்கு கொலைத் தண்டனை விதித்தான். அப்பிழைக்குத் தண்டனையாக அவளுடைய தந்தை 81 களிறுகளையும் அவள் நிறைக்குச் சரியாக பொன்னால் ஆகிய பாவையையும் கொடுப்பதாகச் சொல்லியும் அதற்கு உடன்படாமல் அப்பெண்ணிற்கு கொலை தண்டனை விதித்தமை மக்களாலும், புலவர்களாலும் வெறுக்கப்பட்டது. இந்நிகழ்வு பெண்ணிற்கு நேர்ந்த பெரும் கொடுமையாக இருந்திருக்கிறது. இக்கொடுஞ் செயல் செய்தவனை, **"பெண் கொலை புரிந்த நன்னன் போல்"** (குறுந்.292.5) உவமை பொருளாக காட்சிப்படுத்துகிறது குறுந்தொகை. மேலும் அவன் செய்த செயலினையும் பரணர் இப்பாடலில் கூறுகிறார்.

**"மண்ணிய சென்ற ஒள்நுதல் அரிவை**
**புனல் தரு பசுங்காய் தின்றதன் தப்பதற்கு'**
**ஒன்பதிற்று ஒன்பது களிற்றொடு, அவள் நிறை**
**பொன் செய் பாவை கொடுப்பவும், கொள்ளான்"** [49]

இங்கு தண்டனைக்குள்ளாக்கப்பட்ட பெண் அரசியரா? தலைவியா? பரத்தையரா? என்பது குறித்த பதிவு இல்லை.

இத்தகு மன்னன் மரபில் வந்தவனையும் (இளவிச்சிக்கோ) புலவர் படாது விலக்கினார் என்பதன் வழி மன்னனின் அரச நியதியில் பெண்ணிற்கான நீதி பிறழ்ந்துள்ளது என்பதற்கு இந்நிகழ்வு ஒன்றே சான்றாக உள்ளது என்பதை அறியமுடிகிறது.

மருதநிலப் பெருக்கம் என்பது முக்கியப் பொருளாதார மையமாகத் திகழ்ந்தது. மருதநில ஊர்த்தலைவர்களான முதுகுடி மன்னர் அவர்கள்தம் பெண்களை மணம் செய்வதற்காக மகட்கொடை வேண்டி நின்றனர். மகட்கொடை மறுத்த முதுகுடி மன்னருடன் போரிட்டனர் வேந்தர்கள். இதற்கு காரணம் அப்பெண்ணும், அப்பெண்ணைப் பெற்றெடுத்த தாயும் என்று கூறுவது ஆணாதிக்க சிந்தனையாக உள்ளது. முதுகுடி மன்னர்களின் நியதியில் வேற்று நாட்டு மன்னர்களுக்கு மகளை திருமணம் செய்ய மறுக்கும்முறை இருப்பதை அறியலாம். பெண்ணிற்கு திருமண உரிமை மறுக்கப் பட்டிருப்பதோடு அல்லாமல் ஊரின் அழிவிற்கு பெண் காரணம் என்று கூறுவது அறமற்ற செயலாகவே பார்க்க முடிகிறது.

**"தகை வளர்த்து எடுத்த நகையொடு**
**பகை வளர்த்து இருந்த இப்பண்பு இல் தாயே"** [50]

**"முறம் செவி யானை வேந்தர்**
**மறம் கெழு நெஞ்சம் கொண்டு ஒளித்தோளே"** [51]

**"பேணுநர்ப் பெறாஅது விளியும்**
**புன்தலைப் பெரும்பாழ் செயும் இவள் நலனே"** [52]

**"அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை**
**மரம்படு சிறுதீப் போல**
**அணங்கு ஆயின் தான் பிறந்த ஊர்க்கே"** [53]

என்ற பாடல்கள் வழி தாயும், மகளும் போர் அழிவிற்கு காரணமாக இருக்கின்றனர். அப்பெண்ணின் அழகால் ஊருக்குப் பகைவர் மிகுதியாய் இருத்தலால் அறத்தை எண்ணிப் பார்க்கின்ற குணம் இல்லாதவர்களாக இருக்கின்றாள் என்ற பழிச்சொல்லிற்கு ஆளாக்குகிறது ஆணாதிக்கச் சமூகம்.

**மடலேறி அவளைப் (தலைவியை) பெறுதல்**

**"பொன்தேர் ஆவிரைப் புதுமலர் மிடந்தை**

**............................................**

**அவள் பழி நுவலும் இவ் ஊர்**
**ஆங்கு உணர்ந்தமையின் ஈங்கு ஏகுமார் உளேனே"** [54]

“பனங்கருக்கால் உண்டாக்கப்பட்ட மன செருக்கையுடைய குதிரையை அதில் கழுத்தில் பூட்டிய மணி ஒலிக்கும்படி ஊர்ந்து ஞானத்தை தொலைத்து மிக்க நினைவையுடைய உள்ளத்தே எழும் காமநோய் மேன்மேலும் மிகுதியாக இவளால் உண்டாக்கப்பட்டது இக்காமநோய் என்று தலைவன் கூறுவதன் வழி அக்கோலத்தைக் கண்ட இவ்வூரார் எல்லோருக்கும் முன்னே நின்று தலைவியை பழித்துக் கூறுவர். அங்ஙனம் உள்ளதொரு வழிமுறையை அறிந்திருத்தலால் இவ்விடத்தினின்று நீங்கிச் செல்கிறேன்” என்று கூறும் தலைவன் கூற்றின் மூலம் தான் விரும்பும் பெண்ணின் விருப்பத்தை அறியாமலே அவளைப் பெறுவேன் என்று கூறும் ஆணின் அதிகாரப் பாங்கும், இது பெண்ணின் உணர்வை மதிக்காத சமூகமாக இருந்துள்ளமையும் புலப்படுகிறது. மேற்கூறப்பட்டுள்ள பெண் மதிப்பீடற்ற ஆணாதிக்க செயல்களும், மடலேறி பெண்ணை அடைவேன் என்று கூறும் ஆணின் வஞ்சினமும் சமூகத்தில் பெண்ணின் தன் விருப்பம் சுய உரிமை மறுக்கப்பட்ட நிலை இருந்தமை காணலாம். பெண்ணிற்கான மதிப்பீடு சமூக தளத்தில் கீழ் நிலையில் பார்க்கப்பட்டிருப்பதாக அறிய முடிகிறது.

**முடிவுரை**

நாட்டு அரசியல் கருத்தமைவே சமூக இயங்கு தளத்தில் சட்டமாக அமைந்து விடுவதைக் காணமுடிகிறது. அந்த வகையில் சங்க இலக்கியமான எட்டுத்தொகையும், பத்துப் பாட்டும் அறியவையே. எனினும் சம காலத்து சமன்பாட்டு நோக்கமே முக்கியமானவை ஆகும்.

அந்த வகையில் சங்க இலக்கியங்கள் எழுதப்படாத சட்ட பதிவேடு (unwritten constitution) எனலாம். அரசர்கள், புலவர்கள் ஆளுமைக் கருத்துக்கள், தொழில்கள்... என சங்க கால சமூகம் பல தளங்களைக் கொண்டு இயங்கி வந்துள்ளது.

அவ்வியங்கு தளத்தில் நூற்றுக்கணக்கான பெண் தொழிலாளர்கள் நாட்டு வளத்தில் இணைந்திருந்தனர் என்பதை ஐவகை நில மக்களின் பெயராய்வின் வழி தொழில்களும் விளங்கி நிற்கும். பெண் கலைஞர்கள் போருக்கு ஆண் மகனை அனுப்பி, அரசனின் அறம் காத்த வீர மகளிர், போர்க்களத்தில் புண்பட்ட வீரர்களுக்கு மருத்துவம் செய்த விறலி, மருத்துவச்சியர், மதிநுட்பம் வாய்ந்த தூது புலவர், வள்ளல்களின் ஆளுமைத் திறத்தை நாட்டு மக்களுக்கு அறிவுறுத்தும் செய்தி பரப்புனராக இருந்த அறிஞர் பெருமக்களான பெண்பாற் புலவர்கள், வாய்மொழி பாடல்களால் வள்ளல்களை நாடி பாடியும், ஆடியும் பண் இசைத்த விறலி, பாடினியர் மற்றும் அரசியராக இருந்து கவிபாடிய திறனாளர் என பன்முக ஆளுமைகளோடு சமூக இயங்குதளத்தில் தடம் பதித்த வரலாற்றுக்குரியராக இருந்துள்ளனர் பெண்கள்.

ஐவகை நிலங்களின் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என முறையறிந்து பாடும் புலமையாளராக இயற்கையை அளந்து பாடிய திறனாளராக பெண்பாற் புலவர்கள் இருந்துள்ளனர். இத்தகு சிறப்புக்களைக் கொண்ட பெண்கள் வாழ்ந்த காலம் சங்க காலம் என்ற பெருமையை சங்க இலக்கியம் கொண்டமைந் திருக்கிறது. இது தமிழக வரலாற்றில் முத்திரைக் கற்கள் எனும் தனிச்சிறப்போடு பேசப்படுகின்றது.

சங்கப் புலவர் எனும் தகுதிப்பாடுடைய பெண்களைப் பாடும் திறம் வாய்ந்த மதிப்பிற்குரியவராக பார்க்கப்பட்டிருந்த சூழலில் பெண்களை மரபுவழிப்பட்ட சடங்குகளின் வழியாக அடிமைபடுத்தப்பட்டிருந்த சூழலும், அமைந்திருந்ததான பதிவுகளை பார்க்கமுடிகிறது.

தாய்வழிச் சமூகத்தில் பெண் தலைமை என்ற நிலையானது நிலம் உடைமையாக்கப்பட்டபொழுது இனக்குழு தலைவனின் அதிகாரத்திற்கு உட்பட்டதாக மாற்றம்பெற தொடங்கியது. பின்னர் சீறூர் மன்னர், முதுகுடி மன்னர், குறுநில மன்னர், வேந்தன் என ஐவகை நிலங்களும் வெவ்வேறு பகுப்புகளோடு உடைமையாக்கப்பட்டுவிட்டது என்பதை சங்க இலக்கியம் வரலாறாக தந்திருக்கிறது.

சங்க காலத்தில் முரணற்ற சமூகம் இருந்ததாக பதிவுகளை ஆய்வுலகம் தந்திருக்கிறது. அதனை சீறூர் மன்னர்களின் வரலாற்றின் ஊடாக அறியலாம். அதைப்போலவே இனக்குழு சமூகத்திற்கு முந்தைய சமூகமாக பொதுவுடைமை சமூகம் இருந்ததையும் அறிய முடிகிறது. நிறைந்த குளத்தில் சிறு கல்லின் அசைவு குளத்தின் தன்மையில் அலைகளென மாற்றத்தை விளைக்கும். அவ்வாறே பொது நியதி, அறம் என்ற விதிக்குள் மக்கள் முரண்பாடோடு இருந்ததாக அறியமுடிகிறது. அதிலும் குறிப்பாக பெண்களைக் கட்டுப்படுத்தி ஆளுமை செய்திருப்பதான பதிவுகளையும் காண முடிகிறது.

காலம் பரிணாம வளர்ச்சியைக் கண்டது. மருதநிலம் உருவானது. உற்பத்தி பெருகியது. அரசன் தலைமை வகித்தான் அவ்வளர்ச்சியில் நூற்றக்கணக்கான மரபு வழி தொழில் வினைஞர்களாக பெண்களும் சம அளவில் அங்கம் வகித்தனர் என்பதை தமிழ்ச் சமூக வரலாறு எழுத்துப் பதிவில் அவ்வளவாக பதிவு செய்யவில்லை. பெண்கள் குறித்தான பதிவுகளை அவ்வளவாக கருத்தில் கொள்ளாது இடைவெளியையே கொண்டமைந்தன. சமூகத்துள் ஆண் பெண் சமன்பாட்டுத் தேவை இல்லாமல் போனது. சமூக வளர்ச்சிக்கு ஆண் பெண் வேறுபாடு களையப்படவேண்டும் என்பதே அறம்.

ஆண் குழந்தையைப் பெறுவதே சிறப்புடைய மக்கட்பேறாய் கருதப்பட்டுள்ளது.

**“தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்**
**பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்**
**எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மின்”** (புறம் 9:3–5)

போர்க்காலத்தில் பாதுகாப்பான இடத்தை அடைய வேண்டுவோருள் ஒருவராக ஆண் மகவை பெறாதவரும் சேர்க்கப்பட்டுள்ளனர்.

நவீனம் பற்றி பேசும் அறிவியல் சூழலில் ஆண் பெண் உழைப்பு, அறிவு, சமநிலையில் வேண்டப்படுகிறது. இத்தகைய எதார்த்த நிலையில் ஆளுமைத் திறன் கொண்ட பெண்கள் சமூக அரங்கில் இரண்டாம் நிலைக்கு வைக்கப் பட்டுள்ளமை எதார்த்தம். மரபு சார்ந்த அறத்தில், நியதியில் பெண் குறித்த சிந்தனை சமமாக – அறமாக அணுகப்படவில்லை.

வேந்தன், அரசன், மன்னன், வீரன், புலவன், சான்றோன் என ஆண் எனும் பின்னொட்டு தனி மனித வினையடிப் பிறந்த உயர்வுப் பொருளிலேயே அமைந்துள்ளது. ஆனால் இல்லாள், மனையாள், இற்கிழத்தி எனும் சொற்கள் இடத்தையே அடிப்படையாக கொண்டு அமைந்துள்ளன.

ஒழுக்கத்தை மையப்படுத்தி பெண் ஒழுக வேண்டிய முறையை பொதுமைப் படுத்திக் காட்டும் வகையில் முல்லைச் சான்ற கற்பு, மாசில் கற்பு, அருந்ததி அணைய கற்பு, கடவுட் கற்பு போன்ற கற்புடையவள் என்று சுட்டியுள்ளனர். பரத்தை, காமக்கிழத்தி, வாலிழை மகளிர், சேரிப்பரத்தை, போன்ற சொற்கள் விலை மகளிர்க்குரியதாக பயன்படுத்தப்பட்டுள்ளன.

பனங்கருக்கில் மடலேறுதல் ஆணின் வீரமாகவும், பெண் கடல்கடந்து செல்லுதல் கூடாது என்றும் புறமுதுகு காட்டல் ஆணுக்கு இழுக்கு என்றும் அலர், வெறியாட்டு, கைம்மை, உடன்கட்டை ஏறுதல் இவை பெண்ணிற்கான இழிவு என்பதாகவும் சங்க இலக்கியம் சுட்டுகிறது.

ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே (புறம். 312) என்ற பாடல்வழி நாட்டின் அறம் காக்க பெண் செயல்பட்டால் என்பதாக அறியும் நமக்கு அரசநெறியில் பெண்ணிற்குரிய அறம் பேணப்படாத சூழலே மேலோங்கி நிற்பதை அறிய முடிகிறது. கணவனை இழந்த பெண்களை குறிக்கும் பெயராக, ஆடவர் துணையில்லாத மனைவியை குறிக்க ஆள்இல் பெண்டிர் என்ற இழிவைச் சுமத்தும் புனைவுப் பெயரை சுட்டிய முறையானது அரச நியதியுள் அநீதியை விளைப்பதாகவே எண்ணிப்பார்க்க முடியும்.

## சான்றெண் விளக்கம்

### இயல் – 8

1. க.அ.ஜோதிராணி, சமத்துவப் பயணத்தில் பெண் விடுதலைக் கல்வி, ப.178
2. மேலது, ப.271.
3. எஸ்.ஏ.பெருமாள், மனிதகுல வரலாறு, ப.58.
4. க.அ.ஜோதிராணி, சமத்துவப் பயணத்தில் பெண் விடுதலைக் கல்வி, பக்.271–272.
5. மதுரை. 600
6. அகம். 86:11–12
7. புறம். 312
8. பதிற். 74:18–21
9. புறம். 144:11–12
10. அகம். 396:15
11. தொல். 187
12. அகம். 146:9
13. கலி. 75:22
14. தொல். 1025
15. தொல். பொருள். களவு. 96
16. தொல். பொருள். களவு. 11
17. தொல். பொருள். கற்பு. 150:1–4
18. தொல். பொருள். பொருளியல் 198.
19. தொல். பொருள். பொருளியல் 206.
20. தொல். பொருள். கற்பு 178.
21. தொல். பொருள். களவு 116.
22. தொல். பொருள். அகத்து 37.
23. தொல். பொருள். களவு 173

24. தொல். பொருள். களவு 95
26. தொல். பொருள். கற்பு 144:49
27. தொல். பொருள். கற்பு 145:33
28. தொல். பொருள். களவு 171
29. தொல். பொருள். கற்பு 179
30. தொல். 1088
31. தொல். 1039
32. தொல் 1059
33. தொல். 1179
34. பதிற். 89:19–20
35. பதிற். 65:6
36. பதிற். 16:10–11
37. புறம். 373:11–12
38. புறம். 240:3–6
39. புறம். 246
40. பு.பொ.வெ.மா. 8–20
41. புறம். 9:1–5
42. புறம். 19:15
43. தொல். 37
44. தொல். 34
45. குறுந். 135:1–2
46. நற். 129:5–6
47. குறுந். 20
48. குறுந். 174:5–7
49. குறுந். 292:1–4
50. புறம். 336:11–12
51. புறம். 339:13–14
52. புறம். 336:6–7
53. புறம். 349:5–7
54. குறுந். 173, 182

வாழ்க்கையின் அனுபவ நெறியே வாழ்வியல். அனுபவப் பதிவுகளின் முதல் இலக்கியமே சங்க இலக்கியம். தமிழரின் இயங்கியல் வரலாற்றில் ஒன்று மற்றொன்றை உருவாக்குவது, பயன்பாட்டிற்கு உகந்தது, உதவுவது என்பதை அறிவோம். மாற்றம் பெறும் பயன்பாட்டை தன்னகத்தே கொண்டு அமைவது என்ற ஆக்க நிலைப்பாட்டோடு அமைந்திருப்பது சங்க இலக்கியத்தின் தனிச்சிறப்பு. செம்மை. செம்மொழி எனும் தகுதிப்பாடுகளுக்குள் நடுநிலைமை எனும் அறத்தை உலகமெலாம் பரவும் வகைக்கு பதினொரு சிறப்புக் கூறுகளோடு பொருந்தியிருப்பது தமிழரின் கொடை. அத்தகு ‘கொடை’ உலகெலாம் பரந்துப்பட்டு நிலைக்கவேண்டும். சமன், நடுநிலைமை எனும் அறப்பாங்கு பொதுமைப்பட அமையவேண்டும் என்ற தமிழ்ச்சான்றோரின் சிந்தனையைச் சிரமேற்கொண்டொழுகுவது கடமை. ஆகவே நடுநிலைமைக் கூறினை ஆராயும் நோக்கில் சங்க இலக்கியத்தில் பெண் அறம் ஆய்வுப் பொருளாக அமைந்துள்ளது.

சமப்பகிர்வு என்ற பொருண்மையையே தலைச்சொல்லாகக் கொண்டு ‘பெண் அறம்’ ஆய்வுசெய்யப்பட்டுள்ளது. சங்க இலக்கியம் சொல்லிய அறத்தை சமூக சமன்பாட்டு நோக்கில் தரவுகளோடு நடுநிலைமையினின்று விலகாமல் ஆய்ந்தளித்துள்ளது இவ்வாய்வேடு.

அறம் என்பது மனித குலம் அனைத்திற்கும் பொதுமைப்படுத்தப் பட்டிருந்ததாக அறியும் நமக்கு ஆண், பெண் என இருபாலினத்துள் அரச நியதியாக அமையாமற் போனதேன்? என்ற சிந்தனையே ஆய்விற்குத் தூண்டுதலாய் நின்றது. சங்க இலக்கியத்துள் அறம் என்ற பொருள் சமமாகப் பார்க்கப்பட்டிருக்கிறதா? என்பதை ஆராயும் நோக்கில் இவ்வாய்வேடு அமைகிறது. அறம் என்பது அரசநெறி என்ற சமூக அமைப்பில் முதன்மையானது.

சமூக நிகழ்வுகளைப் படிக்கும் நமக்கு எக்காலத்திற்கும் பயன்படக்கூடிய ஓர் இலக்கியத்தை நிகழ்காலத்தில் பொருத்திப் பார்ப்பது என்பது கால வரலாற்றின் தேவை. அந்தந்தக் காலச் சூழலுக்கேற்ப அமைந்துள்ள இலக்கியக் கூறுகளைத் தொடரும் வருங்கால சமூகம் எவ்வாறு இணைத்துக் கொள்ளலாம் என்பதை விளக்கும் வகையில் ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது. தொன்மை, முதன்மை, நேர்மை, நடுநிலைமை என பதினொரு பண்புகளோடு பதிவுறும் இலக்கியத்தில் சமூக முரணை விளைவித்த இடங்கள் பாடற்தரவுகளாக முன்வைக்கப்பட்டு **விளக்கமுறைத் திறனாய்வின்** வழி ஆராயப்பட்டுள்ளது.

பாலின வேறுபாடு முரணாகப் பார்க்கப்படாத வேட்டைச் சமூகத்தில் பெண்களின் உழைப்பு சமமானது என்பது குறிப்பிட்டுச் சொல்லவேண்டிய தேவை எழவில்லை. எழாது. ஆனால், வேட்டைச் சமூகம் இனக் குழுக்கள் என உற்பத்தி வளத்திற்கும் சமப்பங்காற்றியுள்ள பெண்ணின் இறுத்தலை கேள்விக்குள்ளாக்கப்பட்டுள்ள பாடல்களைச் சமூக வரலாற்றுத் தளத்தில் முன் வைப்பது இவ்வாய்வேட்டின் முதன்மை நோக்கமாய் அமைகிறது.

இவ்வாய்வின் நோக்கமானது, சங்க இலக்கியத்தில் பெண் வரலாற்றினைத் தனித்து வரைவு செய்து எழுதும் பணியில் முக்கியமானது.

சமகாலத்தில் வர்க்கமுரணும், பாலியல் முரணும் சமூகத்தில் ஏற்றத் தாழ்வினை விளைவித்து நிற்கின்றன என்பதால் இத்தகைய முரணைக் களைந்தெறியப் படவேண்டிய ஆய்வினை மேற்கொள்வது என்பதே ஆய்வின் இலக்கு. சங்க இலக்கியத்தில் அமைந்த சமூக முரணின் காரணத்தை அறிய முற்படுவதும், தொன்மை வரலாற்றை ஆதாரமாக்கிக் கொண்டு ஆய்வு செய்வதும் கடமை என்பதை இந்த ஆய்வேடு உணர்ந்திருக்கிறது.

அறம் என்பது சமத்துவத்தின் அடையாளக் குறியீடு. பெண்களுக்கான வர்க்கமுரணை, பெண்களுக்கான பாலியல் முரணை, பெண்களுக்கான பொருளாதார முரணை, பெண்களுக்கான நுட்பத் திறனை, பெண்களுக்கான அறிவுத் திறனை, பெண்களுக்கான வாழ்வியல் முரணை ஆதாரங்களோடு ஆய்வுத் தலைப்பின் பொருளினின்று விலகாமல் முன் வைக்கும் பணி இந்த ஆய்வேட்டில் முன் வைக்கப்பட்டுள்ளது.

பொதுவுடைமைச் சமூகத்தைத் தொடர்ந்து ஆண் அடிமைச் சமூகம் பின்தொடர்ந்த நிலையில், பெண் நுகர்வுப் பொருளாகப் பார்க்கப்பட்டு வரும் சூழலில் வர்க்கப் பார்வையோடு இணைந்த வரலாற்றை எழுதுதல் அவசியம். நூற்றுக்கணக்கான தொழில்களில், தொழில் உற்பத்திக் கருவிகளில் பெரும் பங்கு வகித்த சங்க இலக்கியப் பெண்களின் முழுமையான வரலாறு மறைக்கப் பட்டிருப்பதான இடத்தை **சமூக வரலாற்றுப் பார்வையோடு** இவ்வாய்வு விளக்குகிறது.

காதலும், வீரமும், போற்றுதல் தமிழ்ப்பண்பாட்டு மரபு என்பதை சங்க இலக்கியமே முதன்மைப்படுத்தியிருக்கிறது என்பதறிவோம்.

காதல் என்பதன் புதுமையைச் 'செம்புல பெயல்நீர்' என்கிறார் புலவர். இப்பாடற் கருத்து இன்றளவும் பொதுவான விளக்கமாக பெறப்பட்டிருப்பினும், குறிப்புப் பொருளாக 'அறம்', 'இணை', 'சமம்' என்று விளக்கப்பட்ட

முறையினை முன்வைத்திருப்பதை நுட்பமாய் புரிந்துகொள்ளலாம். செம்புலப் பெயல்நீர் என காதலின் – ஆண் பெண் உறவு, அன்பு, உளப்பகிர்வு, சமன் என மொழிக் குறியீட்டாக்கிய பான்மையைச் சங்க இலக்கியத்தில் ஆய்ந்துணர முடியும்.

பொதுமையான சமப்பங்கீட்டுச் சொல்லாக; பாதீடு, பகுத்துண்ணுதல், கூட்டுண்ணுதல் எனும் குறியீட்டுச் சொற்கள் சங்க இலக்கியத்தின் மொழியாடலுக்குள் விரிவாகப் பேசப்படாமல் போனது என்பதையும், அரசநியதி பேசும் பாடலுக்குள் பெரிதும் முக்கியத்துவம் பெறாமல் போனதையும் **சமூக வரலாற்றுப் பார்வையோடு** விளக்குகிறது ஆய்வேடு.

**சங்க இலக்கியத்தில் அறம் – குறியீட்டுச் சொல்** எனும் முதல் இயலானது; இயற்கை, சமப்பகிர்வு, இயல்பு, பொதுமை, சமம், சமத்துவம், என்ற மரபாக அமையவேண்டிய அறம் எனும் நடுநிலைமைச் சொல் தன் இயல்பு தன்மையினின்று வினையாற்றாது சமகாலத்தில் வேறுபட்டு கடவுள், புண்ணியம், தருமம் என சங்ககால பொருண்மையினின்று முறைமாறிச் சென்றுள்ளது. செம்மொழித் தகுதியுள் 'கடவுள்' முதன்மைப் பெறாத நிலையினை ஈண்டு எண்ணிப் பார்க்கலாம். சம காலத்தில் பொதுமை இழந்து நிற்கக்கூடிய சூழல் ஏற்பட்டுவிடுமோ என்ற சமூக அக்கறையோடும், சமூக குற்றம் நிகழ்ந்துவிடக் கூடாது என்ற பொதுச் சிந்தனையோடும், நடுநிலைமை எனும் பொருள்கொண்ட செம்மொழிப் பொதுமையை இனிவரும் இலக்கியங்களும் பயனுறு சொல்லாகப் புரிந்து வினையாற்ற வேண்டும் என்ற நோக்கில் செம்மொழி தகுதியுள் நிற்கும் 'நடுநிலைமை' எனும் சொல் 'அறம்' என ஆய்வேட்டில் அணுகப்பட்டுள்ளது.

'துன்பத்தின் இருப்பை உணர்வதும், துன்பத்தைக் களைவதற்கான வழியைக் காட்டுவதுமே பௌத்த தம்மத்தின் அடித்தளமும், அடிப்படையாகும்.' (சு.மாதவன், தமிழ் அற இலக்கியங்களும், பௌத்த சமண அறங்களும், ப.74) என்ற பௌத்த கொள்கையின் வழி சங்க காலத்து பெண்களின் இறுத்தலை, சங்க இலக்கிய வாசிப்பின் வழி அறியும்போது; அவர்களுக்கான இடம் அன்றைய காலத்து அரசநெறியில் துன்பத்தை விளைத்திருக்கிறது என்பது ஆய்ந்தறியப்பட்டுள்ளது. அத்துன்பத்திற்கான காரணங்களை அறிவதும், அவற்றினின்று களைவதற்கான காரணங்களை முன் வைப்பதுமான இலக்கு நோக்கிய பணியில் இவ்வாய்வேடு அமைகிறது.

சங்க இலக்கியம் தோன்றுவதற்கு முன்னதாகவே இருந்த சமயங்கள் சமணமும் பௌத்தமும். அவை இயல்பு நிலைக்குக் கொண்டுவருதல் அறம் என உணர்த்தும் வரையறையை இவ்வியல் முன்வைத்துள்ளது.

**சங்க இலக்கியத்தில் உற்பத்திக் கருவிகளும் பெண்களும்** எனும் இரண்டாம் இயலானது; இனக்குழுவில் பெண் தாய்மைக்குரியவள் என்று பேணப்பட்டு பாதுகாக்கப்பட்டாள். உற்பத்திக் கருவிகளின் ஆளுமை பெண்களை இரண்டாம் நிலைக்குத் தள்ளியது என்ற பொருண்மையோடு ஆதாரங்களுடன் விளக்கம் பெறுகிறது.

பழந்தமிழர் வாழ்க்கை தாய்வழிச் சமூகத்தைப் படைத்தது. இது சமத்துவக் காலம். பின்னர் வேட்டைக்கு இரு, சில, பல கைகள் போதாது என எண்ணப்பட்ட காலத்தில் முதன்மைத் தொழிலான வேட்டையாடுதலுக்கு மனித உற்பத்தி அவசியம் என உணரப்பட்டது. புதிய உயிரைப் படைக்கும் திறன் கொண்டுள்ள பெண்தான் உற்பத்தி வளத்தில் முக்கியமானவள். அதனால் மதிக்கப்பட்டாள். வேட்டைச் சமூகத்தில் மறு உற்பத்தியின மூலமானாள். இனக்குழுச் சமூகத்தில் உயர்ந்தவளானாள். தாய்வழிச் சமூகத்தைப் படைத்தாள். தலைமையேற்றவள் என்பதால் மனித குலத்தில் மதிக்கப்பட்டாள்.

சீறூர் மன்னனின் குழுவில் சீறூர் தலைவி சிறப்புக்குரியளாக பண்பாட்டைப் போற்றும் பெண்ணாக மதிக்கப்பட்டாள். சேமிக்கும் பழக்கத்தின் முதன்மையானாள். இவ்வாறு நாட்டு வளத்தில், பெண்ணின் உற்பத்தித் திறன் குறித்த விளக்கங்களும், உற்பத்திக் கருவிகளின் பெருக்கம், ஆளுமை, அதிகாரப்படுத்துதல் என பெண்ணை உடைமையற்றவளாக்கிய விவரணைகள் இவ்வியலுள் விளக்கம் பெறுகின்றன.

**நாட்டு வளத்தில் ஆண் பெண் தொழில்முறை பங்களிப்பு** எனும் மூன்றாம் இயலானது; மனித குலம் இயற்கையோடு இணைந்தும், போராடியும் பொருளீட்டி தம் உணவுத் தேவையை நிறைவு செய்துள்ளது. இயற்கையோடும், விலங்குகளோடும் போராடியே தமது உணவுத் தேவையை வேட்டைச் சமூகத்தினர் நிறைவு செய்துகொள்ளவேண்டிய தேவை ஏற்பட்டது.

தேவை என்ற பொதுமையான பயன்பாட்டுச் சொல்லாக உழைத்தல், தொழில், வினையாற்றல் எனும் சொற்களைக் கூறலாம். இப்பொருண்மை யினின்று ஆண் பெண் பகுப்பு, வேறுபாடு எனும் சொற்கள் தேவை என்ற பொதுப் பயன்பாட்டிற்குள் சமமாக பார்க்கப்படாத நிலையை பாடல்களினின்று **ஒப்பீட்டு ஆய்வின்** வழி ஆராயப்பட்டுள்ளது.

ஆண் பெண் தொழில்முறையில் பாகுபாடும் மதிப்பீடும் பொதுவான தாகவே அமைந்திருக்கவேண்டும். ஆனால் பெண்ணிற்கான இறுத்தல், மதிப்பு, மதிப்பீடு சார்ந்த சமன்பாட்டு விழுமியம் முரண்பட்டு அமைந்திருப்பது என்பதை

சங்க இலக்கியப் பாடற் பதிவுகளின்வழி அறிந்துணரலாம். சமன்பாடற்ற விழுமியத்தின் தொடர்ச்சியாகவே பின்னெழுந்த இலக்கியங்களும் பெண்ணின் இறுத்தலை படிநிலைகளில் வேறுபட்டு அணுகும் முறையோடு அமைத்துச் சென்றிருக்கின்றமை உய்த்துணர இயலும். பெண்ணின் உரிமை மறுக்கப்பட்டதற்கான மூல வித்தின் தொடர்ச்சி சங்க இலக்கியத்தில் இருந்தும் உருவாகி இருப்பதை **உளவியல் வரலாற்றுப்** பார்வையோடு அணுகப் பட்டிருக்கிறது.

**சங்க இலக்கியத்தில் அரசும் – அறம் பெறும் இடமும்** எனும் நான்காம் இயலானது; ஆளுமை என்பது 'ஆண்' தன்னை உடைமையாளன் என்பதைவிட குழுவிற்கும், கூட்டத்திற்கும், இனத்திற்கும், சிற்றூர், முதுகுடி மன்னர், குறுநிலமன்னர், வேந்தர் என்பவனவற்றுள்ளும் தலைவனாக, வீரனாக, செல்வனாக, நிலவுடைமையாளனாக, அதிகாரம் படைத்தவனாக தன்னை தனியுடைமையாளனாக்கிக் கொண்டான். தனது தலைமை எனும் வலிமையை பரந்துப்பட்ட எல்லைக்குள் பரப்பிடத் துணிந்தான். அது அவனின் வலிமையை, உடல் வலிமையை, மன வலிமையை, ஆற்றலை, வீரத்தை, அதிகாரத்தை, துணிவை பறைசாற்றுவதாய் அமையவேண்டும் என்ற நோக்கில் புலவர்களால் அரசநெறியாக்கப்பட்டது.

அரசனையன்றி, அந்தணனையும் மக்கள் வழிபடவேண்டும் என்ற தனிமனித வழிபாட்டு முறையை அந்தணர் ஏற்படுத்திய காலமாக சங்க இலக்கியத்தைக் கூறலாம். புலவர்களின் பாடல்கள் சான்றாக அமைகின்றன. **"அறம்புரி அந்தணர் வழி மொழிந்தொழுகி"** (பதிற். 24:8) வடபுலத்தார் கோலோச்சிய பாடல்கள் அமைவதையும் காணலாம்.

காமக்கிழத்தி, கொண்டி மகளிர், சேரிப்பரத்தை, வாலிழை மகளிர், தளரியலவர் என பெண்களை கீழ் நிலையில் வைக்கப்பட்டிருந்த காலமாக சங்க காலத்தை அறியலாம். **"ஆன்முலை அறுத்த அறனிலோர்க்கும்"** (புறம். 34:1) எனும் பாடலுள் பெண்ணிற்கான அறத்தை நோக்கின் தலைக்கற்பு, இடைக்கற்பு, கடைக்கற்பு என அறமற்ற தன்மையோடு வாழ்ந்த காலமாக சங்க இலக்கியத்துள் பதிவு இடம்பெறுவதையும், இவ்வியல் ஆய்கிறது.

சங்க இலக்கியத்துள் எதார்த்த உண்மைகளும், சடங்கியலாக, தொன்மக் கதைகளாக, அன்பாக, நட்பாக, காதலாக, வீரமாக, கொடையாக, திருமண முறையாக, கற்பு நெறியாக சொல்லப்பட்டு வந்திருக்கின்றன. அத்தகைய சொல்லாடல்களுக்குள் சீறூர் மன்னன், முதுகுடி மன்னன், குறுநில மன்னன், வேந்தன் எனும் பல்வேறு மன்னர்களின் ஆட்சி முறைகளுள் அரசியல்

கருத்தமைவுகளும், அறநெறிக் கூறுகளும் நியதிக்கான விளக்கங்களும் பதிவு செய்யப்பட்டுள்ளன. சங்க இலக்கிய அரச வாழ்க்கையும், அரசுரிமை பெண்ணிற்குரியதாக இல்லை. பெண்ணிற்கான அறம், சமத்துவம், அறநெறி, நியதி, மறுக்கப்பட்டுள்ளமை, சங்க இலக்கியப் பாடல்கள் வழி ஆராய்ந்து முன்வைக்கப்பட்டுள்ளது.

**கலைக்கூறுகளும், ஆண்பெண் கலைஞர்களின் பதிவுகளும்** எனும் ஐந்தாம் இயலுள்; பழந்தமிழர் தம் வாழ்வியலைப் பதிவுசெய்துள்ள சங்க இலக்கித்துள் கலை, கலைஞர்களின் கூறுகள் விளக்கப்பட்டுள்ளன. ஆடல், பாடல் கலைகளில் வல்ல கூத்தரும், பாணரும், பொருநரும், விறலியும், பாடினியும் சொல்லொனா வறுமையில் வாடினர். பெரும் சுற்றம் தழீஇ வாழ்ந்தனர். பெரிய சுற்றமும், நிலைத்த வருவாயும் சேமித்துப் பாதுகாக்கும் நிலையின்மையால் ஓரிடத்தில் நிலையாக இராமல், பாடி இரந்துபெறும் வாழ்க்கையோடும், வறுமையோடும் இருந்தமை பாடல்களின் சான்றுகளோடு முன்வைக்கப்பட்டுள்ளது.

**சங்க இலக்கியப் பாடல்களில் ஆண்–பெண்பாற் பெயர்கள்** எனும் ஆறாவது இயலானது; சங்க இலக்கியத்தில் தொழிற்சார் மரபுப்பெயர்களும், பொதுப் பெயர்களும், சிறப்புப் பெயர்களும் விளக்கப்பட்டுள்ளன.

மலைக்கிழவோன் (நற். 28:9), பெருமலை நாடன் (நற். 65:9), தண்துறை ஊரன் (குறுந். 91:3), சூர்மலை நாடன் (குறுந். 105:3), குன்றுகெழு நாடன் (குறுந். 87:3), குன்றநாடன் (குறுந். 90:6), அணித்துறை ஊரன் (ஐங். 14:3), மகிழ்நன் (ஐங். 24:3), கழனிஊரன் (ஐங். 4:5), வன்கைவினைஞர் (பதிற். 58:15), வெல்போர் வேந்தர் (பதிற். 79:12), வெல்போர் ஆடவர் (பதிற். 78:8), சென்னியர் (பரி. 7:80), வளமலைநாடன் (கலி. 43:14), ஆண்தகை (கலி. 47:7), மலைகெழு வெற்பன் (கலி. 41:16), கோவலர் (அகம். 14:7), கான்கெழு நாடன் (அகம். 22:2), வான்தோய் வெற்பன் (அகம். 38:5) என உடைமையாளனாகவே ஆண் சுட்டப்படுவதும்;

கொடிச்சி (நற். 22:1), மீனெறி பரதவர் மகளிர் (பதிற். 71:3), உமட்டியர் (சிறுபாண். 60), மடமகள் (நற். 101:7), குறமகள் (ஐங். 285:1), எயிற்றி (ஐங். 364:2, 365:3), எயிற்றியர் (பெரும். 94), கிளிகடி மகளிர் (மலைபடு. 329), தினைக்குறு மகளிர் (மலைபடு. 342), ஆடுமடமகள் (பதிற். 51:10), மனமகளிர் (பரி. 7:80), ஆயமகள் (கலி. 109:2), ஏனல்அம் காவலர் (அகம். 12:6), அண்டர் மகளிர் (அகம் 59:5), நாடக மகளிர் (பெரும். 55), பாண்மகள் (அகம். 126:9), மூதில் பெண்டிர் (புறம். 19:15, 279:2), கடைசியர் (புறம். 61:1), மனைக்கிழவோயே (புறம். 163:7), பாடுவல் விறலி (புறம். 152:13), புலைத்தி (அகம். 34:11), விறலி (அகம். 82:10),

இறைமகளிர் (அகம். 97:10), பாடினி (புறம். 11:11), கிணைமகள் (புறம். 111:4), ஆடுக விறலியர் (பதிற். 58:11), பாடுமகள் (பதிற். 44:7), வேல்பாடினி (பதிற். 61:16), பெருந்தகு பாடினி (பொருநர். 47) இந்நிலையில்;

இன்நகை மடந்தை (நற். 108:7), சேயிழை மகளிர் (அகம். 369:5), மனையோள் (அகம். 396:15), பதிவத மாதர் (பரி. 10:23), வாலிழை மகளிர் (கலி. 119:14), தளரியலவர் (கலி. 66:17), எழில் உண்கண் நல்லார் (கலி. 67:6), கொடியன்னார் (கலி. 67:10), துணைமலர்க் கோதையர் (கலி. 70:9), ஏதிலாள் (கலி. 81:30), உயவற் பெண்டிர் (புறம். 246:10), தொடிகழி மகளிர் (புறம். 238:6), தூவியற் கொள்கைத் துகளறு மகளிர் (புறம். 224:6), கழிகலம் மகடூஉ (புறம். 261:18), கலம்தொடா மகளிர் (புறம். 299:6,7) என பெண்களைச் சுட்டும்போது ஒழுக்கம், இயல்பு, சார்ந்தே அமைந்து செல்வதையும், பொருளாதார வரலாற்று ஆய்வின் வழி ஆராய்கிறது இவ்வியல்.

தொழிற்பெயர்களின் வழி ஆண்களை நிலம்சார் பொருள் தொழில் புரிவோராகவும், பெண்களைப் பெருந்தொழில்சாராத பெயர்களாகவும் சுட்டியும் பாடல்கள் பதிவு செய்துள்ளமை காண முடிகிறது.

நான்கு வகை நிலங்களிலும் பெண் தொழில் ஆண்களைப் போலவே தினைப்புனம் காத்தல், கிளிகடிதல், பறவை ஓட்டுதல், தயிர்மோர் விற்றல், உழவுத்தொழில், புல்லரிசி எடுத்தல், நெசவுத் தொழில், ஆடை வெளுக்கும் தொழில், ஏவல் தொழில், காவல் தொழில், பண்டம் விற்கும் தொழில், பூ விற்றல், போர்த் தொழில், தூது போன்ற நூற்றுக்கும் மேற்பட்ட இடங்களில் பதிவு செய்துள்ளதை காலச் சூழலோடு ஒப்பிட்டு நோக்கி ஆராயப்பட்டுள்ளது. ஆண் பெண் தொழில்வழியே நாடு வளர்ச்சியை அடைந்திருக்கிறது என்பதை வரலாற்றுப் பார்வையோடு விளக்கிச் செல்கிறது இவ்வியல்.

**சங்க இலக்கியத்தல் சடங்குகளும் தொன்மக் குறியீட்டுப் பதிவுகளும்** எனும் ஏழாவது இயலுள்; சங்க காலத்திற்கு முந்தைய மனிதகுலம், முதற்கொண்டே வந்த மரபு முறைகளே இன்றும் இயற்கை வழிபாடு, முன்னோர் வழிபாடு என ஐவகை நிலங்களிலும், செய்யப்பட்ட வழிபாட்டு முறைகள் தம் முன்னோரின் சடங்கு முறைகளாக சங்க இலக்கியப் பாடல்களிலும் எழுத்துருப் பெற்று அமைந்து சென்றுள்ளதை சங்கப் பாக்கள் வழி முன்வைத்துள்ளமை காணலாம்.

வேட்டைச் சமூகம் தொடங்கி பழைய கற்காலம், புதிய கற்காலம், செம்புக் காலம், இரும்புக் காலம், விவசாயம், தொழில் என விரியும் சமூக வரலாற்றுப்

படைப்பில் பரிணாம வளர்ச்சியில் அறிந்துணர்ந்த செய்திகளை விளக்கும் கதைகள் தொன்றுதொட்டு மாறாமல் அல்லது மையப்பொருள் மாறாமல் வடிவங்களில் மாற்றமோ கதையாடலில் மாற்றமோ பொதிந்து அமைவது தொன்மத்தின் இயல்பு. காலச்சூழல் மாற்றத்தில் மதங்களின், சமயங்களின் வருகையால் சொல்லப்பட்ட கதைகள், சமகாலத்தில் புராணச் செய்தியாக பேசப்பட்டு வருகிறது. அத்தகு புராணப் பதிவுகள் சங்க இலக்கியத்தில் இடைச்செறுகளாக (பெரும். 415–417, கலி. 101:58–60, சிறுபாண். 89–247) அமைந்துள்ள முறையினை இவ்வியல் ஆராய்ந்துள்ளது.

**சங்க இலக்கியத்தில் 'பெண்' மதிப்பீடு** எனும் எட்டாவது இயலானது; தொல்குடியினருள் உற்பத்திக் கருவி உடைமையில்லாத ஆண்களும் சமத்துவ நிலை இல்லாதவர்களாகவே அறியப்பட்டிருக்கிறது. எனினும் பரத்தமை பிரிவு, தலைக்கற்பு, இடைக்கற்பு, கடைக்கற்பு என கைம்மையின் பல்வேறு தண்டனைகளும், குறிப்பாக கணவனை இழந்த தாபத நிலை என்ற பொதுவான தண்டனையும் ஆண்களுக்கு இல்லை. அரசு, அதிகாரம் ஆடவர்களை அடிமைப்படுத்தவில்லை என்பது பொதுமை. ஆனால் தொல்குடி உற்பத்திக் கருவிகளின் பொருள் உடைமையற்ற ஆண்களை, கலைஞர்களை கீழ் நிலையில் வைத்திருக்கின்றது என்பதை இவ்வாய்வு உணர்ந்திருக்கிறது. எனினும் வேட்டைத் தொழில் முதலாக நூற்றுக்கணக்கான தொழில்களைச் செய்வதில் சமப்பங்காற்றிய பெண்களுக்கு அரசனின் அரசநெறியில் முழுமையாக அறம் வழங்கப்படாத நிலையினை இலக்காக கொண்டு இவ்வாய்வேடு அமைந்துள்ளது. அரசனின் அறநெறியில் சமத்துவம் பெறாத பெண்களின் வரலாறு முழுமையாக எழுதும் பணியில் இவ்வியல் பெண் சமூக வரலாற்றிற்கு ஆதாரங்களை முன் வைக்கிறது.

சங்க இலக்கியத்தினின்றே பெண்களின் தனித்த வரலாற்றை எழுதும் முயற்சியில் இவ்வாய்வேடு உருப்பெற்றுள்ளது.

ஆய்விற்கான வாசிப்பில் பெண் அறம் குறித்த ஆய்வுப் பார்வை அவசியம் என அறியப்பட்டதால் சங்க இலக்கியப் பாடல்களான மூலத்திலிருந்தே பெண்களுக்கான சமத்துவக் கூறுகளைச் சமகாலத்துப் படைப்புலகில் தரவுகளாக முன்வைத்து செல்லும் பணி மேற்கொள்ளப்பட்டு பெண் அறம் எனும் தலைப்பினைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு ஆய்வு செய்தளித்துள்ளது.

ஆய்வின் கருதுகோளாக அரச நியதியில் பெண்களுக்கு அநீதி இழைக்கப்பட்டுள்ளமை ஆய்ந்தறிய முடிகிறது.

சங்க இலக்கியப் பாடல்களுள் நாற்பத்தைந்து (45) பெண்பாற் புலவர்கள் பாடிய பாடல்களிலும் பெண்கள் மதிப்புறு நிலையில் பார்க்கப்படவில்லை. காரணம் அரசனின் நெறிக்குள் புலவர் எனும் பெண்ணும் உரிமையற்றவர்களாக பார்க்கப்படுவதை அறியமுடிகிறது.

**"கீழ்ப்பால் ஒருவன் கற்பின்**
**மேற்பால் ஒருவன் அவன்கண்படுமே"** (புறம். 183)

எனும் புறப்பாடல் வழி ஆடவரே கல்வி கற்பது என்று விதி செய்யப்பட்டிருக்கிறது. இது தொழிற்பிரிவை வகுத்த அந்தணரின் அறநெறிக் கொள்கை என்பதை ஆய்ந்துணரலாம்.

இசைக்கலையில் வல்லமை பெற்ற பாடினி, விறலியின் கேசாதிபாத வர்ணனையுள் பாதாதி கேச வர்ணனையுள் உவமிக்கும் பொருள்களும் இழிவுப் பொருள்களாகவே உவமிக்கப்பட்டிருக்கின்ற முறையினைக் காணலாம். அதைப்போல ஒரு கலைஞனை இழிசினன் என்று தொழிற்பெயராக்கி உள்ள முறையானது தமிழினத்தின் தொல்குடியினரை இழிவுபடுத்தும் கொள்கையாகவே தொழிற்பகுப்பு முறை அமைந்திருப்பதை அறமற்ற நிலை என உரைக்க முடிகிறது.

ஒரு சமூகத்தில் இரந்துபெறும் வாழ்க்கையைச் சுமத்திய சூழல் என்பது அறநெறிப் பிறழ்ந்த முறையே. தொழிற் பகுப்பு முறைக்குள் உற்பத்திக் கருவிகளின் உடைமை மறுக்கப்பட்ட தொல்குடி இனங்களும் வாழ்ந்துள்ளமை அறியமுடிகிறது.

தொழிற்பிரிவின் பகுப்பிற்குள் சேரிப்பரத்தை என பெண்ணையும், குறிப்பிட்ட பெண் குழுவையும் இழிவுபடுத்தி பார்த்த முறை அறநெறியாக எண்ணிப் பார்த்திடமுடியாத தன்மை என்பதை சுட்டி நிற்கிறது ஆய்வேடு.

சேரிப்பரத்தையர் குழந்தைப்பேறு பெறுவதற்கான உரிமை இழந்தவராக பகுக்கப்பட்ட முறையானது சங்க இலக்கியப் பதிவுகளுள் அறம் பார்க்கப்படாத தன்மையாக உணரமுடிகிறது.

வேட்டையில் சமப்பங்காக, மறு உற்பத்திக்கு மூல ஆதாரமாக, தொழில்களில் சமப்பங்காக தாய்வழிச் சமூகம் என்ற தொடரை உருவாக்கி இருக்கின்றனர். விவசாயம் தொடங்கி நூற்றுக்கணக்கான தொழில்களில் தம் பங்கினைச் செய்து, போர் அறத்துள்ளும் தன்னை இணைத்துக்கொண்ட பெண்கள், வீர மகளிராக தம் பங்கினை ஆற்றியிருக்கின்றனர். புலமைப்

பெற்றிருக்கின்றனர். இசை, கூத்துப்பாட்டு என கலைத் தொழில்களில் சிறப்புக்குரியவராக இருந்திருக்கின்றனர். குடும்பத்தின் வறுமை போக்கிட உழைத்திருக்கின்றனர். வதுவைச் சடங்குகளில் முதன்மையாய் நின்றவர்கள். போருக்குச் சென்ற மகனை ஈன்ற வீரத்தாயாக விளங்கியவர்கள்.

இவ்வாறு பல்வேறு முதன்மைப் பணிகளில் தங்களை இணைத்துக் கொண்டு நாட்டு வளர்ச்சியில் போரின் வெற்றியில் சமூக மதிப்பைப் பெற்றுத் தந்த பெண்களுக்குச் சமூகம் அளித்த மதிப்பு சமனாக அளிக்கப்பட்டதாக அறியமுடியவில்லை. அரசனின் அறநெறிக்குள் பெண் அறம் பேணப்படவில்லை என்றே ஆய்ந்துணர முடிகிறது.

சம காலப் படைப்புக்களில் சமத்துவம் காணும் சமூகத்தை அமைத்திடும் வகையில் அறப்பாங்கு பேணப்படவேண்டும் என்ற நோக்கமே இந்த ஆய்வின் இலக்கு.

**மேனிலை ஆய்வுக் களங்கள்:**

ஆய்வுப் பணி ஆற்றுவோரின் கடமையில் 'தமிழர் வரலாறு' படைக்கும் நோக்கம் அமையும்போது வரலாற்றின் படைப்பிலக்கிய தரவுகளை, முறையாக்கித் தருதலும் முக்கியப் பணியாகும். அத்தகைய இக்குடையோர்,

1. தொல் பழங்குடிகளின் மரபுசார் கலைகளில் பெண்
2. விளிம்புநிலை மக்களின் வாழ்வியல் அறங்கள்
3. மரபுசார் தொழில்களில் பெண்
4. அறமும், பரத்தமை ஒழுக்க முறையும்
5. தொன்மக் குறியீடும், தமிழரின் பண்பாட்டு அடையாளங்களும்

போன்ற மேலாய்வுகள் நிகழ்த்தி சமூக வரலாற்றிற்குத் துணை நிற்கலாம்.

## துணை நூற் பட்டியல்

### I. முதன்மை நூல்கள்


| | |
|---|---|
| இராமையா பிள்ளை .நா (உரை.ஆ) | – சங்க இலக்கியம்–நற்றிணை<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>சென்னை. |
| சுப்பிரமணியன் .பெ<br>பாலசுப்பிரமணியன் கு.வெ.<br>தட்சிணாமூர்த்தி .அ (உரை. ஆ) | – சங்க இலக்கியம்–பரிபாடல்<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,<br>சென்னை<br>3ஆம் பதிப்பு<br>பிப்ரவரி 2007 |
| செயபால் .இரா (உரை.ஆ) | – சங்க இலக்கியம்–அகநானுறு (1)<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,<br>சென்னை<br>2004 |
| செயபால் .இரா (உரை.ஆ) | – சங்க இலக்கியம்–அகநானூறு (2)<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,<br>சென்னை<br>2004 |
| பிரேமா .இரா (உரை.ஆ) | – சங்க இலக்கியம்–குறுந்தொகை,<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>சென்னை. |
| மாணிக்கம் .அ (உரை.ஆ) | – சங்க இலக்கியம்–ஐங்குறுநூறு (1),<br>வர்த்தமானன் பதிப்பகம்<br>சென்னை. |
| மாணிக்கம் .அ (உரை.ஆ) | – சங்க இலக்கியம்–ஐங்குறுநூறு (2),<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>சென்னை. |
| மாணிக்கம் .அ (உரை.ஆ) | – சங்க இலக்கியம்–பதிற்றுப்பத்து<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>சென்னை. |

மாணிக்கம் .அ (உரை.ஆ) – சங்க இலக்கியம்–பரிபாடல்
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.

மாணிக்கம் .அ (உரை.ஆ) – சங்க இலக்கியம்–கலித்தொகை (1)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.

மாணிக்கம் .அ (உரை.ஆ) – சங்க இலக்கியம்–கலித்தொகை (2)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.

மாணிக்கம் .அ (உரை.ஆ) – சங்க இலக்கியம்–அகநானூறு (1)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.

மாணிக்கம் .அ (உரை.ஆ) – சங்க இலக்கியம்–அகநானூறு (2)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.

மாணிக்கம் .அ (உரை.ஆ) – சங்க இலக்கியம்–அகநானூறு (3)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.

மாணிக்கம் .அ (உரை.ஆ) – சங்க இலக்கியம்–புறநானூறு (1)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.

மாணிக்கம் .அ (உரை.ஆ) – சங்க இலக்கியம்–புறநானூறு (2),
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.

மாணிக்கம் .அ (உரை.ஆ) – சங்க இலக்கியம்–பத்துப்பாட்டு (1)
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.

மாணிக்கம் .அ (உரை.ஆ) – சங்க இலக்கியம்–பத்துப்பாட்டு (2),
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.

விசுவநாதன் .அ (உரை.ஆ) – சங்க இலக்கியம்–கலித்தொகை
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
3ஆம் பதிப்பு – 2007.

**II. துணை சான்றாதாரங்கள்:**

## அ. திறனாய்வு நூல்கள்


| | | |
|---|---|---|
| அகிலா சிவசங்கர் (தொகு. ஆ) | – | தமிழ் இலக்கியங்கள்<br>காட்டும் தொழில்கள்,<br>ஜனகா பதிப்பகம்,<br>சென்னை,<br>முதற் பதிப்பு 2011. |
| அகிலா சிவசங்கர் (தொகு. ஆ) | – | இலக்கியங்கள் காட்டும்<br>சமுதாய விழிப்புணர்வு,<br>தாரணி பதிப்பகம்,<br>சென்னை.<br>2014. |
| அடைக்கலசாமி .எம்மார் | – | தமிழ் இலக்கிய வரலாறு<br>ராசி பதிப்பம்,<br>சென்னை.<br>29ஆம் பதிப்பு 1999. |
| அமுதன் | – | அறம் எனப்படுவது...!<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,<br>சென்னை.<br>மூன்றாம் பதிப்பு ஜூன், 2010. |
| அன்னிதாமசு | – | சங்ககாலப் பெண்மை<br>மெய்யப்பன் பதிப்பகம்,<br>சிதம்பரம்.<br>முதற் பதிப்பு டிசம்பர் 2004. |
| அனுராதா .ஆர் | – | சங்க இலக்கியத்தில்<br>அறக் கருத்துக்கள்,<br>தமிழாய்வு மன்றம்,<br>சென்னை.<br>முதற் பதிப்பு 2007. |
| இராசேந்திர சோழன் | – | கருத்தியல் மதம், சாதி, பெண்<br>மங்கை பதிப்பகம்,<br>சென்னை.<br>2001. |

இராமசாமி .அ – தமிழ்நாட்டு வரலாறு
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
2008.

இராமலிங்கம். அரங்க – சங்க இலக்கியத்தில் வேந்தர்
பாரதி புத்தகாலயம்,
சென்னை.
1987, 3ஆம் பதிப்பு–2002.

இலட்சுமணன்.ம – சங்க இலக்கியமும், வாழ்வியலும்
பாலா புக்ஸ்,
சென்னை.
முதற் பதிப்பு 2007.

இலட்சுமிதத்தை .அ – கற்பு ஆண்மொழி அரசியல்
தேடல் பதிப்பகம்
முதற்பதிப்பு 2010.

இளங்குமரனார் .இரா – உவமை வழி அறநெறி விளக்கம்
(சங்க இலக்கியங்கள்)
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை.
2006.

உலகநாதன் .பா – புறநானூற்றில் நுண்கலைகள்
மயூரா பதிப்பகம்,
சென்னை.
2007.

கலைவாணி .இரா, தமிழ்வேலு .சு – சங்க இலக்கியத்தில் இசை
ஏழிசைப் பதிப்பகம்,
மயிலாடுதுறை.

காந்திதாசன் .க – சங்க இலக்கியத்தில்
பாணர் வாழ்வியல்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி.
2011.

காமாட்சி .மு (தொகு. ஆ) – சங்க காலம்: தொல் பொருள் ஆய்வுகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
முதல் பதிப்பு டிச. 2011.

காவ்யா சண்முகசுந்தரம் (தொகு .ஆ) – தமிழ்நாட்டு வரலாறு
மா.ரா.களஞ்சியம் – 1
காவ்யா,
சென்னை.
இரண்டாம் பதிப்பு 2012.

காவ்யா சண்முகசுந்தரம் (தொகு .ஆ) – சங்க இலக்கிய வரலாறு
மா.ரா.களஞ்சியம் – 3
காவ்யா,
சென்னை.
2010.

கிருட்டினன் .அ – தமிழர் பண்பாட்டியல்
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
1992.

குணசேகரன் .கரு.அழ. – பதிற்றுப்பத்து மூலமும்,
ஆராய்ச்சிப் புத்துரையும்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
முதற்பதிப்பு 2010.

குணசேகரன் .கரு.அழ. – பட்டினப்பாலை மூலமும்,
ஆராய்ச்சிப் புத்துரையும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
முதற்பதிப்பு ஜூலை 2015.

கோவிந்தன் .கா – சங்கத் தமிழ்ப்புலவர்
வரிசை பகுதி – 3,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
மறுபதிப்பு, 1956.

கோவிந்தன் .கா – வள்ளல்கள்
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.

கோவிந்தன் .கா – சங்கத் தமிழ்ப்புலவர்
வரிசை பகுதி – ரு
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
1954.

கோவிந்தன் .கா – சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை
(பகுதி – உ),
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
மறுபதிப்பு, 1961.

கோவிந்தன் .கா – சங்க கால அரசர் வரிசை
(பகுதி – க)
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு, 1956.

கோவிந்தன் .கா – சங்க கால அரசர் வரிசை
(தொகுதி – 2)
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.
1954

சசிவல்லி .வி.சி – தமிழர் திருமணம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
1985.

சசிவல்லி .வி.சி – பண்டைத் தமிழர் தொழில்கள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
முதற்பதிப்பு 1989.

சஞ்சீவி .ந – சங்க இலக்கிய
ஆராய்ச்சி அட்டவணைகள்
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை.
1973.

சண்முகசுந்தரம் க. – சங்ககால சேர வேந்தர்கள்
பெ.கந்தசாமி நாயகர்
கல்வி அறக்கட்டளை,
சென்னை.
1997.

சண்முகசுந்தரம் க. – சங்ககால பாண்டிய வேந்தர்கள்
பெ.கந்தசாமி நாயகர்
கல்வி அறக்கட்டளை,
சென்னை.
1997.

சண்முகசுந்தரம் க. – சங்ககால வேளிர்கள்
பெ.கந்தசாமி நாயகர் கல்வி
அறக்கட்டளை,
சென்னை.
1997.

சண்முகசுந்தரம் .சிவ – சங்ககாலச் சமயமும் சமுதாயமும்
தீபா பதிப்பகம்,
சென்னை,
முதற் பதிப்பு 2003.

சண்முக சுந்தரம் .சு (தொகு. ஆ.) – சங்க இலக்கிய வரலாறு
மா.ரா. களஞ்சியம் 1,
காவ்யா பதிபபகம்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு 2012.

சண்முகம் பிள்ளை .மு – சங்கத் தமிழர் வாழ்வியல்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு 2004.

சண்முகம் பிள்ளை .மு – சங்கத் தமிழரின்
வழிபாடும் சடங்குகளும்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
2003.

சந்திரசேகரன் .பா (பதி .ஆ) – சங்க இலக்கியம் கருத்தியல் வளம்
மகாகவி பாரதியார் நூலகம்,
கோவை.
முதற்பதிப்பு, டிசம்பர் 2003.

சரளா இராசகோபாலன் – சங்கத் தமிழ் வளர்த்த நங்கையர்
நடராஜ் ஆப்செட் பிரஸ்,
சென்னை.
முதற்பதிப்பு டிசம்பர் 1999.

சாமி .பி.எல். – தமிழ் இலக்கியத்தில்
தாய்த்தெய்வ வழிபாடு
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
ஐந்தாம் பதிப்பு, ஜனவரி, 2011.

சீத்தாராமன் .சு – புறம் காட்டும் அரசியல் அறம்
பிரணவ் பதிப்பகம்
பொள்ளாச்சி
2009.

சுப்பிரமணியன் ச.வே. (உரை. ஆ) – தொல்காப்பியம்
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
6ஆம் பதிப்பு 2003.

சுப்பிரமணியன் .தி – தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாடு
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
2011.

சுப்ரமண்யன் – இந்தியப் பண்பாட்டு வரலாறு
என்னெஸ் பப்ளிகேஷன்ஸ்,
மதுரை.
1987.

செல்வராசு சிலம்பு .நா – சங்க இலக்கிய மறுவாசிப்பு
காவ்யா,
சென்னை.
2005.

தங்கராசு .மு – சங்க இலக்கியத்தில் நிலவியல்
தமிழ் மலர்,
சென்னை.
2000.

தமிழண்ணல் – ஔவையார்
சாகித்திய அகாதெமி,
புதுதில்லி.
1998 4–ஆம் பதிப்பு 2012.

தமிழண்ணல் – புதிய நோக்கில்
தமிழ் இலக்கிய வரலாறு
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை.
18–ஆம் பதிப்பு 2002.

தனஞ்செயன் .ஆ – சங்க இலக்கியமும்
பண்பாட்டுச் சூழலியலும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
2010.

தாயம்மாள் அறவாணன் – மகடூஉ முன்னிலை
பெண் புலவர் களஞ்சியம்
(ஆதிமந்தி முதல் ஆண்டாள் வரை)
பச்சைப்பசேல்,
சென்னை.
2004.

தியாகராஜன் .சி – சங்க காலச் சமுதாயம்
பல்லவி பதிப்பகம்,
தென் இந்தியா (பி) லிட்.,
ஈரோடு.
2007.

திருநாவுக்கரசு .க.த – திருக்குறள் நீதி இலக்கியம்
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு 1971, மறுபதிப்பு 1977.

தேவநேயப் பாவாணர் .ஞா – தமிழர் மதம்
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை.
மறுபதிப்பு 2000.

நர்மதா – தமிழகத்தில் தேவரடியார் மரபு – பன்முக நோக்கு
போதி வனம்,
சென்னை.
2006.

நாராயண வேலுப்பிள்ளை .எம் (உரை.ஆ) – திருக்குறள்
நர்மதா பதிப்பகம்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு 1998.

பக்தவச்சல பாரதி – மானிடவியல் கோட்பாடுகள்
வல்லினம்,
புதுச்சேரி,
முதற் பதிப்பு டிசம்பர் 2005.

பக்தவச்சல பாரதி – தமிழர் மானிடவியல் அடையாளம்
புத்தாநத்தம்,
இரண்டாம் பதிப்பு, 2008.

பக்தவச்சல பாரதி – பாணர் இனவரைவியல்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி.
2012.

பழனிச்சாமி .இரா – சங்கப்பண்பாட்டியல்
பாக்கியம் பதிப்பகம்,
ஒரத்த நாடு, தஞ்சாவூர்.
2011.

பாலசுப்பிரமணியன் கு.வெ – சங்க இலக்கியத்தில் கலையும் கலைக்கோட்பாடும்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
1998.

பிரேமா .இரா – பெண் – மரபியலும் இலக்கியத்தரத்திலும், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை. இரண்டாம் பதிப்பு 2006.

பிள்ளை .கா.சு – இலக்கிய வரலாறு சாரதா பதிப்பகம், சென்னை. 2011.

பிள்ளை .கே.கே. – தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை. 2009.

புவியரசு .ஆ, மகிழேந்தி .இரா (பதி.ஆ) – சங்க இலக்கியம் மீள் பார்வை விழி ஆய்வு மன்றம், திருச்சிராப்பள்ளி. 2006.

பூவண்ணன் – தமிழ் இலக்கிய வராாறு வர்த்தமானன் பதிப்பகம், சென்னை. 18–ஆம் பதிப்பு, 1997.

பெருமாள் .எஸ்.ஏ – மனிதகுல வரலாறு ரெட் ஸ்டார் பப்ளிகேசன், மதுரை. டிசம்பர் 2001.

மணவாளன் .அ.அ – இலக்கிய ஒப்பாய்வு சங்க இலக்கியம் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை. இரண்டாம் பதிப்பு, ஆகஸ்டு 2011.

மாதவன் .சி – தமிழ் அற இலக்கியங்களும் பௌத்த சமண அறங்களும், செம்மொழி, தஞ்சாவூர். முதற்பதிப்பு ஆகஸ்ட் 2008.

மாதையன் .பெ – சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும், பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை. 2004.

மாதையன் .பெ – சங்க இலக்கியத்தில் குடும்பம் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை. 2010.

மாதையன் .பெ – சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை. இரண்டாம் பதிப்பு மார்ச்சு 2010.

மீனாட்சி சுந்தரனார் .தெ.பொ – சமணத் தமிழ் இலக்கிய வரலாறு பாரத் பதிப்பகம், சென்னை. 2010.

முத்தமிழ்ச் செல்வன் – தமிழ் இலக்கிய வரலாறு இராமநாதன் பதிப்பகம், சென்னை. 2003.

முத்துச்சாமி .க (தமிழாக்கம்) – இந்தியக் கற்காலம் அன்னம், தஞ்சாவூர். முதற் பதிப்பு நவ. 2004.

முத்துராசன் .கு – செம்மொழி காட்டும் கண்ணாடி கீதகோவிந்த நிலையம், சென்னை. 2009.

முருகையன் .அரங்க.மு, அறவேந்தன் .இரா, தமிழ்வேலு .சு (பதி. ஆ) – சங்க இலக்கிய ஆய்வுகள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. முதற்பதிப்பு 2000.

ராகுல சாங்கிருத்தியாயன் – வால்காவிலிருந்து கங்கை வரை
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை.
31–ஆம் பதிப்பு, ஜனவரி 2012.

ராதாகிருஷ்ணன் .வி – உலக வரலாற்றில் பெண்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை.
3–ஆம் பதிப்பு 2007.

ராஜ் கௌதமன் – பாட்டும் தொகையும் தொல்காப்பியமும்
தமிழ்ச் சமூக உருவாக்கமும்
தமிழினி,
சென்னை.
2006.

ராஜன் .கா – தொல்லியல் நோக்கில் சங்க காலம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
2004.

வத்சலா .கு – சங்க இலக்கியத்தில் மகளிரின் நிலை,
லக்ஷ்மி பப்ளிகேஷன்ஸ்,
சீர்காழி.
2005.

வரதராசன் .பெ – சங்க இலக்கிய
எதிர்நிலைப் பாத்திரங்கள்
தேன்மொழிப் பதிப்பகம்,
திருவண்ணமலை.
2009.

வரதராசன் .வெ – தமிழ்ப்பாணர் வாழ்வும் வரலாறும்
அம்பத்தூர்,
சென்னை.
2007.

வரதராசனார் .மு – தமிழிலக்கிய வரலாறு
சாகித்திய அக்காதெமி,
புது தில்லி.
12ஆம் பதிப்பு 1999.

வாசுதேவன் .கா – பன்முக நோக்கில்
தமிழ் இலக்கிய வரலாறு
தேவன் பதிப்பகம்,
திருச்சிராப்பள்ளி.
2009.

வாணி அறிவாளன் – சங்க இலக்கியத் தேடல்
தமிழ்க் கோட்டம்,
சென்னை.
முதற் பதிப்பு 2009.

விஜயலட்சுமி .ர – தமிழக மகளிர் (தொடக்க கால
முதல் 6–ஆம் நூற்றாண்டு வரை)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை – 113.
1997.

வேங்கடசாமி, மயிலை. சீனி – சங்ககாலத் தமிழக வரலாறு
முதல் பகுதி
எம்.வெற்றியரசி,
சென்னை.
முதற் பதிப்பு 2003.

ஜம்புலிங்கம் .அ – சங்ககால வேந்தர்களின் சமுதாயப்பணி
இந்துமதி பதிப்பகம்,
சிதம்பரம்.
முதற் பதிப்பு 2003.

ஜோதிராணி .க.அ – தமிழர் பண்பாட்டுத் தளத்தில் சடங்குகள்
தன்னனானே,
சென்னை,
டிசம்பர் 2004.

ஜோதிராணி .க.அ – சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி.
2011.

ஜோதிராணி .க.அ – சமத்துவப் பயணத்தில் பெண் விடுதலைக் கல்வி
காவ்யா,
சென்னை.
2013.

ஷாஜகான் கனி .வெ.மு – தமிழ் நாடக வகையும் வரலாறும் (சங்க காலம் வரை)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை.
2010.

ஷாஜகான் கனி .வெ.மு – திணை வரலாறு
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
2012.

ஸ்ரீசந்திரன் .ஜெ – தமிழ் இலக்கிய வரலாறு
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.
12–ஆம் பதிப்பு, 2006.

Thomas Lehmann and Thomas Malten - A Word Index for Cankam Literature
Institute of Asian Studies,
Chennai.
Second Edition 2007.

## ஆ. களஞ்சியங்கள் – அகராதிகள்

| | | |
|---|---|---|
| அகராதி நிகண்டு | – | இரா.நாகசாமி (பதி.ஆ)<br>உ.வே.சா. நூல்நிலையம்,<br>சென்னை.<br>**1988.** |
| அபிதான சிந்தாமணி | – | ஆ.சிவப்பிரகாச முதலியார் (திருத்தியது)<br>ஆசியா கல்வி நிலையம்<br>புது தில்லி.<br>**1981.** |
| அபிதான சிந்தாமணி | – | ஆ.சிங்காரவேலு முதலியார்<br>**1910.** |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயரகராதி | – | இன்ஸ்டியூட் ஆப் ஸவுத்<br>இந்தியன் ஸ்ட்டீஸ்<br>சென்னை **1991.** |
| க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி | – | தமிழ்–தமிழ்–ஆங்கிலம்<br>க்ரியா வெளியீடு.<br>**1992.** |
| கலைக்களஞ்சியம் (தொகுதி–1) | – | அ.இந்தோனீசியா<br>தமிழ் வளர்ச்சிக் கழகம்,<br>சென்னை.<br>**1954.** |
| கழகத் தமிழ் அகராதி | – | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்<br>சென்னை.<br>**1964.** |
| கழகத் தமிழ் கையகராதி | – | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்<br>சென்னை.<br>**1999.** |
| கார்த்திகேயினி புதுமுறை அகராதி | – | திரு. எஸ்.நடராஜன் (தொகு.ஆ)<br>கார்த்திகேயினி பிரசுரம்,<br>புதுக்கோட்டை.<br>**1949.** |

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி – செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகர முதலித்திட்ட இயக்கக வெளியீடு,
சென்னை.
1985.

சொற்பிறப்பு – ஒப்பியல் தமிழ் அகராதி – நல்லூர் வண.சுவாமி ஞானப்பிரகாசர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
மறுபதிப்பு 1999.

தமிழ்–ஆங்கிலம் அகராதி – இர.பாலகிருட்டிண முதலியார்(தொகு.ஆ)
சைவசித்தாந்த நூற்பதிப்பு கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு 1982.

தமிழ் இலக்கியக் கலைச்சொல் அகராதி – சி.பி. கோபால்
இலட்சுமி பதிப்பகம்,
கோவை.
2000.

தமிழ்ச் சொல்லகராதி – தமிழ்ச்சங்க முத்திரா சாலைப் பதிப்பு
முதற்பதிப்பு.
1910.

தமிழ் தமிழ் அகரமுதலி – மு.சண்முகபிள்ளை (தொகு.ஆ)
தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை.
முதற்பதிப்பு 1985.

தமிழ் தமிழ் அகராதி – வர்த்தமானன் பதிப்பகம்
சென்னை.
3–ஆம் பதிப்பு 2009.

தமிழ்ப் பேரகராதி – தொகுதி. 1 (அ–அக்ஷரம்)
சென்னைப் பல்கலைக் கழகம்.
1980.

தமிழ்மொழியகராதி – பி.வி. நமசிவாய முதலியார் (பதி. ஆ)
என்.வி. பிரஸ்,
சூளை, சென்னை.
5வது பதிப்பு 1922.

தமிழ்மொழியகராதி – நா.கதிரைவேல் பிள்ளை
ஏசியன் எடுகேஷ்னல் சர்வீஸஸ்,
புதுடெல்லி.
1981, 6–ஆம் பதிப்பு.

தற்கால தமிழ்ச் சொல்லகராதி – திவான்பஹதூர் ச.பவானந்தம் பிள்ளை
Macmillan & Co., Limited,
Madras, Bombay, Calcutta
and London.
1925.

திருமகள் தமிழகராதி – வ.த.இராமசுப்பிரமணியம்
திருமகள் நிலையம்,
சென்னை.
முதற்பதிப்பு, 2001.

நர்மதாவின் தமிழ் அகராதி – நர்மதா பதிப்பகம்
முதற்பதிப்பு, 2001.

பெருஞ்சொல்லகராதி – தொகுதி – 1 (அ–அனைவோர்)
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.
முதற்பதிப்பு, 1988.

மணிமேகலைத் தமிழ்–தமிழ் அகராதி – மணிமேகலைப் பிரசுரம்
சென்னை.
1985.

வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி 2) – தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

வின்சுலோவின் தமிழ்–ஆங்கில அகராதி – Asian Educational Services
New Delhi.
1862 முதற் பதிப்பு, மறுபதிப்பு 1979.

ஸ்ரீமகள் தமிழ் அகராதி – ஈக்காடு சபாபதி முதலியார் (தொகு.ஆ)
ஸ்ரீமகள் கம்பெனி,
சென்னை.
இரண்டாம் பதிப்பு, 1957.

A Dictionary Tamil & English - III Edition.

பழமொழி அகராதி.

## இ. ஆய்வேடு

மேனகா .ஏ – சங்க இலக்கியத்தில் அரசநெறியும் – பெண்களும், இளநிலை ஆய்வாளர், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, ஆகஸ்ட் 2007.

ஜோதிராணி .க.அ – சங்க இலக்கியத்தில் விளிம்பு நிலை மக்களின் வாழ்வியல் நிலை. (பெருந்திட்ட ஆய்வேடு), புது தில்லி, 2014.

நாளிதழ் – தி இந்து, கட்டுரையாளர் வீ.அரசு (18.01.2016)

இணையதளம்

# பின்னிணைப்புகள்

இணைப்பு 1 –
அறம் எனும் சொல் இடம்பெறும் பாடல் எண்ணிக்கை

இணைப்பு 2 –
சங்க இலக்கியப் பாடல்களில் பதிவாகியுள்ள
ஆண், பெண்பாற் பெயர்கள்

இணைப்பு 3 –
சங்க இலக்கியத்தில் தொழில்கள்

இணைப்பு 4 –
சங்க இலக்கியத்தில் பாண்மரபினர்–கலைஞர்கள்

இணைப்பு 5 –
சங்க இலக்கியத்தில் பெண்பாற் புலவர்கள்

இணைப்பு 6 –
சங்க இலக்கியப் பாடல்களில்
பதிவாகியுள்ள சேர மன்னர்கள்

இணைப்பு 7 –
சங்க இலக்கியப் பாடல்களில்
பதிவாகியுள்ள சோழ மன்னர்கள்

இணைப்பு 8 –
சங்க இலக்கியப் பாடல்களில்
பதிவாகியுள்ள பாண்டிய மன்னர்கள்

இணைப்பு 9 –
சங்க இலக்கியப் பாடல்களில்
பதிவாகியுள்ள குறுநில மன்னர்கள்

இணைப்பு 10 –
படங்கள்

## அறம் எனும் சொல் இடம்பெறும் பாடல் எண்ணிக்கை (145)

| எட்டுத்தொகை | | பத்துப்பாட்டு | |
|---|---|---|---|
| நற்றிணை | – 12 | திருமுருகாற்றுப்படை | – 01 |
| குறுந்தொகை | – 05 | பொருநர் ஆற்றுப்படை | – 01 |
| ஐங்குறுநூறு | – 14 | பெரும்பாணாற்றுப்படை | – 01 |
| அகநானூறு | – 19 | மதுரைக்காஞ்சி | – 05 |
| கலித்தொகை | – 28 | குறிஞ்சிப்பாட்டு | – 02 |
| புறநானூறு | – 38 | பட்டினப்பாலை | – 01 |
| பதிற்றுப்பத்து | – 07 | சிறுபாணாற்றுப்படை | – பதிவு இல்லை |
| பரிபாடல் | – 11 | முல்லைப்பாட்டு | – பதிவு இல்லை |
| | | நெடுநல்வாடை, மலைபடுகடாம் | – பதிவு இல்லை |

### நற்றிணை

**.... பலநாள்**
**அறத்தொடு வருந்திய அல்கு தொழில் கொளீஇய.** (நற். 42:1–2)

–தவறொன்றும் இல்லாது

**அழுங்கல் ஊரோ அறன் இன்று; அதனால்**
**அறன்இல் அன்னை அருங்கடிப் படுப்ப.** (நற். 63:5–6)

–அறன்

**"இளையோர் இல்லிடத்து இற்செறிந்திருத்தல்"**
**அறனும் அன்றே...** (நற். 68:2–3) –அறம்

**அறவர், வாழி – தோழி.** (நற். 86:1) –வாக்குதவறாமை

**தான் யாங்கு ? என்னும் அறன் இல் அன்னை.** (நற். 145:7) –அறம்

**அறம் நிலைபெற்றோர் அனையேன்** (நற். 166:6)

–பயன் உடையது, அறவழியில் நிலைபெற்றோர் அடைந்த பயன்

**அறுமீன் பயந்த அறம் செய் திங்கள்.** (நற். 202:9) –அறம்

**அறிந்தோர் 'அறன் இலர்' என்றலின்.** (நற். 227:1) –அன்பு

**பிரியல் ஆடவர்க்கு இயல்பு எனின்**
**அரிது மன்றமம் அறத்தினும் பொருளே.** (நற். 243:10–11) –பிரிவு

**அறனிலாளன் புகழ, எற்**
**பெறினும்...** (நற். 275:8–9) –சொல் தவறாமை

**அறிவும் கரிதோ – அறனிலோய்! நினக்கே ?** (நற். 277:4) –பிரிவு

**அறம்கெட அறியாதாங்கு, சிறந்த**
**கேண்மையொடு அளைஇ, நீயே.** (நற். 400:8–9) –நீதி

## குறுந்தொகை

**அறந்தலைப் பட்ட நெல்லிஅம் பசுங்காய்.** (குறுந். 209:1)
–பசியால் வாடுபவர்களுக்கு உணவு அளித்தல்

**உயங்குதொறும் முயங்கும் அறன் இல் யாயே.** (குறுந். 244:6) –ஒழுக்கம்

**திறவோர் செய்வினை அறவது ஆகும்.** (குறுந். 247:2)
– திறமையுடையோர் செய்யும் காரியம்

**ஆனாது அலைக்கும் அறன்இல் அன்னை.** (குறுந். 262:2) –அறம்

**அறன் இல் கோள் நற்கு அறிந்திசினோரே.** (குறுந். 267:8)
–கண்ணோட்டமில்லாதது

## ஐங்குறுநூறு

**அறநனி சிறக்க அல்லது கெடு.** (ஐங். 7:2) –அறத்தால் வருவது இன்பம்

**..... நின்மார்பே**
**அறிந்தனை ஒழுகுமதி; அறனுமாரதுவே.** (ஐங். 44:3–4)
–இல்லறம் (தலைவி) வீரம் (தலைவன்)

**அறனிலாளன் கண்ட பொழுதில்**
**சினவு வென்...** (ஐங். 118:2–3) –பிறர் துன்பம் துடைத்தல்

**அறவன் போலும் அருளுமார் அதுவே.** (ஐங். 152:5)
–தன்னை நாடியவரைக் கைவிடுதல் இல்லை

**அறவற்கு எவனோ நாம் அகல்வு? அன்னாய்.** (ஐங். 212:3)

–எல்லோர்க்கும் பயன்பட ஒழுகும் ஒழுக்கம்

**பலநாள் பிரிந்த அறனிலாளன்.** (ஐங். 229:2)

–செந்தண்மைக்குரிய சொல்லும் செயலுமான தன்மை

**அறம்புரி செங்கோல் மன்னனின் தரும் நனி.** (ஐங். 290:1) –செங்கோல்

**அறஞ்சாலியரோ அறஞ்சாலியரோ**
**..... அறஞ்சாலியரோ.** (ஐங். 312:1–2) –அறம்

**அறனில மன்ற தாமே விறன்மிசைக்.** (ஐங். 332:2) –நல்ல பண்பு

**போக்கிய புணர்த்த அறனில் பாலே.** (ஐங். 376:5) –அறம்

**எற்கெடுத்து இருந்த அறனில் யாய்க்கே.** (ஐங். 385:6) –அறம்

**அறம்புரி அருமறை நவின்ற நாவின்**
**திறம்புரி கொள்கை அந்தணர்.** (ஐங். 387:1–2)

–அறத்தைச் சொல்லும் அந்தணர்

**அறம் புலந்து பழிக்கும் அண்கணாட்டி.** (ஐங். 393:2) –அறநூல்

**அன்பில் அறனும் அருளிற்று மன்ற.** (ஐங். 394:2) –உடன்போக்கு

## அகநானூறு

**....... அறத்தாறு**
**அன்று "என மொழிந்த தொன்றுபடு கிளவி"** (அகம். 5:16–17)

–அன்புடையவரைப் பிரிதல் கூடாது

**மறப் போர்ப் பாண்டியர் அறத்தின் காக்கும்**
**கொற்கை ஆம் பெருந்துறை முகத்தின் அன்ன.** (அகம். 27:8–10)

–அறநெறியில் நின்று ஆட்சி செய்தல்

**..... இங்கு நத் துறந்தோர்**
**அறவர் அல்லர் அவர் எனப் பல புலந்து.** (அகம். 85:3–4) –இல்லறம்

**ஆரங்கண்ணி அடுபோர்ச் சோழர்**
**அறம்கெழு நல் அவை உறந்தை அன்ன.** (அகம். 93:4–5)

–அறம் பொருந்திய நல்ல அவை

**அறன் இல் வேந்தன் ஆளும்**
**வறன் உறு குன்றம் பல் விலங்கினவே.** (அகம். 109:14–15) –அறப்பண்பு

**அறன் அஞ்சலரே! ஆயிழை! நமர்எனச்**
**சிறிய சொல்லிப் பெரிய புலம்பினும்.** (அகம். 144:7–8) –அறம்

**"அறன்கடைப் படாஅ வாழ்க்கையும், என்றும்**
**பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்**
**பொருளின் ஆகும்"** (அகம். 155:1–3) –உதவுதல்
(இரந்தவர்க்கு இல்லை என்று கூறுதல் பாவம்)

**"அறம்தலைப் பிரியாது ஒழுகலும், சிறந்த"** (அகம். 173:1) –இல்லறம்

**"அறன்நெறி பிழையாத் திறன்அறி மன்னர்**
**அருஞ்சமத்து எதிர்த்த பெருஞ்செய் ஆடவர்"** (அகம். 188:4–5)
–அறநெறி (போர் அறம்)

**"அறனிலாளன் தோண்ட, வெய்து உயிர்த்துப்**
**பிறைநுதல் வியர்ப்ப, உண்டனள் கொல்லோ"** (அகம். 207:12–13)
–இல்லறம்

**"அறனி லாளனொடு இறந்தனள்......"** (அகம். 219:10) –இல்லறம்

**அறன்இன்று அலைக்கும் ஆனா வாடை.** (அகம். 255: 15) –அறம்

**திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய**
**அறனி லாளன், 'அறியேன்' என்ற**
**திறன்இல் வெஞ்சூள்....** (அகம். 256:16–18) –பொய் கூறாமை

**".... அறம் தெரிந்து**
**நாம்உறை தேஎம் மரூஉப்பெயர்ந்து..."** (அகம். 280:6–7) –இல்லறம்

**அறனும் பொருளும் வழாமை நாடி**
**தன் தகவு உடைமை நோக்கி...** (அகம். 286:10–11) –மெய்

**காய்சின வேந்தன் பாசறை நீடி**
**நம்நோய் அறியா அறனி லாளர்.** (அகம். 294:12–13) –இல்லறம்

**பல் கால் நோக்கும் – அறன் இல் யாயே.** (அகம்– 302:15) –இல்லறம்

**"அறவர் அல்லார், நம் அருளாதோர் என**
**நம் நோயின் தன்வயின் அறியாள்"** (அகம். 304:19–29)

–அறமுடையவர், சொல் தவறாமை

**"மறம்கெழு தானை அரசருள்ளும்**
**அறம் கடைப்பிடித்த செங்கோலுடன்"** (அகம். 338:2–3)

–செங்கோல் / நடுநிலைமை

## கலித்தொகை

**அறன் இன்றி அயல் தூற்றும் அம்பலை நாணியும்.** (கலி. 3:1) –அறம்

**இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்**
**சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்**
**அறம் தலைபிரியா ஆறும் மற்றும் அதுவே.** (கலி. 9:22–24) –இல்லறம்

**"அரிதாய அறன் எய்தி அருளியோர்க்கு அளித்தலும்**
**பெரிதாய பகை வென்று பேணாரைத் தெறுதலும்**
**புரிவு அமர் காதலின் புணர்ச்சியும் தரும் என**
**பிரிவு எண்ணிப் பொருள்வயிற் சென்ற நம் காதலர்**
**வருவர்...."** (கலி. 11:1–5) –உதவுதல்

**"அறன் ஓடி விலங்கின்று அவர் ஆள்வினைத் திறத்தே"** (கலி. 16:22)

–இல்லறம்

**ஆறுநீர் இல என அறன் நோக்கிக் கூறுவீர்!** (கலி. 20:12) –அறம்

**ஈதலில் குறை காட்டாது, அறன் அறிந்து ஒழுகிய**
**தீதிலான் செல்வம் போல...** (கலி. 27:1–2) –இல்லறம்

**அறம் சாரான் மூப்பே போல் அழிதக்காள் வைகறை.** (கலி. 38:19)

–இம்மை, மறுமை

**அறதொடு நின்றேனைக் கண்டு, திறப்பட.** (கலி. 39:20)

–அறத்தொடு நிற்றல்

**மைஇல் மதியின் விளங்கும் முகத்தரை**
**வெளவிக் கொளலும் அறன் எனக் கண்டன்று.** (கலி. 62:14–15) –அறநூல்

**அறனும் அதுகண்டற்றாயின், திறன் இன்றி.** (கலி. 62:16) –அறநூல்

**அன்பு இலன், அறன் இலன், எனப்படான் என ஏத்தி**
**நின் புகழ் பல பாடும் பாணனும் ஏமுற்றான்.** (கலி. 74:6–7) –அறம்

**தந்தை வியல் மார்பில் பாய்ந்தான் அறன் இல்லா**
**அன்பிலி பெற்ற மகன்.** (கலி. 86:33–34) –அறம்

**அரிதின் அறம் செய்யா, ஆன்றோர் உலகும்**
**உரிதின் ஒருதலை எய்தலும் வீழ்வார்.** (கலி. 92:6–7) –இல்லறம்

**பெரு மணம் பண்ணி, அறத்தினில் கொண்ட**
**பருமக் குதிரையோ அன்று.** (கலி. 96:33–34) –அறநூல்

**அறவினை இன்புறூஉம் அந்தணர் இருவரும்**
**திறம் வேறு செய்தியின் நூல் நெறி பிழையாது.** (கலி. 99:2) –அறச் செயல்

**அறன் நிழல் எனக் கொண்டாய், ஆய் குடை.** (கலி. 99:8)
–குடையின் நிழல் / கண்ணோட்டம்

**அருள் தீர்ந்த காட்சியான், அறன் நோக்கான், நயம் செய்யான்.**
(கலி. 120:1) –இருமைப் பயன் உண்டாதல்

**நல் அறநெறி நிறீஇ உலகு ஆண்ட அரசன் பின்.** (கலி. 129:4) –நீதி நூல்

**அல்லது மலைந்திருந்து அறநெறி நிறுக்கல்லா.** (கலி. 129:5) –அறநெறி

**பிறர் நோயும் தம் நோய் போல் போற்றி அறன் அறிதல்**
**சான்றவர்க்கு எல்லாம் கடன் ஆனால்** (கலி. 139:2–3)
–பிறர் துன்பத்தை தம் துன்பம் போல நினைத்தல்

**இருளுறு கூந்தலாள் என்னை**
**அருளுறச் செயின், நுமக்கு அறனுமார் அதுவே.** (கலி. 140:33–34)
–தலைவியைத் தலைவனுடன் சேர்த்து வைத்தல்

**அறம் பொருள் இன்பம் என்று அம்மூன்றின் ஒன்றன்**
**திறம் சேரார் செய்யும் தொழில்கள் அறைந்தன்று**
**அணிநிலைப் பெண்ணை மடல் ஊர்ந்து.** (கலி. 141:3–5) –அறம்

**உதுக்காண் – தையால்! தேறு எனத் தேற்றி அறனில்லான்.** (கலி. 144:35)
–மனதில் அறம் இல்லாதவன்

**அறம் புணையாகலும் உண்டு.** (கலி. 144:48) –அறக்கடவுள்

**நெஞ்சத்துள் ஓடி ஒளித்து, ஆங்கே, துஞ்சா நோய்**
**செய்யும், அறனில்லவன்.** (கலி. 144:57–58) –அறம்

**ஆர்வுற்ற பூசற்கு அறம்போல, ஏய்தந்தார்.** (கலி. 145:62) –கடவுள்

**ஆறு அல்ல மொழி தோற்றி அறவினை கலக்கிய.** (கலி. 147:1)
–அறமற்ற தொழில் தீய சொல்

**அறம் துறந்து ஆயிழாய்! ஆக்கத்தில் பிரிந்தவர்.** (கலி. 150:8) –இல்லறம்

## <u>புறநானூறு</u>

**"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
**பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்**
**எம் அம்பு கடிவிடுதும் நும்அரண்சேர்மின்என**
**அறத்துஆறு நுவலும் பூட்கை மரத்தன்"** (புறம். 9:1–6)
–அறநெறி (போர் அறம்)

**பாணர் தாமரை மலையவும் புலவர்**
**பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்**
**அறனோ மற்றுஇது விறன்மாண் குடுமி.** (புறம். 12:1–3) –நடுநிலைமை

**அம்புதுஞ்சும் கடிஅரணால்**
**அறம்துஞ் சும் செங்கோலையே.** (புறம். 20:16–17)
–அறம் தங்கும் செங்கோல் / நடுநிலைமை

**பேதமை அல்லது ஊதியம் இல் என**

......

**புஞ்சிறை மாக்காட்கு அறங்குறித்து அகத்தோர்** (புறம் 28:5–16)–உதவுதல்

**அதனால் அறனும், பொருளும் இன்பமும் மூன்றும்** (புறம் 28:17)
–உதவுதல்

**"சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்**
**அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல**
**இருகுடை பின்பட...."** (புறம். 31:1–3)

–அறத்தின் பின்னே தோன்றுவது பொருளும் இன்பமும்.

**"ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்**
**மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்**
**குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்**
**வழுவாய் மருங்கின் கழுவாயும் உளஎன**
**நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்**
**செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்என**
**அறம் பாடிற்றே ஆயிழை கணவ!"** (புறம். 34:1–7) –அறநூல்

**'அறம்புரிந்தன்ன செங்கோல் நாட்டத்து**
**முறைவேண்டு பொழுதின் பதன் எளியோர் ஈண்டு**
**உறைவேண்டு பொழுதில் பெயல்பெற்றோரே'** (புறம். 35:14–16)

–அறக்கடவுள் / நீதியைக் கேட்கவேண்டிய காலத்தில் காட்சிக்கு எளியவராய் இருத்தல்.

**"மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து**
**அறம்நின்று நிலையிற் றாகலின் அதனால்**
**முறைமை நின் புகழும்..."** (புறம். 39:8–10)

–அவைக்களத்தில் அறம் நின்று நிலைபெறும் / நீதி

**"அறவை யாயின் நினது எனத்திறத்தல்**
**மறவை யாயின் போரொடு திறத்தல்"** (புறம். 44:11–12) –அறம்
**அறவையும் மறவையும் அல்லை யாகத்"** (புறம். 44:13) –செங்கோல் ஆட்சி

**"அறநெறி முதற்றே அரசின் கொற்றம்**
**அதனால் நமரெனக் கோல்கோ டாது**
**பிறர் எனக் குணங் கொல் லாது**
**ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்**
**திங்கள்அன்ன தண்பெருஞ் சாயலும்**
**வானத்து அன்ன வண்மையும் மூன்றும்**
**உடைமை ஆகி இல்லோர்...."** (புறம். 55:10–16) –அரசரது நெறி

மாட்சிமையுடைய அறநெறியை அடிப்படையாகக் கொண்டது

**அறந்துஞ்சு உறந்தைப் பொருநனை இவனே.** (புறம். 58:10)

–அறம் தங்கும் உறந்தை / நீதி

**'அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்'** (புறம். 62:7) –போர் அறம்

**"அறன்நிலை திரியா அன்பின் அவையத்துத்**
**திறன்இல் ஒருவனை நாட்டி முறை திரிந்து**
**மெலிகோல் செய்தேன் ஆகு..."** (புறம். 71:7–9) –அவையம்

(அறங்கூர் அவையம்)

**"அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்**
**திறம்பரி பசும்புல் பரப்பினர் கிடப்பி**
**மறம்கந்து ஆக...."** (புறம். 93:7–9) –போர் அறம் / விழுப்புண்

**"...... அறம்பூண்டு**
**பாரியும் பரிசிலர் இரப்பின்**
**வாரேன் என்னான் அவர்வரை யன்னே"** (புறம். 108:4–6)

–இரவலர்க்கு இல்லை எனாத அறம்

**"இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்எனும்**
**அறவிலை வணிகன் ஆஅய்அலன் பிறரும்**
**சான்றோர் சென்ற நெறியென"** (புறம். 134:1–3)

–இம்மை மறுமைக்கு பயன்படும்

**"அறம்செய் தீமோ அருள்வெய் யோய் என"** (புறம். 145:7)

–இல்லறத்தை செய் என வேண்டுதல்

**மாசொடு குறைந்த உடுக்கையள் அறம்பழியாத்.** (புறம். 159:13)

–அறக்கடவுள்

**அறம்புகழ்ந்த வலைசூடிச்.** (புறம். 166:14) –அறநூல்

**"பலர்புரவு எதிர்ந்த அறத்துறை நின்னே"** (புறம். 175:19)

–பலரையும் காத்தல்

**அன்புகண் மாறிய அறனில் காட்சியொடு.** (புறம். 210:2)

–பரிசு தரவில்லை

**அறனில் கூற்றம் திறனின்று துணியப்.** (புறம். 210:8)

–அறம் இல்லாத கூற்றம்

**அறவோர் புகழ்ந்த ஆய்கோ லன்னே** (புறம். 221:3)

–அறத்திறம் உடையவர் புகழ்ந்து கூறும் நீதிநூல்

**அறம் அறக் கண்ட நெறிமாண் அவையத்து.** (புறம். 224:4) –அறம்

**அறன் இல் கூற்றம் திறனின்று துணிய.** (புறம். 237:9)

–அறம் இல்லாத கூற்றம்

**இன்னாது உற்ற அறனில் கூற்றே.** (புறம். 255:4) –அறம் அற்ற கூற்று

**அறன்இலள் மன்ற தானே – விறன்மலை.** (புறம். 336:8) –அறம்

**அறவினை யன்றே விழுத்துணை யத்துணை**
**புணைகை விட்டோர்க்கு அரிதே துணை.** (புறம். 357:6–7)

–அறச்செயல் / இம்மை மறுமைக்கு வழிவகுக்கும்

**அறம்குறித் தன்று பொருளா குதலின்.** (புறம். 362:10) –அறநூல்

**அதனால் அறவேன் மகனே மறவோர் செம்மல்.** (புறம். 366:6) –அறம்

**அவி உணவினோர் புறங் காப்ப**
**அற நெஞ்சத்தோன் வாழ நாள் என்று.** (புறம். 377:5–6)
–தேவர்கள் வெளியே நின்று காக்க அறம் செய்கின்ற உள்ளம் உடையவன்

**அறத்துறை அம்பியின் மான மறப்பின்று**
**இருங்கோள் ஈராப் பூட்கைக்**
**கரும்பன் ஊரன் காதல் மகனே!** (புறம். 381:24–26)

–அறத்துக்காக ஓட்டப்படும் ஓடம்

**அறவை நெஞ்சத்து ஆயர் வளரும்**
**மறவை நெஞ்சத்து தாய்இலாளர்.** (புறம். 390:1–2)–அறம் செய்யும் நெஞ்சம்

**நெடுங்கை வேண்மான் அருங்கடிப் பிடவூர்**
**அறப்பெயர்ச் சாத்தன் கிளையேம் பெரும்.** (புறம். 395:20–21)

–அறத்தால் உண்ட புகழ்

**அறுதொழில் அந்தணர் அறம்புரிந்து எடுத்த**
**தீயொடு விளங்கும் நாடன் வாய்வாள்.** (புறம். 397:20–21)

–அறத்தை விரும்பி வளர்த்த வேள்வித் தீ

**அறவர் அறவன் மறவர் மறவன்**
**மள்ளர் மள்ளன் தொல்லோர் மருகன்.** (புறம். 399:19–20)

–அறவோரில் சிறந்த அறவோன்

## பதிற்றுப்பத்து

**அறந் தெரி திகிரிக்கு வழியடையாகும்**

**......**

**மையில் அறிவினர் செவ்விதின் நடந்து.** (பதிற். 22:4–10) –நீதி

**...... ஆறுபுரிந் தொழுகும்**

**அறம்புரி அந்தணர் வழிமொழிந் தொழுகி.** (பதிற். 24:7–8) –அறநூல்

**மலையவும், கடலவும், பண்ணியம் பகுக்கும்**

**ஆறுமுட்டுறாது அறம் புரிந்தொழுகும்.** (பதிற். 59:15–16)

–அறம் முதலிய துறைகளில் வகுத்துச் செய்யும் அரசாட்சி மாண்பால் செய்வதற்குரிய அறங்கள் குன்றாமல் மேற்கொண்டு ஒழுகுதல்

**ஏத்தல்சான்ற இடனுடை வேள்வி**

**ஆக்கி பொழுதின் அறத்துறைபோகி.** (பதிற். ஏழாம்பத்து பதிகம் 6–7)

–அறநெறியில் அமைந்தவற்றைச் செய்து முடித்தல்

**அறங்கரைந்து வங்கிய நாவிற் பிறங்கிய**

**உரைசால் வேள்வி முடித்த கேள்வி.** (பதிற். 64:3–4) –அறநூல்

**அரசவை பணிய அறம்புரிந்து வயங்கிய**

**மறம்புரி கொள்கை வயங்கு செந்நாவின்.** (பதிற். 85:9–10) –அறம்

**வாள்வலியுறுத்துச் செம்மை பூஉண்டு**

**அறன் வாழ்த்த நற்கு ஆண்ட**

**விறல் மாந்தரன் விறல்மருக.** (பதிற். 90:11–13) –அறக்கடவுள்

பரிபாடல்

**.... அந்தணர் காக்கும்**

**அறனும் ஆர்வலர்க்கு அளியும் நீ.** (பரி.கடவுள் வாழ்த்து 40–41)

–அந்தணர் காக்கும் அறம்

**கல்லினுள் மணியும்நீ சொல்லினுள் வாய்மைநீ**

**அறத்தினுள் அன்பு நீ மறத்தினுள் மைந்துநீ.** (பரி. 3:64–65) –அறச்செயல்

**நின் குணம் எதிர்கொண்டோர் அறம் கொண்டோர் அல்லதை...** (பரி.5:71)

–அறநெறி

**சேரா அறத்துச் சீர் இலோரும்...** (பரி. 5:74) —அறம்

**யாஅம் இரப்பவை**
**பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின் பால்**
**அருளும் அன்பும் அறனும் மூன்றும்.** (பரி. 5:81) —அருளாலும் அன்பாலும் வரும் அறம்

**மூலமும் அறனும் முதன்மையின் இகந்த**
**காலமும் விசும்பும் காற்றொடு கனலும்.** (பரி. 13:24) —நல்வினை

**கேள்வியும் அறிவும் அறத்தொடு நுண்ணியை**
**கேள்வியும மறனும் விருப்பொடு வெய்யை.** (பரி. 13:35–36) —அறம்

**'இரு பிறப்பு இரு பெயர் ஈர நெஞ்சத்து**
**ஒரு பெயர் அந்தணர் அறன் அமர்ந்தோயே'** (பரி. 14:27–28) —அறம்

**அறம்பெரிது ஆற்றி அதன் பயன் கொண்மார்.** (பரி. 19:10) —நல்வினை

**ஒருசார் அறத்தொடு வேதம் புணர் தவம் முற்றி**

**.......**

**அறத்தின் திரியா பதி...** (பரி. திரட்டு 1:19–22)

—அந்தணர்க்கு நூலோர் வகுத்த அறுவகைப்பட்ட ஒழுக்கம் / அறசெயல்

**அணி பவளச் செவ்வாய் அறம் காவற் பெண்டிர்.** (பரி. திரட்டு 2:48)

—கற்பறம்

## <u>பத்துப்பாட்டு</u>

**ஆறினில் கழிப்பிய, அறன் நவில் கொள்கை.** (திரு. 180)

—அறம் சொல்லும் கோட்பாட்டை உடையவர் (அந்தணர்)

**அறனொடு புணர்ந்த திறன் அறி செங்கோல்.** (பொருநர் 230)

—அறத்தொடு அமைந்து போகும் வழியை உலகம் அறிதற்குக் காரணமான செங்கோலையும் உடையவன் / அரசன்.

**அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்.** (பெரும். 36)

—அரசியல் அறமும், குடிமக்கள், அறமும் இரண்டும் துலங்குமாறு ஆளும் செங்கோல்

**அரசியல் பிழையாது அறநெறி காட்டி.** (மதுரை. 191) –நூல்களில் கூறிய அறமுறைப்படி செங்கோன்மை செலுத்துதல்

**அறநெறி பிழையா அன்புடை நெஞ்சின்.** (மதுரை. 472) –அறவழி

**சிறந்த கொள்கை அறம் கூறு அவையமும்.** (மதுரை. 492)
–அறநூலை சொல்லும் அவையம் (துலாக்கோல் போல நடுவு நிலைமை)

**அன்பும் அறனும் ஒழியாது காத்து.** (மதுரை. 497)
–அன்புநெறி, அறச்செயல்

**செம்மை சான்ற காவிதி மாக்களும்**
**அறநெறி பிழையாது ஆற்றின் ஒழுகி.** (மதுரை 499–500)
–நூல் உரைத்த அறநெறியினின்று பிழைக்காமல் ஒழுகுவர்

**அறம்புனை ஆகத் தேற்றி பிறங்கு மலை.** (குறிஞ்சி. 208) –அறம்

**ஆற்றல்சால் கேள்வி அறம்பொருள் இன்பத்தை.** (குறிஞ்சி. வெண்பா 2:1)
–உறுதிப் பொருளில் ஒன்று அறம், பொருள், இன்பம்

**“அறம் நிலைஇய அகன் அட்டில்”** (பட்டினப். 43) –இம்மை புகழும், மறுமை ஆக்கமும் தரக்கூடிய அகன்ற அட்டில் சமையல்

சிறுபாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, மலைபடுகடாம்

அறம் என்ற சொல் பாடற் வரிகளுள் வெளிப்படையாக பதிவாகவில்லை.

## தொல்காப்பியத்தில் அறம் எனும் சொல் பெறும் இடம்

**"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**
**அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்"** (தொல். பொருள். களவு **1038)**

**"முன்னிலை அறனெனப் படுதலென்று இருவகைப்**
**புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்"** (தொல். பொருள். களவு **1060)**

**"அறம்புரி நெஞ்சமொடு தன்வர வறியாமைப்**
**புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டிடத் தானும்"** (தொல். பொருள். கற்பு **1093)**

**"..............**
**அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**
**சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"** (தொல். கற்பு. **1138)**

**"அறத்தொடு நிற்குங் காலத் தன்றி**
**அறத்தியல் மரபிலள் தோழி என்ப"** (தொல். பொருள். பொருளியல் **1152)**

**"அன்பே அறனே இன்பம் நாணொடு**
**துறந்த ஒழுக்கம் பழித்தன்றாகலின்**
**...................."** (தொல். பொருள். **1161)**

**"அறக்கழி வுடையன பொருட்பயன் வரினே**
**வழக்கென வழங்கலும் பழித்தன்று என்ப"** (தொல். பொருள். பொருளி. **1164)**

**"தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும்**
**மெய்ம்மையாக அவர்வயின் உணர்ந்தும்**
**தலைத்தாள் கழறு அறம் எதிர்பொழுது இன்றே**
**மலிதலும் ஊடலும் அவை அலங்கடையே."** (தொல். பொருள். பொருளியல் **1181)**

**"இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல்**
**..................**
**அறன் அழித்துரைத்தல், ஆங்கு நெஞ்சழிதல்"**
(தொல். பொருள். மெய்ப்பாட்டியல் **1216)**

**"தெய்வம் அஞ்சல், புரை அறம் தெளிதல்**
**இல்லது காய்தல், உள்ளது உவத்தல்**
**................"** (தொல். பொருள். மெய்ப்பாட்டியல் **1218**

## அறநெறிக் காலமும் – அறம் எனும் சொல் பெறும் இடம்

அறம் செய விரும்பு (ஆத்திசூடி1)

அறனை மறவேல் (ஆத்திசூடி 30)

"அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை" (குறள் 4:37)

செயற்பால தோரும் அறனே ஒருவற்கு
உயற்பால தோரும் பழி. (குறள் 4:40)

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. (குறள் 5:45)

அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவது எவன். (குறள் 5:46)

"ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல்" (குறள் 4:33)

ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து. (குறள் 5:48)

"அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று" (குறள் 5:49)

"முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம்." (குறள் 93)

"அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்." (குறள் 96)

"பிறன் பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல்." (குறள் 141)

"அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரின் பேதையார் இல்." (குறள் 142)

"திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று." (குறள் 157)

"பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று." (குறள் 297)

"அறன் இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா
மானம் உடையது அரசு." (குறள் 384)

"அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்" (குறள் 543)

"திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூங்கு இல்." (குறள் 644)

"............................
நன்றறியா மாந்தர்க்கு அறத்தாறு உரைக்குங்கால்" (நாலடி. 26:257:2)

"........... அறநெறி
சேர்தற்குச் செய்க பெருநூலை." (திரி. 90:1–2)

"செந்நீ முதல்வர் அறம்நினைந்து வாழ்தலும்" (திரி. 89:1)

## சங்க இலக்கியப் பாடல்களில் பதிவாகியுள்ள ஆண், பெண்பாற் பெயர்கள்

**ஆண்பாற் பெயர்கள் (நற்றிணை):**

| | |
|---|---|
| வில் ஏர் உழவர் | – வில்லை ஏராகக் கொண்டு உழும் உழவர் (நற். 3:5) |
| கடல்மேம் பரதவர் | – கடல்மேல் சென்று வாழ்க்கை நடத்தும் பரதவர் (நற். 4:1) |
| உமணர் | – உமணர் (நற். 4:7) "வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி....." |
| குறவர் | – குறவர்கள் வெட்டிக் குறைத்த வாசனைக் கொடிகள் (நற். 5:3, 44:8) |
| தந்தை | – தந்தை (நற். 8:4) |
| ஏனல் காவலர் | – தினைப்புனம் காவல் செய்பவர் (நற். 13:3) |
| கொல்லன் | – கொல்லன் (நற். 13:5) |
| மறவர் | – வீரர் (நற். 18:6) (நற். 48:6) |
| உரவு நீர்ச் சேர்ப்ப | – நீர்ப் பெருக்குள்ள சேர்ப்பன் (நற். 19:5, 31:12) |
| தேர்பாகன் | – பாகன் (நற். 19:6) |
| மகிழ்நன் | – மருதநிலத் தலைவன் (நற். 20:2) |
| நாடன் | – (நற். 22:7) |
| ஆடவர் | – (நற். 24:9) |
| வளமலை நாடன் | – வளமான மலைநாடன் (நற். 25:5, 44:12) |
| மலைகிழவோனே | – (நற். 28:9, 32:3) |
| பாணன் | – இசைக் கலைஞன் (நற். 30:2, 40:3, 46:5) |
| வேலன் | – வெறியாட்டு வேலன் (நற். 34:9) |
| வெற்பன் | – மலைநாட்டை உடையவன் (நற். 36:4) |
| பரதவர் | – (நற். 38:2) |
| கானக நாடன் | – கானகத்தையுடைய நாடன் (நற். 47:6) |
| தென்கடற் சேர்ப்பன் | – கடற்சேர்ப்பன் (நற். 49:10) |
| மலைக்கிழவோன் | – மலை கிழவோன் (நற். 51:11) |
| மழவர் | – வீரர் (நற். 52:9) |

ஓங்கு மலைநாட – உயர்ந்த மலை நாடன் (நற். 55:1)

மா மலைநாட – (நற். 57:7)

பனித்துறைச் சேர்ப்பன் – (நற். 58:10)

பெருவலைப் பரதவர் – பெரிய வலையையுடைய பரதவர் (நற். 63:1)

மலை உறை குறவர் – மலை வாழும் குறவர் (நற். 64:4)

அன்பு இல் கானவர் – அன்பில்லாத கானவன் (நற். 65:6)

பெருமலை நாடன் – (நற். 65:9)

கொடுங்கோற் கோவலர் – கொடிய கோலையுடைய கோவலர் (நற். 69:8)

காழோர் – யானைப் பாகரில் குத்துக்கோலை உடையோர் (நற். 74:5)

கடற் சேர்ப்பன் – (நற். 74:5)

கொடுவிற் கானவன் – வளைந்த விரலையுடைய குறவன் (நற். 75:6)

புலையன் – துடி எனும் கருவி இசைப்பவன் (நற். 77:1)

உரவு நீர்ச் சேர்ப்பன் – (நற். 78:11)

கானவர் – குறவர் (நற். 82:11)

கானவன் – வேட்டுவன் (நற். 85:8)

ஓங்கு மலை நாடன் – உயர்ந்த மலைநாடன் (நற். 85:11)

சிறுகுடிப் பரதவர் – சிறுகுடிப் பரதவர் (நற். 87:8)

மறவர் – மறவர் (நற். 86:1)

நெடுசீர்ச் சேர்ப்பன் – நீண்ட கடற்கரைக்குத் தலைவன் (நற். 91:12)

கைவல் கம்மியன் – கைத்திறமை உடைய பொற்கொல்லன் (நற். 94:4)

புலவு நீர்ச் சேர்ப்பன் – புலால் நாறும் கடற்துறையை உடைய சேர்ப்பன் (நற். 94:6)

உழவர் – உழவர் (நற். 97:9)

நாடன் – நாடன் (நற். 98:7)

துஞ்சாக் காவலர் – உறங்காத காவலர் (நற். 98:9)

தண்துறை ஊரன் – தண்ணிய துறையையுடைய ஊரன் (நற். 100:3)

புலர்புரி வயிரியர் – வேற்று நாட்டுக் கூத்தர் / இடம் விட்டு இடம் வந்த கூத்தர் (நற். 100:10)

துணை – கணவன் (நெடுநல். 132)

தொல் மருங்கு அறிஞர் – பழைய கூறுபாட்டினை அறிந்த பெரியார். (குறிஞ்சி. 18)

எந்தை – (குறிஞ்சி. 20)

பெரு வேந்தர் – (குறிஞ்சி. 27)

சேணோன் – வானிடத்துள்ளோன் / உயர்ந்த மரத்தில் பரணிடத்தில் இருப்பவர், மேலோன். (குறிஞ்சி. 40)

குன்று கெழு நாடன் – பேருவெற்றியை உடைய தலைவன் (குறிஞ்சி. 199)

கோவலர் – (குறிஞ்சி. 221)

அந்தணர் – (குறிஞ்சி. 224)

கானவர் – (குறிஞ்சி. 224)

சினைஇய வேந்தன் – (குறிஞ்சி. 228)

காவலர் – ஊர்க்காவலர் (குறிஞ்சி. 240)

புதல்வர் – (பட்டினப். 24, 295)

கருந்தொழில் கலிமாக்கள் – வலிய தொழிலை உடைய செருக்குடைய மறவர். (பட்டினப். 62)

இரும் பரதவர் – (பட்டினப். 90)

மைந்தர் – (பட்டினப். 109, 110)

கொடுந்திமில் பரதவர் – வளைந்த படகுகளை உடைய மீன் பிடிப்போர். (பட்டினப். 112)

தொல் இசைத் தொழில் மாக்கள் – (பட்டினப். 121)

நல் ஆசிரியர் – (பட்டினப். 121)

வலைஞர் – மீன் பிடிப்பவர் (பட்டினப். 197)

விலைஞர் – ஊன் விற்பவர் (பட்டினப். 198)

நான் மறையோர் – அந்தணர் (பட்டினப். 202)

கொடு மேழி நசை உழவர் – வளைந்த மேழித் தொழிலை விரும்பும் வேளாளர் (பட்டினப். 205)

வயவர் – வீரர் (பட்டினப். 232)

முதுவாய்க் கோடியர் – பேரறிவுடைய / அறிவு வாய்த்தலை உடைய கூத்தர் (பட்டினப். 253)

| | |
|---|---|
| கொடுவில் எயினர் | – (பட்டினப். 266) |
| மன்னர் | – (பட்டினப். 277) |
| வேந்தர் | – (பட்டினப். 293) |
| மாக்கள் | – வாணிகர் (பட்டினப். 217) |
| தொடு தோல் அடியர் | – வளைந்த செருப்பை அணிந்த வேடர் (பட்டினப். 265) |
| புன் பொதுவர் | – புல்லிய ஆயமன்னர் (பட்டினப். 281) |
| தெவ்வர் | – பகைவர் (பட்டினப். 299) |
| கானவர் | – (மலைபடு. 17, 155, 298, பரணில் உள்ள கானவர் 301) |
| பைதீர் பாணர் | – (மலைபடு. 49) |
| கலம்பெறு கண்ணுளர் | – கூத்தர் (மலைபடு. 50) |
| கணவன் | – (மலைபடு. 58, 308, 318) |
| உழவர் | – (மலைபடு. 60) |
| சுரம் செல் கோடியர் | – கூத்தர் (மலைபடு. 143) |
| வட்டியர் | – (மலைபடு. 152) |
| புனம் சூழ் குறவர் | – திணைப் புனத்தைக் காத்தற்கு வரும் குறவர்கள் (மலைபடு. 203) |
| கடும் பறைக் கோடியர் | – பறையை உடையவன் (மலைபடு. 236) |
| சேணோன் | – (கானவன்) வானிடத்து இருப்பவன் மரம், பாண் முதலியவற்றின் மீது ஏறி உயரத்தில் இருப்பவன். (மலைபடு. 243) |
| குறவர் | – குறிஞ்சி நிலத்தவர் (மலைபடு. 275, 320, 333) |
| காடு காத்து உறையும் கானவர் | – (மலைபடு. 279) |
| கொழுநர் | – கணவர் (மலைபடு. 302) |
| விரவு மொழி பயிற்றும் பாகர் | – (மலைபடு. 327) |
| கோவலர் | – ஆயர் (மலைபடு. 333) |
| மிளை சூழ் கோவலர் | – நிரையைக் காக்கும் இடையர் (மலைபடு. 409) |
| மறவர் | – (மலைபடு. 387) |
| கொடு விற் கூளியர் | – வேடர் / வீரர் (காட்டுப் படையினர்) (மலைபடு. 422) |

| | |
|---|---|
| வளம் செய் வினைஞர் | – வளத்தை உண்டாக்கும் உழவர் (மலைபடு. 462) |
| எருது எறி களமர் | – எருதை அடிக்கினற உழவர் (மலைபடு. 469) |
| ஒள்வாள் மறவர் | – (மலைபடு. 489) |
| தலைவன் | – (மலைபடு. 569) |
| இலம்படு புலவர் | – (மலைபடு. 576) |
| தெவ்வர் | – பகைவர் (மலைபடு. 86) |
| புலவோர் | – காஞ்சி சான்ற போர் மறவர், அவர் நிலையாமையை உள்ளத்துள் கொண்டவர். (மலைபடு. 88) |
| தொல்லோர் | – தொன்று தொட்டு வந்த பழங்குடி மறவர். (மலைபடு. 89) |
| வன்சிலையர் | – வலிய வில்லை உயைவர் (குறவர்) (மலைபடு. 274) |
| மகாஅர் | – சிறு பிள்ளைகள் (மலைபடு. 236) |
| வெண்ணெல் அரிநர் | – நெல்லை அரியும் உழவர் (மலைபடு. 471) |
| இகழுநர் | – பகைவன் (மலைபடு. 482) |
| பரிசிலர் | – பரிசில் மாக்கள் (மலைபடு. 492) |
| கல்லென் ஒக்கல் | – சான்றோர் (மலைபடு. 549) |

**பெண்பாற் பெயர்கள் (பத்துப்பாட்டு):**

துணையோர் – தோழியர் (திரு. 20)

சூரரமகளிர் – கொடிய தெய்வ மங்கையர் (திரு. 41)

பேய்மகள் – (திரு. 51)

மடமகள் – (திரு. 101)

வான் அரமகளிர் – தெய்வப் பெண் (திரு. 117)

மகளிர் – (திரு. 147) (பொருநர். 241) (சிறுபாண். 117)

மடநடை மகளிர் – (திரு. 205)

குறமகள் – (திரு. 242)

பெருந்தகு பாடினி – இசைக்கல்வியின் பெருமை முழுவதற்கும் தகுதியுடைய பாடினி (பொருநர். 47)

இன்நகை மகளிர் – இனிய முறுவல் கொண்ட ஏவல் மகளிர். (மன்னனிடம் வரும் மகளிரை உபசரிப்பவர்) (பொருநர். 85)

ஒண்நுதல் விறலியர் – ஆடல், பாடல் வல்லவர் (பொருநர். 110)

பாடினி – (பொருநர். 162)

நிலமடந்தை – (சிறுபாண். 1)

வாள்நுதல் விறலியர் – விறல்பட ஆடும் வல்லமை உடையவர். உள்ளக் குறிப்பு வெளிப்பட ஆடுபவர். (சிறுபாண். 31)

உமட்டியர் – (சிறுபாண். 60)

கிணைமகள் – கிணைவரின் மனைவி (கிணைப்பறையை இயக்குபவன் கிணைவன்) (சிறுபாண். 136)

நுளைமகள் – நுளையர் மரபில் தோன்றியவள். (சிறுபாண். 158)

எயிற்றியர் – (சிறுபாண். 175)

தங்கை – எயினர் குல மங்கையர் (சிறுபாண். 190)

மகடூஉ – (சிறுபாண். 192)

பேய்மகள் – (சிறுபாண். 197)

அரிவையர் – (சிறுபாண். 215)

இயல் மகளிர் – (சிறுபாண். 262)

மடந்தை – (பெரும். 12)

நாடக மகளிர் – கூத்தியர் (பெரும். 55)

| | |
|---|---|
| மகவுமகடூஉ | – குழந்தையை உடைய பெண் உமட்டியர் (பெரும். 58) |
| எயிற்றியர் | – (பெரும். 94) |
| சூல் மகள் | – (பெரும். 136) |
| ஆய்மகள் | – இடைச்சி (பெரும். 162) |
| செவிலி | – (பெரும். 251) |
| பெண்டிர் | – (பெரும். 251) |
| மகடூஉ | – (பெரும். 304) |
| மகளிர் | – (பெரும். 312, 327) (மதுரை. 446) |
| கள்அடு மகளிர் | – கள்ளைச் சமைக்கும் மங்கையர். (மங்கையர் வீட்டின் முன் கள்ளைச் சமைத்தனர்) (பெரும். 339) |
| மடவரல் மகளிர் | – (பெரும். 388) |
| விறலியர் | – (பெரும். 486) |
| அணங்கு | – பேய்மகள் (பெரும். 459) |
| பெரு முது பெண்டிர் | – (முல். 11) |
| தாயர் | – (முல். 15) |
| மங்கையர் | – (முல். 47) |
| பேய் மகளிர் | – (மதுரை. 25, 163) |
| மடமங்கையர் | – (மதுரை. 159) |
| அரந்தைப் பெண்டிர் | – மனக்கவலையுடைய பெண்டிர் (உற்றாரை இழந்தமை, செல்வத்தை இழந்தமை) (மதுரை. 166) |
| விறலியர் | – திறம்பட ஆடும் மகளிர் (மதுரை. 218) |
| பூங்கோதையர் | – (மதுரை. 398) |
| தொல்முது பெண்டிர் | – பழமை மூத்த பெண்டிர். (வீடு தோறும் சென்று பல பொருள்களை விற்றவள்) (மதுரை. 409) |
| இளம் பெண்டிர் | – (மதுரை. 465) |
| பெண் | – (மதுரை. 555) |
| பிணைநோக்கு மகளிர் | – பெண்மாண் போல் பார்வையுடைய (மதுரை. 555) |
| பாசிழை மகளிர் | – (மதுரை. 579) |

| | |
|---|---|
| வானவ மகளிர் | – தேவ மகளிர் (மதுரை. 582) |
| நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர் | – பொருளை வாங்குபவர் / பொருளைக் கொள்ளைக் கொள்ளும் மகளிர் (மதுரை. 583) |
| வளமனை மகளிர் | – வளமைமிக்க செல்வம் உடைய குடிபிறப்பாட்டிய மகளிர் (மதுரை 603) |
| கடுஞ்சூல் மகளிர் | – (மதுரை. 609) |
| ஒள்இழை மகளிர் | – (மதுரை. 623) |
| மாண் இழை மகளிர் | – சிறந்த அணிகலன்களை அணிந்த மகளிர் (மதுரை. 680) |
| ஆய்தொடி மகளிர் | – மா(மதுரை. 712) |
| பாட்டியர் | – பாணிச்சியர் / பாணரின் பெண் பாலர் (மதுரை. 749) |
| இலங்கு இழை மகளிர் | – (மதுரை. 779) |
| மடவரல் மகளிர் | – (நெடுநல். 39) |
| கூந்தல் மகளிர் | – (நெடுநல். 53) |
| ஆடல் மகளிர் | – ஆடும் தொழில் உடைய மகளிர் (நெடுநல். 67) |
| தூங்கு இயல் மகளிர் | – சூல்முற்றி அசையும் இயல்புடைய மங்கையர். (நெடுநல். 120) |
| மெல்இயல் மகளிர் | – (நெடுநல். 151) |
| செம்முகச் செவிலியர் | – சிவந்த முகத்தையுடைய செவிலித் தாயர். (நெடுநல். 153) |
| அரிவை | – அரசி (நெடுநல். 166) |
| அன்னை | – செவிலித்தாய் / தாய் (குறிஞ்சி. 1) |
| தோழி | – (குறிஞ்சி. 2) |
| மனையோள் | – (குறிஞ்சி. 154) |
| அணங்கு உறு மகளிர் | – தெய்வம் தீண்டி வருத்தமடைந்த மகளிர் (குறிஞ்சி. 175) |
| ஆடுமகள் | – (குறிஞ்சி. 193) |
| வரை அர மகளிர் | – வரையர மகளிர் (குறிஞ்சி. 195) |
| பூந்தொடி மகளிர் | – (குறிஞ்சி. 223) |
| நேர் இழை மகளிர் | – பூணையும் உடைய மகளிர் (பட்டினப். 22) |

மாமகளிர் – கருநிறத்தையுடைய மகளிர் (வருணனை வழிபடுபவர்) (பட்டினப். 91)

தாய் – (பட்டினப். 96)

மட மங்கையர் – (பட்டினப். 106)

மகளிர் – (பட்டினப். 109, 110)

வெறி ஆடு மகளிர் – செவ்வேளுக்கு வெறியாடல் ஆடும் மங்கையர். (பட்டினப். 155)

கொண்டி மகளிர் – (பட்டினப். 246)

பேய் மகள் – (பட்டினப். 260)

முற்று இழை மகளிர் – (பட்டினப். 296)

மடந்தை – (மலைபடு. 31)

இலங்கு வளை விறலியர் – (மலைபடு. 46)

மங்கையர் – (மலைபடு. 58)

குறமகள் – (மலைபடு. 183)

வரை அரமகளிர் – தெய்வ மகளிர் (மலைபடு. 190, 194)

செறிதொடி விறலியர் – (மலைபடு. 201)

கொடிச்சியர் – (மலைபடு. 304)

பெண்டிர் – (மலைபடு. 320)

கிளிகடி மகளிர் – (மலைபடு. 329)

தினைகுறு மகளிர் – தினையைக் குற்றும் குற மகளிர் (மலைபடு. 342)

மகளிர் – (மலைபடு. 349)

இன்குரல் விறலியர் – இனிய (யாழ் / குரல்) உடைய விறலியர் (பாடி, ஆடும்) (மலைபடு. 358, 536)

கொடியோள் – பூங்கொடி போன்றவள் (மலைபடு. 424)

பழையர் மகளிர் – கள்விற்கும் மகளிர் (மலைபடு. 459)

விறலியர் – (மலைபடு. 569)

## சங்க இலக்கியத்தில் தொழில்கள்

| | |
|---|---|
| உழவுத் தொழில் | – நாற்று முடிகளை நடுவதற்கு உழத்தியை அழைத்துச் சென்றனர். (நற். 60) வயலில் கூடமைத்து வாழும் பறவைகளை விரட்டுதல் 'தண்ணுமை' இசைக்கருவியைப் பயன் படுத்தினர். (நற். 350:1–2) |
| மீன் பிடித்தல் | – நெய்தல் நிலத்து மக்களின் முக்கியத் தொழில் மீன் பிடித்தல் (நற். 45:1–3) உலர்த்தல், உப்பு எடுத்தல்–'கடல்மேம் பரதவர்' (நற். 4:1), அயல் நாட்டவருடன் வாணிபம் செய்து வந்துள்ளனர் (நற். 31:8–9), மீனினை விற்பனை செய்துள்ளனர் (நற். 63:1–3), இரவு, பகல் என இருநேரங்களில் மீன் வேட்டல் (நற். 67:8–9), விளக்குகளைப் பயன்படுத்தினர் (நற். 199, 111, 175, 119, 219, 295, 303, 331, 388, 392, 30, 38) |
| பரதவர் (மீன் பிடித்தல்) (நெய்தல்) | – மீன் பிடிப்பதற்கு கடலில் சென்றவர் (குறுந். 184:6, 123:5), பிடித்த மீன்களை உலர்ந்த வற்றலாக மாற்றுதல் (குறுந். 320:1), தந்தை மீன் வேட்டைக்காக கடலில் புகுதல், தாய் உப்பை விற்று அதன் விலையாக வெண்ணெல் வாங்கி வருவதற்கு உப்பு விளையும் களத்திற்குச் செல்லுதல் (குறுந். 269:4–7), சுறாமீன் வேட்டைக்குச் செல்லுதல் (குறுந். 304:4)) |
| மீன் விற்றல் | – பரதவர் பிடித்துவந்த மீன்களை பெண்கள் விழாக்கோலம் பூண்ட வீதிகளில் விற்றல். மீன்களை உலர்த்துதல், பறவைகளிடமிருந்து காத்தல் (நற். 49:3–4, 45:6–7) உப்பு வணிகரின் வண்டிகளைப் போல (பரதவர்), மீன்களைத் தொகுத்து வறியவர்க்குத் தந்து எஞ்சியவற்றை விலை கூறி விற்பனை செய்தனர். (அகம். 30) |

| | |
|---|---|
| மீன் விற்றல், காத்தல் | – பரதவர் பிடித்த மீன்களை, விழாக் கோலம் பூண்ட வீதிகளில் பரதவ மகளிர் விலை கூறி விற்றனர் (அகம் 320:1–4) தெருக்கள் தோறும் சென்று விற்று எஞ்சிய மீன்களை உப்பிட்டு அவற்றை வெண் மணற் பரப்பில் இட்டு வெயிலில் உலர்த்தியுள்ளனர். அவற்றைக் காவல் செய்தனர். (அகம். 20:1–3, 80:4–6) |
| மீன் பிடித்தல் | – **'பல் மீன் வேட்டத்து என்னையர் திமிலே'** (குறுந். 123:5) பலவகை மீன்களைப் பரதவர் பிடிப்பர். |
| தினைபுனம் காத்தல் 'கொடிச்சி காக்கும் பைந்தினை' | – நிலத்தின் தன்மைக்கேற்ற விளைபொருளாகிய தினையினைக் கிளிபோன்ற பறவைகள் உண்ணாமல் காக்கும் பணியினைச் செய்வர் கொடிச்சி. வேண்டாத மரங்களை வேரொடு அழித்து பண்படுத்தி, விளைந்து முற்றிய கதிர்களை மகளிர் பாத்தனர் (நற். 22:1) கதிரவன் மறைகின்ற வரையும் தினைப்புனத்தை காத்தல். தானியத்தைக் கதிரிலிருந்து பிரித்துப் பதப்படுத்துவர் (நற். 344:9–11) குறிஞ்சி நில மக்கள் தம் தினைபுனத்தினை பறவைகளிடமிருந்து காப்பர். இத்தொழிலில் பெண்கள் அதிக அளவில் ஈடுபட்டிருந்தனர். (குறுந். 72:4–5, 141:1–2, 142:2, 217:1, 291:2, 360:8, 333:3, 3465, 357:5) |
| கிளி ஓட்டுதல் | – கிளியை ஓட்டுதல். (அகம். 28:9–2) |
| புள்ளினம் ஓட்டுதல் | – வயல்களில் உலவும் நாரைகளைப் பெண்கள் ஓட்டி தம் நெல்வயல்களைக் காப்பர். (பதிற். 73:8–9) |
| கிளி கடிதல் | – குறமகளிர் தினையினை உண்ண வரும் கிளியினைக் கடிதல். (ஐங். 260:3, 282:3, 283:3, 285:3) |

| | |
|---|---|
| யானை ஓட்டுதல் | – யானையை நிலத்திலிருந்து ஓட்டுதல். கவண் பயன்படுத்துதல். (கலி. 23:1) |
| குருவி ஓட்டுதல் | – (ஏனல்) தினைப் புனத்தில் கதிர்களை உண்ண வரும் குருவிகளை ஓட்டுதல். (குறுந். 72:4–5, 141, 142) |
| மலைநெல் விதைத்தல் | – காந்தளை இயற்கை வேலியாக உடைய சிற்றூரில் வாழும் குறவர்கள் பரந்த நிலத்தில் மலைநெல்லை விதைத்து, இடையிலே களையாக முளைத்த இலை, கொடியைக் களைந்தெறிவர் (குறுந். 100:1–2) |
| தினைப் பயிரிடல் | – சிறிய தினை அறுத்த பிறகு மறுகாலிற் விளையும் அவரை, பருத்தி விதைப்பர் (குறு. 82:4–5, 74:45, 214:1–2) |
| பயிர் அறுத்தல் | – சிறிய தினை விளைந்து கிடக்கின்ற அகன்ற இடத்தையுடைய கொல்லையில் விளையும் தினைக் கதிர்களை அரிபவர்கள் தொண்டக பறையை முழக்குவர் (குறுந். 375:3–4) |
| விதை விதைத்தல் / உழுதல் | – மரங்களை வெட்டி அழித்த காட்டில் குறவன் தினையினை உழுதான். (குறுந். 214:1–2) |
| உழவர் (முல்லை நிலம்) | – உழவர்கள் காலையில் விதைக்கும் பொருட்டு விதையுடன் எடுத்துச் சென்ற சிறிய வட்டிகள் வீடு திரும்பும் பொழுது மலர்களால் நிறைந்திருக்கின்றன. (குறுந். 155:1–2) |
| உழவர் (மருதம் நிலம்) | – நேரத்தை வீண்படாமல் உழுதற்கு செயல்படுபவன் உழவன், மழை பெய்ததால் ஈரம்பட்ட நிலத்தில் விதைத்தல். (குறுந். 131:4–5) களை எடுத்தல் (குறுந். 309:1–6) ? |
| ஆறலை கள்வர் (பாலை) | – ஆறலை கள்வர்கள் பாலை நிலத்தில் தம் அம்பின் செம்மையைக் காணும் பொருட்டு தம் நகநுனியில் |

புரட்டுவர் (குறுந். 16:1–2, 274:4, 390:4–5, 350:5–6) கொலைவில் எயினர் தங்கை' (ஐங். 329:1–3) கொலைத் தொழில் உடையவில்லை ஏந்திய வேட்டுவர். (ஐங். 363:2)

ஆறலை கள்வர் அன்பு இல்லாமையால் வழிப்போவரை துன்புறுத்துவர். (கலி. 4:1–5, 6)

பாலை நிலத்தில் வாழும் ஆறலை கள்வர். (வில் ஏர் உழவர்(அகம். 193:1–2)

பாலை நிலத்தில் வரும் மாந்தர்களை வழிபறி செய்பவர் ஆறலைக் கள்வர். (பொருநர். 21–22)

கரும்பு பயிரிடுதல் – (குறுந். 267:2–4)

உமணர் (உப்பு விற்றல்) – உப்பு வணிகர் உமணர் எனப்பட்டனர். உப்பு வணிகர் பலர் கூட்டமாக கூடித் தங்கி தம் தொழிலினை மேற்கொள்வர் ((குறுந். 124:1)

இவர்கள் உப்பினை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு ஊர் ஊராகச் சென்று வணிகம் புரிந்தனர். 'நெல்லின் நேரே வெண்கல் உப்பு என' (அகம். 140:7) உமணர் மகள் ஒருத்தி விற்ற செய்தி.

பாரிமகளிர் போர் வண்டிகளை எண்ணியவர். இப்போது உப்பு வண்டியை எண்ணும் நிலை. (புறம். 116:7–8), பருக நீரும் உண்பதற்கும் புல்லும் தராமல் உப்பு வாணிகர்கள் மக்கள் இல்லாத புறத்தே முடம்பட்ட காரணத்தால் உயிர் வாழாத காளையினைப் போலக் கிடந்து பகைவருடைய உயிரைக் கவர்கின்றனர். கடற்கரையில் விளைந்த உப்பை குறிஞ்சி நிலத்திற்குக் கொண்டு சென்றனர். (புறம். 60:7–8, 102:1–4, 313:5–7)

உப்பு மூட்டைகளை ஏற்றிக்கொண்டு விற்பனை செய்வர். மனைவி, மக்களுடன் செல்வது. அவர்களுடன் பிள்ளைகள் போல் வளர்க்கப்பட்ட குரங்குகள் வருவது வழக்கம். (சிறுபாண். 55–56)

| | |
|---|---|
| குறி கூறுதல் (அகவன் மகள்) கட்டுவிச்சி | – தலைவியின் வேறுபாட்டைக் கண்டு செவிலி கட்டுவிச்சியை அழைத்தல் (குறுந். 23) |
| வெறியாடுதல் (வெறியயர்தல்) | – மறியறுத்து குரவையாடி முருகனை வழிபடுதல் – வெறியாடல் (குறுந். 263:1–4, 53:3–4, 214:6–7, 111:1–2, 362:3–5, 366:3, 360:1) வேல் பெயரில் நடத்துவது. (பரி. 5:13–15) |
| தேன் அழித்தல் | – தேன் எடுத்தல் (ஐங். 272:1–2) |
| கிழங்கு அகழ்தல் | – குறவர் தம் உணவுகளுள் ஒன்றான கிழங்கினை அகழ்தல் (ஐங். 208:1–2, 270:1) |
| அவரை விளைத்தல் | – குறவர்கள் அவரையினை விதைத்தல். (ஐங். 209:3, 271:1) |
| பயிர் விளைத்தல் | – வரகு, துவரை முதலியவை விளைத்தல். (ஐங். 417:1–2) |
| பயிர்த்தொழில் | – குறிஞ்சிநில மக்கள் மலையின் சரிவுகளில் பயிர்த்தொழில் செய்தனர். (கலி. 40:3–5, 43) |
| தேனெடுத்தல் | – தேனெடுக்கும் தொழில், ஏணி அமைக்கும் தொழில். (கலி. 39:9) |
| காத்தல் தொழில் | – மகளிர் தினைப்புனம் காத்தல் கிளி, களிறு ஓட்டுதல். (கலி. 37:13, 50:9, 48:6), கானவர் கவண் எறிந்து களிறு விரட்டுதல் (கலி. 41:10), பூண் அமைத்து காவல் புரிதல் (கலி. 39:7, 41:9) |
| தேன் எடுத்தல் | – குறவர்கள் மலை, உச்சி, பாறைகளில் உள்ள இனிய தேன் எடுத்தல். (அகம். 322:12, 78:7) |
| உமட்டியர் | – உமணரோடு வண்டிகளில் ஏற்றிக்கொண்டு, உமட்டியரும் குழந்தைகளும் ஊர் ஊராகச் சென்று, உப்பினை விற்றனர். (அகம். 390:8–9), உப்பினை விற்று பெற்ற நெல்லினைக் குற்றிச் சோறாக்கி தந்தைக்கு கொடுத்தனர் (அகம். 60:3– |

| | |
|---|---|
| | 6), எறும்பு சேர்த்த அரிசியைக் கொண்டு வந்து தங்கள் உணவினை அமைக்கும் இயல்பு (அகம். 377:2–3) கொண்டவர். |
| உழவர் | – பழன மஞ்ஞை உடுத்த பீலி<br>கழனி உழவர்..... (புறம். 13:10–11, 289) வயல் வெளியில் மயில்கள் தம் தோகைகளை உதிர்த்தல். |
| உழவர் (வன்கை வினைஞர்) | – தினைக் கொல்லையை உழுது பயிர் செய்யும் உழவர்களான குன்றவரை ஏனல் உழவர் (பதிற். 30:22) வன்கைவினைஞர் (58:12–19, 58:15) என அழைக்கப்படுவர். |
| உழவர் மகளிர் | – அறுவடைத் தொழில் (பதிற். 71:1–3, 19:21–22) |
| இயவர் (உழவர் இனத்து இயவர்) | – இளைய மகளிர் நெற்கதிரை மேயும் மயில்களை ஓட்டினர். அவை அகன்று போய் மருத மரத்தில் ஏறின. அவற்றை ஓட்டுவதற்காக இயவரும் மரத்தில் ஏறினர். இவர் கவணும், தட்டையும் கைக்கொண்டு ஓடடுபவர் அல்லர். இவர் தம் குரால் எடுத்து விளித்து இசைத்து பாடினர். அப்பாட்டு இயவர் இசைக்கும் இனிய இசை கருவியின் ஒலிபோல் விளங்கியது. (பதிற். 27:5) |
| உழவுத் தொழில் | – தம் உறவினரோடு தம் தொழில் செய்ய வாளை மீன்களைப் போல் நீரில் பரந்து சென்றனர் (பரி. 6:9–10, 7:38–39). |
| உழவர் (களமர்) | – உழவின் மேன்மை நெற்குவியல் – மேருமலைக்கு இணையாக சொல்லப்படுகிறது. (பொருநர். 193–194, 242–245) |
| வாணிபம் (பண்டமாற்று) | – குறிஞ்சி நில மக்கள்–தேன், கிழங்கு கொடுத்து, மீன், நெய், கறவை பெறுதல் – நெய்தல் நிலம். |

மருத நில மக்கள் – கரும்பு, அவல் கொடுத்து மான்தசை, கள் பெறுதல் – குறிஞ்சி நிலம். (பொருநர். 214–217)

உணவு – முல்லைக் காட்டில் வாழும் எயினர் குல மங்கையர் தாம் சமைத்த இனிய புளிங்கறி இட்ட சோற்றை ஆமானின் இறைச்சியுடன் தம்மை நாடிவரும் இரவலருக்கு அளிப்பர். (சிறுபாண். 175–177, 237–241)

ஆடு, மாடு மேய்த்தல் – கோவலர்கள் கால்நடைகளை மேய விடுதல் (நெடுநல். 3–4) நீர் அருந்த கிணற்றினைத் தோண்டுபவர் (அகம்.21:22, 321:6–8)

ஆய்மகள் – கால்நடைகளில் இருந்து பெறக்கூடிய பால், மோர், தயிர் விற்றல் (பெரும். 155–162, 163, 164–165)

புல்லரிசி எடுத்தல் (எயிற்றியர்) – புல்லரிசியை எறும்பு எடுத்துச் சென்று தன் புற்றுக்குள் வைக்கும் இயல்புடையது. அத்தகைய புல்லரிசியை எயிற்றியர் மண்ணைக் குத்திக் கொண்டனர் (பெரும். 89–97, 97–105).

நொதுமலாட்டி (பூ விற்றல்) – உழத்தியர் – வயல் வேலை மற்றும் வீதிகள் தோறும் மலர்களை விற்று பொருள் தேடுதல் (நற். 118:8–1, 97:6–8)

பூ விற்கும் மகளிர் (பழையர் மகளிர்) – எயினர் மகளிர் பூக்களைப் பறித்து சிற்றூர்களில் (சீறூர் நாடு) உள்ள தெருக்களில் சுற்றி சுழன்று வருபவர் (அகம். 331:1–8)

புலைத்தி (ஆடை வெளுக்கும் தொழில் – பூ வேலைபாடு மிக்க ஆடைகளை உவர் மண்ணில் ஊறவைத்து, சலவை செய்து, சோற்றுக் கஞ்சியில் தோய்த்து இரவுபொழுதில் உலர்த்துதல் (நற். 90:3–4) ஊரவர்களின் ஆடையை சேர்த்து வெளுக்கும் தொழில். (கலி. 72:13–14) தமக்குத் துணையாக தம் புதல்வரை ஈடுபடுத்தியுள்ளனர்.

| | |
|---|---|
| | (அகம். 34:11–12) களர் நிலத்தில் ஊற்றுக் கிணற்றைத் தோண்டி துணிகளை வெளுத்தனர். (புறம். 311:1–2) |
| ஆளில்பெண்டிர் (நெசவுத் தொழில்) | – கணவனை இழந்த மகளிர் பஞ்சினை நூலாக்கும் பொறுமை மிகுந்த பணி செய்தல் (நற். 353:1–3) |
| கள்விற்கும் மகளிர் (அரியற் பெண்டிர்) (அரியலாட்டியர்) | – உழைப்பின் களைப்பினைப் போக்க பலதொழில் புரிந்தவர் அருந்துதல் (அகம். 157:1, 245:9) இவர்கள் (பெண்கள்) சுமந்து கொண்டு வந்த பானை யிலிருந்த கள்ளினை வாங்கிக் குடித்தனர் வீரர். (போர்க்களத்தில் குறிப்பிட்ட தூரத்தில் போர் வீரர்களுக்கு கள் கொடுத்துள்ளனர்) (அகம். 157:1–4) மகளிர் உண்டாக்கிய காம பானம் (பரி. 8:120–121) நுளைச்சியரால் உண்டாக்கிய கள்ளை பரதவர் இரவலருக்குத் (பாணர்) தருவர். மகளிர் கள் உண்டாக்கி உள்ளனர் (சிறுபாண். 154–163) |
| பழையர் (கள் விற்கும் மகளிர்) | – குறமகள் நெல்லைக் கொண்டு கள் சமைத்தல். (மலை. 459) |
| ஏவல் பெண்டிர் | – மன்னனிடம் வரும் இரவலரை உபசரிக்கும் பொழுது ஏவற் பெண்டிர்கள் கள்ளை பொன்னால் செய்த வட்டில் நிறையும்படி பலமுறை தருவர். (பொருநர். 85–87) |
| உணவுத் தொழில் | – எயினர் குல மங்கையர் சோற்றை இரவலருக்கு அளிப்பர் (சிறுபாண். 175–177 |
| காவலர் | – பாண்டிய மன்னனின் பாசறையில் இரவுப் பொழுதை பகல் பொழுதாக மாற்ற வாளைக் கச்சுடன் கட்டிய மகளிர் நெய்யை உமிழ்கின்ற திரிக்குழாயை உடையவராய் நீண்ட திரியை இட்டுப் பாவை விளக்குகளை அவியுந்தோறும் ஏற்றி வைத்தனர். (முல். 46–48) |

அரசனின் இல்லில் விளக்குகள் இருந்தன. அதனை மங்கையர் ஏற்றினர். அவர் காவலையும் மேற்கொண்டனர். காவல் தொழிலுக்கு ஏற்ப வாளை உடையவர் திகழ்ந்தனர்.

| | |
|---|---|
| தொல்முது பெண்டிர் (பூ விற்றல்) | – வீடு வீடாகச் சென்று பல பொருள்களை விற்றனர். காதல், காதலியர் விரும்பும் பொருள்களை கலங்களில் ஏந்தி (வீடுதோறும்) பூவிற்றனர் (மதுரை. 409–423) |
| கட்டுவிச்சி (குறி கூறுதல்) | – தலைவியிடம் உள்ள வேறுபாட்டை செவிலித் தாய் அறிந்த கட்டுவிச்சியை அழைத்து குறி கேட்டல். முற்றத்தில் நெல்லை வைத்து தெய்வங்களைப் பாடி குறி காணுதல். (குறுந். 23) |
| வெறியாட்டு (குறமகள்) | – தலைவன் தலைவியர் கொண்ட களவொழுக்கம் காரணமாக வெறியாடல் நிகழும். வேலன் ஆடுவது அன்றி குறமகளும் வெறியாட்டு ஆடுதல் வழக்கம். (திருமுரு. 227–245) |
| ஆடுமகள் | – வெறியாடுபவள் (குறுந். 105:3) என்ற பொருண்மையில் உரை அமைந்துள்ளது. |
| கம்மியன் (பொன்செய் கம்மியன்) | – பொற்கொல்லர் (நற். 313:1–2, 124:6–7, 94:4–5) பொன்னை நெருப்பில் உருக்கி ஆபரணம் செய்பவர். |
| பொன்செய் கன்னம் / செம்பு செய் கம்மியர் | – வெள்ளிப் போன்ற உலோகங்களைக் கொண்டு பாத்திரங்கள் செய்தல் (அகம். 317:8–9). பொன், மணி, முத்து, பவழம் கொண்டு ஆபரணங்கள் செய்பவர்களைக் கம்மியன் என்று அழைத்தனர் (புறம். 353:1–4, 218). |
| குயவர் | – தாழி செய்தல், முரசு (விழா) அறைதல், விழாவில் கள் முதலிய பலிகளை அளித்தல். (நற். 84:6, 200:3–4, 293:2–3) மட்கலம் வனைதல் (அகம். 308:6, மலைபடு. 474) குயவர், சமைத்தலுக்கு |

மட்டுமின்றி, தாழிகள், பானைகள், பிற கலன்கள் செய்தல். அரசன், வீரர் இருதிறத்தவருக்கும் தாழிகள் செய்தல் (புறம். 228:1–5, 256:1–6). பானை, அடுப்புகள் செய்தனர் (பெரும். 99).

| | |
|---|---|
| நெசவுத் தொழில் | – நெசவுத் தொழில் (மரப்பட்டையில் உள்ள நாரினை எடுத்து ஆடை பயன்படுத்தினர் குறவர்) (நற். 299:7, 64:4) நூலால் நெய்யப்பட்ட ஆடை (மலைபடு. 561–562) |
| ஆடை நெய்வோர் | – ஆடைக்கு உண்டான பருத்தியை வேலி போல வீடுகளில் பயிரிட்டனர். ஆடை செய்யும் தொழில் பருத்தி வேலிச் சீறூர் மன்னன். (புறம். 299:1) |
| புலையன் | போர்பறைக் கொட்டுதல், துடி முழக்குதல், வீரர்களுக்கு ஆயுதம் வழங்குதல். பூக்கொள்ளுமாறு வீரர்களை அழைத்து பறையறையும் தொழில். (நற். 77:1–2) பிணம் சுடும் கடமை / இடுகாட்டில் செய்யும் கிரியைகள் (புறம். 360:16–19). |
| பாகன் | – யானைகளைப் பழக்குவித்தல், செலுத்துதல். (நற். 13:1) யானை பயிற்றுவித்து அதன் மீது செல்லுவது. பேசும் மொழி வடமொழி. (மலைபடு. 325–327) |
| காவலர் கணக்கு (நாழிகை கணக்கு) | – நாழிகை வட்டிலைக் கூர்ந்து நோக்கி யாமக் கணக்கை அறிவிப்பர் (குறுந். 261:5–7). |
| தச்சன் | – குதிரை பூட்டிய கைவண்டியை செய்பவன் தச்சன் (குறுந். 61:1–2). 28. அரசர்களுக்குரிய தேர்களைச் செய்பவன் (புறம். 87:3–4). தேர் செய்யும் தொழில் – அத்தகையவருடைய பிள்ளைகள் சிறு தேரை உருட்டி விளையாடுவர். (பெரும். 248–249) சிறுகுழந்தைகள் நடைபயில நடைவண்டிகள் செய்தனர் (பட்டினப். 24–25) வாணிபத்திற்கு |

தேவையான படகு, கப்பல், முதலியவற்றை கட்டும் தொழிலில் தச்சர்கள் சிறந்து விளங்கினர். (பண்டைத் தமிழர் தொழில்கள் ப.86) யானை போன்று அசைவதுமான மரக்கலம் இருந்தது. (பட்டினப். 172–174)

| | |
|---|---|
| தச்சர் (கைவல் கம்மியன்) ''நூல்அறி புலவர்...'' | – சிற்ப நூல் அறிந்த தச்சர் – நூல் பிடித்து திசைகளைக் குறித்து – தெய்வங்களையும், குறைவின்றிப் பார்த்து மன்னர் வாழ்வதற்கு ஏற்ப மனைகளையும், வாயில்களையும், மண்டபங் களையும், பிறவற்றையும் தொழில் நுட்பம் வெளிப்படும் வகையில் செய்தனர் (நெடுநல். 76–85, 80–86, 115–123) |
| கருந்தொழில் வினைஞர் / தச்சர் | – தேர் செய்தல் (சிறுபாண். 256:261) |
| விலைஞர் | – வளையல்களை விற்பவர் (குறுந். 117:6). |
| கொல்லன்/கொல்லர் | – இரும்புத் தொழில் செய்பவர் (கலி. 64:21–22), வேல் வடித்துக் கொடுத்தல், கோடாரி செய்தல், போர்க் கருவிகளைப் பழுது பார்த்தல் (புறம். 312, 36:6–9, 170:14–17, 180:12–13, 270:11–12) இரும்பு, பொன் – இரு உலோகங்களால் கொல்லர் தொழில் செய்தல் (அகம். 202:5–8). பொன், மணி முதலியவற்றால் ஆன அணிகள் மகளிர் அணிதல் (பெரும். 312 314, 485–486). முத்து மணி, பொன் என்பவற்றால் செய்யப்படும் அணி கெடுமாயின் அதனை திருத்தி அமைப்பர். (குறிஞ்சி. 13–14) |
| தொய்யில் எழுதுதல் | – தொய்யில் எழுதுவோர் – தலைவி, தலைவன் மார்பிலும், தோளிலும் தொய்யில் அதாவது வரிக்கோலம் எழுதுதல் (கலி. 18, 76, 117). |
| ஓவத்தன்ன | – ஓவியம் வரைபவன் (கலி. 22:5, அகம். 98:11–12, பதிற். 61:3) கோயில்களில் சித்திரங்கள் எழுதிய |

மண்டபங்கள் (திருமுரு. 19:53). பூம்புகாரில் அமைந்த அரசனின் அரண்மனையில் ஓவியம் தீட்டப்பட்டிருந்தது. (பட்டினப். 49–50) பல பூக்களுடைய ஒப்பற்ற பூங்கொடியை ஓவியமாய் (இல்லம்) வரைந்து காட்சிப்படுத்தினர் (நெடுநல். 112–114)

புலைத்தி – கிடைச்சு மூங்கில் முதலியவற்றால் பணி செய்யும் தொழிலாளர் – பனங்குருத்தின் வகிரால் மூடிய தொழிலை உடைய புட்டில் செய்தனர். அதனை விற்பவள் – புலைத்தி. (கலி. 117:7–8)

மருத்துவர் / மருத்துவன் – பிணியறிந்து – மருந்துகொடுக்கும் தொழில் – மருத்துவர் (கலி. 17:18–20).

அடியோர் – அடிமைத் தொழில் / தம் தலைமைக்குக் கட்டுப்பட்டு வாழ்ந்தனர் (கலி. 88:3–4).

கோவலர் / கூவலர் – வன்நிலத்தில் கிணற்றினைத் தோண்டும் தொழில். ஆடு, மாடு நீர் அருந்துதல் (அகம். 21:22, 321:6–8).

வில்லேர் உழவர் / வழிப்பறி செய்வோர் – வில்லாகிய ஏரால் உழுதலைச் செய்பவர் வழிப்பறிப்பவர் / ஆறலை கள்வர் (அகம்.193:1–2).

கள்வர் – பாலை நிலத்தில் வாழ்பவர். பாலை வழியில் வரும் மக்களை வழிப்பறிச் செய்பவர் (பொருநர். 21–22).

காழியர் / வண்ணார் – ஆடைகளை வெளுப்பவர் (அகம். 89:7)

மடைத்தொழில் – மடைத்தொழில் / உணவு சமைக்கும் பகுதி அட்டில். உணவு சமைப்பவர் (அகம். 168:7).

காவலர் – நகரம், நாடு காக்கும் காவற் பணி (அகம். 122:6, 162:7, 2:14, 252:15)

சங்கு அறுப்போர் / வேளாளப் பார்ப்பார் – வேள்வி இயற்றாத பார்ப்பனர் சங்கறுத்து, வளையல் செய்தனர். (அகம். 24:1–2)

| | |
|---|---|
| காரோடன் | – படைக்கலங்களுக்குத் தோலால் உறைகளைத் தைப்பவர் சக்கிலியன் எனவும், உறைக்காரன் எனவும் அழைப்பர் (அகம். 1:5–6). |
| இழிசினன் (கட்டில் பின்னுவோன்) | – கட்டில் பின்னுபவன் விரைவு – அதைவிட பெருநற்கிள்ளியின் போர் புரியும் திறமை (புறம். 82:3–4). |
| பாணர், பறையர், துடியர் கடம்பர் – புலையர், இழிசினர், இழிபிறப்பாளர் | – பறையை முழக்கியவன் / துடி கொட்டுபவன் யாழ் மீட்டி இசைபாடும் இயல்பினர் (புறம். 355, 289, 170, 287). |
| இயவர் | – இசைக் கருவிகளை இயக்குபவர்கள், பகைவரின் கடம்ப மரத்தை வெட்டி வீழ்த்தி அதிலிருந்து முரசு செய்பவர். அதனை அரிய பலியை இட்டு வழிபடுவர் வீரர். அம்முரசினை அடித்து முழக்குபவர்கள் இயவர்கள் (பதிற். 17:1–7, 19:1–10). |
| சாகாட்டாளர் | – வண்டியை ஓட்டுபவர் (பதிற். 27:11–14) |
| இயவர் | – உழவர் இனத்து இயவர் / முரசு அடித்து முழக்குபவர்களில் இருந்து வேறானவர். தம் இனிய குரலால் பாடி மயிலை ஓட்டுவர் (பதிற். 27:5) |
| 'தோல்' ஆடை செய்பவர் | – மானின் தோலை தூய்மை செய்து, அவற்றை முத்து மணி, மாணிக்க மணி முதலானவற்றால் அழகுப்படுத்தி, அரசமாதேவி அணிந்து கொள்ளும் ஆடை செய்பவர் (பதிற். 74:10–16). |
| அகவலர் | – மன்னர் தம் போர்க்களத்தையும், கொடை முதலியவற்றையும் சிறப்பித்துப் பாடுபவர் (பதிற். 43:26–28). |
| முத்து, மணிகளில் பணி செய்பவர் | – பந்தர் என்ற ஊரில் – முத்து கிடைத்தன (பதிற். 67:2–4, 74:6); கொடுமணம் எனும் ஊர் நல்ல அணிகலன்களுக்குப் பெயர் பெற்றது (67:1–4, 75:5) – இரு தொழில் செய்வோர் இருந்தமை புலனாகும். |

காவலர் / கரைக்காவலர் – வெள்ளம் கரைகளை உடைத்தன. அதனை அமைக்கும் பொருட்டுப் பறை கொட்டவேண்டும் என்று அறிவிப்பார் காவலர் (பரி 6:22–24).

விரிநூல் அந்தணர்
கோயில் பூசகர் – வேள்வி முறை காட்டி, விழவு முதலியவற்றை முன்னின்று நடத்தி வைப்பவர்
(பரி. 11:77–78, 81–82).

அந்தணர் தொழில்
ஓதல் / ஓதுவித்தல் /
வேட்டல் / வேட்பித்தல் /
ஈதல் / ஏற்றல் அறம் கூறும்
நாவை உடையவர் – நால்வகை வர்ணப் பிரிவுகளுள் (திருமுரு. 177–180). ஒருவரான அந்தணர்.

கருந்தொழில்
வினைஞர் / கொல்லர் – கருந்தொழில் வினைஞர் கொல்லரை குறிக்கின்றது (சிறுபாண். 257).

தோல் தொழில்
(காலணி) – காலணியை 'தொடுதோல்' என்று அழைக்கின்றது கால் முழுவதையும் மறைக்கின்ற காலணியையும் அணிந்திருந்ததை இலக்கியம் சுட்டுகின்றது (பெரும். 169).

கூவியர்
(அப்ப வாணிகர்) – இனிய பாகொடு மாவை சேர்த்து பல சிற்றுண்டிகளை தயாரித்து விற்பனைச் செய்தல். (பெரும். 377–378)

மெய் காப்பாளர் – காவலாகத் திரிவர். பகைவரின் வஞ்சனைக்கு உட்படாமல் தம் மன்னரிடம் நன்னடக்கையுடன் நடப்பர். (முல்லை. 53–54)

மிலேச்சர் – யவனரால் அமைக்கப்பட்ட பள்ளியுள் மிலேச்சர் காவல் பூண்டனர். (முல்லை. 61–66)

பொய்யா மாக்கள்
(நாழிகைக் கணக்கர்) – நாழிகை வட்டிலைக் கொண்டு இத்துணை நாழிகை என்று நாழிகையைக் கணக்கிடுவர். (முல்லை. 55–56)

| | |
|---|---|
| தொல் இசைத் தொழில் மாக்கள் (சுங்கம் வாங்குவோர்) | – பூம்பட்டினத்தில் வரி வசூல் செய்தனர். மன்னர் பொருளை பிறர் கொள்ளாமல் காவல் காத்தனர் (பட்டினப். 120–125) |
| வணிகம் | – வணிகத்திற்குரிய பல்வேறு பாண்டங்களை ஓரிடத்தில் தொகுத்து விற்பனை செய்பவர். பிற நாட்டினர் தமிழகத்தில் வாணிபம் செய்தனர். ஏற்றுமதி, இறக்குமதி நடந்தேறியது. (பட்டினப். 211, 29–30, 131–137), வாணிபத்தின் தன்மை (பட்டினப். 207–211) கூறப்பட்டுள்ளது. |
| நாளங்காடி (பகலில் நடைபெறும் அங்காடி) | – பண்டங்கள் விற்றல். (மதுரை. 424–430) |
| அல்லங்காடி | – இரவுப் பொழுதில் நடைபெறும் அங்காடி அல்லங்காடி. (மதுரை. 539–544) |
| வாணிபம் | – அங்காடி இருந்த செய்தி. (மலைபடு. 480) |
| குறுந்தொழுவர் (குற்றேவல் செய்யும் வினைஞர்) | – காவல் பொருந்திய அகனற் வீடுகளில் குற்றேவல் செய்யும் வினைஞர்கள் இருந்தனர். (நெடுநல். 49) |
| கைவல் கம்மியன் (விசிறி செய்கின்ற கம்மியன்) | – விசிறி (ஆலவட்டம்) செய்கின்ற கைத்தொழிலில் வல்லவன் (நெடுநல். 57–59) |
| யவனர் | – காவல் தொழில் மட்டுமின்றி பாவை விளக்கு களையும் செய்தனர். (நெடுநல். 101–102) |
| தொடுத்தல் தொழில் | – முத்துமாலைகளை வரிசையாய் தொங்க விடப்பட்டிருக்கும் கட்டில் முத்தால் ஆன பலகணி போல் விளங்கியது. மேலும், நூல் இழையில் கோத்த முத்து மாலைகள் அந்தத் தகட்டில் நான்கு பக்கமும் சாளரம் போல் இடைவெளி தோன்றத் தொங்கப்பட்டிருந்தது. (நெடுநல். 124–131) |

| | |
|---|---|
| நீர்த் தெவ்வும் நிரைத் தொழுவர் (நீர் இறைக்கும் தொழில்) | – நீரைச் சாலால் முகந்து இறைக்கும் தொழில் செய்பவர். (மதுரை. 89–90) |
| முத்து, சங்கு குளிப்பவர் | – முத்து சங்கு – குளிப்பவரின் இருப்பிடமும் கொற்கை என்ற ஊரில் உள்ளது (மதுரை. 135–136). |
| காவல் (இளைஞர் காத்தல்) | – பலவழிகள் கூடும் இடத்தில் ஆறலை கள்வர் வராமல் தடுக்க கடிய சொல்லை உடைய இளையவர்கள் காத்தல். (மதுரை. 311–312) |
| 'கள்' தொழில் | – கொடி அமைக்கப்பட்டிருந்தது. (மதுரை. 372) |
| திரி விலைஞர் (பண்டங்கள் விற்பவர்) | – வீதி வீதியாகச் சென்று பண்டங்கள் விற்பவர். (மதுரை. 405) |
| அறங்கூறு அவையம் | – தீர்ப்பு வழங்குபவர். (மதுரை. 489–492) |
| பண்டமாற்று பொருள் விற்கும் வணிகர் | – மலை, நிலம், நீர், பிற இடங்கள் – தோன்றியவை; மணி, முத்து, பொன் முதலியவற்றை பண்ட மாற்றாகப் பெற்று அயல் நாட்டினின்றும் கொணர்ந்த பண்டங்களை விற்கும் தொழில். (மதுரை. 500–506) |
| பல்வகைத் தொழில் செய்பவர் | – சங்குகளை அறுத்து வளைல் முதலியன கடைபவர், மணிகளில் துளை இடுபவர், சுடும் நன்றாகிய பொன்னை அணிகளாகச் செய்யும் தட்டான். பொன்னை உரைத்த உரையை அறுதியிடும் பொன் வணிகர். புடவைகளை விற்பவர், செம்பு நிறைக்கட்டதனை வாங்கிக் கொள்பவர். கச்சுகளைத் தம் தொழில் முற்றுப்பட முடிபவர், பூக்களையும், சாந்தையும் நன்கு ஆராய்ந்து விற்பவர், பலவகைப்பட்ட தொழில்களை ஒப்புகாட்டி வரையும் ஓவியர். நெய்தல் தொழில் செய்பவர். (மதுரை. 511–522) |

| | |
|---|---|
| அன்னசாலை (உணவு சமைத்தல்) | – பலவிதமான உணவுகளைச் சமைத்து உண்ணத் தருபவர்கள் இருந்துள்ளனர். (மதுரை. 527–535) |
| ஒற்றர் | – களவு செய்வதற்கு இடம் பார்த்துத் திரியும் கள்வரை ஆராய்ந்து திரிந்தனர் ஒற்றர்கள். (மதுரை. 640–642) |
| ஊர் காப்பாளர் | – தூக்கம் அற்ற கண்; கள்வரை கண்டறிவதில் வல்லவர்; நுண்ணிய ஆராய்ச்சித் தெளிவு உடையவர் – ஊர் காப்பாளர். (மதுரை. 643–653) |
| பொறி (விலங்கு பிடிக்க) அமைக்கும் தொழில் | – பன்றிகளைப் பிடிக்க கானவர் கல்லால் ஆன பெரிய பொறிகளை அமைப்பர். (மலைபடு. 193–195) |
| பண்டமாற்று | – (மலைபடு. 413) பற்பல இல்லிலும் பல்வேறு நெற்களையும் பெற்று ஒன்றாகக் கலப்பது பண்டம் விற்பவரின் வழக்கமாகும். |
| தோல் தொழில் | – தோற்படுக்கை (தோலால் படுக்கை அமைத்தல் – ஆடுகளின் தோலை உரித்தல். (மலைபடு. 418–419) |
| கூளியர் (காவல் தொழில் செய்பவர்) | – காட்டுப் படையினர். காட்டிலிருந்து நாட்டைக் காத்தல். (மலைபடு. 422) |
| பாசவர் | – ஆட்டு வாணிகர் (பதிற். 21:9–11). |

## சங்க இலக்கியத்தில் பாண்மரபினர்–கலைஞர்கள்

| | |
|---|---|
| துடியன், துடியர் | – போர்த் தொடக்கத்தைத் தெரிவித்தல் (புறம். 269:6), தொன்மை வேட்டைக் கருவியான வேலினை கையில் உடையவர் (புறம். 285:2), நால்வகை பழங்குடிகளுள் மூத்தகுடி (புறம். 335:7), துடிப்பறையைக் கொட்டுபவர் (புறம். 291:1), துடியன், பாணன், விறலி ஒன்று சேர்ந்தே வள்ளல்களைக் கண்டு பரிசில் பெற்றவர். (புறம். 280:8–9) |
| பாணன், பாணர் | – நால்வகை குடிகளுள் ஒருவர் (புறம். 335:7), யாழ் இசைப்பதில் வல்லவர் (சிறுபாண். 35, பெரும்பாண் 462, ஐங். 100:4, புறம். 318, புறம். 19, 144, ஐங். 402, 407, குறுந். 323) தண்ணுமை வாசித்தல் (அகம். 381, நற். 310:9–10), தூதாக செயல்படுபவன் (அகம். 244:11, ஐங். 1:6), மற்போர் வீரன் (அகம். 386:3), "....பாணன் மல் அடு மார்பின்...." மீன்பிடித் தொழில் செய்பவன் (ஐங். 111:1, குறுந். 169:4), வாயிலாக வருபவன் (ஐங். 139:3, கலி. 98:19), சீறியாழ் வாசிப்பவன் (ஐங். 475:3, நற். 30:2, 285:3–4, 331:10), பாடுபவன் பாணன் (புறம். 398:4–5, கலி. 74:7, நற். 200:8, புறம். 127:2, நற். 172:7), முல்லைப் பண் பாடுபவர் (ஐங். 408:1), தடாரிப் பறையைக் கொண்டவன் (புறம். 376:5), பேரியாழ் வாசிப்பவன் (பதிற். 57:7–8), பல பரிசில்களைப் பெற்றவன். |
| பறையன் | – நால்வகை குடிகளுள் ஒருவர் (புறம். 335:7) |
| கடம்பன் | – நால்வகை குடிகளுள் ஒருவர் (புறம். 335:7) |
| கூத்தர் | – கூத்தரின் ஆடுகளத்தைப் போன்று விளங்குகிறது நாடு. கூத்துக்கலை வல்லவர். (புறம். 28:13) அல்லியம் என்ற கூத்தினைக் (புறம். 33:16–17) கூறுகிறது புறநானூறு. ஆண் வேடமும், பெண் வேடமும் உடைய பாவை அல்லிப்பாவை என்று கூறுகிறது. |

கண்ணுளர் – கூத்தர் என்று அழைக்கப்படுபவர் (உரையில்) (மலை. 50) ஆடற் கலைஞர் (நச்சினார்க்கினியர்) சாந்திக் கூத்து ஆடுபவர். (பதிற். 20:15–16)

வயிரியரோடு இணைந்து செயல்படுபவர். மன்னர்களின் புகழ்பாடி மாறுவேடம் பூண்டு நடித்த இக்கலைஞர்களை மன்னன் போற்றினான். (பதிற். 20:15–16)

விறலியரோடு கண்ணுளர் ஆடினர். (மலைபடு 46–50) கதை தழுவிய கூத்து நிகழ்த்தியவர் (மலைபடு 530–544)

பொருநர் – அரசவையில் பறையை முழக்குவர் (அகம். 76:5–6) நுட்பமான அறிவாற்றலும், திறனும் பெற்றவர் (பொருநர். 2–3) (விரகு அறி பொருந)

வைகறையில் கிணைப் பறையைக் கொட்டுபவர். (சிறுபாண். 203)

"பிறவகை கலைஞர்களிடமிருந்து சற்று வேறுபட்டவர்கள். இவர்கள் அரசர்களோடும், தலைவர்களோடும், நெருக்கமான உறவு கொண்டிருந்தனர். போரிலும் அரண்மனையிலும் பொருநர் அரசர்களுடன் இருந்தனர். மற்ற கலைஞர்களை விட பொருநர் குறைவாகவே வெளியிடங்களில் அலைந்து திரிந்தனர்" (பக்தவச்சல பாரதி, பாணர் இனவரைவியல், ப.71) (புறம். 382:1–7)

கோடியர் – புகழைத் தொகுத்துக் கூறுபவர் 'தொகுசொற் கோடியர்' (அகம். 111:9), பலவகை வாத்தியங்களை உடையவராய் (359:8), மன்றத்தில் ஆடுபவர் (அகம். 301:22–23), வீரக்கழல் அணிந்த அரசரை நாடுபவர் (அகம். 309:9), ஊர் விழாவில் கூத்தர் இருப்பர் (அகம். 352:4–5), அறிவு முதிர்ந்த கூத்தர் (குறுந்.

78:2), பல இசைக்கருவிகளை உடையவர் (சிறுபாண். 125), கூத்தர் இயக்கும் முழவு ஓசைக்கு ஏற்ப வீரர் ஆடுவர் (பதிற். 56:1–2), விழாவில் ஆடும் தொழிலை உடையவர் (புறம். 29:23), இவர்கள் வெவ்வேறு வகையான கோலத்தைப் புனைந்து முறையாக தோன்றி ஆடுபவர். பறையை வாசிப்பவர் (மதுரை. 523, மலை. 236) முழவு வாசிப்பவர் (மலை 143)

வயிரியர் – கழைக் கூத்தர் (அகம். 45:11), குற்றமற்ற நாவை உடையவர், முழவினை உடையவர் (அகம். 155:13, அகம். 328:1, நற். 100:10), இடம் விட்டு இடம் செல்பவர் (நற். 100:10), யாழினையும், மார்ச்சனையை உடைய மத்தளத்தையும் உடையவன் (புறம். 164:12), விழாவில் கூத்தாடுவர் (மதுரை. 628) (விழவின் ஆடும் வயிரியர்), இசைப்பாடலுக்கு உரிமை உடையவர் (வயிரியர் – பாணரும் கூத்தரும்) (பரி. 10–130), பண்ணமைத்துப் பாடல் பாடுபவர் (பதிற். 29–8, 23:4–6) பாணர்களோடு இணைந்தே கருவி (வயிர்–மூங்கில், பிரம்பு வழியே செய்யப்பட்ட ஊதுகொம்பு) யினை இசைத்துள்ளனர். (மதுரை. 749–750) பண்ணமைந்த பாடலைப் பாடுவதிலும் முழவினை இசைப்பதிலும் வல்லவர்கள். (பதிற். 29:8, புறம். 164:12, அகம். 155:13–14, நற். 100:10) முருகனை வாழ்த்திப் பாடும் இசைக்கருவியை பயன்படுத்தி யுள்ளனர். (திருமுரு. 120) உணவு, கள், குதிரை, யானை, தேர் போன்ற பரிசில்கள் பெற்றுள்ளனர். (பதிற். 20:15, 23:5–6, 43:34)

இயவர் / இயவன் – வாத்தியக்காரர். போர்க்களத்திற்குச் செல்லும் முன்னர் முரசிற்கு வழிபாடு செய்யும் தகுதியும் (நற். 113:10–11), பகைவரை வென்று கொண்டு வரும் முரசிற்கு குருதிப் பலி கொடுத்து முதலாவதாக

இசைக்கும் தகுதியும் (பதிற். 19:7–8) பெற்றவர். இசைக்கும் ஆற்றலுடையவர் (ஐங். 215:3), போர்க்களத்தில் ஊதும் ஒரு பண்ணினை வாசிப்பவர் (நற். 113:10), முரசினை அடித்து முழக்குபவர் (பதிற். 17:7, 19:7), முரசுக்கு செந்தினையைக் குருதியுடன் கலந்து தூவிப் பலியிடுவர் (பதிற். 19:7), இனிமை உண்டாக இயவர் பாடுவர் (பதிற். 27:5), வாத்தியங்கள் பலவற்றை அறிந்தவர் (புறம். 336:6), இனிய இசைக் கருவிகளை இயக்குபவர் (மதுரை. 304), மன்னர் பக்கத்தில் உள்ள வாத்தியக்காரர். இசைக் கருவிகளை வாசிப்பவர் (ஐங். 425:2), தட்டை, தண்ணுமை, குழல் ஆகிய இசைக்கருவிகளை இசைப்பவர். (ஐங். 215:3–4)

நகைவர் – இன்பச் சுவை நல்கும் பாணர், கூத்தர் முதலியவர், தம் ஆடல் பாடல்களால் இன்புறுத்தும் இயல்பினர். ஆதலால் நகைவர் எனப்படுவர். (பதிற். 43:20) இன்பம் செய்யும் பாணர் (புறம். 398:9), நட்பும் அன்பும் உடையராய் இனிய உவகையைச் செய்பவர் நகைவர் (பதிற். 31:34), இத்தகையவர் பாணர், கூத்தர். (பதிற். 37:4)

"நகைவர் என்பார் அரசர்களை எளிதில் அணுகும் இயல்பினர். அரசரின் அவைக் களத்தில் நாளும் உடன் இருப்பவர். அரசர்க்கு அரசியல் செயல்களில் மன அழுத்தம் வராமல் மகிழ்ச்சியூட்டும் நோக்கில் அவர்களைச் சிரிக்க வைக்கும் கலைச் செயல் புரிந்தவர்."

"நகைத்திறச் சுவை ஊட்டும் விதூடகக் கூத்து ஆடும் கோமாளிகள் எனக் கருதலாம். பிற்காலத் தென்னாலிராமன் போன்றவரான விகடக் கலைஞர்

நகைவர் ஆவர் என்று கருதுவதே ஏற்புடையதாய் தோன்றுகிறது'' என்பார் வெ.மு.ஷாஜகான் கனி (தமிழ் நாடக வகையும் வரலாறும், ப.217)

அகவுநர் – பாணர் என்ற பொருளில் அமைந்துள்ளது (அகம். 97:11), அகவுநர் பெருமகன் – பாணர் தலைவன் (அகம். 113:3), நுண்கோல் அகவுநர் – நுட்பமான யாழ் நரம்பை வருடிப் பாடுபவர் (அகம். 152:4), நுண்கோல் அகவுநர் – நுண்ணிய நரம்பை உடைய யாழ் (பிரப்பங்கோல்) உடைய பாணர் (அகம். 208:3), இன்குரல் அகவுநர் – இனிய குரலை எழுப்பிப் பாடும் இயல்புடைய பாணர் (அகம். 249:4), அகவுநர் நாநவில் பாடல் முழவு எதிர்ந்தன்ன – பாடுபவர் (பரி. 15:42) திறமையுடன் பாடிய அகவுநர்கள் அரசனிடம் யானையைப் பரிசாகப் பெற்வர் (அகம். 208:3–4)

அகவர் (அகவுநர்) – பாடுபவர். விடியற்காலையில் அரண்மனை வாயிலில் வந்து பள்ளி எழுச்சி பாடுதல் வழக்கம். மன்னரின் குலத்தோரை எல்லாம் அழைத்து புகழ்ந்து பாடுவதால் அகவர் (அழைப்பவர், அழைத்தல் – அகவல்) எனப்படுவர். இவர்கள் பொருநர், பாணர் என்று உரையில் பொருள்படுத்தப் படுகின்றனர். தேரும் குதிரையும் பரிசாக பெற்றவர். (மதுரை. 223–224)

அகலவன் (அகவுநர்) – குலத்தவரின் புகழ் எல்லாம் தொகுத்துப் பாடுபவரை அகவலர் என்பர். அவர்கள் நுட்பமான கோலை கையில் கொண்டு செல்வது இயல்பு. இத்தகையவர் முதலில் ஊர் மன்றத்தை அடைந்து தலைவன் புகழ்களை எல்லாம் தொகுத்துரைத்துப் பின்பு தெருக்களின் இரு பக்கங்களிலும் போய்ப் பாடுவர். ''மன்றம் படர்ந்து மறுகு சிறைபுக்குக் களம் வாழ்த்தும் அகவலன்'' என்கிறது பதிற்றுப்பத்து. 'களம் வாழ்த்தும் அகவலன்' – கணுக்களை உடைய

நுட்பமான கோலைக் கைக்கொண்டு ஊர் மன்றத்தில் இருந்து பாடற்குரிய தலைவன் புகழ்களை எண்ணித் தெருக்களின் இரண்டு பக்கத்தும் போய்த் தலைவன் போரிட்டு வென்ற போர்க்களத்தை வாழ்த்திப் பாடும் பாணன். (பதிற். 43:26–28).

அகவன்மகள் – தெய்வங்களை அழைத்துப்பாடி குறிசொல்லும் கட்டுவிச்சி (குறுந். 23:1) பாடல்களைப் பாடுபவள்.

இளையர்/கல்லா இளையர் – இளையர் – ஏவல் செய்பவரான இளையர் களம் வாழ்த்துகின்றனர் சேரமன்னனின் பெரிய போர்க்களச் சிறப்பை எடுத்துக்கூறி வாழ்த்துதல். (பதிற். 40:24).

பாணர் குழுவில் விறலியர்க்கு உதவியாக இளையர் என்பார் இருந்தனர். அவர்கள் இனிய குரலால் பாட வல்லவர். ஆயினும் ஆடல் தொழிலைக் கற்று முடிக்காத இளையவர் ஆதலால் கல்லா இளையர் (சிறுபாண். 31–33) எனப்பட்டனர். கல்லா இளைஞர்– சிறுமியர். ஆடல் பயிலும் மாணவியர் (சங்க இலக்கியம் பத்துப்பட்டு ப.318)

***"சுவல்அழுந்தப் பலகாய***
***சில்லோதிப் பல்இளைஞருமே***
***அடிவருந்த நெடிதேறிய***
***கொடிமருங்குல் விறலியருமே"*** (புறம். 139:1–4)

இவர்கள் (இளைஞர்) பயணத்தின்போது அவர்கள் தோள் அழுந்தப் பல சுமைகளைச் சுமந்து நடப்பார்கள். தலையில் சிறிதாகக் கூந்தல் வளர்த்திருந்தனர். விறலியரோடு சேர்ந்தே சுட்டப்படுவர். (பதிற். 40)

கைவல் இளையர் – பண்ணுடன் பொருந்துமாறு அமைந்த முழவு என்ற கருவியும் ஒருகண் மாக்கிணை என்ற கருவியும்,

பிற இசைக்கருவிகளும், மூங்கிற் கணுவை இடையிட்டு அறுத்துச் செய்த பெருவங்கியம் என்னும் கருவியுடன் சேர்த்துக் கட்டிக் காவடித் தண்டின் ஒருபக்கத்தே தொங்க விட்டனர். மறுபக்கத்தில் ஆடல் துறைக்கு வேண்டிய கருவிகள் எல்லாம் கூடிய மூட்டையை அமைத்துச் சுமந்தனர்.

இத்தகைய இயல்புடையவராய் இசைத்துறையில் வல்ல இளையவர்கள் போகும் வழியில் தீங்கு வாராமை குறித்துக் கடவுளை வணங்கினர். (பதிற். 41–6) வழியில் இடையூறு வராதிருத்தல் பொருட்டு அவ்வாறு பாடுவது இயல்பு. (இறைவனைக் குறித்துத் துதிப்பாடல் பாடுபவர்)

இளையர், கைவல் இளையர் என்று கூறப் படுகின்றனர். இளையர் – யாழினைச் சுமந்து வரும் பணிமகளிர். கைவல் இளையர் – ஆடல், பாடலில் வல்லமைப் பெற்றவர்கள் நாடக விழாவின் தொடக்கப்பாட்டான கடவுள் வாழ்த்துப் பாடுபவர்.

நல்யாழ் இளையர் – இனிய இசையைச் செய்யும் யாழ்களை ஏவல் இளைஞர் சுமந்து வருதல் (பதிற். 41:2), பாண் மகளிர் இசை பயிலும் இளைய மாணாக்கியர் என பொருள் கூறுகிறது.

இசையில் வல்ல இளையர்கள் அரசனைப் பாராட்டி, தம் கைகளை வரிசையாக நீட்டக்கூடியவர்கள் (பதிற். 48:8) தண்ணுமையானது இசைக்கும் தொழில் வல்ல இளையவர். (பதிற். 51:34)

கைவல் இளைஞர் என்பார் பெண்பாற் கலைஞர் இவர்கள் வளர்ந்து தேர்ச்சி பெற்றதும் விறலியராக ஆவர். (வெ.மு.ஷாஜகான் கனி, தமிழ் நாடக வகையும் வரலாறும், ப.224)

பாடினி – இனிமையாகப் பாடும் பெண்பாலர் பாடினி. பாட்டியர் (மதுரை. 749), பாடுமகள் (பதிற். 44), பாடுநர் (புறம். 221) எனப் பலப்பெயர்களால் அழைக்கப்படுவர். வேற்படையைப் (பாசறை) புகழ்ந்து பாடும் பாடினி (பதிற். 61:16), மறம் பாடிய பாடினி (புறம். 11:11), விசிபிணிக் கொண்ட மண்கனை முழவினை பாடினி பாடுபவள் (புறம். 15:23–24), பரிசில்கள் பெற்றவள் (பொருநர். 47–49, 159–162, புறம். 11, 319, 361, 364, பதிற். 87), பெருந்தகு பாடினி (பொருநர். 47), இசைக்கல்வியின் பெருமை முழுவதற்கும் தகுதியுடையவள் பாடினி.

விறலியர் – ஆடுவதிலும், பாடுவதிலும் வல்ல இரவலர் கலைஞர். நாடக மகளிர் (பெரும்பாண். 55–56), பாண்மகள் (பதிற். 60) எனவும் அழைக்கப்பெறுவர். ஆடுவதில் வல்லவர் (பதிற். 47:6–7, 52:13–14, அகம். 82, புறம். 133, மலைபடு. 44–46), பாடுவதிலும் வல்லவர் (மலைபடு. 358–359, பதிற். 57, மலைபடு. 536–539), இசைக் கருவிகளை இசைக்க வல்லவர் – முழவு, யாழ், தூம்பு, எல்லரி, ஆகுளி, பதலை (புறம். 152), நாடகம் ஆடுவதில் வல்லவர் (பெரும்பாண். 55–56), பரிசில்கள் பல பெற்றவர் (பெரும்பாண். 55–56, பதிற். 40, 54, மதுரை. 218–219, புறம். 105, 141, 170, பதிற். 43, மலைபடு. 569–570), வளைக்கை விறலி (புறம். 135:4, 140:3), சில்வளை விறலி (புறம். 60:5, 64:2, 103:4, பதிற். 40:21, 57:6, 78:3), ஒண்ணுதல் விறலி (புறம். 32:4) வாணுதல் விறலி (புறம். 89:2, 105:1), பாடுவல் விறலி (புறம். 280:8, 152:13), இலங்குவளை விறலி (மலைபடு. 46) இவைபோன்று பலவாறாக விறலியர் அழைக்கப்படுவர்.

முழவன் – கூத்தர் விழாவைக் கொண்டாடும் முதிய ஊரில்

விறலியின் பின் நின்று முழவுக் கருவியை இயக்குபவன். (அகம். 352:6)

ஆடுமகள் – பறைகளும், குழலும் மற்ற இசைக் கருவிகளும் இசைக்கக் கயிற்றில் ஆடும் மகளிரை ஆடுமகளிர் எனக் குறிஞ்சிப்பாட்டு (187–194) குறிக்கிறது.

கயிற்றாட்டப் பெண் கலைஞர் ஆடுமகள் என்பார் கார்த்திக்கேசு சிவத்தம்பி (க.காந்திதாசன் சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், ப.100)

புல்லாங்குழல் ஒரு பக்கத்தில் ஒலிக்க, மற்றொரு பக்கத்தில் பல இசைக் கருவிகள் இசைக்க, முறுக்கான புரிகளால் ஆன வலிமையான கயிற்றில் கழையேறி விளையாட்டுகள் நடத்தி விளை யாடினாள். அவளை ஆடுமகள் என்கிறது நற்றிணை. (95:1–2)

கிணைவர் – தோற்பறைக் கருவியை (கிணை) இசைப்பதால் கிணைவன் (புறம். 379:11), கிணைமகன் (புறம். 388:3), கிணையர் (நற். 108:4–5), கிணைப் பொருநன், கிணைவர், கிணைஞன் என்று அழைக்கின்றது சங்க இலக்கியம். பறையினை முழக்ககூடியவன் (நற். 108:4–5), பெரிய தடாரியை வாசிக்கக் கூடியவன் (புறம். 388:3), விடியற் காலத்தில் வந்து பாடும் இயல்புடையவர் (புறம். 379:11), வள்ளல்களை நாடித் தொலைவில் உள்ள நாடுகளுக்குச் செல்லும் இயல்பினர் (புறம். 377:14)

கிணைமகள் – கிணை எனும் இசைக்கருவியை இயக்கிய பெண்பாற் கலைஞர் (புறம். 399–16). இவள் கிணை எனும் பறையை முழக்கி பாரியைப் பாடினாள் வறுமை தீரும் (புறம். 111:4)

சென்னியர் – பாண் சமூகத்தினர், பாணர் என்று (உரையில்) அழைக்கப்படுகின்றனர். சிறிய யாழ் நரம்பின்

ஓசையை எழுப்பக் கூடியவர் (நற். 189:2), அருவியில் மலர்ந்த ஆம்பல் மலரை சூடியவர் (பதிற். 62:17), பாடும் பாணர் – கூத்தாடினர் (பரி. 7:80)

மன்மகளிர் – அரசனால் தலைக்கோல் பட்டம் தந்து பாராட்டப் பட்ட கூத்தியர் – கூத்து ஆடினர் (பரி. 7:80)

குறுங்கூளியர் – கலைஞர்கள். குறள் உருக் கொண்ட கலைஞர். கூத்துக் கலைஞர்.

***"வேறுபல் உருவில் குறும்பல் கூளியர்***
***சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி"***

(திருமுருகு. 282–283)

பல்கூளியர் என்பதால் கூளியர் பலராகக் கூட்டமாக உள்ளனர். குறும் என்ற அடையால் அக்கூளியர் சித்திரக் குள்ளர் என்பது பெறப்படுகிறது. வேறுபல் உருவில் என்ற அடையால் அவர்கள் ஒவ்வொரு வரும் வேறுவேறு பல உருவத் தோற்றத்தில் ஒப்பனை செய்து வந்துள்ளனர் என்பது பெறப்படுகிறது. சாறு (திருவிழா) நடைபெறும் இடத்தில் அரசர் போலவும், கடவுளர் போலவும், வேடப் புனைவு கொண்டதால் வீறுபெறத் தோன்றிக் கலை நிகழ்வு நடத்தி யாசிப்பவர்.

பிறவி ஊனம் எய்திய குறள் உருவினர் இரவலர்க் கலைஞர்களாக இருந்த அரிய செய்தியை திருமுருகாற்றுப்படை தருகிறது.

***"கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் நசைஇ"***

(பட்டினப். 259)

என்று பட்டினப்பாலை கூறும் கணங்கொள் கூளி என்பவரும் இவரே. இப்பூதகணங்கள் குறுங் கூளியர் என்ற கூத்துக் கலைஞராதல் வேண்டும். தம் குறளுருவின் இழிவு நீங்க, அவர்கள் தம் உருவ

நிலைக்குத் தெய்வத்தன்மை ஏற்றித் தம்மைத் தெய்வத்தின் அடியவர் போலவும், பூதங்கள் போலவும் ஒப்பனை செய்து ஆடினர். தம் ஆட்ட முறையில் நகைச்சுவை தோன்றவும் பல சேட்டைகள் செய்தும் ஆடினர். அவர்களுள் ஆண், பெண் என இருபாலரும் இருந்தனர்.

***"குரங்கன்னபுன் குறுங்கூளியர்***
***பரந்தலைக்கும் பகையொன்றென்கோ"*** (புறம். 136)

பழந்தமிழகத்தில் இருந்த குறுங்கூளியர் இரவலர்க் கலைஞர் (வெ.மு.ஷாஜகான்கனி, தமிழ் நாடக வகையும் வரலாறும், பக்.226–227) என்பர்.

சூதர், மாகதர், வேதாளிகர் – கூத்துக் கலைஞர்கள். இவர்கள் அரசரை வாழ்த்திப் பாடிக் கூத்தினை முடிக்கும் போது விடிந்துவிட்டது என்பதை அறிவிக்கும் நாழிகைப் பறை நகரில் முழங்கியது. சேவல் கூவ, வைகறைப் பொழுது புலர்ந்தது என்று மதுரைக் காஞ்சி கூறுவது இவர்களைக் கூத்துக் கலைஞர் என்பதை உணர்த்தும்.

***"சூதர் வாழ்த்த மாகதர் நுவல***
***வேதாளிகரொடு நாழிகை இசைப்ப***
***இமிழ்முரசு இரங்க ஏறுமாறு சிலைப்பப்***
***பொறிமயிர் வாரணம் வைகறை இயம்ப"***
(மதுரை. 670–673, சிலப். 5:48–49)

## சங்க இலக்கியத்தில் பெண்பாற் புலவர்கள் (45)

அஞ்சியத்தை மகள் நாகையார் (அகம். 352)

அஞ்சில் அஞ்சியார் (நற். 90)

அள்ளூர் நன்முல்லையார் (11) – (அகம். 46; குறுந். 32, 67, 68, 93, 96, 140, 157, 202, 237; புறம். 306)

ஆதிமந்தியார் (குறுந். 31)

ஊண் பித்தை (குறுந். 232)

ஒக்கூர் மாசாத்தியார் (8) – (அகம். 324, 384; குறுந். 126, 139, 186, 220, 275; புறம். 279)

ஔவையார் (59) : அகத்திணை 26; புறத்திணை 33; (அகம். 11, 147, 273, 303; குறுந். 15, 23, 28, 29, 39, 43, 80, 91, 99, 102, 158, 183, 200, 364, 388; நற். 129, 187, 295, 371, 381, 390, 394; புறம். 87, 88, 89, 90, 91, 92, 93, 94, 95, 96, 97, 98, 99, 100, 101, 102, 103, 104, 140, 187, 206, 231, 232, 235, 269, 286, 290, 295, 311, 315, 367, 396, 392)

கச்சிப்பேட்டு நன்னாகையார் (6) – (குறுந். 30, 172, 180, 192, 197, 287)

கழார்க்கீரன் எயிற்றியார் (8) – (அகம். 163, 217, 235, 294; குறுந். 35, 261; நற். 281, 312)

காக்கை பாடினியார் நச்செள்ளையார் (12) (குறுந். 210; புறம். 278; பதிற். ஆறாம் பத்து 51, 52, 53, 54, 55, 56, 57, 58, 59, 60)

காமக்கணிப் பசலையார் (நப்பசலையார்) (நற். 243)

காமம்சேர் குளத்தார் (குறுந். 4)

கார்க்கியார் (நெய்தற் கார்க்கியார்) (2) (குறுந். 55, 212)

காவல்பெண்டு (புறம். 86)

குமிழி ஞாழலார் நப்பசலையார் (அகம். 160)

குறமகள் இளஎயினி (புறம். 157)

குறமகள் குறியெயினி (நற். 357)

குன்றியனார் (10) – (அகம். 40, 41; குறுந். 50, 51, 117, 238, 301, 336; நற். 117, 239)

தாயங்கண்ணியார் (புறம். 250)

நக்கண்ணையார் (6) – (பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார்) (நற். 19, 87; புறம். 83, 84, 85, அகம். 252)

நல்வெள்ளியார் (4) (அகம். 32; குறுந். 365; நற். 7, 47)

நன்னாகையார் (2) (குறுந். 118, 325)

நெடும்பல்லியத்தை (குறுந். 178, 203)

நெட்டிமையார் (3) (புறம். 9, 12, 15)

பாரி மகளிர் (புறம். 112)

பூங்கணுத்திரையார் (3) (குறுந். 48, 171; புறம். 277)

பூதப் பாண்டியன் தேவி பெருங் கோப்பெண்டு (புறம். 246)

பேய்மகள் இளவெயினி (புறம். 11)

பொதுக்கயத்துக் கீரந்தை (குறுந். 337)

பொதும்பில் புல்லாளங் கண்ணியார் (அகம். 154)

பொன்மணியார் (குறுந். 391)

பொன்முடியார் (3) (புறம். 299, 310, 312)

போந்தைப் பசலையார் (அகம். 110)

மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார் (2) (நற். 250, 369)

மாறோக்கத்து நப்பசலையார் (8) (நற். 304; புறம். 37, 39, 126, 174, 226, 280, 383)

மாற்பித்தியார் (புறம். 251, 252)

முடத்தாமக் கண்ணியார் (சோழன் கரிகாற் பெருவளத்தானை முடத்தாமக் கண்ணியார் பாடியது. (பொருநராற்றுப்படை (248 வரிகள்)

முள்ளியூர்ப் பூதியார் (அகம். 173)

வருமுறை யாரித்தி (குறுந். 176)

வெண்ணிக்குயத்தியார் (புறம். 66)

வெண்பூதியார் (குறுந். 97, 174, 219)

வெண்மணிப்பூதியார் (குறுந். 299)

வெள்ளிவீதியார் (11) – (அகம். 45, 362; குறுந். 27, 44, 58, 130, 146, 149, 169, 386; நற். 70, 335, 348)

வெள்ளைமாளர் (புறம். 296)

வெறிபாடிய காமக்கண்ணியார் (5) – (அகம். 22, 98; நற். 268; புறம். 271, 302)

## சங்க இலக்கியப் பாடல்களில் பதிவாகியுள்ள சேர மன்னர்கள்

அந்துவஞ்சேரல் இரும்பொறை – உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் (புறம். 13)

பரணர் (6) (அகம். 76, 135, 222, 236, 376, 396), வெள்ளி வீதியார் (அகம். 45)

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் – காக்கைபாடினியார் நச்செள்ளையார் (ஆறாம்பத்து) (பதிற். 51, 52, 53, 54, 55, 56, 57, 58, 59, 60)

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் (குடக்கோ நெடுஞ்சேரலாதன்) – குமட்டூர்க் கண்ணனார் (இரண்டாம் பத்து) (பதிற். 11, 12, 13, 14, 15, 16, 17, 18, 19, 20), கழாத்தலையார் (புறம். 62, 368), பரணர் (புறம். 63; அகம். 396), மாமூலனார் (அகம். 127, 347)

இளங்குட்டுவன் – இவ்வரசன் பாடியது (அகம். 153)

இளஞ்சேரல் இரும்பொறை – பெருங்குன்றூர் கிழார் (ஒன்பதாம் பத்து) (பதிற். 81, 82, 83, 84, 85, 86, 87, 88, 89, 90; புறம். 210, 211)

உதியன் சேரலாதன் – முரஞ்சியூர் முடிநாகராயர் (புறம். 2), மாமூலனார் (அகம். 65, 233), கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான் (அகம். 168)

எந்தை – இவ்வரசர் பாடியது (நற். 22)

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் – இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறுபாண். 41–50 (வழி), அம்மூவனார் (நற். 395, ஐங். 178), முடத்திருமாறன் (நற். 105), கொல்லிக்கண்ணன் (குறுந். 34), சாகலாசனார் (அகம். 270), மாமூலனார் (அகம். 91), நக்கீரர் (அகம். 290, 346), பரணர் (அகம். 212, 376; புறம். 343, 369), ஐந்தாம் பத்து (பதிற். 41, 42, 43, 44, 45, 46, 47, 48, 49, 50), பெருங்குன்றூர் கிழார் (பதிற். 90 (20–24 வரி)

கணைக்கால் இரும்பொறை – பரணர் (அகம். 386), குடவாயிற் கீரத்தனார் (அகம். 44), இவ்வரசன் பாடியது (புறம். 74)

கருவூர் ஏறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரல் இரும்பொறை – நரிவெரூஉத் தலையார் (புறம். 5)

கருவூர்ச் சாத்தன் – இவ்வரசன் பாடியது (குறுந். 268)

களங்காய் கண்ணி நார்முடிச்சேரல் – காப்பியாற்றுக் காப்பியனார் (நான்காம் பத்து (பதிற். 31, 32, 33, 34, 35, 36, 37, 38, 39, 40), கல்லாடனார் (அகம். 199),

குட்டுவன் கண்ணன் – இவ்வரசன் பாடியது (குறுந். 179)

குட்டுவன் கோதை – கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் (புறம். 54)

கோக்கோதை மார்பன் – பொய்கையார் (புறம். 48, 49)

கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை – இவ்வரசன் பாடியது (புறம். 245; அகம். 168)

செல்வக் கடுங்கோ வாழியாதன் – கபிலர் (ஏழாம் பத்து) (பதிற். 61, 62, 63, 64, 65, 66, 67, 68, 69, 70; புறம். 8, 14), குண்டுகட் பாலியாதன் (புறம். 387)

தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை – அரிசிற்கிழார் (எட்டாம் பத்து) (பதிற். 71, 72, 73, 74, 75, 76, 77, 78, 79, 80), மோசிகீரனார் (புறம். 50), பேய்மகள் இளவெயினி (புறம். 11), குடவாயிற் கீரத்தனார் (அகம். 345), பரணர் (அகம். 62; குறுந். 89, 128), கல்லாடனார் (அகம். 209), எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார் (அகம். 213), மதுரைக் கணக்காயனார் (அகம். 338), ஔவையார் (அகம். 303), மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் (அகம். 33), எயினந்தை மகள் இளங்கீரனார் (நற். 346, 185), பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடியது (67) (புறம். 282; அகம். 5, 99, 111, 155, 185, 223, 261, 267, 291, 313, 337, 379; நற். 9, 48, 118, 202, 224, 256, 318, 337, 384, 391; குறுந். 16, 37, 124, 135, 137, 231, 262, 283, 398)

நம்பி குட்டுவனார் – இவ்வரசன் பாடியது (நற். 145, 236, 345; குறுந். 109, 243)

நன்னன் 1 – கல்லாடர் (அகத். 99), காப்பியாற்றுக் காப்பியனார்

நன்னன் 2 – இரணிய முட்டத்துப் பெருங் கௌசிகனார் (மலைபடு கடாம் முழுவதும்), மோசி கீரனார் (புறம். 154, 155, 156; அகம். 392), பெருந்தலைச் சாத்தனார் (புறம். 151), பரணர் அகம். 142, 152, 208, 258, 356, 396; நற். 270; குறுந். 73, 292), மாமூலனார் (அகம். 15, 97, 349), குடவாயிற் கீரத்தனார் (அகம். 44), முள்ளியூர் பூதியார் (முன்னியூர் வழுதியார்) (அகம். 173), பாலை பாடிய பெருங்கடுங்கோ (நற். 391), மாங்குடி மருதனார் (மதுரை. 618)

பல்யானைச் செல்கெழு குட்டுவன் – பாலைக் கௌதமனார் (மூன்றாம் பத்து) (பதிற். 21, 22, 23, 24, 25, 26, 27, 28, 29, 30), மாமூலனார் (நற். 14)

பெருஞ்சேரலாதன் – கழாத்தலையார் (புறம். 65), வெண்ணிக்குயத்தியார் (புறம். 66), மாமூலனார் (அகம். 55)

மருதம் பாடிய இளங்கடுங்கோ – இவ்வரசன் பாடியவை (அகம். 96, 176; நற். 50)

மாந்தரம் பொறையர் கடுங்கோ – பரணர் (அகம். 142)

மாரிவெண்கோ – ஔவையார் (புறம். 367)

முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன் – இவர் பாடியது (அகம். 30)

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை – குறுங்கோழியூர் கிழார் (புறம். 17, 20, 22), பொருந்தில் இளங்கீரனார் (புறம். 53), கூடலூர்க் கிழார் (புறம். 229), வடம வண்ணக்கன் பெருஞ்சாத்தன் (புறம். 125), பெருங்குன்றூர் கிழார் (பதிற். 90:13), பரணர் (அகம். 116, 142), நக்கீரர் (மதுரை) (அகம். 36)

வஞ்சன் – திருத்தாமனார் (புறம். 398)

## சங்க இலக்கியப் பாடல்களில் பதிவாகியுள்ள சோழ மன்னர்கள்

இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி – (உலோச்சனார் (புறம். 377), ஔவையார் (புறம் 367), பாண்டரங்கண்ணனார் (புறம் 16).

இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி – (கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் (புறம். 61)

உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி – (பரணர் (புறம் 4), பெருங்குன்றூர் கிழார் (புறம். 266)

ஏனாதி திருக்கிள்ளி – கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் (புறம். 167)

கரிகாற் பெருவளத்தான் – முடத்தாமக் கண்ணியார் (பொருநர்.), கடியலூர் உருத்திரங் கண்ணனார் (பட்டினப்.), கழாத்தலையார் (புறம். 65), வெண்ணிக் குயத்தியார் (புறம். 66), கருங்குழலாதனார் (புறம். 7, 224), பரணர் (அகம். 125, 246, 376), மாமூலனார் (அகம். 55)

குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் – கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் (புறம். 197), உறையூர் மருத்துவன் தாமோதரனார் (புறம். 60), காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் (புறம். 58)

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் – ஆலந்தூர் கிழார் (புறம். 34, 36, 69), மறோக்கத்து நப்பசலையார் (புறம். 37, 39, 226), இவ்வரசன் பாடியவை (புறம். 173), வெள்ளைக்குடி நாகனார் (புறம். 35), ஆவூர் மூங்கிழார் (38, 40), கோவூர் கிழார் (புறம். 41, 46, 70, 373, 386), இடைக்காடனார் (புறம். 42), ஆடுதுறை மாசாத்தனார் (புறம். 227), ஐயூர் முடவனார் (புறம். 228), நல்லிறையனார் (புறம். 393), எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார் (புறம். 397), நக்கீரர் (அகம். 346)

கோப்பெருஞ்சோழன் (பெருங்கோக் கிள்ளி) – பிசிராந்தையார் (புறம். 67, 191, 212), இவ்வரசன் பாடியது (புறம். 214, 215, 216; குறுந். 20, 53, 129, 147), புல்லாற்றூர்எயிற்றியனார் (புறம். 213), பொத்தியார் (புறம். 217, 220, 221, 222, 223), கருவூர் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார் (புறம். 219)

செங்கணான் (கோச்செங்கணான்) – குடவாயில் கீரத்தனார் (புறம். 44)

செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி (இளம் பெருஞ்சென்னி) – ஊன்பொதி பசுங்குடையார் (புறம். 370, 378), இடையன் சேந்தன் கொற்றனார் (அகம். 375)

தித்தன் – சாத்தந்தையார் (புறம். 80), பரணர் (புறம். 352; அகம். 6, 122, 152, 226), நக்கீரர் (புறம். 395)

துலைபுக்க பெரியோன் – மாறோக்கத்து நப்பசலையார் (புறம். 37:5–6), 39:1–3), கோவூர் கிழார் (புறம். 46:1–2), தாமப்பல் கண்ணனார் (புறம். 43:4–8)

தூங்கெயில் எறிந்தோன் – மறோக்கத்து நப்பசலையார் (புறம். 39:1–6), இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறுபாண். 79–82)

நலங்கிள்ளி – கோவூர் கிழார் (புறம். 31, 32, 33, 44, 45, 47, 68, 382, 400), இவ்வரசன் பாடியது (புறம். 73, 75), உறையூர் முதுகண்ணன் சாத்தனார் (புறம். 27, 28, 29, 30), ஆலந்தூர் கிழார் (புறம். 225)

நல்லுருத்திரன் – இவ்வரசன் பாடியவை (புறம். 190)

நெடுங்கிள்ளி (காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி) – கோவூர் கிழார் (புறம். 44, 45, 47)

நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி (சோழன் பாமுளூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி) – ஊன்பொதி பசுங்குடையார் (புறம். 10, 203)

போரவைக் கோப்பெருநற்கிள்ளி – சாத்தந்தையார் (புறம். 80, 81, 82), பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் (புறம். 83, 84, 85)

மாவளத்தான் – தாமப்பல் கண்ணனார் (புறம். 43), இவ்வரசரன் பாடியவை (குறுந். 348)

முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி – உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் (புறம். 13)

வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளி – கழாத்தலையார் (புறம். 62, 368), பரணர் (புறம். 63)

# இணைப்பு – 8

## சங்க இலக்கியப் பாடல்களில் பதிவாகியுள்ள பாண்டிய மன்னர்கள்

## சங்க இலக்கியப் பாடல்களில் பதிவாகியுள்ள பாண்டிய மன்னர்கள்

அண்டர்மகன் குறுவழுதியார் – புலவராக விளங்கியவன் (குறுந். 345; அகம். 150, 228; புறம். 346)

அறிவுடை நம்பி – புலவராக விளங்கியவன் (அகம். 28; குறுந். 230; புறம். 188; நற். 15), பிசிராந்தையார் (புறம். 184)

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் – புலவராக விளங்கியவன் (புறம். 183)

இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறன் – மதுரை மருதனிள நாகனார் (புறம். 55), மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர் (புறம் 56), காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் (புறம். 57), ஆவூர் மூலங்கிழார் (புறம். 196), வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் (புறம். 198)

ஏனாதி நெடுங்கண்ணனார் – இவ்வரசன் பாடியவை (அகம். 373; குறுந். 156)

ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் – இவ்வரசன் பாடியவை
(அகம். 25; புறம். 71)

கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி – இவ்வரசன் பாடியவை (புறம். 182)

கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதி – இருப்பிடர்த் தலையார் (அகம். 315; புறம். 3)

கானப்பேர் எயில் கடந்த உக்கிரப்பெருவழுதி – ஐயூர் மூலங்கிழார் (புறம். 21), ஔவையார் (புறம். 367), கரும்பிள்ளை பூதனார் (பரி. 10:126–128), நப்பண்ணனார் (பரி. 19), நக்கீரர் (அகம். 93; நற். 358), கடுவனிள மள்ளனார் (நற். 150), குடவாயிற் கீரத்தனார் (அகம். 315), மதுரைக் காமக்கணி நப்பாலத்தனார் (அகம். 204), மருதனிள நாகனார் (அகம். 312), வெண்கண்ணனார் (அகம். 130), ஆசிரியர் நல்லந்துவனார் (கலி. 141), இவ்வரசன் பாடிய பாக்கள் (அகம். 26; நற். 98)

கீரஞ்சாத்தன் (குதிரைச் சாக்கையன்) – ஆவூர் மூங்கிழார் (புறம். 178)

குறுவழுதியார் – இவ்வரசன் பாடியவை (அகம். 150)

கூடகாரத்துத்துஞ்சிய மாறன்வழுதி – ஐயூர் முடவனார் (புறம். 51), மருதனிள நாகனார் (புறம். 52), இவ்வரசன் பாடிய பாக்கள் (நற். 97, 301)

சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன் – மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் (புறம். 59)

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் – மாங்குடி மருதனார் (மாங்குடி கிழார்) (புறம். 24, 26, 372; பத்து. மதுரைக் காஞ்சி முழுவதும்), இவ்வரசன் பாடியவை (புறம். 72), நக்கீரர் (நெடுநல்வாடை முழுவதும்; அகம். 36, 57, 253; நற். 340), இடைக்குன்றூர் கிழார் (புறம். 76, 77, 78, 79), கல்லாடனார் (புறம். 23, 25, 371, 209), குடபுலவியனார் (புறம். 18, 19), பரணர் (அகம். 116, 162; குறுந். 393), ஆலம்பேரிச் சாத்தனார் (அகம். 47, 175), எருக்காட்டூர் தாயங் கண்ணனார் (அகம். 149), ஆலங்குடி வங்கனார் (புறம். 106), அள்ளூர் நன்முல்லையார் (அகம். 46), உறையூர் முதுகூற்றனார் (அகம். 137), மதுரைத் தத்தங்கண்ணனார் (அகம். 335), மதுரைப் பேராலவாயார் (அகம். 296), மதுரை மருதனிள நாகனார் (நற். 39), பொதும்பில் கிழார் மகனார் (நற். 387), இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறுபாண். 51–67), விற்றூற்று வண்ணக்கண் தத்தனார் (நற். 298), மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் (அகம். 231, 307)

நம்பி நெடுஞ்செழியன் – பேரெயில் முறுவலார் (புறம். 239)

நல்வழுதி – இவ்வரசன் பாடியவை (பரி. 12)

நிலந்தரு திருவின் நெடியோன் – நெட்டிமையார் (புறம். 9(8–11 வரி)), மாங்குடி மருதனார் (மதுரை. 60–61, 763), பனம் பாரனார் (தொல். பாயிரம். 9), நல்லுருத்திரனார் (கலித். 104 (1–4)

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி – காரி கிழார் (புறம். 6), நெட்டிமையார் (புறம். 9, 12, 15), நெடும்பல்லியத்தனார் (புறம். 64), மாங்குடி மருதனார் (மதுரை. 759–762)

மாலைமாறன் – இவ்வரசன் பாடியவை (குறுந். 245)

மாறன் வழுதி – இவ்வரசன் பாடியவை (நற். 301)

முடத்திருமாறன் – இவ்வரசன் பாடியவை (நற். 105, 228)

வெள்ளியம் பலத்துத் துஞ்சிய பெருவழுதி – காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் (புறம். 58)

## சங்க இலக்கியப் பாடல்களில் பதிவாகியுள்ள குறுநில மன்னர்கள்

அகுதை – கபிலர் (புறம். 347), வெள்ளெருக்கிலையார் (புறம். 233), பரணர் (அகம். 76, 208; குறுந். 298), கல்லாடனார் (அகம். 113)

அக்குரன் – குமட்டூர்க் கண்ணனார் (பதிற். 14)

அதியன் நெடுமான் அஞ்சி – ஔவையார் (புறம். 87, 88, 89, 90, 91, 92, 93, 94, 95, 97, 98, 99, 100, 101, 103, 104, 206, 231, 232, 235, 315, 390; குறுந். 80, 91; நற். 381), இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறுபாண் 99–103), பரணர். (குறுந். 393; அகம். 162, 372), பெருஞ்சித்திரனார் (புறம். 208), மாமூலர் (அகம். 115, 325; புறம். 158), நக்கீரர் (அகம். 36), தாயங்கண்ணனார் (அகம். 105), அஞ்சியத்தை மகள் நாகையார் (அகம். 352), அரிசிற்கிழார் (பதிற். 78; புறம். 230)

அதியன் – பரணர் (அகம். 162), மாமூலனார் (அகம். 325), பரணர் (குறுந். 393)

அந்துவன்கீரன் – காவட்டனார் (புறம். 359)

அம்பர்கிழான் அருவந்தை – கல்லாடனார் (புறம். 385)

அருமன் – கள்ளில் ஆத்திரையன் (குறுந். 293), நக்கீரர் (நற். 367)

அவியன் – மாறோக்கத்து நப்பசலையார் (புறம். 383), காவிரிப் பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் (அகம். 271)

அழிசி – பரணர் (குறுந். 258; நற். 190)

அழும்பில்வேள் – அண்டர் நடுங்கல்லினார் (புறம். 283), மாங்குடி மருதனார் (மதுரை. 343–345)

அறுகை – பரணர் (பதிற். 44)

அன்னி – (நற். 180), வெள்ளி வீதியார் (அகம். 45), நக்கீரர் (அகம். 126), கயமனார் (அகம். 145)

அன்னிமிஞிலி – பரணர் (அகம். 196, 262)

அஃதை தந்தை சோழன் – மருதம் பாடிய இளங்கடுங்கோ (அகம். 96)

ஆஅய் அண்டிரன் – காரிக்கண்ணனார் (நற். 237, 167), உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் (புறம். 127, 128, 129, 130, 131, 132, 133, 134, 135, 241, 374, 375), துறையூர் ஓடை கிழார் (புறம். 136), குட்டுவன் கீரனார் (புறம். 240), பெருஞ்சித்திரனார் (புறம். 158 (12–13), மோசிகீரனார் (குறுந். 84), இடைக்கழி நாட்டு

நல்லூர் நத்தத்தனார் (சிறுபாண். 95–99), உமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றனார் (அகம். 69), பரணர் (அகம். 148, 152, 181, 198, 208, 396)

ஆட்டனத்தி – பரணர் (அகம். 76, 222, 236, 376, 396), இளங்கோவடிகள் (சிலம்பு 21:11–15)

ஆதன் எழினி – ஐயூர் முடவனார் (அகம். 216) மதுரை மருதனிள நாகனார் (அகம். 90, 220)

ஆதனுங்கன் – கள்ளில் ஆத்திரையனார் (புறம். 389, 175)

ஆமூர் மல்லன் – சாத்தந்தையார் (புறம். 80), இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறுபாண். 187–188)

ஆய் எயினன் – பரணர் (அகம். 142, 148, 181, 208, 396)

ஆரியப் பொருநன் – பரணர் (அகம். 386)

இருங்கோவேள் – கபிலர் (புறம். 201, 202), நக்கீரர் (அகம். 36), கடியலூர் உருத்திரங்கண்ணனார் (பட்டினப். 282)

இளங்கண்டீரக்கோ – பெருந்தலைச் சாத்தனார் (புறம். 151)

இளங்குமணன் – பெருந்தலைச் சாத்தனார் (புறம். 165)

இளவிச்சிக்கோ – பெருந்தலைச் சாத்தனார் (புறம். 151)

இளவெளிமான் – பெருஞ்சித்திரனார் (புறம். 162, 207)

ஈர்ந்தூர்கிழான் தோயன் மாறன் – கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் (புறம். 180)

எருமையூரன் (எருமை வெளியன்) – நக்கீரர் (அகம். 36, 253), மாமூலனார் (அகம். 115), இவர் பாடியவை (அகம். 73; புறம். 273, 303)

எவ்வி – வெள்ளெருக்கிலையார் (புறம். 233, 234), மாங்குடி மருதனார் (புறம். 24), கபிலர் (புறம். 202), பரணர் (அகம். 266; குறுந். 19), நக்கீரர் (அகம். 126), மாமூலனார் (அகம். 115), குடவாயிற் கீரனார் (அகம். 366)

எழினி – மாமூலனார் (அகம். 197), நக்கீரர் (அகம். 36), மாமூலனார் (அகம். 211)

எழினியாதன் – மாங்குடி கிழார் (புறம். 396)

ஏறைக்கோன் (ஏற்றை) – குறமகள் இளவெயினி (புறம். 157), குடவாயிற் கீரத்தனார் (அகம். 44)

ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் – குடவாயிற் கீரத்தனார் (புறம். 242), தொடித்தலை விழுத்தண்டினார் (புறம். 243)

ஒய்மான் நாட்டு நல்லியக்கோடன் – புறத்திணை நன்னாகனார் (புறம். 176, 376), ஒய்மான் வில்லியாதன் (புறம். 379), இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறுபாணாற்றுப்படை)

கங்கன் – குடவாயிற் கீரத்தனார் (அகம். 44)

கட்டி – குடவாயிற் கீரத்தனார் (அகம். 44), பரணர் (அகம். 226), மாமூலனார் (குறுந். 11)

கடலன் – பொருந்தினிளங்கீரனார் – (புறம். 53) ஆலம்பேரி சாத்தனார் (அகம். 81)

கண்டீரக் கோப்பெருநள்ளி – வன்பரணர் (புறம். 148, 149, 150), பெருஞ்சித்தினார் (புறம். 158:13–16), இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறுபாண் 103–107), பரணர் (அகம். 152), கபிலர் (அகம். 238), காக்கைப் பாடினியார் நச்செள்ளையார் (குறுந். 210)

கரும்பனூர் கிழான் – புறத்திணை நன்னாகனார் (புறம். 381, 384),

கழுவுள் – பரணர் (அகம். 135), மதுரை மருதனிள நாகனார் (அகம். 365)

கொங்கர் – குடவாயிற் கீரத்தனார் (அகம். 79:1–8, 44:7–14), நக்கீரர் (அகம். 253:4–5), தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை (பதிற். 77:10–11), பாலைக் கௌதமனார் (22:12–16), பெருங்குன்றூர் கிழார் (பதிற். 88:19, 90:25), கோவூர் கிழார் (அகம். 373:8), முடமோசியார் (புறந். 130:5–7; நற். 10:6–7) பரணர் (குறுந். 393)

கோசர் – மாமூலனார் (அகம். 15:2–5), மதுரை மருதனிள நாகனார் (அகம். 90:9–12), ஐயூர் முடவனார் (அகம். 216:8–14), கல்லாடனார் (113:5–7), பரணர் (அகம். 262:1–12, 196:8–12), நக்கீரர் (205:9–10, 346:19–25), மாமூலனார் (அகம். 251:6–14), காரிக்கண்ணனார் (புறம். 169:8–11), மாங்குடி மருதனார் (மதுரை. 508:509, 774–74), பரணர் (குறுந். 73:2–4), அரிசிற் கிழார் (பதிற். 71:13–17), பெருங்குன்றூர் கிழார் (பதிற். 88:7)

கண்ணன் எழினி கொங்கர் – மாமூலனார் (அகம். 197)

கொடுமுடி – ஆமூர்க் கவுதமன் சாதேவனார் (அகம். 159)

கொண்கானங்கிழான் – மோசிகீரனார் (புறம். 154, 156)

கௌணியன் விண்ணந்தாயன் – ஆவூர் மூலங்கிழார் (புறம். 166)

சிறுகுடிகுழான் பண்ணன் – குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் (புறம். 173), கோவூர்கிழார் (புறம். 70), மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் (புறம். 388), செயலூர் இளம்பொன் காத்தன் கொற்றனர் (அகம். 177), மாற்றூர் கிழார் மகனார் கொற்றங் கொற்றனார் (அகம். 54)

சோழநாட்டுப் பிடவூர்க் கிழான் மகன் பெருஞ்சாத்தன் – மதுரை நக்கீரர் (புறம். 395)

சோழிக ஏனாதி திருக்கிள்ளி – கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் (புறம். 167)

சோழிய ஏனாதி திருக்குட்டுவன் – கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் (புறம். 394)

தந்துமாறன் – சங்கர வருணரென்னும் நாகரியர் (புறம். 360)

தருமபுத்திரன் – கோதமனார் (புறம. 366)

தழும்பன் – பரணர் (புறம். 348; நற். 300), நக்கீரர் (அகம். 227)

தாமான் தோன்றிக்கோன் – ஐயூர் முடவனார் (புறம். 399)

திதியன் – நக்கீரர் (அகம். 36, 126), பரணர் (அகம். 196, 262, 322), மாமூலனார் (அகம். 331), வெள்ளி வீதியார் (அகம். 45), கயமனார் (அகம். 145), ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் (அகம். 25)

திரையன் – கடியலூர் உருத்திரங் கண்ணனார் (பெரும் பாணாற்றுப்படை)

தொண்டைமான் – தாயங்கண்ணனார் (அகம். 213:1–3), கல்லாடனார் (குறுந். 260:4–6), கடியலூர் உருத்திரங்கண்ணனார் (பெரும். 450–454), ஔவையார் (புறம். 95)

நன்னன் சேய் நன்னன் – பெருங்கௌசிகனார் (மலைபடு கடாம்)

நன்னன் வேண்மான் – மாமூலனார் (அகம். 15:10–12, 97:12–13, 349:8–9), பரணர் (152:12–13), முள்ளியூர்ப் பூதியார் (அகம். 258:1–3, 173:16–18), பரணர் (அகம். 356:8, 372:3–5), பாலை பாடிய பெருங்கடுங்கோ (அகம். 391:6–7), மாமூலனார் (அகம். 349:6–8), பரணர் (152:7–12, 208:6–14, 396:2–6; நற். 270:7–10; குறுந். 292:1–5, 73:2–4)

நாஞ்சிற் பொருநன் (நாஞ்சில் வள்ளுவன்) – மருதனிள நாகனார் (புறம். 138, 139), ஒருசிறைப் பெரியனார் (புறம். 137), ஔவையார் (புறம். 140), கருவூர்க் கதப்பிள்ளை (புறம். 380)

நாலைகிழவன் நாகன் – வடநெடுந்தத்தனார் (புறம். 179)

பண்ணி – பெருந்தலைச் சாத்தனார் (அகம். 13:6–11; புறம். 205)

பரம்பிற் கோமான் பாரி – பாரி மகளிர் (புறம். 112), பெருஞ்சித்திரனார் (158:1–4), புறத்திணை நன்னாகனார் (புறம். 176:9–10), கபிலர் (நற். 253; புறம். 105, 106, 107, 108, 109, 110, 111, 113, 114, 115, 116, 117, 118, 119, 120, 200, 201, 202, 236, 337), இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறுபாண். 87–91), நக்கீரர் (அகம். 78), ஔவையார் (அகம். 303), மிளைக்கந்தன் (குறுந். 196), கபிலர் (பதிற். 61:1–10)

பழையன்மாறன் – நக்கீரர் (அகம். 346:18–25; மதுரை. 771–774), பரணர் (பதிற். பதிகம் 5:13–17, 44:10–17, 49:7–17)

பாணன் – பரணர் (அகம். 226, 386), மாமூலனார் (அகம். 325), கல்லாடனார் (113)

பிட்டங்கொற்றன் – கருவூர்க் கந்தம் பிள்ளைச் சாத்தனார் (புறம். 168)

பூழியர் – பரணர் (அகம். 6:9–10), கல்லாடனார் (அகம். 199:19–24), பாலைக் கௌதமனார் (பதிற். 21:22–23), காப்பியற்றுக் காப்பியனார் (பதிற். பதிகம் 4:6–9), காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் (புறம். 169, 171), உறையூர் மருத்துவன் தாமோதரனார் (புறம். 170), வடமவண்ணக்கன் தாமோதரனார் (புறம். 172), ஆலம்பேரிச் சாத்தனார் (அகம். 143), மருதனிள நாகனார் (அகம். 77)

பிண்டன் – பரணர் (அகம். 152)

புல்லி (புல்லணற் காளை) – உலோச்சனார் (புறம். 258), கல்லாடனார் (புறம். 385; அகம். 83, 209), கடியலூர் உருத்திரங் கண்ணனார் (பெரும். 134–145), மாமூலனார் (நற். 14; அகம். 61, 295, 311, 359, 393)

பொகுட்டெழினி – ஔவையார் (புறம். 392, 102)

பொறையாற்றுக்கிழான் பெரியன் – கல்லாடனார் (புறம். 391), உலோச்சனார் (அகம். 100:11–15; நற். 131:4–9, 180:6–9)

போரூர்க்கிழவன் பழையன் – பரணர் (அகம். 186:14–16, 326:8–13), குடவாயிற் கீரத்தனார் (அகம். 44:7–14; நற். 10:6–9)

மத்தி – பரணர் (அகம். 6:20, 226:7–8), ஓரம்போகியார் (ஐங். 61), மாமூலனார் (அகம். 211:9–15)

மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன் – மாறோக்கத்து நப்பசலையார் (புறம். 174)

மலையமான் திருமுடிக்காரி – கபிலன் (புறம். 121, 122, 123, 124; நற். 77, 291, 320; குறுந். 198, 312), மாறோக்கத்து நப்பசலையார் (புறம். 126, 174:10–14), கோவூர் கிழார் (புறம். 46), வடம வண்ணக்கன் பெருஞ்சாத்தனார் (புறம். 125), பெருஞ்சித்திரனார் (158:6–7)

மழவர் – மாமூலனார் (அகம். 1:1–2, 187:5–7, 101:4–5, 127:15–17, 91:11–17), மதுரை மருதனிள நாகனார் (அகம். 131:6–9), கருவூர்க் கந்தப்பிள்ளைச் சாத்தனார் (அகம். 309:1–6), பாலை பாடிய பெருங்கடுங்கோ (337:7–14), இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறுபாண் 91–95), கல்லாடனார் (அகம். 209), குடவாயிற் கீரத்தனார் (அகம். 35), கபிலர் (நற். 291:7–9, 170:6–8)

மல்லிகிழான் காரியாதி – ஆவூர் மூலங்கிழார் (புறம். 177)

மிஞிலி – பரணர் (அகம். 142:9–14, 148:7–8, 181:3–7, 208:5–9, 396:2–6; நற். 265:3–4)

வடுகர் – தாயங்கண்ணனார் (அகம். 213:2–8), மாமூலனார் (அகம். 295:13–17, 281:4–13; குறுந். 11:5–7), நக்கீரர் (அகம். 253:10–18), இடையன் சேந்தங்கொற்றனார் (அகம். 375:11–15), காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் (அகம். 107:11), குடவாயிற் கீரத்தனார் (நற். 212:5)

முசுண்டை – நக்கீரனார் (அகம். 249:2–10)

முடியன் – ஔவையார் (நற். 390:9–10)

மூவன் – பெருந்தலைச் சாத்தனார் (புறம். 209), பொய்கையார் (நற். 18:2–5)

வல்லங்கிழவன் – பரணர் (அகம். 356:11–13), பாவைக் கொட்டிலார் (அகம். 336:19–23)

வல்லார் கிழான் பண்ணன் – சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பியார் (புறம். 181)

வல்வில் ஓரி – வன்பரணர் (புறம். 152, 153), கழைத்தின் யானையார் (புறம். 204), பெருஞ்சித்திரனார் (புறம். 158:4–5), பரணர் (அகம். 208; நற். 6, 265; குறுந். 199), கபிலர் (நற். 320), கல்லாடனார் (அகம். 209), பாலத்தனார் (நற். 52), இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறுபாண். 107–111)

வாணன் – நக்கீரர் (நற். 340:2–9), மதுரைக் காமக் கண்ணி நப்பாலத்தனார் (நற். 204), மருதனிள நாகனார் (நற். 269)

விச்சிக்கோன் – கபிலர் (புறம். 200), பரணர் (குறுந். 328), பெருங்குன்றூர் கிழார் (பதிற். 4:3–5)

விராஅன் – பரணர் (நற். 260, 350), ஓரம்போக்கியார் (ஐங். 58)

வெளிமான் – பெருஞ்சித்திரனார் (புறம். 237, 238)

வேங்கை மார்பன் – ஐயூர் முடவனார் (21:1–9)

வையாவிக் கோப்பெரும் பேகன் – பரணர் (புறம். 141, 142, 145, அகம். 262), கபிலர் (புறம். 143), வன்பரணர் (புறம். 144), அரிசில் கிழார் (புறம். 146), பெருங்குன்றூர் கிழார் (புறம். 147), பெருஞ்சித்திரனார் (புறம். 158:10–12), இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் (சிறுபாண். 84–87)



குழுச் சமூகமான ஆண் பெண் கூட்டிணைந்த பயணம்



வேட்டைச் சமூகத்தின் பெண் ஆண் இணைந்து
வேட்டையாடும் முறை.



வேட்டைச் சமூகத்தில் தொடங்கிய இயற்கைப் போராட்டத்தில் கிழங்கை
அகழ்ந்தெடுத்து உணவுத் தேடும் கூட்டிணைந்த இனக்குழு வாழ்க்கை.



ஆதிக் குடிகளின் வேட்டைக் கருவியான கூர்மையான
மரக்கிளைகளின் நீண்ட கம்புகளும் வேட்டைத் தொழிலுக்குப்
பயன்படுத்தப்பட்ட வளர்ப்புப் பிராணியான காட்டு நாய்கள்.



இனக்குழு மக்கள் குத்துவாள், ஈட்டிகளால் வேட்டையாடப்பட்ட
காட்டு விலங்கு – பாதீட்டு முறையில் கூட்டுண்ணும் வாழ்க்கையில் எஞ்சிய
மாமிசத் துண்டுகளை சேமித்துப் பாதுகாக்கும் விலங்குகளின் தோல் மற்றும்
குழந்தை வளர்ப்பில் அக்கறைக்
கொள்ளும் இனக்குழுத் தலைவி.



காட்டு விலங்கு கரடியுடன் இனக்குழுவினர்
இணைந்து வேட்டையாடும் முறை.



காட்டு மான்களை அம்புகளால் வேட்டையாடுதல்.



காட்டு யானைகளைக் குழுவாக வேட்டையாடுதல்.



காட்டு மான்களை வேட்டையாடுதல்.



பாறைகளைக் கூரிய கற்கருவிகளாக்கும் இனக்குழுத் தொழிலாளி.



குகைக்குள் ஆயுதம் தயாரிக்கும் இனக்குழுக்கள்.



மரத்தாலான கைப்பிடியுடன் பழைய கற்கோடாரிகள்.



குத்துவாளுக்கெனப் பயன்படுத்திய கல் ஈட்டிகள்.



கூரிய கற்களாலான வேட்டைக் கருவிகள்.



வேட்டைக்குப் பயன்படுத்திய சூரிக்கத்தி – சூலாயுதம்.



கொல்லப்பட்டறையில் பயன்படுத்தும் கவண் போன்ற ஆயுதங்கள்.



பாறை இரும்பு பட்டைத் துண்டுகளை செம்மைப்படுத்தும் கொல்லம் பட்டறை.



வெட்டியெடுக்கப்பட்ட பாறைத் துண்டு.



மரப்பிடியாலான இரும்புப் பாறைச் சுத்தியல்.



பழைய கற்கருவிகளும், ஈட்டிகளும்.



நெல் வயலில் நடும் நாற்று முடிச்சுகள்.



மலைப் பகுதியில் விளைநிலமாக்கும் பணியில் இனக்குழுப் பெண்கள்.



ஆழமான நீர்நிலைகளில் தண்ணீர் எடுக்கப் பயன்படுத்திய மர ஏற்றம்.



மருதநிலத்தில் பயன்படுத்திய கதிர் அரிவாள்.



தொல்குடியினர் வாழ்ந்த பாறை ஓவியம்.



தமிழரின் அரிய காற்றுக் கருவியான மூங்கிலில் செய்யப்பட்ட இசைக்குழல் – புல்லாங்குழல் இசைக் கருவி



இரும்புக் காலத்தில் உருவான தானியங்களைச்
சேகரிக்கப் பயன்படுத்திய தாழி.



குழந்தையைப் பராமரிக்கும் தாயின் கற்சிற்பம்.

# சங்க இலக்கியத்தில் பெண் அறம்

சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு
முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக
(பகுதி நேரம்)
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


ஆய்வாளர்

**ஏ.மேனகா**

மேற்பார்வையாளர்

**முனைவர் க.அ.ஜோதிராணி**

எம்.ஏ.,எம்ஃபில்.,பிஎச்.டி.,பி.எட்.,சி.ஆர்.டி.,பி.ஜி.டி.ஜே.,
உதவிப்பேராசிரியர்
தமிழ்த்துறை
காயிதே மில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 002.





**தமிழ்த்துறை**

**காயிதே மில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

சென்னை - 600 002.

ஏப்ரல் 2016

வாழ்க்கையின் அனுபவ நெறியே வாழ்வியல். அனுபவப் பதிவுகளின் முதல் இலக்கியமே சங்க இலக்கியம். தமிழரின் இயங்கியல் வரலாற்றில் ஒன்று மற்றொன்றை உருவாக்குவது, பயன்பாட்டிற்கு உகந்தது, உதவுவது என்பதை அறிவோம். மாற்றம் பெறும் பயன்பாட்டை தன்னகத்தே கொண்டு அமைவது என்ற ஆக்க நிலைப்பாட்டோடு அமைந்திருப்பது சங்க இலக்கியத்தின் தனிச்சிறப்பு. செம்மை. செம்மொழி எனும் தகுதிப்பாடுகளுக்குள் நடுநிலைமை எனும் அறத்தை உலகமெலாம் பரவும் வகைக்கு பதினொரு சிறப்புக் கூறுகளோடு பொருந்தியிருப்பது தமிழரின் கொடை. அத்தகு 'கொடை' உலகெலாம் பரந்துப்பட்டு நிலைக்கவேண்டும். சமன், நடுநிலைமை எனும் அறப்பாங்கு பொதுமைப்பட அமையவேண்டும் என்ற தமிழ்ச்சான்றோரின் சிந்தனையைச் சிரமேற்கொண்டொழுகுவது கடமை. ஆகவே நடுநிலைமைக் கூறினை ஆராயும் நோக்கில் சங்க இலக்கியத்தில் பெண் அறம் ஆய்வுப் பொருளாக அமைந்துள்ளது.

சமப்பகிர்வு என்ற பொருண்மையையே தலைச்சொல்லாகக் கொண்டு 'பெண் அறம்' ஆய்வுசெய்யப்பட்டுள்ளது. சங்க இலக்கியம் சொல்லிய அறத்தை சமூக சமன்பாட்டு நோக்கில் தரவுகளோடு நடுநிலைமையினின்று விலகாமல் ஆய்ந்தளித்துள்ளது இவ்வாய்வேடு.

அறம் என்பது மனித குலம் அனைத்திற்கும் பொதுமைப்படுத்தப் பட்டிருந்ததாக அறியும் நமக்கு ஆண், பெண் என இருபாலினத்துள் அரச நியதியாக அமையாமற் போனதேன்? என்ற சிந்தனையே ஆய்விற்குத் தூண்டுதலாய் நின்றது. சங்க இலக்கியத்துள் அறம் என்ற பொருள் சமமாகப் பார்க்கப்பட்டிருக்கிறதா? என்பதை ஆராயும் நோக்கில் இவ்வாய்வேடு அமைகிறது. அறம் என்பது அரசநெறி என்ற சமூக அமைப்பில் முதன்மையானது.

சமூக நிகழ்வுகளைப் படிக்கும் நமக்கு எக்காலத்திற்கும் பயன்படக்கூடிய ஓர் இலக்கியத்தை நிகழ்காலத்தில் பொருத்திப் பார்ப்பது என்பது கால வரலாற்றின் தேவை. அந்தந்தக் காலச் சூழலுக்கேற்ப அமைந்துள்ள இலக்கியக் கூறுகளைத் தொடரும் வருங்கால சமூகம் எவ்வாறு இணைத்துக் கொள்ளலாம் என்பதை விளக்கும் வகையில் ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது. தொன்மை, முதன்மை, நேர்மை, நடுநிலைமை என பதினொரு பண்புகளோடு பதிவுறும் இலக்கியத்தில் சமூக முரணை விளைவித்த இடங்கள் பாடற்தரவுகளாக முன்வைக்கப்பட்டு **விளக்கமுறைத் திறனாய்வின்** வழி ஆராயப்பட்டுள்ளது.

பாலின வேறுபாடு முரணாகப் பார்க்கப்படாத வேட்டைச் சமூகத்தில் பெண்களின் உழைப்பு சமமானது என்பது குறிப்பிட்டுச் சொல்லவேண்டிய தேவை எழவில்லை. எழாது. ஆனால், வேட்டைச் சமூகம் இனக் குழுக்கள் என உற்பத்தி வளத்திற்கும் சமப்பங்காற்றியுள்ள பெண்ணின் இறுத்தலை கேள்விக்குள்ளாக்கப்பட்டுள்ள பாடல்களைச் சமூக வரலாற்றுத் தளத்தில் முன் வைப்பது இவ்வாய்வேட்டின் முதன்மை நோக்கமாய் அமைகிறது.

இவ்வாய்வின் நோக்கமானது, சங்க இலக்கியத்தில் பெண் வரலாற்றினைத் தனித்து வரைவு செய்து எழுதும் பணியில் முக்கியமானது.

சமகாலத்தில் வர்க்கமுரணும், பாலியல் முரணும் சமூகத்தில் ஏற்றத் தாழ்வினை விளைவித்து நிற்கின்றன என்பதால் இத்தகைய முரணைக் களைந்தெறியப் படவேண்டிய ஆய்வினை மேற்கொள்வது என்பதே ஆய்வின் இலக்கு. சங்க இலக்கியத்தில் அமைந்த சமூக முரணின் காரணத்தை அறிய முற்படுவதும், தொன்மை வரலாற்றை ஆதாரமாக்கிக் கொண்டு ஆய்வு செய்வதும் கடமை என்பதை இந்த ஆய்வேடு உணர்ந்திருக்கிறது.

அறம் என்பது சமத்துவத்தின் அடையாளக் குறியீடு. பெண்களுக்கான வர்க்கமுரணை, பெண்களுக்கான பாலியல் முரணை, பெண்களுக்கான பொருளாதார முரணை, பெண்களுக்கான நுட்பத் திறனை, பெண்களுக்கான அறிவுத் திறனை, பெண்களுக்கான வாழ்வியல் முரணை ஆதாரங்களோடு ஆய்வுத் தலைப்பின் பொருளினின்று விலகாமல் முன் வைக்கும் பணி இந்த ஆய்வேட்டில் முன் வைக்கப்பட்டுள்ளது.

பொதுவுடைமைச் சமூகத்தைத் தொடர்ந்து ஆண் அடிமைச் சமூகம் பின்தொடர்ந்த நிலையில், பெண் நுகர்வுப் பொருளாகப் பார்க்கப்பட்டு வரும் சூழலில் வர்க்கப் பார்வையோடு இணைந்த வரலாற்றை எழுதுதல் அவசியம். நூற்றுக்கணக்கான தொழில்களில், தொழில் உற்பத்திக் கருவிகளில் பெரும் பங்கு வகித்த சங்க இலக்கியப் பெண்களின் முழுமையான வரலாறு மறைக்கப் பட்டிருப்பதான இடத்தை **சமூக வரலாற்றுப் பார்வையோடு** இவ்வாய்வு விளக்குகிறது.

காதலும், வீரமும், போற்றுதல் தமிழ்ப்பண்பாட்டு மரபு என்பதை சங்க இலக்கியமே முதன்மைப்படுத்தியிருக்கிறது என்பதறிவோம்.

காதல் என்பதன் புதுமையைச் ‘செம்புல பெயல்நீர்’ என்கிறார் புலவர். இப்பாடற் கருத்து இன்றளவும் பொதுவான விளக்கமாக பெறப்பட்டிருப்பினும், குறிப்புப் பொருளாக ‘அறம்’, ‘இணை’, ‘சமம்’ என்று விளக்கப்பட்ட

முறையினை முன்வைத்திருப்பதை நுட்பமாய் புரிந்துகொள்ளலாம். செம்புலப் பெயல்நீர் என காதலின் – ஆண் பெண் உறவு, அன்பு, உளப்பகிர்வு, சமன் என மொழிக் குறியீட்டாக்கிய பான்மையைச் சங்க இலக்கியத்தில் ஆய்ந்துணர முடியும்.

பொதுமையான சமப்பங்கீட்டுச் சொல்லாக; பாதீடு, பகுத்துண்ணுதல், கூட்டுண்ணுதல் எனும் குறியீட்டுச் சொற்கள் சங்க இலக்கியத்தின் மொழியாடலுக்குள் விரிவாகப் பேசப்படாமல் போனது என்பதையும், அரசநியதி பேசும் பாடலுக்குள் பெரிதும் முக்கியத்துவம் பெறாமல் போனதையும் **சமூக வரலாற்றுப் பார்வையோடு** விளக்குகிறது ஆய்வேடு.

**சங்க இலக்கியத்தில் அறம் – குறியீட்டுச் சொல்** எனும் முதல் இயலானது; இயற்கை, சமப்பகிர்வு, இயல்பு, பொதுமை, சமம், சமத்துவம், என்ற மரபாக அமையவேண்டிய அறம் எனும் நடுநிலைமைச் சொல் தன் இயல்பு தன்மையினின்று வினையாற்றாது சமகாலத்தில் வேறுபட்டு கடவுள், புண்ணியம், தருமம் என சங்ககால பொருண்மையினின்று முறைமாறிச் சென்றுள்ளது. செம்மொழித் தகுதியுள் 'கடவுள்' முதன்மைப் பெறாத நிலையினை ஈண்டு எண்ணிப் பார்க்கலாம். சம காலத்தில் பொதுமை இழந்து நிற்கக்கூடிய சூழல் ஏற்பட்டுவிடுமோ என்ற சமூக அக்கறையோடும், சமூக குற்றம் நிகழ்ந்துவிடக் கூடாது என்ற பொதுச் சிந்தனையோடும், நடுநிலைமை எனும் பொருள்கொண்ட செம்மொழிப் பொதுமையை இனிவரும் இலக்கியங்களும் பயனுறு சொல்லாகப் புரிந்து வினையாற்ற வேண்டும் என்ற நோக்கில் செம்மொழி தகுதியுள் நிற்கும் 'நடுநிலைமை' எனும் சொல் 'அறம்' என ஆய்வேட்டில் அணுகப்பட்டுள்ளது.

'துன்பத்தின் இருப்பை உணர்வதும், துன்பத்தைக் களைவதற்கான வழியைக் காட்டுவதுமே பௌத்த தம்மத்தின் அடித்தளமும், அடிப்படையாகும்.' (சு.மாதவன், தமிழ் அற இலக்கியங்களும், பௌத்த சமண அறங்களும், ப.74) என்ற பௌத்த கொள்கையின் வழி சங்க காலத்து பெண்களின் இறுத்தலை, சங்க இலக்கிய வாசிப்பின் வழி அறியும்போது; அவர்களுக்கான இடம் அன்றைய காலத்து அரசநெறியில் துன்பத்தை விளைத்திருக்கிறது என்பது ஆய்ந்தறியப்பட்டுள்ளது. அத்துன்பத்திற்கான காரணங்களை அறிவதும், அவற்றினின்று களைவதற்கான காரணங்களை முன் வைப்பதுமான இலக்கு நோக்கிய பணியில் இவ்வாய்வேடு அமைகிறது.

சங்க இலக்கியம் தோன்றுவதற்கு முன்னதாகவே இருந்த சமயங்கள் சமணமும் பௌத்தமும். அவை இயல்பு நிலைக்குக் கொண்டுவருதல் அறம் என உணர்த்தும் வரையறையை இவ்வியல் முன்வைத்துள்ளது.

**சங்க இலக்கியத்தில் உற்பத்திக் கருவிகளும் பெண்களும்** எனும் இரண்டாம் இயலானது; இனக்குழுவில் பெண் தாய்மைக்குரியவள் என்று பேணப்பட்டு பாதுகாக்கப்பட்டாள். உற்பத்திக் கருவிகளின் ஆளுமை பெண்களை இரண்டாம் நிலைக்குத் தள்ளியது என்ற பொருண்மையோடு ஆதாரங்களுடன் விளக்கம் பெறுகிறது.

பழந்தமிழர் வாழ்க்கை தாய்வழிச் சமூகத்தைப் படைத்தது. இது சமத்துவக் காலம். பின்னர் வேட்டைக்கு இரு, சில, பல கைகள் போதாது என எண்ணப்பட்ட காலத்தில் முதன்மைத் தொழிலான வேட்டையாடுதலுக்கு மனித உற்பத்தி அவசியம் என உணரப்பட்டது. புதிய உயிரைப் படைக்கும் திறன் கொண்டுள்ள பெண்தான் உற்பத்தி வளத்தில் முக்கியமானவள். அதனால் மதிக்கப்பட்டாள். வேட்டைச் சமூகத்தில் மறு உற்பத்தியின மூலமானாள். இனக்குழுச் சமூகத்தில் உயர்ந்தவளானாள். தாய்வழிச் சமூகத்தைப் படைத்தாள். தலைமையேற்றவள் என்பதால் மனித குலத்தில் மதிக்கப்பட்டாள்.

சீறூர் மன்னனின் குழுவில் சீறூர் தலைவி சிறப்புக்குரியளாக பண்பாட்டைப் போற்றும் பெண்ணாக மதிக்கப்பட்டாள். சேமிக்கும் பழக்கத்தின் முதன்மையானாள். இவ்வாறு நாட்டு வளத்தில், பெண்ணின் உற்பத்தித் திறன் குறித்த விளக்கங்களும், உற்பத்திக் கருவிகளின் பெருக்கம், ஆளுமை, அதிகாரப்படுத்துதல் என பெண்ணை உடைமையற்றவளாக்கிய விவரணைகள் இவ்வியலுள் விளக்கம் பெறுகின்றன.

**நாட்டு வளத்தில் ஆண் பெண் தொழில்முறை பங்களிப்பு** எனும் மூன்றாம் இயலானது; மனித குலம் இயற்கையோடு இணைந்தும், போராடியும் பொருளீட்டி தம் உணவுத் தேவையை நிறைவு செய்துள்ளது. இயற்கையோடும், விலங்குகளோடும் போராடியே தமது உணவுத் தேவையை வேட்டைச் சமூகத்தினர் நிறைவு செய்துகொள்ளவேண்டிய தேவை ஏற்பட்டது.

தேவை என்ற பொதுமையான பயன்பாட்டுச் சொல்லாக உழைத்தல், தொழில், வினையாற்றல் எனும் சொற்களைக் கூறலாம். இப்பொருண்மை யினின்று ஆண் பெண் பகுப்பு, வேறுபாடு எனும் சொற்கள் தேவை என்ற பொதுப் பயன்பாட்டிற்குள் சமமாக பார்க்கப்படாத நிலையை பாடல்களினின்று **ஒப்பீட்டு ஆய்வின்** வழி ஆராயப்பட்டுள்ளது.

ஆண் பெண் தொழில்முறையில் பாகுபாடும் மதிப்பீடும் பொதுவான தாகவே அமைந்திருக்கவேண்டும். ஆனால் பெண்ணிற்கான இறுத்தல், மதிப்பு, மதிப்பீடு சார்ந்த சமன்பாட்டு விழுமியம் முரண்பட்டு அமைந்திருப்பது என்பதை

சங்க இலக்கியப் பாடற் பதிவுகளின்வழி அறிந்துணரலாம். சமன்பாடற்ற விழுமியத்தின் தொடர்ச்சியாகவே பின்னெழுந்த இலக்கியங்களும் பெண்ணின் இறுத்தலை படிநிலைகளில் வேறுபட்டு அணுகும் முறையோடு அமைத்துச் சென்றிருக்கின்றமை உய்த்துணர இயலும். பெண்ணின் உரிமை மறுக்கப்பட்டதற்கான மூல வித்தின் தொடர்ச்சி சங்க இலக்கியத்தில் இருந்தும் உருவாகி இருப்பதை **உளவியல் வரலாற்றுப்** பார்வையோடு அணுகப் பட்டிருக்கிறது.

**சங்க இலக்கியத்தில் அரசும் – அறம் பெறும் இடமும்** எனும் நான்காம் இயலானது; ஆளுமை என்பது 'ஆண்' தன்னை உடைமையாளன் என்பதைவிட குழுவிற்கும், கூட்டத்திற்கும், இனத்திற்கும், சிற்றூர், முதுகுடி மன்னர், குறுநிலமன்னர், வேந்தர் என்பவனவற்றுள்ளும் தலைவனாக, வீரனாக, செல்வனாக, நிலவுடைமையாளனாக, அதிகாரம் படைத்தவனாக தன்னை தனியுடைமையாளனாக்கிக் கொண்டான். தனது தலைமை எனும் வலிமையை பரந்துப்பட்ட எல்லைக்குள் பரப்பிடத் துணிந்தான். அது அவனின் வலிமையை, உடல் வலிமையை, மன வலிமையை, ஆற்றலை, வீரத்தை, அதிகாரத்தை, துணிவை பறைசாற்றுவதாய் அமையவேண்டும் என்ற நோக்கில் புலவர்களால் அரசநெறியாக்கப்பட்டது.

அரசனையன்றி, அந்தணனையும் மக்கள் வழிபடவேண்டும் என்ற தனிமனித வழிபாட்டு முறையை அந்தணர் ஏற்படுத்திய காலமாக சங்க இலக்கியத்தைக் கூறலாம். புலவர்களின் பாடல்கள் சான்றாக அமைகின்றன. **"அறம்புரி அந்தணர் வழி மொழிந்தொழுகி"** (பதிற். 24:8) வடபுலத்தார் கோலோச்சிய பாடல்கள் அமைவதையும் காணலாம்.

காமக்கிழத்தி, கொண்டி மகளிர், சேரிப்பரத்தை, வாலிழை மகளிர், தளரியலவர் என பெண்களை கீழ் நிலையில் வைக்கப்பட்டிருந்த காலமாக சங்க காலத்தை அறியலாம். **"ஆன்முலை அறுத்த அறனிலோர்க்கும்"** (புறம். 34:1) எனும் பாடலுள் பெண்ணிற்கான அறத்தை நோக்கின் தலைக்கற்பு, இடைக்கற்பு, கடைக்கற்பு என அறமற்ற தன்மையோடு வாழ்ந்த காலமாக சங்க இலக்கியத்துள் பதிவு இடம்பெறுவதையும், இவ்வியல் ஆய்கிறது.

சங்க இலக்கியத்துள் எதார்த்த உண்மைகளும், சடங்கியலாக, தொன்மக் கதைகளாக, அன்பாக, நட்பாக, காதலாக, வீரமாக, கொடையாக, திருமண முறையாக, கற்பு நெறியாக சொல்லப்பட்டு வந்திருக்கின்றன. அத்தகைய சொல்லாடல்களுக்குள் சீறூர் மன்னன், முதுகுடி மன்னன், குறுநில மன்னன், வேந்தன் எனும் பல்வேறு மன்னர்களின் ஆட்சி முறைகளுள் அரசியல்

கருத்தமைவுகளும், அறநெறிக் கூறுகளும் நியதிக்கான விளக்கங்களும் பதிவு செய்யப்பட்டுள்ளன. சங்க இலக்கிய அரச வாழ்க்கையும், அரசுரிமை பெண்ணிற்குரியதாக இல்லை. பெண்ணிற்கான அறம், சமத்துவம், அறநெறி, நியதி, மறுக்கப்பட்டுள்ளமை, சங்க இலக்கியப் பாடல்கள் வழி ஆராய்ந்து முன்வைக்கப்பட்டுள்ளது.

**கலைக்கூறுகளும், ஆண்பெண் கலைஞர்களின் பதிவுகளும்** எனும் ஐந்தாம் இயலுள்; பழந்தமிழர் தம் வாழ்வியலைப் பதிவுசெய்துள்ள சங்க இலக்கித்துள் கலை, கலைஞர்களின் கூறுகள் விளக்கப்பட்டுள்ளன. ஆடல், பாடல் கலைகளில் வல்ல கூத்தரும், பாணரும், பொருநரும், விறலியும், பாடினியும் சொல்லொனா வறுமையில் வாடினர். பெரும் சுற்றம் தழீஇ வாழ்ந்தனர். பெரிய சுற்றமும், நிலைத்த வருவாயும் சேமித்துப் பாதுகாக்கும் நிலையின்மையால் ஓரிடத்தில் நிலையாக இராமல், பாடி இரந்துபெறும் வாழ்க்கையோடும், வறுமையோடும் இருந்தமை பாடல்களின் சான்றுகளோடு முன்வைக்கப்பட்டுள்ளது.

**சங்க இலக்கியப் பாடல்களில் ஆண்–பெண்பாற் பெயர்கள்** எனும் ஆறாவது இயலானது; சங்க இலக்கியத்தில் தொழிற்சார் மரபுப்பெயர்களும், பொதுப் பெயர்களும், சிறப்புப் பெயர்களும் விளக்கப்பட்டுள்ளன.

மலைக்கிழவோன் (நற். 28:9), பெருமலை நாடன் (நற். 65:9), தண்துறை ஊரன் (குறுந். 91:3), சூர்மலை நாடன் (குறுந். 105:3), குன்றுகெழு நாடன் (குறுந். 87:3), குன்றநாடன் (குறுந். 90:6), அணித்துறை ஊரன் (ஐங். 14:3), மகிழ்நன் (ஐங். 24:3), கழனிஊரன் (ஐங். 4:5), வன்கைவினைஞர் (பதிற். 58:15), வெல்போர் வேந்தர் (பதிற். 79:12), வெல்போர் ஆடவர் (பதிற். 78:8), சென்னியர் (பரி. 7:80), வளமலைநாடன் (கலி. 43:14), ஆண்தகை (கலி. 47:7), மலைகெழு வெற்பன் (கலி. 41:16), கோவலர் (அகம். 14:7), கான்கெழு நாடன் (அகம். 22:2), வான்தோய் வெற்பன் (அகம். 38:5) என உடைமையாளனாகவே ஆண் சுட்டப்படுவதும்;

கொடிச்சி (நற். 22:1), மீனெறி பரதவர் மகளிர் (பதிற். 71:3), உமட்டியர் (சிறுபாண். 60), மடமகள் (நற். 101:7), குறமகள் (ஐங். 285:1), எயிற்றி (ஐங். 364:2, 365:3), எயிற்றியர் (பெரும். 94), கிளிகடி மகளிர் (மலைபடு. 329), தினைக்குறு மகளிர் (மலைபடு. 342), ஆடுமடமகள் (பதிற். 51:10), மனமகளிர் (பரி. 7:80), ஆயமகள் (கலி. 109:2), ஏனல்அம் காவலர் (அகம். 12:6), அண்டர் மகளிர் (அகம் 59:5), நாடக மகளிர் (பெரும். 55), பாண்மகள் (அகம். 126:9), மூதில் பெண்டிர் (புறம். 19:15, 279:2), கடைசியர் (புறம். 61:1), மனைக்கிழவோயே (புறம். 163:7), பாடுவல் விறலி (புறம். 152:13), புலைத்தி (அகம். 34:11), விறலி (அகம். 82:10),

இறைமகளிர் (அகம். 97:10), பாடினி (புறம். 11:11), கிணைமகள் (புறம். 111:4), ஆடுக விறலியர் (பதிற். 58:11), பாடுமகள் (பதிற். 44:7), வேல்பாடினி (பதிற். 61:16), பெருந்தகு பாடினி (பொருநர். 47) இந்நிலையில்;

இன்நகை மடந்தை (நற். 108:7), சேயிழை மகளிர் (அகம். 369:5), மனையோள் (அகம். 396:15), பதிவத மாதர் (பரி. 10:23), வாலிழை மகளிர் (கலி. 119:14), தளரியலவர் (கலி. 66:17), எழில் உண்கண் நல்லார் (கலி. 67:6), கொடியன்னார் (கலி. 67:10), துணைமலர்க் கோதையர் (கலி. 70:9), ஏதிலாள் (கலி. 81:30), உயவற் பெண்டிர் (புறம். 246:10), தொடிகழி மகளிர் (புறம். 238:6), தூவியற் கொள்கைத் துகளறு மகளிர் (புறம். 224:6), கழிகலம் மகடூஉ (புறம். 261:18), கலம்தொடா மகளிர் (புறம். 299:6,7) என பெண்களைச் சுட்டும்போது ஒழுக்கம், இயல்பு, சார்ந்தே அமைந்து செல்வதையும், பொருளாதார வரலாற்று ஆய்வின் வழி ஆராய்கிறது இவ்வியல்.

தொழிற்பெயர்களின் வழி ஆண்களை நிலம்சார் பொருள் தொழில் புரிவோராகவும், பெண்களைப் பெருந்தொழில்சாராத பெயர்களாகவும் சுட்டியும் பாடல்கள் பதிவு செய்துள்ளமை காண முடிகிறது.

நான்கு வகை நிலங்களிலும் பெண் தொழில் ஆண்களைப் போலவே தினைப்புனம் காத்தல், கிளிகடிதல், பறவை ஓட்டுதல், தயிர்மோர் விற்றல், உழவுத்தொழில், புல்லரிசி எடுத்தல், நெசவுத் தொழில், ஆடை வெளுக்கும் தொழில், ஏவல் தொழில், காவல் தொழில், பண்டம் விற்கும் தொழில், பூ விற்றல், போர்த் தொழில், தூது போன்ற நூற்றுக்கும் மேற்பட்ட இடங்களில் பதிவு செய்துள்ளதை காலச் சூழலோடு ஒப்பிட்டு நோக்கி ஆராயப்பட்டுள்ளது. ஆண் பெண் தொழில்வழியே நாடு வளர்ச்சியை அடைந்திருக்கிறது என்பதை வரலாற்றுப் பார்வையோடு விளக்கிச் செல்கிறது இவ்வியல்.

**சங்க இலக்கியத்தல் சடங்குகளும் தொன்மக் குறியீட்டுப் பதிவுகளும்** எனும் ஏழாவது இயலுள்; சங்க காலத்திற்கு முந்தைய மனிதகுலம், முதற்கொண்டே வந்த மரபு முறைகளே இன்றும் இயற்கை வழிபாடு, முன்னோர் வழிபாடு என ஐவகை நிலங்களிலும், செய்யப்பட்ட வழிபாட்டு முறைகள் தம் முன்னோரின் சடங்கு முறைகளாக சங்க இலக்கியப் பாடல்களிலும் எழுத்துருப் பெற்று அமைந்து சென்றுள்ளதை சங்கப் பாக்கள் வழி முன்வைத்துள்ளமை காணலாம்.

வேட்டைச் சமூகம் தொடங்கி பழைய கற்காலம், புதிய கற்காலம், செம்புக் காலம், இரும்புக் காலம், விவசாயம், தொழில் என விரியும் சமூக வரலாற்றுப்

படைப்பில் பரிணாம வளர்ச்சியில் அறிந்துணர்ந்த செய்திகளை விளக்கும் கதைகள் தொன்றுதொட்டு மாறாமல் அல்லது மையப்பொருள் மாறாமல் வடிவங்களில் மாற்றமோ கதையாடலில் மாற்றமோ பொதிந்து அமைவது தொன்மத்தின் இயல்பு. காலச்சூழல் மாற்றத்தில் மதங்களின், சமயங்களின் வருகையால் சொல்லப்பட்ட கதைகள், சமகாலத்தில் புராணச் செய்தியாக பேசப்பட்டு வருகிறது. அத்தகு புராணப் பதிவுகள் சங்க இலக்கியத்தில் இடைச்செறுகளாக (பெரும். 415–417, கலி. 101:58–60, சிறுபாண். 89–247) அமைந்துள்ள முறையினை இவ்வியல் ஆராய்ந்துள்ளது.

**சங்க இலக்கியத்தில் 'பெண்' மதிப்பீடு** எனும் எட்டாவது இயலானது; தொல்குடியினருள் உற்பத்திக் கருவி உடைமையில்லாத ஆண்களும் சமத்துவ நிலை இல்லாதவர்களாகவே அறியப்பட்டிருக்கிறது. எனினும் பரத்தமை பிரிவு, தலைக்கற்பு, இடைக்கற்பு, கடைக்கற்பு என கைம்மையின் பல்வேறு தண்டனைகளும், குறிப்பாக கணவனை இழந்த தாபத நிலை என்ற பொதுவான தண்டனையும் ஆண்களுக்கு இல்லை. அரசு, அதிகாரம் ஆடவர்களை அடிமைப்படுத்தவில்லை என்பது பொதுமை. ஆனால் தொல்குடி உற்பத்திக் கருவிகளின் பொருள் உடைமையற்ற ஆண்களை, கலைஞர்களை கீழ் நிலையில் வைத்திருக்கின்றது என்பதை இவ்வாய்வு உணர்ந்திருக்கிறது. எனினும் வேட்டைத் தொழில் முதலாக நூற்றுக்கணக்கான தொழில்களைச் செய்வதில் சமப்பங்காற்றிய பெண்களுக்கு அரசனின் அரசநெறியில் முழுமையாக அறம் வழங்கப்படாத நிலையினை இலக்காக கொண்டு இவ்வாய்வேடு அமைந்துள்ளது. அரசனின் அறநெறியில் சமத்துவம் பெறாத பெண்களின் வரலாறு முழுமையாக எழுதும் பணியில் இவ்வியல் பெண் சமூக வரலாற்றிற்கு ஆதாரங்களை முன் வைக்கிறது.

சங்க இலக்கியத்தினின்றே பெண்களின் தனித்த வரலாற்றை எழுதும் முயற்சியில் இவ்வாய்வேடு உருப்பெற்றுள்ளது.

ஆய்விற்கான வாசிப்பில் பெண் அறம் குறித்த ஆய்வுப் பார்வை அவசியம் என அறியப்பட்டதால் சங்க இலக்கியப் பாடல்களான மூலத்திலிருந்தே பெண்களுக்கான சமத்துவக் கூறுகளைச் சமகாலத்துப் படைப்புலகில் தரவுகளாக முன்வைத்து செல்லும் பணி மேற்கொள்ளப்பட்டு பெண் அறம் எனும் தலைப்பினைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு ஆய்வு செய்தளித்துள்ளது.

ஆய்வின் கருதுகோளாக அரச நியதியில் பெண்களுக்கு அநீதி இழைக்கப்பட்டுள்ளமை ஆய்ந்தறிய முடிகிறது.

சங்க இலக்கியப் பாடல்களுள் நாற்பத்தைந்து (45) பெண்பாற் புலவர்கள் பாடிய பாடல்களிலும் பெண்கள் மதிப்புறு நிலையில் பார்க்கப்படவில்லை. காரணம் அரசனின் நெறிக்குள் புலவர் எனும் பெண்ணும் உரிமையற்றவர்களாக பார்க்கப்படுவதை அறியமுடிகிறது.

**"கீழ்ப்பால் ஒருவன் கற்பின்**
**மேற்பால் ஒருவன் அவன்கண்படுமே"** (புறம். 183)

எனும் புறப்பாடல் வழி ஆடவரே கல்வி கற்பது என்று விதி செய்யப்பட்டிருக்கிறது. இது தொழிற்பிரிவை வகுத்த அந்தணரின் அறநெறிக் கொள்கை என்பதை ஆய்ந்துணரலாம்.

இசைக்கலையில் வல்லமை பெற்ற பாடினி, விறலியின் கேசாதிபாத வர்ணனையுள் பாதாதி கேச வர்ணனையுள் உவமிக்கும் பொருள்களும் இழிவுப் பொருள்களாகவே உவமிக்கப்பட்டிருக்கின்ற முறையினைக் காணலாம். அதைப்போல ஒரு கலைஞனை இழிசினன் என்று தொழிற்பெயராக்கி உள்ள முறையானது தமிழினத்தின் தொல்குடியினரை இழிவுபடுத்தும் கொள்கையாகவே தொழிற்பகுப்பு முறை அமைந்திருப்பதை அறமற்ற நிலை என உரைக்க முடிகிறது.

ஒரு சமூகத்தில் இரந்துபெறும் வாழ்க்கையைச் சுமத்திய சூழல் என்பது அறநெறிப் பிறழ்ந்த முறையே. தொழிற் பகுப்பு முறைக்குள் உற்பத்திக் கருவிகளின் உடைமை மறுக்கப்பட்ட தொல்குடி இனங்களும் வாழ்ந்துள்ளமை அறியமுடிகிறது.

தொழிற்பிரிவின் பகுப்பிற்குள் சேரிப்பரத்தை என பெண்ணையும், குறிப்பிட்ட பெண் குழுவையும் இழிவுபடுத்தி பார்த்த முறை அறநெறியாக எண்ணிப் பார்த்திடமுடியாத தன்மை என்பதை சுட்டி நிற்கிறது ஆய்வேடு.

சேரிப்பரத்தையர் குழந்தைப்பேறு பெறுவதற்கான உரிமை இழந்தவராக பகுக்கப்பட்ட முறையானது சங்க இலக்கியப் பதிவுகளுள் அறம் பார்க்கப்படாத தன்மையாக உணரமுடிகிறது.

வேட்டையில் சமப்பங்காக, மறு உற்பத்திக்கு மூல ஆதாரமாக, தொழில்களில் சமப்பங்காக தாய்வழிச் சமூகம் என்ற தொடரை உருவாக்கி இருக்கின்றனர். விவசாயம் தொடங்கி நூற்றுக்கணக்கான தொழில்களில் தம் பங்கினைச் செய்து, போர் அறத்துள்ளும் தன்னை இணைத்துக்கொண்ட பெண்கள், வீர மகளிராக தம் பங்கினை ஆற்றியிருக்கின்றனர். புலமைப்

பெற்றிருக்கின்றனர். இசை, கூத்துப்பாட்டு என கலைத் தொழில்களில் சிறப்புக்குரியவராக இருந்திருக்கின்றனர். குடும்பத்தின் வறுமை போக்கிட உழைத்திருக்கின்றனர். வதுவைச் சடங்குகளில் முதன்மையாய் நின்றவர்கள். போருக்குச் சென்ற மகனை ஈன்ற வீரத்தாயாக விளங்கியவர்கள்.

இவ்வாறு பல்வேறு முதன்மைப் பணிகளில் தங்களை இணைத்துக் கொண்டு நாட்டு வளர்ச்சியில் போரின் வெற்றியில் சமூக மதிப்பைப் பெற்றுத் தந்த பெண்களுக்குச் சமூகம் அளித்த மதிப்பு சமனாக அளிக்கப்பட்டதாக அறியமுடியவில்லை. அரசனின் அறநெறிக்குள் பெண் அறம் பேணப்படவில்லை என்றே ஆய்ந்துணர முடிகிறது.

சம காலப் படைப்புக்களில் சமத்துவம் காணும் சமூகத்தை அமைத்திடும் வகையில் அறப்பாங்கு பேணப்படவேண்டும் என்ற நோக்கமே இந்த ஆய்வின் இலக்கு.

**மேனிலை ஆய்வுக் களங்கள்:**

ஆய்வுப் பணி ஆற்றுவோரின் கடமையில் ‘தமிழர் வரலாறு’ படைக்கும் நோக்கம் அமையும்போது வரலாற்றின் படைப்பிலக்கிய தரவுகளை, முறையாக்கித் தருதலும் முக்கியப் பணியாகும். அத்தகைய இக்குடையோர்,

1. தொல் பழங்குடிகளின் மரபுசார் கலைகளில் பெண்
2. விளிம்புநிலை மக்களின் வாழ்வியல் அறங்கள்
3. மரபுசார் தொழில்களில் பெண்
4. அறமும், பரத்தமை ஒழுக்க முறையும்
5. தொன்மக் குறியீடும், தமிழரின் பண்பாட்டு அடையாளங்களும்

போன்ற மேலாய்வுகள் நிகழ்த்தி சமூக வரலாற்றிற்குத் துணை நிற்கலாம்.